# தமிழ்க் கல்வி இயக்கக் கட்டுரைகள்

தொகுப்பாசிரியர்

சு. ஆவுடை நாயகம்.



உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்
33 திருமலை நகர் இணைப்பு
பெருங்குடி
சென்னை 600 096.

# Tamilk Kalvi Iyakkak Katturaikal

Tamil

Edited by S. Avudainayagam, M.sc (Agri).

| | |
|---|---|
| Publisher & Copy Right | Ulakat Tamilk Kalvi Iyakkam<br>33, Tirumalai Nagar Annexe<br>Perungudi, Madras 600 096 |
| First Edition, | 9. 11. 85 |
| Size | 19 X 25 cms |
| Types Used | 10 Pt. |
| Pages | IV + 250 |

Paper back binding

JAPONICA PRINTERS
146, Habibulla Road,
T. Nagar, Madras 600 017.

Price Rs. 25 - 00

Collection of articles

## முன்னுரை

'உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்' என்ற அமைப்பு தமிழின் வளர்ச்சிக்காகத் தோற்றுவிக்கப்பெற்றுள்ளது. 'தொடக்கவிழாச்சிறப்பு மலரை' வெளியிட்ட போது அதிலுள்ள சிறந்த கட்டுரைகளைத் தனியாகத் தொகுத்து வெளியிடலாம் என்ற எண்ணம் ஏற்பட்டது. அவ்வெண்ணத்தின் விளைவே தங்கள் கைகளில் தவழுகின்ற 'தமிழ்க் கல்வி இயக்கக் கட்டுரைகள்' என்ற இந்நூல். ஆர்வத்தோடு, நன் முயற்சி செய்து இக்கட்டுரைகளை உருவாக்கித் தந்த கட்டுரையாளர் அனைவருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

இந் நூலைச் சிறப்புற உரிய காலத்தில் அச்சிட்டுத் தந்த ஜப்பானிகா அச்சக உரிமையாளர்க்கு எங்கள் நன்றி

அன்பன்

**சு. ஆவுடைநாயகம்.**

## உள்ளே ...


| | | | |
|---|---|---|---|
| 1. | உலகும் தமிழரும் | டாக்டர். ச. சிவகாமி | 1 |
| 2. | தமிழ் | டாக்டர். கே. பகவதி | 13 |
| 3. | கல்வி | டாக்டர். அன்னி தாமசு | 23 |
| 4. | இயக்கம் | டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் | 41 |
| 5. | சீனாவில் தமிழ்க் கல்வி | டாக்டர். ந. கடிகாசலம் | 58 |
| 6. | செக்கோஸ்லோவேகியாவில் தமிழ் | டாக்டர். யரோஸ்லாவ் வாசக் | 61 |
| 7. | லண்டனில் தமிழ்க் கல்வி | திரு. கே. ஞான சூரியன் | 65 |
| 8. | சிங்கப்பூரில் தமிழ்க் கல்வி | திரு. எஸ். எஸ். சர்மா | 67 |
| 9. | மலேசியாவில் தமிழும் தமிழரும் | டாக்டர். இரா. தண்டாயுதம் | 72 |
| 10. | ஈழத்தில் தமிழ்க் கல்வி | கலாநிதி இளையதம்பி பாலசுந்தரம் | 82 |
| 11. | Teaching of Tamil in the USSR | Dr. Alexander Dubianski | 93 |
| 12. | கேரளத்தில் தமிழ்க் கல்வி | டாக்டர். கி. நாச்சிமுத்து | 95 |
| 13. | கர்நாடகத்தில் தமிழ் | டாக்டர். சு. சண்முக சுந்தரம் | 114 |
| 14. | அலிகாரில் தமிழ்க் கல்வி | டாக்டர். தே. சீனிவாச வரதன் | 125 |
| 15. | வங்காளத்தில் தமிழ்க் கல்வி | டாக்டர். ரங்கநாயகி மகாபத்ரா | 128 |
| 16. | தில்லியில் தமிழ்க் கல்வி | டாக்டர். கே. மீனாட்சி | 131 |
| 17. | தென்பொதிகைச் செந்தமிழ் சிந்துதந்த அண்ணாமலை | அறிஞர் சரஸ்வதி இராமநாதன் | 136 |
| 18. | சங்க அகப்பாடல்களில் புறம் | டாக்டர். ப. அருணாசலம் | 146 |
| 19. | தமிழ் வளர்த்த முன்னோர் | திரு. இ. ஜே. ஆசீர்வாதம் | 157 |
| 20. | வள்ளுவர் கண்ட பெண்மை | டாக்டர். லி. ருத்ஜாய் | 165 |
| 21. | அரும்பத உரையாசிரியர் பெருமை | டாக்டர். தா. வே. வீராசாமி | 174 |
| 22. | மரபுக் கவிதையும் புதுக்கவிதையும் | முனைவர் மு. தமிழ்க்குடிமகன் | 179 |
| 23. | நாவல் இலக்கிய வளர்ச்சியில் வடுவூரார் | டாக்டர். கிரேஸ் செல்வராஜ் | 188 |
| 24. | கொல்லிமலை - பழங்குடியினர் பாடல்கள் | திரு நசீர் அலி | 193 |
| 25. | திறனாய்வின் புதிய களங்கள் | திரு கி. இராசா | 196 |
| 26. | ஊர்ப்பெயர்க் களஞ்சியம் | டாக்டர். கு. பகவதி | 199 |
| 27. | உரிச்சொல் | வித்துவான் ஆ. சிவலிங்கனார் | 215 |
| 28. | அடி - சொற்பொருள் வரலாறு | டாக்டர். கு. இராசேந்திரன் | 222 |
| 29. | விழித்தெழு தமிழா | கவிஞர் கழனியூரன் | 234 |
| 30. | புதுக்கிளைகள் தமிழ்த்தருவில் பூத்தல் வேண்டும் | கவிஞர் ரெ. பாலகிருட்டிணன் | 235 |
| 31. | தமிழ் இலக்கியங்களைப் பாதுகாத்தல் | டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் | 236 |
| 32. | கல்லுக்குள் ஈரம் - ஒரு கண்ணோட்டம் | செல்வி கோ. வெ. கீதா | 241 |

# உலகும் தமிழரும்

— டாக்டர். ச. சிவகாமி

'உலகம் உவப்ப வலன் ஏர்பு திரி தரு
பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டா அங்கு'
(திரு முருகாற்றுப் படை : 1-2)

ஓர் இனிய இயற்கைக் காட்சி. காண்கிறான் கவிஞன். கதிரவன் கடலினின்றும் கண் விழித்து எழும், புலரும் பொழுது; அது அவன் மனதைப் பற்றுகிறது. அதனை எண்ணும் புலவன் இக் காட்சி, தன்னைப் போன்று உலகோர் அனைவருக்கும் அல்லவா மகிழ்வளிக்க வேண்டும் எனத் துணிகிறான். அத்துணிவு மேற்கண்டவாறு பாடத் தூண்டுகிறது. 'தாமின் புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறுவர் கற்றறிந்தார்' (399) என்னும் பொய்யா மொழிப் புலவரின் கூற்றினை மெய்ப்பிக்கிறார், பாடிய நக்கீரனார். தமிழர், தாம், தம் இனம், தம் மொழி, தம் நாடு என்ற குறுகிய வட்டத்துள் சுழலாது, உலகளாவ உயர்ந்த பார்வையைக் கொண்டிருந்தமையை அன்று முதல் இன்றுவரைக் காண முடிகிறது. யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதே என்றும் அவர்தம் நோக்கு.

'பொய்யகல நாளும் புகழ் விளைத்தல் என் வியப்பாம்
வையகம் போர்த்த விளங்கொலிநீர் - கையகலக்
கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு
முன் தோன்றி மூத்த குடி'
(புறப் பொருள் வெண்பாமாலை: 35)

என மிக்கப் பழமையுடையதாக விளங்குவது தமிழர் இனம். மனிதன் உலகில் முதன் முதலாகத் தோன்றிய இடங்களுள் தமிழகமும் ஒன்று என்பது ஆய்வறிஞர் துணிபு.[1] இப்பழமை தமிழருக்கு உலகம் போற்றும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் பெருமளவில் வழங்கியுள்ளது.

உலகம் என்பதற்கு, பூமி, புவனப் பொது, நிலப்பகுதி, ஆகாயம், திக்கு என்பன வற்றுடன் மக்கட்தொகுதி, நன் மக்கள், சீவராசிகள், உயர்குணம் வழக்கம் எனும் பல் பொருள்களையும் அகராதி,[2] தருதல் குறிப்பிடற்பாலது. அறிவிற் சிறந்த

---

1. 'முந்தியல் மாந்தனின் வாழ்விற்கேற்ற பல்வேறு நிலைமைகளை நோக்கின், இஞ்ஞாலத்தின் நடுவிடமே நிறைவுற்ற மாந்தன் பிறந்தகமாயிருந்திருக்க முடியுமென்பது புலனாகும். அத்தகைய இடம் குமரிக்கண்டமே. நண்ணிலக் கோடு (Equator) அதனூடேயே செல்வதைத் திணைப் படத்திற் காண்க; - ஞா. தேவநேயன்; தமிழர் வரலாறு; நேசமணி பதிப்பகம்; காட்டுப்பாடிவிரிவு; 1972; ப. 7.

   காண்க : 'தமிழரின் தாயகம்; க. ப. அறவாணன்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; 1984.

2. Tamil lexicon vol. I ; Madras university; 1936.

பெரியோரையே உலகம் போற்றுதலாலும், பின்பற்ற வேண்டுதலாலும் நன்மக்கள், உயர்குணம் போன்றவையும் உலகைச் சுட்டுகின்றன. 'உலகம் பலவிதம்' எனும் பழமொழியிருப்பினும், உலகச் சான்றோர் அப்பண்மையிலும் ஒருமைகாண விழைகின்றனர். உலகம் என்பது நாடு, மொழி, இனம், உயிரினங்கள் என எல்லாம் கடந்த நிலையில், எல்லாம் ஒருங்கிணைந்த பொதுத்தன்மையைக் கொண்டது எனலாம்.

உலகம் என்பதை இருவேறு தன்மைகளில் காணுதல் புலப்படுகிறது நாம் வாழும் இந்நிலவுலகம் மட்டுமின்றி, நம் கண்களுக்குப் புலப்படும் படியாக உள்ள விசும்பு, விண் மீன் போன்ற அனைத்தையும் உள்ளடக்கியதாக (universe) அமைதல் ஒரு நிலை. மனித இனம் மற்றும் பிற உயிரினங்கள் வாழும் இப்பூமியைக் குறித்தல் பிறிதொரு நிலை. இதனை உணர்த்தும் மறு சொற்களாக அவனி, குவலயம், குளிர், தலம், நாடு, பவனம், புவனம், புவனி, புவி, பூமி, பொழில் போன்றன வழங்குகின்றன.[3] இவற்றுள் பல சொற்கள், காரணப் பெயராக அமைந்துள்ளன போல் தோன்றுகிறது.

''உல் — உல, உலத்தல் = வளைதல், உருளுதல், சுழல்தல்.
உல — உலம் = வளைவு, உருட்சி, திரட்சி, சுழற்சி.
உலம் + வா = உலமா, உலம்வரு — உலமரு.
உலமருதல் = சுழலுதல்; உலமா — அலமா.
உலம் — உலக்கை = உருண்டு திரண்ட தடி.
உலவு — உலகு — உலகம் — உருண்டையாயிருப்பது''.

என்று உலகத்திற்குச் சொற் பொருள் விளக்கத்தை விரிவாகக் காட்டுவர் மொழி ஞாயிறு பாவாணர்[4]. இது போன்றே பிற சொற்களையும் அணுகுதற்கு அகராதிகள் இடமளிக்கின்றன[5].

**அவனி :** அவனம் என்ற சொல் அலங்கரித்தல், இருத்தல், செய்தல், தாங்குதல், தற்காத்தல் போன்ற பல் பொருள் தருகின்றது. இதன் அடிப்படையில் ஓரிடத்தில் தங்கியிருத்தல், தொழில் புரிதல், தன்னைப் பல சூழல்களிலும் தற்காத்துக் கொள்ளுதல் என்பதாக 'அவனி' எனும் சொல் உலகைக் குறிக்கப் பயன் பட்டிருக்குமோ என்ற எண்ணம் எழுகிறது.

**குளிர் :** இனிய ஓசையையும் நறுமணத்தையும் குறிப்பிடும் குளிர்ந்த குரல், குளிர்ந்த வாசனை எனும் சொற்றொடர்களின் மூலம் குளிர் என்பதற்கு இனிமை என்ற பொருளும் இருக்கக் காண்கிறோம். எனவே வாழ்வதற்கு இனிமையான இடம் என்ற பொருளில் 'குளிர்', உலகைக் குறித்திருக்கலாம்.

---

3. ஆசிரிய நிகண்டு; வி. சொக்கலிங்கம் (பதி); சரசுவதி மகால்; தஞ்சை; 1975; பக். 426.
தமிழ்ப் பேரகராதி; இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன் (பதி); சென்னை; 1956.
4. இரா. இளங்குமரன்; தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை; 1985; ப. 93.
5. தமிழ்ப் பேரகராதி; Tamil Lexicon.

**தலம் :** ஆழம், இடம், பிளப்பு, பூமி, கலப்பு, குவியல் எனப் பல் பொருள் கொள்கிறது இச்சொல். பல திறப்பட்ட மானிடர் மற்றும் உயிரினங்கள் தம்முள் கலந்தும், கூட்டமாகவும்; மொழி, இனம் என்பனவற்றால் பிளவுண்டும் நிற்பதால் 'தலம்' என்பதும் உலகைக் குறிக்கச் சிறப்புடையதாகிறது.

**குவலயம் :** குவிதல், கூட்டம் ஒன்றோடொன்று பிணைதல் எனும் நிலையில் குவவு என்ற சொல் 'குவலயம்' என்று உலகை உணர்த்தப் பயன்பட்டிருக்கலாம்.

**நாடு :** நாடுதல் எனும் வினை, தேடுதல், விரும்புதல் என்ற கருத்துகளைத் தருகின்றது. மனிதன் நாகரிகம் தொடங்கிய காலத்தில் பல் வேறு வளங்களும், வாய்ப்புகளும் நிறைந்த இடத்தைத் தேடி அலைந்து, தன் மனம் ஒன்றிய இடத்தில் குடியிருப்புகளை உருவாக்கினான் என்ற தன்மையில் உலகைக் குறிக்க 'நாடு' எனும் சொல் பயன்படுகிறது எனலாம்.

''இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு''. (குறள் 737)

எனும் வள்ளுவர் வாக்கும் நோக்கற்பாலது.

**பொழில் :** வாழ்க்கையை விருப்புடன் நடாத்திச் செல்லும் உலகினருக்குத் தாங்கள் வாழுமிடம் பெருமைக்குரியதாகவும், பன்மலர் மலர்ந்து மணம் பரப்பும் இனிய பூந்தோட்டமாகவும் இருத்தல் இயல்பாதலின் பொழில் என்ற பெயரும் கொண்டது போலும்.

**பவனம்; புவனம், புவனி, புவி** எனும் சொற்கள் தம்முள் தொடர்புடையனவாக நிற்கின்றன. பவனம் என்றால் காற்று; புவனம் என்பது நீரையும் விசும்பையும் சுட்டும்; அவனத்திலிருந்து அவனி வந்தது போன்று புவனத்திலிருந்து புவனி என்பதும், அது மருவி புவி என்பதும் வந்திருக்கலாம். உலகம் காற்றால், நீரால் நிறைந்திருப்பதாலும், அவையின்றி உயிரினங்கள் உயிர்வாழ்தல் அரிதாதலானும் அவற்றைச் சிறப்பிக்கும் வகையில் இச் சொற்கள் தோன்றியிருக்கலாம்.

**பூமி :** பூரணம் எனும் சொல் முழுமை, நிறைவு, மிகுதி என்ற பொருளுடையது. மற்றும் பூமாதேவி, பூமாது எனும் தொடர்களால் நிலமகளைச் சுட்டுதலும் நோக்கின், அனைத்தாலும் நிறைவு பெற்ற முழுமையானது இவ்வுலகம், எனவே பூமி என்ற சொல்லும் எழுந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

இவையே அன்றி தரை, ஞாலம், இருநிலம், வையம், மண்டிலம், மேதினி, காசினி, மண், பார், நேமி, தரணி, நிலம் எனும் சொற்களும் நிலவுலகைக் குறிக்கப் பயன்படுவதை இலக்கியத்துள காணலாம். பெரியது, பெருமைக்குரியது என்ற பொருளில் இருநிலம் அமைகிறது. சூரியன், நீர்ப்பெருக்கு, மலை என்ற பல் பொருள் படுகிறது தரணி. இவை உலக வளத்திற்கு இன்றியமையாததாதலின் தரணி, தரணம் என்ற இரு சொற்களும் உலகைக் குறித்தன போலும். ஞாலல், ஞாலுதல் எனும் சொற்கள்

தொங்குதல் எனும் பொருள்படும். புவியும் பிற கிரகங்களைப் போன்று வானவீதியில் தனித்து உலவுதலின் 'ஞாலம்' என வழங்கியிருக்கலாம். பூமி உருண்டை வடிவமானது எனும் தன்மையில் **மண்டிலம், நேமி** எனும் சொற்கள் உருவாகியிருக்கலாம். **மண்**, தரை, பார், என்பனவும் ஒரு பொருள் குறித்த பல சொற்களாகத் தென்படுகின்றன.

'மே' என்பது விருப்பம், மேம்பாடு எனும் பொருள் கொண்டது. மேன்மையுடையது, உலகத்தார் விருப்புடன் தங்கியிருப்பது எனும் பொருளில் **மேதினி** தோன்றியிருக்கலாம். அல்லது நெற்களத்தைக் குறிப்பிடும் 'மேதி' எனும் சொல்லிலிருந்தும் உருவாகியிருக்கலாம். தமிழரின் முதன்மை உணவுப் பொருள் நெல்லாதலின் இவ்வெண்ணம் இங்கு எழுகிறது.

**வையம், வையகம்** என்பனவும் இவண் நினைத்தற்பாலது. இவற்றின் வேர்ச்சொல்லான 'வை' என்பது இடு, கொடு, இருக்கச்செய், பாதுகாத்தல்செய், பெற்றிரு, அமையச்செய், உருவாக்கு, வரையறைசெய், எடுத்துரை என உலகில் நிகழ்வனற்றைக் காட்டுகின்றது. இவை பொருந்திய இடம் வையம், வையகம் எனலாயிற்று எனலாம். மற்றும் இச்சொற்கள் ஊர்தி எனவும் பொருள் கொள்கின்றன. உலகம் சூரியனைச் சுற்றிப்பிற கிரகங்களைப் போன்று தானும் ஊர்ந்து சுற்றி வருதலின் பெற்றன என்றும் எண்ணலாம்.

இச்சொற்கள் பொதுநிலையிலும் உலகைக் (universe) குறிக்கப் பயன்படுவதுடன் மற்றும் பலவும் வழங்குகின்றன [6] இத்துணைப் பெயர்களை உலகம் கொண்டிலங்கினும் உலகம், ஞாலம், இருநிலம், பார், தரணி, வையம் (வையகம்), புவி, குவலயம், அவனி, காசினி, என்பனவே மிகுந்த பயிற்சி காட்டுகின்றன. தொல்காப்பியர் காலம் முதலே உலகம், உலகு, ஞாலம், மண்டிலம், வையம், நிலம், மண் முதலான சொற்கள் வழங்கக் காண்கிறோம்.

கி. மு. ஐந்தாம் நூற்றாண்டளவில் தோன்றிய, தமிழரின் தலை நூலான தொல்காப்பியத்துள்ளே தமிழரின் 'பண்பட்ட வாழ்க்கையைக் காண்கிறோம். உலகம் பற்றிய தெளிவான எண்ணத்தைத் தொல்காப்பியர் அன்றே தந்திருப்பது மிக்க வியப்பைத் தருகிறது. 'நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்' (பொருள் : 635) என்று அதன் இயல்பை விளக்குவார். மற்றும் நிலவுலகின் இயல்பு குறித்து நான்கு வகையாகப் பிரித்துரைத்துள்ள தன்மையையும்,

---

6. சகம், அளக்கர், சக்கரம், நீருடை, பொறை, அசலை, விபுலை, அகலிடம், பாடி, படி, தாலம், பாலம், மேத்தியம், பூ, திணை, கிடக்கை, தராதலம், பூதலம், தாத்திரி, தரித்திரி, வசுமதி, வசுந்தரை, வசுதை, அகம், பாத்திமம், கோத்திரை, மதி இம்பர், கூ, அகலுள், பிரிதிவை, பிரிந்த கோசாந்தை, கண்டம், புலம், திரை, கு, யுகம், வேலாவலயம், உலோகம், நீர்வரைப்பு, மகாதலம், பூவலையம், நடு, விபுலம், கோ, மகி, நகம், பூதியம், புரை, பாரம், கிடக்கை, பூதிகம், பார்த்திவம், அனந்தை.
ஆசிரிய நிகண்டு; ப. 496.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே.
(பொருள் : 5)

எனும் நூற்பாவில் காண்கிறோம். காடுகள் நிறைந்த பகுதி, மலைகள் சூழ்ந்த இடம், மனித வாழ்விற்கு ஏற்புடைத்தாக நீர்வளம் நிறைந்த வேளாண்மைக்குரிய இடம், கடல் காணும் மணற்பரப்பு என இயற்கையைப் பகுத்துரைத்தார். பின்னாளில் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் படைத்த இளங்கோவடிகளார், 'முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து .. பாலை என்பதோர் படிவம் கொள்ளும் '(11 : 63 - 65) என்று, தொல்காப்பியர் நிலம் குறிக்காது விட்ட பாலைக்கும் விளக்கம் அளிக்கிறார்.

இலக்கியம் படைத்தற்கு இலக்கணம் கண்ட, அல்லது காட்டிய தொல்காப்பியர், உலகம் பற்றிய விளக்கத்தினை அளிப்பதன் தேவை யாது என்ற எண்ணம் எழலாம். இலக்கியங்களின் எழுச்சியும் உலகியல்போடு நிற்றல வேண்டும் எனும் தமிழர் எண்ணமே இதற்கு விடையாம். நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம் (பொருள் : 56) எனும் கூற்றும் இதனை உணர்த்தக் காணலாம். உலகியற்கையோடு இணைந்து எழும் நூல்களே காலங் கடந்து நிற்கும் பெருமையடைதலையும் உலகளாவ புகழ் பெறுதலையும் இயல்பாகக் காண்கிறோம்.

உலகம் என்பது பல்பொருள் ஒரு சொல்லாய் நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்தி நிற்கும் என்பர்[7]. 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே' என்பதும் சங்கச் சான்றோர் கூற்று. இந்நிலவுலகை நல்வழியில் சிறப்புடன் நடத்திச் செல்லும் கடமை சான்றோர் பாலதாதலின் இவ்வாறு நவிலப்பட்டுள்ளது எனலாம்.

தமிழர் இறை நம்பிக்கை மிக்கவர். எச்செயலையும் இறைவழிபாட்டுடன் தொடங்குதல் அவர்தம் இயல்பு. அதன் அடிப்படையில் இலக்கியப் படைப்பின் போதும் 'காப்பு' எனும் கடவுள் வாழ்த்துப் பகுதியை வைத்தல் காணப்படுகிறது. இதனையே வள்ளுவரும்,

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு' (1)

என்று தம் உலகப் பொதுமறையில் உரைத்தார். உலகின் இயக்கம் இறைவனை முதலாகக் கொண்டுள்ளது என்பதே வள்ளுவர் மற்றும் தமிழ்ச் சான்றோரின் கருத்தாகும். உலக இயல்பிற்கும் அடிப்படைக் கரணியாய் இறைவனே அமைகின்றான் என்பதை மாணிக்க வாசகரும்,

---

7. நச்சினார்க்கினியர்; பத்துப்பாட்டு உரை; திருமுருகாற்றுப்படை: 124.

அருக்கனில் சோதி அமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்திறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானில் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கங் கண்டோன் நிழல் திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் தின்மை வைத்தோன் என்றென்று
எனைப்பல கோடி என்னப் பல பிறவும்
அனைத்தனைத் தம்வயின் அடைத்தோன் அஃதான்று.
(திருவண்டப்பகுதி : 20 - 28)

என்று விளக்கியுள்ளார். உலகத்தின் படைப்பு குறித்துப் பல்வேறு எண்ணங்களை அறிவியல் தரினும் பல நாட்டாராலும், மதத்தாராலும் ஏற்றுக் கொள்ளப்படும் கருத்தாக இறைவனே அதற்குரியவனாகப் போற்றப்படுதல் வெளிப்படை.

புலவர் தம் படைப்பைத் தொடங்கும் பொழுதே உலகைக் கருத்தில் கொண்டு அமைப்பதைப் பலரிடம் காணலாம். சான்றுகளாக,

| | | |
|---|---|---|
| நனந்தலை யுலகம் | — | முல்லைப்பாட்டு |
| உலகந் திரியா | — | மணிமேகலை |
| உலகம் யாவையும் | — | கம்பராமாயணம் |
| உலகெலாம் உணர்ந்து | — | பெரியபுராணம |
| வையகம் பனிப்ப | — | நெடுநல் வாடை |
| பார், மண்டலத்தினில் | — | ஆளுடையதிருவந்தாதி |
| மாநில மடந்தை | — | சிறுபாணாற்றுப்படை |

எனச் சிலவற்றைச் சுட்டலாம். இந்நிலை பின்னாளில் தமிழிலக்கியங்களில் நூலின் முதலில் அமையும் மங்கலச் சொல்லாகவும் மாறியது.[8] பாட்டின் முதன் மொழியின் பொருத்த வேண்டியவற்றைப் பாட்டியலார் பொருத்தமென்றழைப்பர். அப்பொருத்தங் களில் மங்கலமே தலையானது. மங்கலம் இருப்பின், பிற பொருத்தங்கள் அமையா விடினும் வழுவல எனக் கொள்ளப்படும். தமிழர்களின் நம்பிக்கைச் சார்ந்ததாக இதனைக் கொள்ளலாம். மங்கலச் சொல்லால் பாடலைத் தொடங்கும் பொழுது பாட்டுடைத் தலைவனுக்கு அஃது மேலும் சிறப்புண்டாக்கும் என்ற எண்ணத்தின் பாற்பட்டதே இது.

---

8. பொன் பூ திரு மணி புனல் ஆரணம் கடல்
செங்கதிர் திகிரி தேர் பரி எழுத்தே
மாநிலம் கங்கை மலை புகழ் அமுதம்
கார் புயல் உலகம் களிறே அருந்ததி
பார் மதி நாள் சீர் ஞெண்டுடன் என்ன
எண்ணிய சொல்லே அவையல் பிறவும்
கண்ணிய மங்கலச் சொல் எனக் காட்டினர்.
பன்னிரு பாட்டியல் : சொ : 16.

மக்களால் சிறப்பிக்கப்டுவனவும் மக்களுக்குப் பெரும் பயனுடையனவுமாய் அமைவன இங்கு மங்கலச் சொல்லாகக் குறிக்கப்பட்டிருத்தல் எண்ணற்பாலது. இந்நிலையில் உலகமும் பெருமை பெறுகிறது. உலக இன்பங்கள் அனைத்தையும் பாட்டுடைத்தலைவன் பெறவேண்டும்; உலக அறங்கள் முழுவதையும் கடைப்பிடிக்கவேண்டும்; உலகோர் அவனால் பயனடைய வேண்டும்; உலகம் உள்ளளவும் அவன் புகழ் நிலைத்து நிற்க வேண்டும்; உலகோர் போற்றும் பெருமையாளனாக அவன் இலங்கவேண்டும் எனப் பலவற்றை இங்கு கருதலாம். தமிழரின் சிந்தனையில் உலகம் சுழன்று கொண்டிருப் பதையே இது உணர்த்துகிறது.

இவையே யன்றிப் பொது நிலையிலும் உலகம் பற்றிய தமிழர் எண்ணங்கள் வெளிப்படுகின்றன 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று உலகச் சமுதாயத்தை யெல்லாம் ஒருங்கிணைத்த பெருமை சங்கத் தமிழ்ச் சான்றோர் கணியன் பூங்குன்றனாரைச் சாரும். இங்கு உலகம் ஒரே குடும்பமாகிறது. இவ்வெண்ணம் வெறும் இலக்கியமாகவன்றி இயல்பாக இயன்றதை,

பல்லாய மொடு பதி பழகி
வேறு வேறு உயர்ந்த முதுவாய் ஒக்கல்
சாறு அயர் மூதூர் சென்று தொக்காங்கு
மொழி பல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம் பெயர் மாக்கள் கலந்தினி வறையும்

(பட்டினப்பாலை : 213—217)

என்பதால் பெறலாம்.

மனிதன் தன் அறிவிற்கு எட்டாத நாளிலிருந்து உலகம் இயங்கி வருகின்றது நல்லதும் கெட்டதும் இணைந்ததுதான் உலகம். 'உலகம் பலவிதம்', 'வையத்து மனிதன் நாலு வகை' என்பன தமிப் பழமொழிகள். வையகத்தில் எல்லோரும் ஒரு போக்கு அல்ல'; உயர்ந்தோர் சிலர், தாழ்ந்தோர் பலர் இருப்பினும் உலகத்தார் என்று கருதும் பொழுது வள்ளுவரது நினைவிற்கு 'பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடை யாளரே'. (874) வருகின்றனர்.

உலகில் வாழும் மக்கள் சான்றோராக, அறவோராகத் திகழும் பொழுதுதான் உலகம் பெருமை பெறுகிறது என்பது வான்புகழ் வள்ளுவர் கருத்தாக அமைகிறது. 'பண்புடையார் பண்பட்டு உலகம்' (994) என்பது அவர் தம் வாய்மொழி. உலகத்தின் இயக்கமும், நிலை பெறுதலும் மானிடரின் நற்பண்பால்தான் அமைகின்றன என்ற எண்ணத்தால்தான் தமிழரிடையே பல அறநூல்கள் தோன்றியுள்ளன. தமிழரின் பெருமை அவரது நீதி நூலேயாம். அவைகள் எழுதப்பட்டுள்ள அமைப்பும் அதன் கருத்துக்களும் சீர் படைத்தன. நினைவிற் பதியும் சிறு தொடர்களில் ஒரு வரியாக, இரு வரியாக அல்லது நான்கு வரிகளாய் அமைந்துள்ளன. உவமைகளையும் உருவகங்களையும் கொண்டதாய், வாழ்வு முறைத் தத்துவங்களை விளக்குகின்றன', எனும் ஹில்கோ வியார்டோ ஷோமரூஸ் என்னும் செர்மானிய அறிஞரின் பாராட்டுதல்[9] அதன் உலக ளாவிய பொதுமையை நிலை நாட்டுகின்றது.

---

9. ஆ. ஞானசேகரன்; தமிழகமும் ஜெர்மானியரும் - 280 ஆண்டுக்கால இலக்கிய உறவுகள்; ஜெர்மானிய மொழிக் குழு; காரைக்குடி; 1981; ப. 7.

மனிதனைப் பண்படுத்தும் கருவிகளுள் சிறந்ததொன்றாக இலக்கியமும் அமைகிறது. வையத்துள் வாழ்வாங்கு வாழும் வகையை மனிதனுக்குத் தெளிவாக எடுத்தியம்பும் அறவிலக்கியங்கள் தவிர, பக்தியிலக்கியங்களும் பிறிதொரு நிலையில் இதனை வலியுறுத்துகின்றன. நல்வாழ்வு என்பது இறையுடன் இணையும் இனிய வாழ்வாகும் எனக் காட்டுகின்றன.

யாவர்க்கும் ஆம் இறைவர்க்கு ஒரு பச்சிலை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும் போது ஒருகைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே.

(திருமந்திரம் : 252)

என்று தன்னுடன் வாழும் மக்களையும் பிற மண்ணுயிர்களையும் இணைத்தே பக்தியிலும் கொண்டு செல்லும் பாங்கு, தமிழருக்கு எங்கும் எதிலும் உலகமே முதனிலை என்ற உயரிய கொள்கையை வலியுறுத்துகிறது.

உலக மக்கள் அனைவரும் சான்றோராகத் திகழ்தலைத் தமிழ்ப் புலவர் வலியுறுத்துகின்றனர். தமிழ் நூல்களிடையே அற நூல்களும், பக்தியிலக்கியங்களும் பல்கிப் பெருகியுள்ளமைக்கு இதுவும் ஓர் காரணமாகும். சங்கம் தொட்டு இன்றுவரை இதனை நாம் தொடர்ந்து காணலாம். 'நெருநல் உளனொருவன் இன்றில்லை யெனும் பெருமை உடைத்து இவ்வுலகு.' (குறள் 336) ஆயினும், மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தலையே பெரிதும் போற்றுகின்றனர். இந்நில உலகின் நிலைபேறு கூட இத்தகு சான்றோர் களால் தான் என்பதையும் ஐயமறக் காட்டுகின்றனர்.

உண்டாலம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே. முனிவிலர்
துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளர் அயர்விலர்
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே

(புறநானூறு : 182)

எனும் இப்பாடல் தமிழருக்கு மட்டுமா எழுந்துள்ளது? உலகின் எக்கோடியிலிருந்தாலும் எவ்வினத்தவராயினும் எம்மொழியினராயினும் ஏற்றுக் கொண்டு பின்பற்ற வேண்டிய நல்ல நெறிகளல்லவா இவை! இன்று பலராலும் பாராட்டப் பட்டுவரும் 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம்' எனும் பொதுமைப் பண்பு மலர்தற்கு ஏற்ற இனிய வழியை பன்னூறு ஆண்டுகட்கு முன்பே பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் உலகிற்கு உணர்த்தித் தமிழருக்குப் பெருமை சேர்த்துள்ளான். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலும்; தினைத் துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக் கொண்டு பழி நாணுதலும்; செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிதாக கொள்ளலும் தம்மைப் பிழைத்தோர்ப் பொறுத்தலும் தமிழருக்கு மட்டுமல்ல மக்களினம் முழுமைக்குமே உரியதாகும். சுமார் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழர் இந் நற்சிந்தனைகளுடன் வாழ்ந்திருப்பது எண்ணுந்தொறும் இறும்பூதெய்வதாகும்.

'ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால் பொன்றாது நிற்பது ஒன்று இல்லை' (குறள் : 233) ஆதலின் அப்புகழுக்குரிய' வாழும் நெறியாகிய மற்றும் பலவற்றையும் தமிழர் உலகிற்கு அளித்துள்ளனர். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்; நிலம் பெயரினும் தான் கூறிய சொல்லினின்றும் மாறாமை; அருள் சேர்ந்த நெஞ்சினராதல்; அழுக்காறு. அவா, வெகுளி, இன்னாச் சொல் இவற்றை அறவே நீக்குதல்; தம்மை நயந்தோர் புன்கண் தீர்த்தல்; ஏதிலார் குற்றம் போல் தன் குற்றம் காணல்; ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கையுடன் செயற்கரிய செய்தல்; கேளிலார்க்கும் கேளாதல் போன்றவற்றை ஒருவர் தம் வாழ்வில் கடைப் பிடித்தால் இறைவனுக்கு இணையாகப் போற்றப்படுவான். இதற்காக உலக வாழ்வைத் துறந்து, துறவு மேற்கொள்ளத் தேவை இல்லை. 'மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்து விடின்' (குறள் 280) என மிக எளிதாக உலகத்தார்க்கு வழிகாட்டுகிறார் வள்ளுவப் பெருந்தகையார். 'ஊருடன் கூடிவாழ்; ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்' எனும் ஔவையின் உரையும் உணர்தற்பாலது.

உலகில் வாழும் ஒவ்வொருவரும் வேண்டாம் எனாது என்றும் விரும்புவது மன அமைதி. அம் மன அமைதியைப் பெறுவது யாங்ஙனம் என்பதை யாவரும் போற்றும் வண்ணம், ஏற்கும் வண்ணம் சிறப்பாகக் காட்டியுள்ளார் நம் சங்கச் சான்றோர் கணியன் பூங்குன்றனார்.[10] அப்பாடல் உலக மொழிகள் யாவற்றிலும் மொழிபெயர்க்கப்பட வேண்டிய சிறப்புடையது. மன நிறைவு, மன அமைதி, உலகுடன் ஒன்றிவாழும் நிலை போன்ற அனைத்திற்கும் இப்பாடல் வழிகாட்டுகிறது. தன்னுடைய நலனுக்கும் தீமைக்கும தத்தம் செயல்களே காரணமாகின்றன என்ற உணர்வு மனதுள் எழும் பொழுது பிறரே தன் தாழ்விற்குக் காரணம் என்ற எண்ணம் எழாது; அதன் காரணமாக மற்ற வரைப் பகைவராக்கும் நிலையும் எழாது; நட்பாகவே கொள்ளத் தூண்டும். வாழ்க்கையை அதன் போக்கில் ஏற்றுக் கொள்ளும மனப்பக்குவம் பெறும் பொழுது இன்பத்துள் இன்பமும், துன்பத்துள் துன்பமும பெறும் மன நிலை மாறி இரண்டையும் ஒன்றாகக் கருதும் மனத் துணிவு ஏற்படும். உலக வாழ்வும் இனிமை பயக்கும். இம்மனநிலையை உலகில் உள்ள அனைவரும் பெறும் பொழுது இங்நிலவுலகே இன்பே நிறைந்த மேலுலகாகும் என்பதில் ஐயமில்லை.

---

10. யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன
சாதலும் புதுவதன்றே வாழ்வில்
இனி தென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
இன்னாது என்றலும் இலமே மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கு மல்லல் பேர் யாற்று
நீர்வழிப் படூஉம் புணை போல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

(புறநானூறு : 192)

மனிதர்கள் அனைவரும் பொருள், உடல், வலி என்பவற்றுள் ஒன்றே போல் இருப்பதில்லை. எல்லோராலும் எல்லா செயல்களும் இயலுதலும் இயற்கையன்று, அதனையும் உன்னிய தமிழர் அதற்குரிய வழியாக,

நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லோரும் உவப்பது அன்றியும்
நல்லாற்றுப் படுஉம் நெறியுமமார் அதுவே
(புறநானூறு : 195)

என்று காட்டியுள்ளனர். பிறருக்கு நம்மால் உதவ இயலாவிடினும் துன்பம் தராதிருத்தலே போதுமானது. 'பண்புடையார் பட்டுண்டு உலகம்'— என்று அறுதியிட்டுக் கூறும் பொழுது இத்தகு பண்பு நலன்களுக்கெல்லாம் அடிப்படையானது அன்பாகிறது. பிற உயிர்களிடத்து இரக்கத்தைத் தரும் மிக எளிய வழியும் அதுவேயாகிறது. 'கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை உண்மையான் உண்டு இவ்வுலகு' (குறள் : 571) என்பதும் இதனை எடுத்துக் காட்டுகிறது.* சான்றாண்மைக்குரிய நெறிகளாகக் கருதப்படும் ஐந்தனுள் அன்பும் ஒன்றாக (நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை) அமைதல் நோக்கற் பாலது. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர் தம் உள்ளத் தனையது உயர்வு (குறள்: 595) என்பதையும் இவண் நினைவு கூரலாம்.

'சான்றவர் சான்றாண்மை குன்றின் இரு நிலந்தான் தாங்காது மன்னோ பொறை' (குறள்: 990) என்ற வள்ளுவரின் கூற்று ஆழ்ந்த சிந்தனைக்குரியது. உலகமே நிலை தடுமாறினும் தம் ஒழுக்கத்திலிருந்து தவறாதவர்களே சான்றோர். அவரை முன்னிட்டே உலகம் இயங்குகிறது. அவ்வாறிருக்கையில் அவர்கள் தம் நிலை குன்றின் உலகம் என்னாவது? எனவே தான் மேற்கண்ட குறளைப் படைக்கிறார் வான்புகழ் வள்ளுவர். உலகின் மேன்மையை, நலனை முன்னிட்டே இக் குறட்பாவும் அமைகிறது. இவை போன்ற கருத்துகளை அள்ளி வழங்கும் ஈரடிகளை நோக்கும் பொழுது அவர் தமிழரை நோக்கி மட்டும் இவற்றை உரைக்கவில்லை; மானிட சமுதாயம் முழுமையுமே நோக்கி அறைகிறார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. என்றும் எவருக்கும் பொருந்தும் கருத்துகளாக இவை நின்று நிலவுவதே அவர் தம் இறவாப் புகழுக்குச் சான்று. இன்று குறள் முப்பதிற்கும் மேற்பட்ட உலக மொழிகளில் நூற்றைம்பதிற்கும் மேற்பட்ட மொழி பெயர்ப்புகளைக் கொண்டிருக்கிறது என்பதைக் காணுகையில் 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு' எனும் பாரதியின் கூற்றில் எள்ளளவும் மிகையில்லை என்பது உறுதி. ''கீதை உலக வாழ்வினை யொத்து செய்த துடிப்பு மிக்க வாழ்வில் விடா முயற்சியைக் கட்டாயமாக்கி வைராக்கிய முடைய ஒரு நிலையை வலியுறுத்துகிறது. ஆனால் குறளில் தான் எத்தனை முன்னேற்றம். குறளின் படி ஒருவன் செய்யும் எத்தொழிலும் தன்னளவில் உயாந்ததாயும் உன்னதமாயும் அமைகிறது'' எனும் ஆல்பர்ட் ஷ்வைட்ஸரின் கருத்தும்[11] இதனை மெய்ப்பிக்கிறது. குறள் மட்டுமின்றிப் பிற நூல்கள் தரும் எண்ணங்களும் உலகப் பொதுமையை உள்ளடக்கியதாக நிற்றல் முற்சுட்டப்பட்டுள்ளது

தமிழரின் வாழ்க்கைக் கொள்கைகள் பொது வாழ்வு, தனிவாழ்வு என இரண்டினையும் காட்டுகின்றன. பொது வாழ்வினைச் சீர்படுத்தும் அரசியல் பற்றியும் உலகம் ஏற்கும் கருத்துகளைத் தமிழர் அளித்துள்ளமை வியப்பிற்குரியது.

---

11. ஆ. ஞானசேகரன்; முன்சுட்டியநூல்; ப. 7.

அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல் கொடாது
பிறரெனக் குணங் கொல்லாது
ஞாயிற்று அன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்களன்ன தண் பெரும் சாயலும்
வானத்தன்ன வண்மையும் மூன்றும்
உடைய யாகி இல்லோர் கையற
நீ நீடுவாழிய

(புறம் : 55 : 10—17)

என்று மதுரை மருதனிள நாகனார் புகன்றிருப்பது இன்றைய அரசியல் தலைவருக்கு மிகவும் வேண்டியதொன்றாக நிற்றல் வெளிப்படை. உலகை ஆளுநர் இப்பண்புகளைக் கைக்கொள்ளின் நாடுதோறும் இன்று நிகழ்ந்து கொண்டிருக்கும் புரட்சிகளும், போராட்டங்களும் அதனால் விளையும் படுகொலைகளும், பேரழிவுகளும் உறுதியாகத் திகழா. 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும்' (குறள். 388) உண்மையையும் இதனை மேற்கொண்டால் உணரலாம்.

தலைவன் தலைவியரின் அன்பினைக் கூட உலகளவு உயர்வாகக் கருதுதல் தமிழர் பண்பாடு.

நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.

(குறுந்தொகை : 3)

எனும் இப்பாடல் இல்வாழ்வுச் சீர்மையைக் காட்டுகிறது. இல்வாழ்வில் தம் கடமைகள் அனைத்தினையும் நிறைவேற்றிய பின்னர் தலைவனும் தலைவியும் துறவுநிலை மேற்கொண்டு சிறந்தவற்றைப் புரிதலே வாழ்வின் பயனாகும் என்று அன்று தொல்காப்பியர் நவின்றிருப்பதை[12] இன்று உலகோர் உணரின் முதுமை வாழ்வு' வேண்டா வாழ்வாக அமையாது பேரின்ப வாழ்வாக மலரும் என்பதில் கருத்து வேறுபாட்டிற்கே இடமில்லையன்றோ! உலக வாழ்க்கையை எவ்வாறெல்லாம் பயனுடைய தாக்கலாம்; மேன்மை அடையச் செய்யலாம்; உலகிற்குப் பாரமாகாது உலகத்தார் வேண்டும் ஒருவராக எங்ஙனம் வாழலாம் என்பதற்கெல்லாம் தமிழர் காட்டியுள்ள நெறி இங்ஙனம் உலகப் பொதுமையாக உயர்ந்து நிற்கின்றது.

தமிழரின் வாழ்த்தும் மரபே உலகளாவிய நிலையில் நிற்றல் குறிப்பிடத்தக்கது. புலவர் தம் புரவலரை வாழ்த்தும் பொழுதும்,

---

12. காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

(பொருள் . 190)

அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவும் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலைஇயர் உலகமோடு உடனே.

(புறம்: 56)

என்று போற்றியிருப்பதை மரபாகக் காணலாம். 'உலகம் தழீஇயது ஒட்பம்' என்பதனைக் கருத்துட் கொண்டமையால் தான் தமிழர்' உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின் சான்றோராகப் புகழ் பெறுகின்றனர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழும் நிலையை உணர்த்தாத, உலகைப் பற்றி எண்ணாது பிறவற்றைப் பற்றி மட்டுமே மொழிகின்ற புலவரைத் தமிழருள் காணலரிது. தமிழ் இலக்கிய, இலக்கணப் பரப்பினை ஆழ்ந்து நோக்கின் தொட்டனைத் தூறும் மணற் கேணியாக, தமிழரின் உலகளாவிய எண்ணங்கள் ஊற்றெடுத்தல் கண்டாரை வியக்கச் செய்யும். இங்குப் பொது நிலையில் ஒரு சில துளிகள் மட்டுமே காட்டப்பட்டுள்ளன. இன்னும் ஒவ்வொரு துறையாக ஆழ்ந்தகன்று ஆராயின் தமிழர் உலகின் வழிகாட்டிகள் என்பது மறுப்பிற்கிடமின்றித் தெள்ளிதின் புலனாகும்.

உலகின் மூத்த குடியாக விளங்கும் தமிழர் அறிவாலும் மூத்தோரே என்பதை உலகிற்கு உணர்த்தும் வீறு எய்தி, இன்பம் பயக்கும் வினையாக அதனை மேற்கொண்டு உதயமாகியுள்ளது, 'உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்.'

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். (குறள்: 666)

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை. (குறள்: 594)

எனும் வள்ளுவரின் வாக்கினை அடியொற்றிச் செல்லும் இவ்வியக்கம் என்றும் வளர்பிறையாய் ஓங்கிவளர ஆலத்தூர் கிழார் மொழிவழி வாழ்த்துவாம்.

''இவ்வுலகத்து
சான்றோர் செய்த நன்று உண்டாயின்
இமயத்து ஈண்டி, இன்குரல் பயிற்றி
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழிய, பலவே.''



# தமிழ்

டாக்டர். கே. பகவதி

மொழி இனிமையானது. மனித குலத்தை வாழ வைப்பது. முன்னேற வைப்பது. எனினும் தாய் மொழி என்னும் போது மனிதனுக்கு அதன் மேல் உள்ள பற்று தனித் தன்மையுடையது. பொது நிலையில், ஒவ்வொருவரும் தம் மொழியை இனிமையானது என்று கூறுவதே வழக்கு. 'சொல்லெனும் பூம் போது தோற்றி, பொருள் என்னும் நல்லிருந் தீந்தாது நாளும் நாறும்' (மதுரைக்காஞ்சி - வெண்பா) எனப் போற்றப்படும் தமிழ் மொழியை ஆராயும் போதும் இவ்வழக்கு உண்மையாகிறது. தமிழ் மொழியை இன்று நேற்றல்ல, பண்டு தொட்டே மிகச் சிறப்பாகத் தமிழர் சுட்டி வந்துள்ளனர் என்பதற்குரிய சான்றுகள் பல உள. இனிமை என்றும் நீர்மை என்றும் அமுதென்றும் அதனைக் கொண்டாடிய நிலைகள் இவற்றுள் வெளிப்படுகின்றன. மேலும் அடைகளாலும், சொல்லலங்காரங்களாலும் மட்டுமே தமிழர் தமிழின் சிறப்பைச் சுட்டவில்லை. அதனது பல்வேறுபட்ட சொல்வண்மை, திறன் கொண்டே சிறப்பிக்கும் தன்மை இவண் சுட்டத் தக்கது. ஆயினும் தமிழர் தமிழின் பெருமையைச் சுட்டினர் என்பதை விட பிற நாட்டினர், பிறமொழியினர் தமிழின் மேன்மையை யுணர்ந்த நிலையில், அதன் பெருமை கூறும் தன்மையை இவண் எடுத்தியம்புதலே மேற்சுட்டிய கருத்துக்கு மேலும் வலுவளிக்கக் கூடியது. 'நான் ஒரு தமிழ் மாணவன்' எனத்தன் கல்லறையில் எழுதி வைக்கச் சொன்ன திரு. ஜி. யு. போப் போன்றோரின் எண்ணங்கள் இவண் சிந்திக்கத்தக்கன. தமிழின் பண்பட்டதன்மை, தனித்தன்மை, பழம் சிறப்பு சுட்டும் பல கருத்துகள் அவர்களிடம் அமைகின்றன.[1]

இத்தகைய பழம் பெரும் சிறப்புடைய தமிழ் மொழியின் வரலாறு தமிழின் சிறப்புடன், தமிழரின் சிறப்பினையும் காட்டவல்லதாக அமைகிறது. இக்கட்டுரை, தமிழ் மொழியின் தோற்றம், தொன்மை, தனித்தன்மை, வளம், பேசும் மக்கள், வாழும் நாடு, இன்றைய நிலை, எதிர்காலம் போன்ற சில எண்ணங்களை ஆராயும் போக்கில் அமைகிறது.

---

1. Tamil is the most highly cultivated language and possesses the richest of indigenous literature - Prof. Max Mullar

   Quotations on Tamil and Tamil culture
   — R. Madhivanan. Pa - 1

   "No language combines greater force with equal brevity than Tamil and it may be asserted that no human speech is more close and philosophic in its expression as an exponent of the mind than the same - Rev. Percival"

   Tamil stands alone without any predecessor. In origin it must be long anterior to the sanskrit ............... Human remains and traces have been found on the East Coast of an age which is indeterminate but quite beyond the ordinary calculations of history.

   Manual of standing information - for
   Madras Presidency - Pa. 50.

## 1. தமிழ் மொழியின் தோற்றமும் தொன்மையும்

தமிழ் மொழியின் தோற்றத்தை ஆராயும் போது 'தமிழ்' என்ற சொல்லின், தோற்றத்தையும் சிறிது ஆராயலாம். தமிழ் என்ற சொல் பற்றிய ஆய்வு, தமிழ் மொழியின் தொன்மையையும் நம் கண்முன்னே கொணரும் தன்மையுடையதாக அமைகிறது.

'தமிழ்' என்ற பெயரை எந்தப் பொருளை அடிப்படையாகக் கொண்டு, தமிழர் இட்டனர் என்பது இன்று வரை புரியாத புதிராகவே உள்ளது. ஏனெனில் இது குறித்த எண்ணங்கள் எதுவும் தெளிவில்லாமையே. எனினும் அறிஞர் பலர் தங்கள் கருத்துகளை, இதன் தொடர்பாகத் தருகின்றனர்.

1. தமிழ் என்ற சொல்லுக்கு இனிமை என்ற பொருள் உண்டு. எனவே இனிமையான மொழி என்ற நிலையில் தோற்றம் பெற்றிருக்கிறது. தம் + இழ் என்பதில் இழ் என்பதற்கும் இனிமை என்ற பொருள் உண்டு. 2. தனித்த நிலையில் 'ழ' கரம் என்ற எழுத்தையுடையது. 3. மூவின மெய்களைக் கொண்டு உருவாக்கப்பட்டமை. 4. திராவிடமே தமிழ் என்று திரிந்து விடல் 5. தென்மொழி தெம்மொழி தெமொழி தமிழ் என்றாதல் 6. பிற மொழிகளுடன் ஒப்பிட முடியாதது. தனித் தன்மையுடையது என்ற பொருளில் 'தமி' என்ற பகுதியுடன் பொருளற்ற பின் ஒட்டான 'ழ்' இணைந்தது போன்று இது குறித்த எண்ணங்கள் பல.[2] இத்தகைய பல கருத்துகளையும் ஆழ்ந்து ஆராய்கின்றார். திரு. தேவநேயப்பாவாணர். இவர் கருத்து இவண் சுட்டத் தக்கது. தமிழின் தோற்றப் பழமையையும், திராவிடம் என்னும சொல் முதலாவது தமிழ் என்னும் பொருளிலேயே வழங்கியமையும், தமிழை ஒத்த சொல்லே வெளி நாடுகளில் வழங்கியமையும், திராவிடம என்னும் வடிவம் தமிழ் நாட்டுலக வழக்கில் அருகியும் வழங்காமையும் போன்ற பல எண்ணங்களை இவர் அலசுகின்றார். மொழிகட்குப் பெயர் முதலாவது நாடு பற்றியும், பின்பு மக்கள் பற்றியும் அதன் பின் மொழியின் தன்மை பற்றியும் வழங்கியுள்ளன என்ற நிலையில் தம் கருத்துகளை யுணர்த்தும் இவர் தமிழின் தோற்றம் குறித்த இரு காரணங்களையுரைக்கின்றார்[3].

'தமிழ் வணிகர் வடக்கில் உள்ள மொழி பெயர் நாட்டிற்குச் சென்றிருந்த போது அந்நாட்டார் அவ்வணிகர் பேச்சைத் தம்மில் (தம் + இல்) மொழி என்று குறித்திருக்கலாம். இல் என்பது வீட்டையும் குடியையும் ஊரையும் உணர்த்தும.

இனி, தன்மானம் தமர் என்னும் சொற்களில் தன், தம் என்பன படர்க்கை சுட்டாது சொந்த என்ற பொருள் படுதல் போல், தமிழ் என்னும் சொல்லிலும் தம் என்பது சொந்த என்ற பொருள் படுமாறு தமிழரே அப்பெயரைத் தம் மொழிக்கு இட்டுக் கொண்டனர் எனக் கொள்ளலும் ஒன்று' என்றியமபும இவர்,

'இதுகாறும் கூறியவற்றால், தமிழ் என்னும் பெயருக்குக் கூறப்பட்ட பொருட் கரணியங்கள் எல்லாவற்றுள்ளும் தனியாக ழகரத்தையுடையது; தந்நாட்டு மொழி என்னும் இரண்டே பொருத்தமானவை என்றும் இவற்றிலும் சிறந்தது தோன்றும் வரை இவையே கொளளத் தக்கன என்றும் எண்ணிக் கொள்க' என முடித்தலைக் காண் கின்றோம்[4].

---

2. தமிழ் வரலாறு — பக் - 30
3. ,, ,, — பக் - 37
4. ,, ,, — பக் - 39

பிறர் அனைவரின் கருத்துகளையும் அவரே மறுத்து விட்ட நிலையில் தேவநேயப்பாவாணரின் கருத்தை மட்டும் எடுத்து நோக்கலாம்.

தேவநேயப்பாவாணர் 'தம்மில் மொழி' என வடதிசை வணிகர் பற்றிச் சொல்லிய நிலையில், தமிழர் வடதிசைக்கு வணிபம் செய்யச் சென்றனர் என்பதற்குக் காட்டும் எண்ணங்கள் அனைத்தும் சங்க இலக்கியக் காட்டுகளேயாம்[5].

சங்க காலத்துக்கு முன்னரேயே தொல்காப்பியத்தில் பொருள் தேடிப்பிரிந்து சென்ற ஆடவர் நிலையையும், மகளிரை அழைத்துக் கொண்டு கடல் கடந்து செல்லுதல் இல்லை போன்ற எண்ணங்களையும் காண, தமிழரின் வணிகத் தொன்மை தெரிய வருகிறது. மேலும் தொல்காப்பியத்திலும், சங்ககால இலக்கியங்களிலும் காணும் எண்ணங்கள் தமிழரின் நாகரிகத் தொடக்கத்தைக் காட்டவில்லை; நாகரிகத்தின் உயர்ச்சியைக் காட்டுவன. எனவே பிற எல்லா நிலைகளிலும் மிகவும் பண்பட்டுக் காணப்பட்ட மக்கள் தம்மொழிக்குப் பிற நாட்டாரிடம் வணிகத் தொடர்பு கொண்டபின்னரே பெயர் வைத்தனர் அதுவரைக்கும் மொழி என்றே சுட்டினர் என்பது ஏற்புடையதாக இல்லை.

தனியே 'ழ'கரம் கொண்ட காரணம் என்பதும் மேலும் சிந்திக்கத் தக்கது. பிற நாட்டோடு வாணிபத்தில் தொடர்பு கொண்டு, பிறரின் மொழிகளையெல்லாம உணர்ந்து தமிழுக்கு மட்டுமே 'ழ'கரம் உண்டு என்பதையுணர்ந்து அதன் பின்னரே பெயரிட்டனரா என்ற கேள்வி இவண் எழுகிறது.

மேலும் க. ப. அறவாணன் தம் 'தமிழரின் தாயகம்' நூலுள் (பக் - 9) அமிழ் என்ற பொருளில், அமிழ்ந்தோர் என்ற காரணத்தால் அமிழ் தமிழ் ஆயிற்று என்கின்றார். அமிழ் என்பது அடிப்படையாயின் கடல்கோள் நிகழ்ந்ததன் பின்னரே இப்பெயர் தோற்றம் பெற்றிருக்கக் கூடும். இறையனார் அகப்பொருள், தலைச் சங்கம் இருந்தது பற்றி இயம்பும் போது, 'அவர் சங்கமிருந்து ஆராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரை என்ப' என்கின்றது (பக் - 5). இதனை நோக்கவும், பிற, தமிழின் வரலாறு பற்றியும் நோக்குமிடத்தும் கடல் கொள்ளப்படுவதற்கு முன்பே தமிழ் மிக வளர்ந்து இருந்துள்ளது என்பது உறுதியாகத் தெரிகிறது. இந்நிலையில் கடல்கொள்ளப்பட்ட பின்பே அம்மொழிக்குப் பெயரிட்டனர் என்பது மேலும் ஆய்வுக்குரியது.

இந்நிலையில் தமிழ்மொழி பற்றிய சில எண்ணங்கள் மேலும் சிந்திக்கத் தக்கன.

'தமிழ்' என்ற சொல்லை நாம் முதன் முதலில் காண்பது தமிழரின் முதன் நூலான தொல்காப்பியத்திலேயே ஆம். மூன்று இடங்களில் இச்சொல்லைத் தொல்காப்பியர் எடுத்தாள்கின்றார்.

'தாழ்' என்ற சொல்லுக்குப் புணர்ச்சி விதி கூறும் தொல்காப்பியர் தொடர்ந்து,

'தமிழ் என்கிளவியும் அதனோர் அற்றே' (தொல் - 386) என்கின்றார். அடுத்து இயற்சொல் பற்றிப் பேசும்போது,

'அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்

---

5. *தமிழ் வரலாறு — பக் - 38.*

தம்பொருள் வழாஅமை யிசைக்கும் சொல்லே' (பக் - 881) என்கின்றார். மேலும்

'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்
தங்குறிப்பினவே திசைச் சொற்கிளவி' (பக் - 883)

என்ற எண்ணத்தையும் காண்கின்றோம். தமிழ் என்ற சொல்லுடன், தமிழ்நாடு என்ற குறிப்பையும் காண, இச்சொல் சிறப்பாகப் பயன்படுத்தப்படும் நிலையில், இச்சொல்லின் தோற்றம் தொடக்கம் போன்றவற்றைக் காண்பது அரிதாக அமைகிறது. ஆயின் தமிழ் எழுத்தின் வகைகள், சொல்லின் இயல்புகள், புணர்ச்சி விதிகள் பற்றியும், இளமைப்பெயர், ஆண்பாற் பெயர், பெண்பாற்பெயர் போன்ற பல்வேறு பெயர்கள் பற்றியும் என, மொழி வரலாற்றையே ஆய்வுப் போக்கில் அமைத்துக் கொண்டுளள தொல்காப்பியர் காலத்திற்குப் பலகாலத்திற்கு முன்பே 'தமிழ்' என்ற மொழி, தோற்றம் கொண்டுவிட்டது என்பது மட்டும் இவண் தெளிவாகின்றது. தமிழரின் ஆராயும் திறனும் முன்னோர் வழிச் செயலாக அமைந்திருக்க வாய்ப்பு அமைகிறது. இவற்றைக்கொண்டு நோக்க, தேவநேயப் பாவணரின் கருத்துப்படி இரண்டு எண்ணங்கள் இங்கே சுட்டத்தக்கனவாக அமைகின்றன.

தமிழர் தாமே தம்மில் மொழி எனச் சுட்டியிருக்கலாம். பிற மொழியினர் பற்றிய உணர்வும், அவர்களின் தொடர்பின் தொடக்கத்திலுமே இவர் 'தம்மொழி' பற்றிச் சிந்திக்கத் தொடங்கிய நிலையில் 'தம்நாட்டு மொழி' என்று உணர்வு காரணமாக 'தம்மில் மொழி' எனச் சுட்டியிருக்கலாம். அல்லது மொழியின் பெயர் முதலில் நாடு சார்ந்தும் பின்னர் பேசும் மக்கள் சார்ந்தும் பின்னர் அவற்றின் தன்மை சார்ந்தும் அமையும் என்ற அவர் கூற்றுக்கு இணங்க, 'தம்மொழி பேசும நிலம் தம்மொழி நிலம் என்றாகி, தமிழ் நிலம் என்ற கூற்றுக்குப் பின்னர், தமிழ் நிலத்தில் பேசப்படும் மொழியைத் தமிழ் மொழி என்று சுட்டத் தொடங்கியிருப்பாரோ எனவும் கருதலாம். இக் கருத்துக்களே முடிந்த முடிவல்ல எனினும் தமிழ் மொழியின் தோற்றநிலை மறைந்து, தெளிவாக அமையாத நிலை, தமிழின் தொன்மையை மேலும் மேலும் உணரச் செய்து அதன் சிறப்பை யுணர்த்துவதில் முன்னிற்கிறது என்பது மட்டும் மறுக்கவியலா உண்மையாகும்.

'தமிழ்' என்ற சொல்லுடன், தமிழின் தொன்மையை மேலும் அறிவுறுத்துவதில் முன்னிற்பது தொல்காப்பியம். தொல்காப்பியத்தின் பெருமையைப் பேசியே நாம் தமிழ் மொழியின் தொன்மையைச்சுட்டினாலும், அந்நூலை ஆராயும்போது அறிய இயலும் தமிழின் முதுமையையும், தமிழரின் முதிர்ந்த அறிவினையும் எண்ணி வியப்புறாது யாராலும் இருத்தல் இயலாது. தமிழ் மொழியைப் பிரித்துத் தந்துள்ள நிலை நம்மை வியப்பில் மட்டுமல்லாது சிந்தனையிலும் ஆழ்த்துவன. முன்னோர் மொழிப் பொருளைப் பற்றி இயம்புவது மேலும் ஆழமான உணர்வைத் தருவிக்கின்றது.

இவற்றை நோக்க தொல்காப்பியர் அவர் காலத்திய அவருக்குக் கிடைத்த தமிழ் இலக்கண இலக்கியங்கள் அனைத்தையும் கற்றவர்; கற்றுத் துறை போகியவர் என்பது தெளிவு. இந்நிலையில் இலக்கியம் கண்ட நிலையில் அவற்றுக்கு இலக்கணம் எழுதியுள்ளார். நம் முன்னோரின் எண்ணங்களையும் ஆங்காங்கு எடுத்தியம்புகின்றார்.[6] இதனைக் கொண்டு பார்க்க, அன்று தமிழ் மொழியைக் கற்றவர்களும், இலக்கண இலக்கியப் படைப்

---

6. முன்னோர் சொல்லுவனவாகவும், பழைய நூல்களில் கூறப்படுவனவாகவும் அவர் அடிக்கடி குறிப்பிடும் குறிப்புகள் இருநூற்றைம்பதுக்கு மேல் உள்ளன. தமிழ் இலக்கிய வரலாறு — பக் - 5.

பாளிகளும் ஆய்வாளர்களும் தமிழகத்தில் இருந்து இருக்கின்றனர் என்பது மிகத் தெளிவாகப் புலப்படுகிறது. மேலும் தொல்காப்பியத்தில் தமிழர் தம் மொழியை, தம் கருத்துக்களைப் புலப்படுத்தப் பயன்படுத்திய தன்மையின் முதனிலையை நாம் காணவில்லை; தம் ஆழ்ந்த சிந்தனைகளையும், வாழ்வியல் கோட்பாடுகளையும்[7] புலப்படுத்திய நிலையைக் காணும் தன்மை, தமிழ் மொழியின் அன்றைய வளர்ச்சி நிலையையே எண்ணச் செய்கிறது. தம் எழுத்தின் கூட்டு நிலையில், நுண்மையான பல எண்ணங்களையும் தெரிவிக்கும் வண்ணம் அன்றே தமிழ் வன்மையுடையதாகத் திகழ்ந்த வளர்ச்சி நிலை இங்கே தெளிவாகிறது.

அடித்தளமில்லாத கட்டிடம் எவ்வாறு நிலத்தில் நிற்கும்? அதுபோன்று எந்தவித இலக்கிய இலக்கண வளமுமின்றி இத்தகையதொரு படைப்பு எழும்ப முடியுமா? தொல்காப்பியருக்கு முந்திய இந்த வளமெல்லாம் எங்கே என்ற வினா எழுகிறது. தொல்காப்பியர் வாழ்ந்த இடம், தொல்காப்பியத்தின் சிறப்புப்பாயிரம், இறையனார் அகப்பொருள் உரைக் குறிப்புகள், கடல்கோள் பற்றிய எண்ணங்கள் போன்ற அனைத்தையும் ஒப்புவைத்து நோக்க இம்மொழி வளமும் முதிர்ச்சியும் விளக்கம் பெறுகின்றது.

தொல்காப்பியர் வாழ்ந்து தமிழ் ஆய்ந்த இடம் எது என்பது அவரது நூல்வழி விளக்கம் பெறவில்லை. ஆயின் தொல்காப்பியத்தின் பாயிரம் காட்டும் அதங்கோட்டாசான் முன்னிலையில் அரங்கேற்றம் செய்த தன்மை தமிழ்நாட்டின் தென்பகுதியையே எண்ணச் செய்கிறது.

இறையனார் களவியல் உரை தொல்காப்பியர் தமிழ் ஆய்ந்தது கொடுங்கடல் கொண்ட பகுதி என்கின்றது.

தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம், 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்று கூறும் இயல்பில், தமிழ் நாட்டின் தெற்கும் வடக்கும் கடல் இல்லை; நிலமே அமைந்திருந்தது என்ற குறிப்பும் சுட்டப்படுதலைக் காண்கின்றோம்.

புறநானூற்றில், கடல்கொண்ட நிலத்தில் இருந்த இடங்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும் — (புறம் - 6)
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர் பஃறுளி மணலினும் பலவே — (புறம் - 9)
குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
வடமலை பெயர்குவையாயின் — (புறம் - 67)

---

7. காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்ற மொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே—தொல், கற்பு - 51

போன்ற எண்ணங்கள் குமரியாறு, பஃறுளி ஆறு பற்றிய எண்ணங்களைத் தருகின்றன. ஆயின் சிலப்பதிகாரம் இவற்றைச் சுட்டிச் செல்லாது. இப்பகுதியின் மறைவை ஒரு வரலாற்றுச் சான்றாகவே காட்டி அமையக் காணலாம்.

> 'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
> குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள' (2-11-19-20)

கொடுங்கடல் கொண்ட தன்மை இவண் தரப்படுகிறது. மேலும் அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையும், இறையனார் களவியல் உரையும் கடற்கோள் உண்மையைத் தெளிவுபடுத்துகின்றன. தமிழ் அறிஞர் பலரும் இவ்வுண்மையை ஏற்றுக் கொண்டு, தம் எண்ணங்களைத் தந்துள்ளமையும் இங்கே சுட்டத் தக்கது. எனவே நம் தமிழ்மொழியின் தென்பகுதித் தொடர்பும், மொழி வளர்ச்சியடைந்திருந்த நிலையும், கடற்கோள் உண்மையும், கடற்கோளால் நூல்கள் பல அழிந்து போயிருக்கக் கூடிய வாய்ப்பை எளிதாகத் தெளிவாக்கித் தருகின்றன.

மேலும் மறைந்து போன தமிழ் நூல்களாக நாம் அறிய வருகின்ற நூல்கள், பல நூல்கள் இருந்து மறைந்ததற்குச் சான்றாக அமைகின்றன. மயிலை சீனி. வேங்கடசாமி தம் 'மறைந்து போன தமிழ் நூல்கள்' என்ற நூலுள், கடல்கோளால் நாம் இழந்த நூல்களுடன் பிற்காலத்திலும் பல்வித காரணங்களால் இழந்த நூல் இழப்பைத் தருகின்றார். சமயப்பகை, மூடக்கொள்கை, தீ, வெள்ளம், செல் காரணமாக அழிந்தவை, அயலார் படையெடுப்பில் பலியானவை போன்ற பல காரணங்களைக் குறிப்பிடுகின்றார் (பக் - 362). இந்நிலையில் இருப்பதைக் கொண்டு இல்லாததை யுணருதல் என்ற நிலையில் தமிழ் மொழியின் ஆழ்ந்த அகன்ற இலக்கிய இலக்கண பரப்பை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ளல் இயலுகிறது.

உலக மொழிகள் என்ற நிலையில் ஆராயும் போதும் தமிழின் தொன்மையும், வன்மையும், தனிச் சிறப்பும் தெரியவருகின்றதைச் சுட்டலாம்.

உலகமொழிகள் பல, இவற்றுள் தொல்சிறப்பின கிரேக்கம், எகிப்து, லத்தீன், வடமொழி, தமிழ் என்பனவாகும். இவற்றுள் கிரேக்கம், தமிழ் தவிர, பிறமூன்றும் வழக்கிறந்த மொழிகள். கிரேக்கம் இன்று வழக்கில் உள்ளது எனினும். இன்றைய மொழி, புதிய கிரேக்க மொழியாக அமைகிறது என அறியவருகின்றோம்.[8] இந்நிலையில் மிஞ்சியிருக்கும் ஒரே மொழி தமிழ். தொல்மொழிகள் ஐந்தனுள்ளும் எழுத்தாலும், சொல்லாலும், வழக்காலும் காலத்திற்கேற்ற நிலையில் சில மாற்றங்களைப் பெற்றுக்கொண்டு, தளராது நின்று கொண்டிருக்கும் சிறப்பு ஒன்றே தமிழின், மொழி வன்மையை எடுத்தியம்ப போதுமானது.

## வளம்

மறைந்துபோன வரலாறு தவிர, மறையாத வரலாறாக மொழி வரலாற்றினை நாம் இரண்டாயிரம் வருடகால வரலாற்றில் காண இயலுகிறது. தமிழ்மொழியின் வரலாறு, அதன் இலக்கிய இலக்கண வரலாற்றைத் தர, அவ்வரலாறு தமிழனின் வரலாற்றையும் தருகின்றது. இரண்டாயிரம் வருடங்களாக நாம் காணும் பலதரப்பட்ட தமிழ் மொழிப் படைப்புகள் அரசியல் மாற்றம், பிறநாட்டார்த் தொடர்பு, அதற்கேற்ப தமிழனின் உளவியல் மாற்றம், சமுதாய மாற்றம் காரணமாகப் புதிய இலக்கிய வகைகளின் தோற்றம்

---

8. மொழியும் அதன் வாழ்வும் — பக் - 23

போன்ற அனைத்தையும் தெளிவாக்குகின்றன, இயல் இசை நாடகம் என்ற முத்தமிழ் துறை அறிவு மட்டுமல்லாது, பலவித அறிவியல் துறைகளிலும் மேம்பட்டு இருந்த தமிழரின் திறமும் இவண் வெளிப்படுகின்றது.

சங்க இலக்கியம் எனப்படும் தொகை நூல்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், தனிப்பாடல்கள், சிற்றிலக்கியங்கள் என வளர்ந்து வந்த தமிழ் இலக்கியம் இன்றும் வளர்ந்து கொண்டே இருக்கிறது. கவிதை நடையில் தன் படைப்புகளைக் கொண்டு திகழ்ந்த தமிழ்மொழி இன்று உரைநடையில் தனது சிறப்பினைச் சுட்டிக்கொண்டிருக்கிறது. நாவல், சிறுகதை, திறனாய்வு, ஆய்வு எனவும், புதுக்கவிதையுடன் மரபுக் கவிதையும் வளர்ந்து கொண்டிருக்கக் காண்கின்றோம்.

## தமிழ் பேசும் மக்களும் வாழும் நாடும்

தமிழ் பேசும் மக்கள் இன்று நிறைந்து இருப்பது தமிழ்நாடு. எனினும், வணிகம், கல்வி, பிறபணிகள் பல காரணமாக இன்று இந்தியாவின் பிறபகுதிகளிலும், உலகின் பல பகுதிகளிலும் தமிழர் வாழ்வதை நாம் பார்க்கின்றோம். இந்நிலையில் தமிழ் மொழியும் இங்கு வளருவதைக் குறிப்பிடலாம். பிற மாநிலங்களிலும், பிற நாடுகளிலும் தமிழ் எவ்வாறு பல்கலை கழகங்களில் பயிலப்பட்டு வருகின்றது என்பதைப் பல அறிஞர்களைக் கொண்டு எழுதி வெளியிட்டுள்ளது 'உலகத் தமிழ்' என்ற நூலாக மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் (ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு 1981). உலகத் தமிழ் ஆராயச்சி நிறுவனம் வெளியிட்டுள்ள, உலகில் தமிழும் தமிழரும், என்ற நூலும், இப்போக்கை ஆயும் நிலையில் அமைகிறது.

## இன்றைய நிலை

தமிழின் நிலையை இன்று காணும்போது ஓரளவுக்குப் பல துறைகளிலும் வளர்ச்சி பெற்று வருகின்றது எனினும், அன்றைய அதன் பெருமையையும், தமிழரின் சிந்தனை நுணுக்கத்தையும் காண, இப்போதுள்ள வளர்ச்சி போதுமானதாக இல்லை என்றே கூற வேண்டும். உலக முழுவதும் தமிழ் ஓரளவுக்குப் பரவத் தொடங்கியிருக்கிறது எனினும் மிகுந்த விரைவில் வளர்ந்து செல்லும் பிற மொழிகளையும், அவற்றின் பல துறை முன்னேற்றத்தையும் காணும் போது நம் மொழியின் வளர்ச்சியின் விரைவு போதாத தொன்றாகவே அமைகிறது. எனவே உலகில் பிற நாட்டார் நிலை,நம் நிலை, பிறநாட்டார் முன்னேறிஇருப்பதற்குரிய வழிகள், நாம் முன்னேறாமைக்குரிய காரணங்கள், மொழியின் முன்னேற்றமின்மை எந்த விதத்தில் நாட்டு முன்னேற்றத்தைத் தடுக்கிறது போன்ற பலவற்றையும் நாம் சிந்திக்க வேண்டிய சூழலில் அமைகின்றோம். ''பிற நாட்டில குறிப்பாக ஆங்கில, ருசிய, சப்பானிய மொழிகளில் உரைநடை நூல்கள் பெருகியுள்ள எல்லையைத் தமிழ் இன்றும் அடையவில்லை. பிற இந்திய மொழிகள் சிலவற்றில் அண்மைக்கால வளர்ச்சியளவுக்குக் கூடத் தமிழில் பலதுறை ஆக்கங்கள் செழிக்கவில்லை என்பதை ஒபபுக்கொள்ள வேண்டும். மேல்நாடுகளில் வெளிவரும் நூல்களில் 60% அறிவியல் நூல்கள், தொழில் நூல்கள். தமிழில் 100-க்குப் பத்து நூலாவது இத்துறை சார்ந்தனவா என்றால் இல்லையென்றே சொல்ல வேண்டும்'[9] போன்ற அறிஞரின் எண்ணங்களை இவண் மேலும் எண்ணி, வேண்டியவற்றைச் செயல் முறையில் தொடங்க வேண்டியிருப்பதைத் தமிழராகிய நாம் எண்ண வேண்டும்.

---

9, உலகத் தமிழ் — பக் - 145.

இன்று தமிழகத்தில் பல ஆய்வு நிறுவனங்களும் பல்கலைக் கழகங்களும் 'தமிழின்' மேன்மையை வெளிப்படுத்தும் விதத்தில் தம் ஆய்வுப் போக்கினை அமைத்துக் கொண்டிருக்கின்றன. எனினும், இவை அறிவியல், தொழில் தொடர்பான நூல்களை ஆக்குவதிலும், கலைச் சொற்களை உருவாக்குவதிலும் மேலும் முயற்சி எடுக்க வேண்டிய தேவையையும் நாம் உணர வேண்டிய நிலையில் அமைகின்றோம்.

அறிவியல் துறையிலும், பிற துறையிலும் நம்மொழி போதுமான நிலையில் வளராதநற்குரிய காரணத்தையும் நாம் இங்கு ஆராயலாம்.

இன்று உலகின் தலைசிறந்த மொழியாகக் கருதப்படுபவை அனைத்தும் அறிவியல் துறையிலும் முன்னேற்றம் அடைந்த மக்களால் பேசப்படும் மொழியேயாகும். ஆயின் நம் தமிழ் மொழியைப் பொறுத்தவரையில் அறிவியல் துறை நூல்களைக் காண்பது இயலாததாக அமைகிறது. அறிவியல் கலைச் சொற்கள் இன்மை இதன் ஒரு குறையாகக் கருதப்படுகிறது. தமிழில் கலைச் சொற்கள் இன்மை தமிழனின் குறையே தவிர தமிழின் குறையன்று.

தமிழ்மொழி இலக்கிய வரலாற்றில், நாம் தெளிவுறுவது தமிழரின் வரலாறு மட்டுமல்ல; அவர்களது பல்வகை அறிவியல் அறிவையும் கூடவே தெரிகின்றோம். கனா நூல், ஓவிய நூல், சிற்பநூல், போன்ற பல நூல்கள் மறைந்து போன தமிழ்நூல் வரிசையில் காணப்படுகின்றன. மேலும் இன்று காணப்படும்பல சித்த மருத்துவச் சுவடிகள் அன்றைய தமிழரின் மருத்துவப் புலமையை வெளிக் கொணரவல்லன. இவை அனைத்தையும் தமிழர் தம் தாய் மொழியாகிய தமிழ் மொழியிலேயே தான் உணர்த்தியுள்ளனர். மேலும் தமிழர் தம் இலக்கியங்களில் வானவியலறிவுடன், விலங்கு, தாவரம் போன்ற இயற்கை பற்றிய எண்ணங்களையும் தமிழ் மொழியிலேயே மிகச் சிறப்பாகவும் நுண்மையாகவும் சுட்டியிருப்பதைக் காண்கின்றோம். இந்நிலையில் தமிழரின் இத்தகைய ஆழமான அறிவு ஆற்றல் அனைத்தும் மேலும் வளராது தடைபட்டமைக்குரிய காரணம் என்ன ? அல்லது பிற்காலத்தில் அவர்கள் எழுதிய நூல்கள் இவை தொடர்பாக நமக்குக் கிடைக்காது அழிந்து விட்டதா? இருந்திருப்பின் ஏன் குறிப்புகள் கிடைக்கவில்லை? இவ்வாறு தொடக்க காலத்தில் சிந்தித்த சிந்தனைகள் வளர்ச்சி பெறாமல் நின்றுவிட்டதற்குரிய சூழல் என்னவாக இருக்கமுடியும் என்று நோக்க, பிறநாட்டார் வரவின் காரணமாகப் பிறமொழித் தாக்கமும், அவர்களது செல்வாக்கும் ஒரு காரணமாக இருக்கலாமோ எனத் தோன்றுகிறது அடுத்து இடைக்காலத்தில் இத்தகைய இயற்கை பற்றிய சிந்தனைகளை விட மக்கள் மனத்தை அதிகமாக ஆட்கொண்டது பக்தி இயக்கமே. இதன் காரணமாகக் கோயிற் பணிகளின் மிகுதியை இடைக்காலத் தமிழரிடம் காண்கின்றோம். தொடர்ந்த காலத் தமிழக வரலாறும் குழப்பமான அரசியல் சூழலையுடையதே. இந்நிலையில் பலரிடமும் அடிமைப்பட்டு தங்கள் வாழ்வையே பாரமாகவும், துன்பமாகவும் வாழ்ந்த நிலையே தமிழகத்தில் இவ்விதத் துறைகள் வளர்ச்சியுறாமல் போனதற்குரிய காரணமாக இருக்கலாமோ எனவும் சிந்திக்கலாம்.

எனினும், இன்று தமிழ்மொழியின் வளர்ச்சி பற்றியும் பிறதுறை வளர்ச்சி பற்றியும் தமிழர் சிந்திக்கத் தொடங்கியிருக்கும் நிலையைக் காண்கின்றோம். இந்நிலையில் நாம் முதலில் நம்மைப் பிற நாட்டார் அளவிற்குமுன்னேற்ற வேண்டும். இதற்கு முதலில் பாரதியாரின் எண்ணப்படி பிறநாட்டாரின் சிறந்த நூல்களை மொழி பெயர்த்திடல் வேண்டும். பிறநாட்டாரின் முன்னேற்றமடைந்த நிலையைச் சுட்டும் அவர்களது அறிவியல் நூல்களையெல்லாம் கற்க வழி செய்து, தமிழர் முதலில் அவ்வறிவினைப் பெற வழி கோலவேண்டும். பின்னர், தமிழரும் சுயமாகச் சிந்திக்கும் முயற்சிக்கு வழி வகைகள் செய்ய

வேண்டும். சிந்தனையின் வளர்ச்சியில் தான் மொழியின் முன்னேற்றம் அடங்கியிருக்கிறது என்ற நிலையில் தமிழ் மொழிக் கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்து செயல் படவேண்டும். தமிழ் மொழியின் சிறப்பு பண்டைய தமிழகத்தில் எவ்வாறு இருந்தது என்பதை உலகிற்கு எடுத்தியம்ப வேண்டும் என்ற எண்ணத்துடன்[10] மட்டும் நின்று விடாது தமிழ்க் கல்வியை, அறிவியல் கல்வியாக உலகில் பரப்ப முயற்சி செய்ய வேண்டும். வளர்ந்து வரும் உலகத்தில் தமிழும் தமிழனும் முன்னேற்றமடைய செய்யவேண்டிய முதன்மையான பணியாக அமைவது தமிழ் மொழியை அறிவியல் மொழியாகத் திகழச் செய்வதேயாகும்.

---

10. ஒரு நல்ல விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட தமிழ் ஆங்கில அகராதி தேவை. இதில் தற்கால வழக்கில் உள்ள தமிழ்ச் சொற்கள், சொற்றொடர்கள், மரபுத் தொடர்கள் தகுந்த எடுத்துக் காட்டுகளுடன் இடம் பெற வேண்டும். இப்படி ஒரு அகராதியில்லாத குறையை வெளிநாடுகளில் தமிழ் கற்கும், கற்பிக்கும் நிலையில் உள்ளோர் நன்கு உணர்கின்றனர். இது உடனடியாகச் செய்யப்பட வேண்டிய ஒன்று.

தமிழக வரலாறு, பண்பாடு பற்றிக் கூறும் ஒரு நல்ல தெளிவான கலைக் களஞ்சியம் ஆங்கிலத்தில் (அல்லது தமிழில்) வெளிவரவேண்டும். பல செய்திகளை மாணவர்களுக்கு விளக்கிச் சொல்ல இது பேருதவியாக இருக்கும்.

பேச்சுத் தமிழை உரிய விளக்கங்களோடு பதிவு செய்த தட்டுக்கள் அல்லது நாடாக்கள் தயாரிக்க வேண்டும். இந்தி வங்காளி மொழிகளுக்கு இந்த Linguaphone உண்டு. — உலகத் தமிழ் - பக் 268, 269.



துணை நூற் பட்டியல்

1. இறையனார் அகப்பொருள் விளக்கம்-கழகவெளியீடு, சென்னை, 1969.
2. உலகத்தமிழ் - தமிழண்ணல் இராமபெரியகருப்பன், அ. குழந்தைநாதன் (பதிப்பு), மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு, 1981.
3. சிலப்பதிகாரம் - உ. வே. சா. பதிப்பு (9), டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1978.
4. தமிழ் இலக்கிய வரலாறு - (நான்காம் பதிப்பு) மு. வரதராசன், சாகித்திய அக்காதமி, புதுதில்லி, 1980.
5. தமிழ் வரலாறு - ரா. இராகவையங்கார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1979.
6. தமிழ் வரலாறு - ஞா. தேவநேயன், நேசமணிப் பதிப்பகம், வட ஆர்க்காடு மாவட்டம், 1967.
7. தமிழ் வரலாறு - ஞா. தேவநேயன், நேசமணிப் பதிப்பகம், வட ஆர்க்காடு மாவட்டம், 1972.

8. தமிழரின் தாயகம் - க. ப. அறவாணன், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை, 1984.

9. தமிழும் தமிழரும் - ந. கடிகாசலம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை 1982.

10. திராவிடத் தாய் - ஞா. தேவநேயன், கழகவெளியீடு, 1964.

11. தொல்காப்பியம் - நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1981.

11. மறைந்து போன தமிழ் நூல்கள் - மயிலை. சீனி. வேங்கடசாமி, காந்திநூலகம், சென்னை, 1967 (2).

13. மொழியும் அதன் வாழ்வும் - நிர்மலா சுரேஷ், பிரயத்னா, சென்னை, 1981.

14. புறநானூறு மூலமும் பழைய உரையும் - உ. வே. சா. பதிப்பு (7), டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1971.

15. Quotations on Tamil and Tamil culture - R. Madhivanan, Thainadu Pathippagam, Madras, 1981.

# கல்வி

— டாக்டர். அன்னிதாமசு

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை (குறள் 400)

கல்வி எனும் சொல், கற்கை, கல்வியறிவு, வித்தை, பயிற்சி, நூல் எனப் பொருள்படுகின்றது*. தேவையான நல்ல நூல்கள் கற்கப்பட வேண்டியன; இத்தகு ஏட்டுக் கல்வியுடன், உலகியல் பற்றிய வாழ்க்கைக் கல்வியும் இணையும் போது, அறிவுப் பெருக்கம் ஏற்படுகிறது. கற்றது, அத்துடன் நின்று விடாது பழக்கத்தில், செயலில் கொண்டு வரப்படும் நிலையில் பயிற்சி அமைகிறது. பன்முக நோக்கில், கல்வியால், பல் வகைக் கலைவன்மை செறியும் போது வித்தையாகின்றது. அதன் விளைவு, பின்னும் பல நூல்களை உருவாக்குகின்றது. இவ்வாறு கல்விச் சக்கரம் சுழன்று முன்னேறுகிறது.

**கல்விச் சிறப்பு :**

கல்வி, விளக்குப் போன்றது, அறியாமை இருளை நீக்கி அறிவு ஒளியைத் தரவல்லது. கற்றலால் உருவாகும் ஒரு விளக்கு, கற்பித்தலால் பல விளக்குகளை ஏற்றிக் கல்வியைப் பரப்பவல்லது. கற்றோர் பலரை உருவாக்க வல்லது. எடுக்கக் குறையாதது - கொடுக்கக் கொடுக்கக் குன்றாது பெருகுவது கல்வியொன்று தான். எனவே தான் வள்ளுவர் கல்வியைக் கேடில்லாத, கெடுதலில்லாத விழுமிய செல்வம் என்றார். அன்றியும் ‘செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்’ (411) எனக் கேள்வி யறிவுக் கல்வியையும் எல்லாச் செல்வங்களிலும் சிறந்த செல்வமாகக் காட்டினார். பிற செல்வங்கள், வளங்கள், பொருட்கள் அழியலாம்; திருடப்படலாம்; வலிந்து பறிக்கப்படலாம்; தொலைந்து போகலாம்; பயனற்றுப் போகலாம்; துன்பம்தரலாம்; ஆனால் கல்விச் செல்வமோ இத்தகு இடையூறுகளில்லா நிலைபேறுடையது என விவேக சிந்தாமணி கூறுகின்றது.

வெள்ளத்தால் அழியாது வெந்தழலால் வேகாது
வேந்த ராலும்
கொள்ளத்தான் இயலாது கொடுத்தாலும் நிறைவொழியக்
குறைப டாது
கள்ளத்தார் எவராலுங் களவாட முடியாது
கல்வி யென்னும்
உள்ளத்தே பொருளிருக்க உலகெங்கும் பொருள்தேடி
உழல்வ தென்னே ★

கல்வி உடல்வாழ்வுக்கும், உளவாழ்வுக்கும், உயிர்வாழ்வுக்கும் உதவுவது; துணை யாவது. எண்ணும் எழுத்தும் கண்ணாகக் காட்டப்படும் போது, கண்டு உணரப்படும் போது ஊனக்கண்ணும், ஞானக்கண்ணும் புறத்தும், அகத்தும் ஒளிதரலும்

---

* தமிழ் லெக்சிகன், தொகுதி 2, பக் 775.

★ பன்னூல் பாடற்றிரட்டு, கழகம், 1968, பக் 310 (பாடல் 2001).

உயிரேற்றத்திற்கு உதவலும் வெளிப்படுகின்றன. இதனால், கல்வி இம்மை வாழ்வுக்கு மட்டுமன்றி மறுமைக்கும் உறுதுணையாவது தெரிகின்றது. 'நண்ணும் மறுமைக் கணி நலம் கல்வி' என்பது திரிகடுகம் (52).

ஆறறிவுயிராக மனிதன் பிறப்பினும், அவ் இயற்கையறிவு, இயல்பான அறிவு செப்பமும், செறிவும் பெறுவது கல்வியால். மூளை ஒரு நல்வயிர மென்றால், கல்வி அதனைப் பட்டை தீட்டி ஒளிர, ஒளி வழங்கச் செய்கிறது. கல்வி, அறிவைத் தூண்டுகிறது; சிந்திக்கச் செய்கிறது. எழும் எண்ணங்கள் மேலும் அறிவு பெறும் விழைவையும், ஆய்வுத் திறனையும் தட்டியெழுப்புகின்றன. ஆய்வால் அறிவு மேலும் விளங்குகிறது; விளக்கமுறுகிறது. அறிவின் பயன்பாடு, கல்வி வழியாக, கல்வியைக் கருவியாகவும் ஊடுபொருளாகவும் கொண்டு அமைவது இதில் புலப்படுகின்றது.

கல்வியால் அறிவு வன்மை மட்டுமன்றி, சொல்வன்மையும், சீர் தூக்கலும், திட்டம் தீட்டலும், வருவதை முன் கருதலும், நன்மையையே நாடுதலும் போன்ற பல சிறப்புப் பண்புகளும் பொருந்துகின்றன. கல்வி, கற்றலோடு நின்று விட வேண்டியதன்று; கடைப் பிடித்து ஒழுக வேண்டியது. கல்விக்கும் வாழ்விற்கும் தொடர்பு, இணைப்பு, இயைவு தேவை. கசடின்றிக் கற்றலும் கற்றவாறே நிற்றலும் தேவையென்பதை வள்ளுவமும் கூறும்.

> கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
> நிற்க அதற்குத் தக (குறள் 391)

இவ்வாறு கல்வியை வாழ்வில் கடைப்பிடிப்பவன் உயர்வுடையவனாக அமைகின்றான். தன் இடத்திலும், பிற ஊரிலும், உலகெங்கிலும் போற்றுதல் பெறுகின்றான். மூதுரை, மன்னனை நோக்கக் கற்றவனே சிறப்புடையவன் எனவும், மன்னனுக்குத் தன் ஊரில் மட்டுமே சிறப்பமைய, 'கற்றோற்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்பு' (26) எனவும் இக் கருத்தை வலியுறுத்துகிறது. 'யாதானு நாடாமா லூராமால்' (397) எனக் குறளும் இதனைத் தந்தது.

இத்தகு சிறப்புடைய கல்வியைப் பெறுதலின் தேவையை மன்னவனும் உணர்ந்து மொழிந்ததைப் புறநானூறு காட்டும். பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் எனும் இம் மன்னனின் பாடல், குலமும், குடும்பமும், குடியும், அரசும் கல்வியறிவுடையவனை அவாவுவதைக் காட்டும்

> உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
> பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
> பிறப்போரன்ன உடன்வயிற் றுள்ளும்
> சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்
> ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக என்னாது அவருள்
> அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்
> வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
> கீழ்ப்பா லொருவன் கற்பின்
> மேற்பா லொருவனும் அவன்கட் படுமே (183)

மக்களிடையேயுள்ள இன வேற்றுமையை, மேல் கீழ் எனும் கருத்துக்களை நீக்கி அனைவரையும் ஒப்பவைத்துக் கருதும் நிலையைக் கல்விப்பேறு அளிக்கும் என்பது இங்குப் புலப்படுகின்றது. ஒற்றுமைக்கு அடிப்படையாகவும் உறுதுணையாகவும் கல்வியமைவதை இதில் உணரலாம்.

உறுபொருள் கொடுத்தும், பல் வகையில் முயன்றும் பெறத்தக்க அரும் பொருளாகக் கல்வி அமைகின்றது. தேய்ந்து ஒழியும் உடலழகினும் நெஞ்சத்துப் பொக்கிஷமான 'கல்வி யழகே யழகாக' அமைவதை நாலடியார் (131) கூறுகின்றது. அக் கல்வியைப் பெறுவதிலும், தேர்ந்து கொள்வதிலும், அணுகுவதிலும் சில நிலைகள் அமைவதையும் அற நூல்கள் உணர்த்துகின்றன. மிக்க விருப்புடன், மிகுந்த ஆசையுடன், ஏக்கத்துடன் கற்கும் நிலையை, 'உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார்' (345) எனக் குறள் கூறும். அன்றியும், கல்வியின் அளவற்ற தன்மை பற்றி, வாழ்நாளின் குறுக்கத்தைக் கருத்தில் கொண்டு நல்லனவற்றையும் தேவையானவற்றையும், வேண்டியனவற்றையும் மட்டுமே கற்று, காலத்தை வீணாகப் பாழாக்காமல் இருத்தல் வேண்டுமென நாலடியார் கூறுகின்றது.

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல - தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து (135)

இத்தகு தேர்ந்த கல்வி, சிந்தனைத் தெளிவு அளிப்பதால், குழப்பம் நீக்குவதால் 'மம்மர் அறுக்கும் மருந்தா'க (நாலடி, 32)வும் பொருந்துகின்றது. கல்வியால் பெற்ற இம் மனத்தெளிவே, மனிதனைத் தன் அகத்தில் இறைவனையும் காணக் கை கொடுக்கின்றது உண்மையைத் தேடும் ஆர்வம், மூலமுழு முதலை முனைந்து ஆய்ந்து காணும் நாட்டம், தத்துவத் தேர்ச்சி என இதனை விளக்கலாம். எல்லா உயிர்க்கும் அவனே இறையாயினும், எல்லாவுயிருமன்றி, கல்வி யறிவுடையவுயிரே அவனைக் கண்டடைகின்றது எனத் திருமந்திரம கூறுகிறது.

எல்லா உயிர்க்கும் இறைவனே ஆயினும்
கல்லார் நெஞ்சத்துக் காண வொண்ணாதே (312)

இறைவனைப் பற்றிய கல்வியாக இது பரிணமிக்கின்றது. இவ்வாறமையும் தூயநற்கல்வி, ஒளிபோன்றும், செல்வம் போன்றும், சுந்தம் போன்றும 'துணையதுவாய் வரும்' எனவும் திருமந்திரம் (294) கூறுகின்றது. எல்லா இடத்தும் நிறைந்திருக்கின்ற இறைவனை அறிந்து கற்றோரே அவனைக் கலத்தலும் அறிவர் என இந்நூல் கூறுவதில் ஞான மார்க்கம் தென்படுகின்றது.

எல்லா இடத்தும் உளன் எங்கள் தம் இறை
கல்லாதவர்கள் கலப்பறியாரே (311)

இதனால் போலும் 'கல்லா மனிதர் கயவர்' எனவும் 'மூடர்' எனவும் சினந்து மொழிகின்றது திருமந்திரம் (314)

கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லாராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே (317)

கல்லாத உடம்பு பாழ் என நான்மணிக்கடிகை (22) கூறுவதும், ''கல்வியும் கேள்வியும் 'கடபட' வென்று உருட்டுதற்கன்று இறைவன் சின் முத்திரையின் கருத்தை யறிந்து இன்ப நிட்டை கூடுவதற்கே'' எனத் தாயுமானவர் (நின்றநிலை.3) கூறுவதும் இங்கு இணைத்துக் கருதத் தக்கன.

அன்றியும், வாழ்வின் அடிப்படையாகக் கல்வி யமைந்து, இங்குச் சுட்டிய வீடு மட்டுமன்றி பிற உயர் - உயிர்ப் பொருட்களான அறம், பொருள், இன்பங்களையும் தர வல்லது என்பதுவும் தமிழிலக்கிய எண்ணமாக அமைகின்றது. சீவக சிந்தாமணி, கைப் பொருள் கொடுத்துப் பெறும் கல்வி எவ்வெவற்றைப் பயக்கும் எனப் பட்டியல் செய்கின்றது. கல்வி கண் ஆகும் எனவும், மெய்ப்பொருள் விளைக்கும் எனவும், நெஞ்சின் மெலிவிற்குத்துணையாகும் எனவும், பொன் முதலிய பொருளும் ஆக்கும் எனவும், புகழ், துணைவி போன்றனவும் தரும் எனவும் இது அமைகின்றது (1595). நீதி நெறி விளக்கம்

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு - முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை (1)

என இதனை வலியுறுத்தும். கோடீச்சுரக்கோவையும் ஒத்த கருத்தைத் தருகின்றது. ★

## பழந்தமிழரும் கல்வியும் :

'கல்வி சிறந்த தமிழ்நாடு' என பாரதி, தமிழகத்தில் கல்வி பற்றிய எண்ணங்கட் கேற்ப கல்வி நிலையும் சிறந்திருந்ததைத் தருகின்றார். அவருக்கு முந்தைய இலக்கியங்களின் பெருக்கும் தமிழகத்தில் அறிவு பெருகி, கல்விச் செல்வ வளம் கொழித்திருந்ததனைக் காட்டும். பழந்தமிழகக் கல்வி முறை பற்றிய ஆய்வுகளும் இதனைத் தெளிவுறுத்த முயன்றுள்ளன.* இலக்கிய ஆக்கங்கள் மட்டுமன்றி, இலக்கண நூல்களும், பல் கலையறிவு புலப்படுத்தும் இசை, நாடக நுல்கள் போன்றனவும் உரையாசிரியரின் விரிவுரைகளும் பிறவும் கல்வி நிறைவையும், கல்வியாளர் பலர் இருந்தமையையும் காட்டும்.

தொல்காப்பியம், கல்வி பற்றி, அகத்திணைப் பிரிவு குறித்துப் பேசும் போது சுட்டும். ஓதற் பிரிவு, 'வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது' (பொருள் 186) எனப் படுதலால், கல்விக்காக தம் இல்லத்தை நீங்கினர் எனவும், கல்வி தேடி பிற ஊர், நகர் அல்லது நாடு சென்றனர் எனவும், இளைஞனாக அமைந்த ஒருவன் அப்பருவத்தில் பெற்ற கல்வி மூன்றாண்டுக் கால அளவினதாக இருந்தது எனவும் தெரிகின்றது.

---

★ பன்னூல் பாடற்றிரட்டு, பக் 312 (பாடல் 2005)

* M. Arunachalam, Education in Ancient Tamilnad, Gandhi Vidyalayam, Tiruchitrambalam, 1969

Jaya Kothai Pillai, Educational system of the Ancient Tamils, The South India Saiva Siddhanta works Publishing society Limited, Tinnevelly, 1972

எனவே, சிறுவராக அமைந்த போது தம்மிடத்திலும் - அண்மையிடத்திலும், இளைஞரான பொழுது சேய்மையான பிறவிடத்திலும் கல்வி பெறும் நிலைஅமைந்துள்ளது எனலாம். தொடக்கக் கல்வி, மேற்படிப்பு என்பனவாக இவற்றை உணரலாம்.

சங்க இலக்கியம் 'கல்வி' எனும் சொல்லை ஆளாத போதும் கற்றல், கற்போர் பற்றிய எண்ணங்களை வழங்குகிறது. தொல்காப்பிய அடிப்படையில் பார்க்கும் போது,

ஓதல் பகையே தூதிவை பிரிவே
அவற்றுள்
ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன (பொருள். 27, 28)

என, ஒதல்-அதாவது கல்வி கற்றல் எல்லோர்க்கும் பொதுவானதாகவும் உரிமையுடையதாகவும், கருதப்படாத போதும், சங்க இலக்கியம், பல்வகை மக்களை, மொழியினரை பெண்டிரைப் புலவராக, புலமையுள்ளோராகக் காட்டுவதால் அக்காலத்தின் கல்விப் பரப்பும், பொதுமையும், உரிமையும் புலப்படும். எல்லோருக்கும் கல்வியளிக்கப்பட்டதுடன் புலமையுடையோர் பாராட்டும் பெற்றனர். மன்னராலும், மக்களாலும் மதிக்கவும் பட்டனர். புலவர் அரசர்க்கு அமைச்சராகவிருந்து அரசியலறம் மொழிந்தும், அறிவுரை கூறியும், தீநெறியிற் செல்லலிலிருந்து அவனைத் தடுத்து விலக்கியும், அமைதி காத்தும் தூது சென்றுரைத்து உதவியும் பயன் தந்தனர்.

பழந் தமிழரின் கல்வி, வெறும் மொழிக் கல்வியாகவோ இலக்கியக் கல்வியாகவோ மட்டுமமையவில்லை என்பதைக் கலை அறிவியல் பற்றிய பல குறிப்புகள் அவர் படைப்பிலக்கியத்தில் அமைவது காட்டும். மருத்துவம், வணிகவியல், கட்டிடக் கலை, நகரமைப்புத் திட்டம், போரியல், உயிரியல், தாவரவியல், இரும்பின் பயன்பாடு, பொன், மணி, முத்து, பவளம் போன்ற அரிய பொருட்களின் மதிப்பீடு, தேர், தோணி போன்றன செய்யும் மரத்தொழில், கலைக் குழுவினரான பாணரும் விறலியரும் வளர்த்த இசையும் ஆடலும், கைத்தொழில்கள் பல, கரும்பாலை, ஆடை அணிகலன் செய்தல், களிமண் பொருட்களைச் சூளையில் வேக வைத்தல், ஒப்பனைக்கலை, தந்தத் தொழில், ஓவியம், சிற்பம், கள் தயாரித்தல், நிரை காத்தல், உழவு, மீன் பிடித்தல், வேட்டையாடல் எனப் பயிற்சியடிப்படையில் (பரம்பரை அடிப்படையில்) அமைந்த தொழில் பெருக்குக் காணப்பட்டு, பல் துறை யறிவுப் பரப்பைக் காட்டுகின்றன.

ஆசிரியனொருவனிடம் சென்று பயின்று பெறப்பட்ட கல்வி என்பது வேறுபடலாம். மொழிப் பள்ளி பற்றியும், கலைக் கல்லூரி பற்றியும் குறிப்புகள் இருந்தனவா? என்பது ஆராயத் தக்கது. ஆயின், சங்ககாலத்திற்குப்பின் சமயமும் தமிழ் வடமொழிகளுமே கலவித் துறையில் பண்டை, இடைக்காலங்களில் ஆட்சி செலுத்தியதாக, பாடமாக அமைந்ததாக நினைப்பது உண்டு. ★ இவ்வாறு பல்துறைக் கல்வி குறைந்தமையும், வடமொழிக் கல்வி புகுந்தமையும், தமிழகக் கல்வி வரலாற்றில் குறிப்பிடத்தக்க மாற்றம், வீழ்ச்சி உருவாககியிருக்க வேண்டும்.

---

★ *Education in South India in ancient and medieval times was generally religious and based largely on Sanskrit and Tamil learning in its scope and orientation.*

— S. Gurumurthy, Education in South India (Ancient and Medieval period) New Era Publications, Madras. 1979. p.1.

சங்க இலக்கியத்தில் கல்வி நிறுவனம் எச் சொல்லால் குறிக்கப் பட்டது என்பது வெளிப்படையாகத் தெரியவில்லை. பள்ளிக்கூடம், பாடசாலை எனும் மிக்க அண்மைக்கால வழக்குகளை வைத்து முன்னோக்கிச் சென்றால், பள்ளி, சாலை போன்ற சொற்கள் கல்விபயிலிடத்தைக் குறித்திருக்கலாமோ என எண்ணலாம். இவ்விரு சொற்களும் சங்க இலக்கியங்களில் வருகின்ற போதும், பொருள் வேறுபட்டதாகத் தோன்றுகின்றது.

ஒதுக்கின் திணி மணற் புதுப் பூம் பள்ளி (புறம். 33.20)
தவப் பள்ளித் தாழ் காவின் (பட். 53)
பகட்டெருத்தின் பல சாலை (பட். 52)

ஆயின், இங்குள்ள பள்ளி என்பதற்கு ஆசீவகர் கற்குமிடமெனவும், பள்ளிக்கூடமெனவும் பொருள் கொள்வர்** இது ஏற்புடைத்தெனின் பள்ளி என்பது கல்வி நிறுவனமெனக் கருத இயலும். மேலும், இங்குச் சுட்டிய புறப்பாடலுக்கு அமைந்த பழைய உரை, *'இயங்குவதற்கு இனிய செறிந்த மணலையுடைய புதிய பூவையுடைய சாலை'* எனப் பள்ளி, சாலை என்பனவற்றை ஒருபொருளுடையனவாகவும் உணரச் செய்கின்றது. உ. வே. சா. அவர்களின் குறிப்புரை மணிமேகலையிலும் பள்ளி எனும் சொல் சாலை எனப் பொருள் படுவதைச் சுட்டுகின்றது.

தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங்கினரும்
நன்னெறி காணிய தொன்னூற் புலவரும்
எங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கை (26.72-76)

எனும் அப்பகுதி, கல்வியாளரிருந்த பள்ளி - சாலை நிலையை உணர்த்துவதாகத் தெளியலாம். தமிழ் லெக்சிகன் படி, பள்ளி என்பது திவ்வியப் பிரபந்தத்திலும், சாலை எனும் குசேலோபாக்கியானத்திலுமே கல்வி நிறுவனமெனும் பொருளில் வருகின்றன* கல்வெட்டுகளால், வேணாட்டுப்பகுதியில், 9-ஆம் நூற்றாண்டில் சாலை என்பது கல்வி நிறுவனங்கள் இருந்ததாகக் கூறுவர்$. *கல்வி பயிலிடத்தைக் கல்லூரி எனல் காலத்தால்* பிற்பட்டதாகவும் சிந்தாமணியிலமைந்ததாகவும் தெரிகின்றது**. மடங்கள், சாலை, அகரம், சமயக்கோயில்கள் என்பன கல்வி நிறுவனமாகச் செயல்பட்டமையும், கடிகைகள் எனும்

---

** N. Subramanian, Pre Pallavan Tamil Index. P 539the study halls and rest places of the Ā jivakas: Pattinap 53. School : Puram 33.20

* பள்ளி-12. பள்ளிக்கூடம். பள்ளியி லோதி வந்த தன் சிறுவன் (திவ் பெரியதி 2,3,8,) தமிழ் லெக்சிகன், தொகுதி 4, பக் 2552

சாலை-3. பள்ளிக்கூடம், கறையறு கல்வி கற்குங் காமர் சாலையும் (குசேலோ. குசே. வைகுந், 23), தமிழ் லெக்சிகன், தொகுதி 3, பக். 1392

$ Education in South India. p. 2.

** கல்லூரி- கல்வி பயிலும் இடம், கல்லூரி நற்கொட்டிலா (சீவக. 995), தமிழ் லெக்சிகன், தொகுதி 2, பக். 774

கல்வி நிறுவனங்க ளமைந்தமையும் கல்வெட்டுச்சான்றுகளால் புலப்படுகின்றது; இவை பெரும்பான்மையும் வடமொழிக் கல்வியே தந்ததாகவும் தெரிகின்றது; அருகி, காவனூர் எனும் பொய்யாமொழி மங்கலத்தில் 13-ஆம் நூற்றாண்டளவு தமிழ்க் கல்வி சிறப்புற அமைந்தது; சாத்திரர் எனவும் சட்டர் எனவும் மாணவர் குறிக்கப் பட்டமையும், உணவு உறையுள் வசதியுடன் கல்வி நிலையங்கள் அமைந்தமையும் உண்டு. வேதக் கல்வியுடன் மருத்துவக்கல்வி, படைப்பயிற்சி தந்த நிறுவனமும் காணப்படுகின்றன; நூல் நிலையம் (சரசுவதி பண்டாரம், புஸ்தக பண்டாரம், ஸ்ரீ பண்டார) இவற்றுடன் இணைந்தமைந்தமையும் அருகி வெளிப்படுகின்றது; மாணவர் தகுதி, ஆசிரியன் தகுதி, கல்வி நேரம் மணியொலியால் குறிக்கப்படல், அரசியலில் இத்தகு கல்வி நிறுவனத்தினர் உயர்வுடையோராக அமைந்தமை எனப் பல செய்திகள் தெரிகின்றன. நிவந்தங்களும், கட்டளைகளும், வாயிலாகக் கல்வி நிலையங்கள் புரக்கப் பெற்றன.†† அன்றியும் சமயச் சார்புக்கேற்ப, அவ்வச் சமயச் சார்புக் கல்வி அளிக்கப்பட்டமையும் உண்டு.

கல்வி பற்றிய எண்ணிறந்த எண்ணங்கள் இலக்கியங்களிலும் காணக்கிடக்கின்றன. பல்வகைக் கல்வியும் மாந்தர் பெற்றுள்ளனர். சிலப்பதிகாரம், மாதவி பெற்ற கலைக் கல்வியை விரிக்கின்றது; ஆடலும், பாடலும், அழகும் எனும் முத்துறைக் கல்வியமைந்தமையும், குழவிப்பருவமான ஐந்து ஆண்டிலேயே அது தொடங்கப்பட்டமையும், ஏழாண்டுக் காலம் கல்வி தொடர்ந்தமையும், அதன் நிறைவில் - பன்னீராண்டில் அரங்கேற்றம் வழி மன்னனால் - அரசால் அங்கீகரிக்கப்பட்டமையும் காணப்படுகின்றன. முறைப்படியறிதல் என்பது கற்றலின் அடிப்படை நெறியாதல் இங்குப் புலப்படுகின்றது.

ஆடலும் பாடலு மழகு மென்றிக்
கூறிய மூன்றி னொன்றுகுறை படாமல்
ஏழாண் டியற்றியோ ரீரா றாண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி
இருவகைக் கூத்தித்தி னிலக்கண மறிந்து
பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோ ராடலும் பாட்டுங் கொட்டும்
விதிமாண் கொள்கையின் விளங்க வறிந்தாங்கு (3.8-15)

தனியொருவர் கற்ற நிலைஎன இதனைக் கருத இயலும். அன்றியும் சீவக சிந்தாமணி சீவகன், மையோலை பிடித்துக் கற்று நாமகளைப் பெற்ற கல்வியைத் தருவதும் இங்குக் கருதத்தக்கது. 'மையாடுதல்' (367) எனக் கல்வியாரம்பம் குறிக்கப்படுகின்றது. நூற்கல்வியும், போர்க்கல்வியும், (இசைக்) கலைக்கல்வியும் குறிக்கப்படல், அக்காலக் கல்வியின் பன்முகத்தைக் குறிப்பதுடன், ஆடவர் கல்வி இவ்வாறமைய வேண்டுமெனும் கொள்கையையும் தரக் கூடும்.

நாமக ணலத்தை யெல்லா நயந்துடன் பருகி நன்னூல்
ஏமுத லாய வெல்லாப் படைக்கலத் தொழிலு முற்றிக்
காமனுங் கனிய வைத்த புலங்கரை கண்டு கண்ணார்
பூமகள் பொலிந்த மார்பன் புவிமிசைத் திலக மொத்தான் (370)

---

†† Education in South India, p. 3 - 69

ஓராசிரியன் அளித்த கல்வியாக இவை சுட்டப்படலால் (373), ஆசிரியரான அச்சணந்தி முனிவரின் (409) கல்விப் பரப்பும், அறிவாழமும் இதில் புலப்படுகின்றது. கல்விக் காலத்தில், இளையவர் குழாத்தில் (383) சீவகன் காட்டப்படலால் இதனைக் குழுக்கல்வியாகவும் கருத முடிகின்றது.

அச்சணந்தி ஆசிரியனின் பல்துறைக் கல்வி - பன்முகக் கல்வி சிந்தாமணியில் சுட்டப்படல், ஒரு காலத்தில் தமிழகத்தில் வழங்கிய கல்விச் செறிவை உணர்த்து கின்றது. மாணவராக இருந்தபோது இத்தகு பல்நிலைக் கல்வி கற்றதால், ஆசிரியனாக அமைந்து அத்தகு பலவகைக் கல்வியும் பயிற்றுவிக்க, பிறரையும் பெறச் செய்ய முடிகின்றது. ஒருவரிடமே பல கல்வி என்ற நிலை இன்று அருகியது எனலாம்.

அடியார்க்கு நல்லாரும், பல்வகைக் கல்விப்பேற்றினர் என்ற நிலையில் குறிப் பிடத்தக்க சிறப்பினராக அமைகின்றார். சிலம்புக் காப்பியத்திற்கு உரையாசிரியராக வெளிப்பட்ட போதும், அவர் தமிழாசிரியராகவும், மொழியாசிரியராகவும், இலக்கிய ஆசிரியராகவும், இசை, கூத்துக் கலையாசிரியராகவும், மணி, பொன் முதலியன வற்றின் தன்மையுணரும் வல்லுநராகவும் அமைந்து, பழங்காலக் கல்வி ஆழமானது, அகலமானது என்பதற்குச் சான்றாகின்றார்.

அன்றியும் தமிழரின் பண்பாட்டு மேன்மையும், நாகரிகச் சிறப்பும் அவரது கல்வி அனுபவக் கல்வியாக, செயற்கல்வியாக, பட்டறிவு நிலையினதாக அமைந்ததைப் புலப்படுத்துகின்றன. இன்றைய பொறியியல் வல்லுநராலும் அளந்தறிய, உணர்ந்து துணிய முடியாத கல்லணையும், தஞ்சை பெரிய கோயிற் கோபுரமும் தமிழரின் கல்வி யாலேற்பட்ட அறிவு நிலைப் பெருக்கை வெளிப்படுத்துகின்றன.

மருத்துவக் கல்வியில் மேம்பட்டிருந்த தமிழர் நிலையைச் சித்தமருத்துவம் உணர்த்துவதும் இங்கு எண்ணத்தக்கது. வர்மக் கலை தற்பாதுகாப்புக் கலையாகப் பயன்பட்டுத் தென்னகத்தில் வழங்கியமையும் இவ்வகையில் கருதற்குரியது. தமிழரின் தனித்த கலையாகவும், தனித்தன்மையுடைய கல்வியாகவும் இவை அமைந்துள்ளன. தற்காலப் பாடத்திட்டம் போல் எதையோ, ஏதோ நூல்களைக் கற்றலன்றி வாழ்க் கைக்குத் தேவையானதைக் கற்றலாக இவை பொருந்துகின்றன.

**கல்வியியல்**

கல்வி, அறிவுப் பேற்றை நோக்கமாகக் கொண்டமைய வேண்டும். அவ்அறிவும் குறையறிவாகவோ, சிதைந்ததாகவோ அன்றி நிறைவுடையதாகவும் முழுமையானதாக வும் அமையவேண்டும். கல்வி, பட்டத்திற்காக, பதவிக்காக என இருத்தலாகாது. அவ் வாறிருப்பின் அவைபெற்றதும், அதுவே எல்லை - முடிவாகக் கருதிக் கல்வி கைவிடப் படும். கல்வி அறிவு பெறற்கு என அமையின், தொடர்ந்து கற்க, மேலும் மேலும் கற்க, உயிர் உள்ளவரைக் கற்க இயலும். இன்னும், இன்னுமெனும் அறிவுத் தேட்டம் இறுதி மூச்சு வரை அமையும்.

இவ்வமைப்பும், கல்வி கல்விக்காகவே எனவன்றி கல்வி வாழ்வியலோடு இணைந்ததாக, அதனை மேம்படுத்துவதாக, பிறரோடு இனிமையுறத் தொடர்பு கொள்வதில் உதவுவதாக, அனைவரையும் புரிந்து கொள்ளத் துணைநிற்பதாக, தமக்கு மட்டுமன்றிப் பிறர்க்கும் பயன்படுவதாக, எப்போது எங்கே, எதைச் செய்யவேண்டும் பேச வேண்டுமெனும் கால இடனறிதற்கு ஊற்றுக்கோலாக, நன்மை தீமை கணிக்க

வியலும் அளவியலாக எல்லாம் அமைவதே தேவை என உணர்தல் நன்று. பொருள். வருவாய்க்கு வாய்ப்பாகவே கல்வியை, கல்வி வகைகளை-துறைகளை நாடி, மாணவர் தேர்ந்து கொள்ளும் 'வியாபார' நிலையன்றி யமைவது நன்று. அழியும் பொருட்பேறுக் காக வன்றி, அழியா உண்மை, அன்பு, அடக்கம், அருள், ஈத்துவத்தல், பொறுமை, அறம், உழைப்பு, இனியவே கூறலும் செய்தலும், நட்பு, உயிரிரக்கம், நடுவு நிலைமை போன்றன வற்றிற்கு நேராக ஒருவனை, மனுக்குலத்தைச் செலுத்துவதே கல்வி. செலுத்த வல்லதே கல்வி. இதுவே நல்ல கல்வி; வல்ல கல்வி; வேண்டிய கல்வி; விரும்பத்தக்க கல்வி.

அறிவியல் கல்வியாயினும், கலைக் கல்வியாயினும், தொழிற்கல்வியாயினும், இவ் அடிப்படைப் பார்வையுடனிணைந்து சென்றால், கல்வி, தன்னலமுடைய தனி மனிதப்பயன்பாடுடையதாகிக் குறையுறாது, அனைவர்க்கும் பயன் விளைவிக்கும் பொது நலப் பாங்குடையதாகி விரிவுற்று, கல்வியாளனையும் உன்னதமானவனாக உருவாக்கும்.

எனினும், கல்வியும் பொருளும் தம்முள் எத்தகைய தொடர்பு முடையன வல்ல எனக் கூறல் இயலாது. வாழ்வியலோடு இணைந்து செல்லும் கல்வி, அவ் வாழ்வியலுக்கு இன்றியமையாப் பொருளுடனும் இயைந்து செல்வதே.

தொழில் புரிதலுக்கு மட்டுமே கல்வி என்ற குறுகிய
நோக்கம் பண்டைத் தமிழகத்தில் வலியுறுத்தப்
பெறவில்லை யெனினும், நடைமுறைப் பயனுள்ள
இந் நோக்கம் புறக் கணிக்கப் பெறவில்லை யென்பதும்
தெளிவு.*

எனும் கருத்தைத் தெரிவிப்பர்.

தமிழகக் கல்வியியலும், கல்வி முறையும் வடநாட்டுக் கல்விப் பாங்குக்கு வேறாக அமைந்தது என்பது பொது எண்ணம் ஓராசிரியனை அண்டி, அவனுக்கு உதவி, அவனோடுறைந்து வேதக் கல்வி பெற்ற 'பிராமணக் கல்வி' எனும் குருகுலக் கல்வி தமிழகத்திற்கு வேறானது என்ற போதும், 'உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும், பிற்றை நிலை முனியாது கற்றல்' என்பதில் சிறிது ஒப்புமை காணப்படுகின்றது.

நன்னூல் பாயிரப் பகுதியில் கூறும் பல எண்ணங்கள்† ஆசிரிய, மாணவரியல்பை யுணர்த்திக் கல்வி நிலையைக் கணிக்க உதவுகின்றன, கலவிப் பொருளைப் பற்றித் தெரிய மொழியாத போதும் ஆசானிடம் (41) கற்றல் முறைபற்றி விளங்கக்கூறல் அமைகின்றது.

கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்து
இரு என இருந்து சொல்எனச் சொல்லிப்
பருகுவன் அன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையின் அத்தக அடங்கிச்

---

* கல்வியின் தத்துவ சமூக அடிப்படைகள், எஸ். சந்தானம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1981, பக் 25

† நன்னூல் 26-46

செவிவா யாக நெஞ்சு களனாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போஎனப் போதல் என்மனார் புலவர் (40)

கவனமாகக் கற்றலும், கேள்வி - செவி வழியாகக் கேட்டே கற்றலும், கேட்டதையும் தாளில் - ஏட்டி லன்றி நெஞ்சத்திலேயே பதித்து வைத்து நினைவாற்றலே முதற் பொருளாக கல்வி கற்றதும். 'சொல்லெனச் சொல்லி' என்பதால் மீண்டும் மீண்டும் சொல்லி உருப்போட்டுக் கற்றலும் கட்டாயக் கல்வியாகவன்றி ஆர்வமுற்றுக் கற்றலுமாக அமைகின்றது.

மாணவன் எதைப் பெறுகிறான், எப்படிப் பெறுகிறான் என்பதும் அவன் எத்தகையவனாக அமைந்து எந்நிலையினனிடத்தில் பெறுகிறான் என்பதும் அவன் கல்வி வாழ்வில் முதன்மை பெறுகின்றன. எதற்காகப் பெறுகிறான் என்பதும் இணையும் போது ஒரு முழு நிலை தென்படுகிறது. பெற்ற (acquired) கல்வியும் அது தரப்பட்ட (Instructed) விதமும் இணைந்து, அவன் பயன் தரக் (produce) காரணமாகின்றன. கல்வியே அரிய பேறாக (achievement) அமைவதுடன் நின்று விடாது, சமுதாயத்திற்கு அவன், அவனைப் போன்றோர் கிடைப்பதே பெரும் பேறாக அமைவது கல்வியியலின் உச்சமாக விளங்குகின்றது. கல்வி பெற்ற ஒவ்வொரு தனிமனிதனாலும் சமுதாயம் வளர்ச்சியும், உயர்ச்சியும், பயனும், நல்விளைவும் பெறுவதாக இது பொருந்துகின்றது.

கல்வி மேம்போக்கானதாக அன்றி, ஆழமான 'படிப்பாக' அமைய வேண்டுவது இன்றியமையாதது*. தேர்வுக்காகக் கற்கும் போக்கு, குறுகிய காலத்தில் மட்டுமே நினைவில் நிற்பதாக, மனத்தில் ஆழவேரூன்றாததாக அமைந்து, தேர்வுக்குப் பின் மறக்கப்பட்டு விடுகின்றது. இங்கு கல்வியோ அறிவு பெறலோ அன்றித் தேர்வே கருத்துக்களைத் தக்க வைக்கும் கருவியாக அமைவதே குறைபாடு. இவ்வாறு பட்டத்திற்காக மட்டும் படிக்கும் கல்வி வேண்டப்படுவதன்று.

**கல்விக் கொள்கை**

சிந்தனையாளர், கல்வி பற்றிய பலவகைக் கொள்கைகளை வழங்கியுள்ளனர். கல்வி நாட்டுக்கு நாடு வேறுபடலாம். மக்களுக்கு மக்கள் வேறுபடலாம். காலத்திற்கேற்பவும், சூழல் தேவைக்கேற்பவும மாறுபடலாம். எனவே கல்வி பற்றிய கொள்கைகளும் வேறுபட்டு அமைகின்றன. ஒரு தனிமனிதர் கல்வி பற்றிக் கூறும் சிந்தனைகள் அவரளவில் ஏற்புடையதாக, சிறந்ததாக முன்மாதிரி நிலையினதாக அமையினும், அதனை அனைவரும் அவ்வாறே கொள்வர் என்பதற்கில்லை. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திற்குரிய கல்வி எனத் திட்டம் வகுத்துத் தருவதும் உலகினர் எல்லோராலும் ஒருமனதாக ஏற்றுக் கொள்ளப்படும் என்பதற்கில்லை எனினும் சில அடிப்படை ஒருமைகள், ஒப்புமைகள் அமைந்து பெரும்பான்மையோர் விரும்பும், பெரும்பான்மையோர்க்கு ஏற்றதாக அமையும கல்வியைத் தேர்ந்து உணர்ந்து கொள்ள உதவலாம்.

**மகாத்மா காந்தி** கல்வி பற்றிய தனித்த சிந்தனைகள் பல கொண்டிருந்தார்** தாய்மொழி மூலம் கல்வியளிக்கப்படல் அடிப்படையும் தேவையுமாகும். சிறுவரும்,

---

* கல்வியும் படிப்பும், ச. சோமசுந்தர பாரதியார் - தமிழும் தமிழரும், நாவலர் புத்தக நிலையம், மதுரை, 2-ஆம் 1971, பக் 129-149.

** பார்க்க: மகாத்மா காந்தி நூல்கள் - 12: **கல்வி,** காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், சென்னை 1964.

சிறுமியரும், இயன்றவளவு இணைந்தே கல்வி பெற வேண்டும். குழந்தைகளுக்குக் கல்வியைக் கட்டாயப்படுத்தி வலிந்து திணித்து அளிக்காது. அவர் விளையாட்டுப்போல விரும்பிப் பெறும்படியளிக்கவேண்டும். உடலுழைப்பும், உடற்பயிற்சியும் மாணவர் இன்றியமையாது பெறும்படி கல்வித் திட்டம் உருவாக வேண்டும். ஒவ்வொரு குழந்தையின் விருப்பத்திற்கேற்ப, தனித்த சிறப்பாற்றல் வெளிப்படும்படி கல்வி அமைதல் தேவை. பொது அறிவு முதலில் அளிக்கப்பட்டு பின்பே எழுதப் படிக்கத் தெரிந்து கொள்வது போதுமானது. எளிய கோடுகள் கோணங்களாலான படம் வரைந்து பழகிய பின் எழுத்துக்களின் வரி வடிவை எழுதக் கற்றுக் கொள்ளும் போது, இளம்பருவத்திலிருந்தே அழகிய கையெழுத்து ஏற்பட வாய்ப்பேற்படும். முதலில் படிக்கத் தெரிந்து கொண்டு, பின்பே எழுதப் பழகவேண்டும் இந்த முறையில் பயிற்சி பெறும் குழந்தை எட்டு வயதாகும் போது தன்னுடைய ஆற்றலுக்கேற்றவாறு மிகுதியாகக் கற்றுக் கொண்டிருக்கும். குழந்தையின் கல்வியின் இம் முதற்கட்டத்திலேயே அதற்கு தேசிய மொழியும் (இந்தி, உருது), சமயக் கல்வியும் கற்றுத்தரப்பட வேண்டும். இந்துக் குழந்தை வடமொழியும், இசுலாமியக் குழந்தை அரபியும் கற்பது தேவை.

ஒன்பது முதல் பதினாறு வயதுவரையான இரண்டாம் கட்டத்தில், மாணவர் கற்றுக் கொள்ளும்போதே ஒரு தொழிலையும் செய்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் திறம் வாய்க்கப் பொற்றவராக அமைவார். பெற்றோர் செய்யும் தொழிலில் பிள்ளைகளுக்குப் பயிற்சி அளிக்கப்படும். உடலுழைப்புடன், இலக்கியக் கல்விக்கு இப்பகுதியில் நேரம் அமைக்கப்படும். தையல், சமையல் போன்று வாழ்வியலுக்குத் தேவையானவை கற்பிக்க வேண்டும். மேலும் உலக சரித்திரம், பூகோளம், சுகாதாரம், வான சாஸ்திரம், கணக்கு, சேத்திரகணிதம், பின்ன கணிதம் ஆகியவற்றிலும் அறிவுபெறல் தேவை.

மூன்றாம் கட்டமான பதினாறு முதல் இருபத்தைந்து வயது வரை ஒவ்வொரு வாலிபனும் பெண்ணும் தன்னுடைய விருப்பம், பணவசதிக்கேற்ற கல்வியைப் பெறுதல் சிறப்பு. கல்வியைப் பொறுத்தவரை ஆண்களுக்குள்ள அதே வசதிகள் பெண்களுக்கும் இருக்க வேண்டும் என்பதும், தேவையான சூழலில் சிறந்த வாய்ப்புகள் பெண்களுக்குத் தரப்பட வேண்டும் என்பதும் காந்திஜியின் எண்ணம். பல மொழிகளில் ஒன்றாகவே ஆங்கிலம் கற்றுத் தரலாகும் எனவும், முதியோர்க்கு இரவுப் பள்ளிகளில் எழுதப் படிக்கவும் கணக்குப் போடவும் கற்றுக் கொடுப்பதை விடப் பொது அறிவு பெற சொற்பொழிவுகள் மூலம் வாய்ப்பளிக்க வேண்டும் எனவும், கல்வி நிறுவனங்கள் எளிமையானதாகவும் ஆசிரியர் சிறந்த ஒழுக்கமுடையவராகவும், உயர்ந்த சம்பளமின்றி வாழ்வுக்கு இன்றியமையாத அளவே பணம் பெறுபவராகவும் அமைதல் நலம் எனவும் காந்திஜி கருதுகின்றார்.

ஆரம்பக் கல்வி, ஆதாரக் கல்வி, பெண்கல்வி, சங்கீதம், போரியல், உழவு, நெசவு போன்றனவற்றைக் கற்பிக்கும் பாங்கு, இலவசக் கல்வி, தேசியக் கல்வி, பள்ளிக் கூடச் சூழல், ஒழுக்கத்தை உருவாக்கும் முக்கிய நோக்கமுடையதாக அமைவதே உண்மையான கல்வி. குழந்தைக் கல்விக்கு வேறான சமூகக் கல்வி, கிராமக் கல்வி, உயர்தரக் கல்வி, கல்லூரிக்கல்வி, அடித்தல் போன்ற தண்டனைகள் இன்றியே கற்பித்தல், நாட்டு விடுதலைக்கு நேரான (சுயராஜ்யம்) நோக்குடைய கல்வி, குமாஸ்தாக்களை உற்பத்தி செய்வதாக அன்றி கிராமத் தொண்டர்களை உருவாக்குவதாகவே அமையும் கல்வி, வெறும் புத்தக அறிவாக அன்றிப் பண்பாட்டிலும் வாழ்க்கையிலும் வேரூன்றும் கல்வி, நாட்டின் தேவைக்கேற்ற கல்வி, என பல பற்றி விளக்குகிறார். 'நாம் எழுதப்

படிக்கக் கற்றுக்கொள்ளுவதற்கு முன்பு மனிதர்களாயிருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் (பக்553) என்பது அடிப்படை எண்ணமாகும்,

பாரதியாரும், காந்தியைப் போலவே விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டதுடன் நம் நாட்டிற்குத் தேவையான கல்வி பற்றிய எண்ணங்களையும் கொண்டிருந்தார். அவரது சமூகக் கட்டுரைகளுள் தேசியக் கல்வி பற்றியமையும் இருபகுதிகள் இந்நிலையில் குறிப்பிடத்தக்கன. மேலும் அவர் கால ஆங்கிலக் கல்வியின் பொருந்தாமை, தாய்மொழிக் கல்வியின் தேவை, கற்கவேண்டிய பொருண்மை, போன்றன சுயசரிதை முதலிய பாடல் பகுதியிலும் வெளிப்படுகின்றன. தன்னனுபவ வெளியீடாக அமைந்ததால் கொள்கைகள் ஆற்றல் உடையனவாக, திட்டங்கள் தெளிவுஉடையனவாக அமைகின்றன. 'கல்வி முறை பற்றியும் கல்விப் பொருள் பற்றியும் தெளிந்த எண்ணங்கள் இங்கு அமைகின்றன'.*

தேசியக் கல்வி தாய்மொழியில் அமைவது எனும் கருத்தில் இவர் காந்தியுடன் ஒன்றுபடுகிறார். அன்றியும், ஆங்கிலம் பயிற்றுமொழியாக அமையக் கூடாது எனவும், இந்திய ஒருமைப்பாட்டுக்காக வட மொழிக்கல்வி அமையினும், தமிழகத்தில் தமிழே வேண்டும் என்கிறார். தேசிய மொழியாக இந்தியமைவதை காந்தி வலியுறுத்துவது இவரிடம் அமையாமை தெளிவு.

ஆரம்பப் பள்ளிக்கூடக் கல்வி பற்றியே கவிஞர் மிகுதியாக நினைக்கின்றார்.† குழைந்தைகள் தெளிவாகவும் எளிதில் புரிந்து கொள்ளும்படியும் கல்வி அளிக்கப்படல் தேவை எனவும், கற்பிக்கும் முறையும் மொழிநடையும் அதற்கேற்ப தெளிந்ததாகவும் எளியதாகவும் அமைய வேண்டும் எனவும் கருதுகிறார். பெரும்பாலும் நூல்களை அடிப்படையாகக் கொண்ட வகுப்பறைக் கல்வியும், அறிவியல் பாடங்கள் சோதனைகள் வழி கற்பிக்கப்படுவதாகவும் அமைக்கப்படுகின்றது. அன்றியும் பூமி சாஸ்திரக் கல்விக்கு கோளங்கள், உலகப் படங்கள் பயன்பட்டுத் தேவையான கருவிகளைக் கல்விக்குத் துணையாகக் கொள்ளல் பொருந்துகின்றது.

கண்ணன் என் சற்குரு, கண்ணன் என் சீடன் போன்ற பகுதிகளால் கவிஞர் குருகுலக்கல்வி நாட்டம் கொண்டவர் என்பது வெளிப்பட்ட போதும் அவர் காலத்திற்கேற்ப, வகுப்பறைக் கல்வி பற்றியே கட்டுரை அமைப்பது சிந்திக்கத் தக்கது. ஆயினும் வெறும் புத்தகக் கல்வியை அன்றி கலை, உடல் உறுதி ஆகியவற்றையும் அவர் கருத்தில் கொண்டார என்பதைப் பாப்பாப்பாட்டு காட்டும்.

காலை எழுந்தவுடன் படிப்பு - பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா (6)

---

* பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள், ச. வே. சுப்பிரமணியன், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982, பக் 93.

† கட்டுரைகள் - 4. சமூகம், ஸ்ரீ சி. சுப்பிரமணியபாரதி, பாரதி பிரசுராலயம், சென்னை, 1950, பக் 49 முதலாக (ஆரம்பப் பள்ளிக் கூடம்)

காட்சியறிவும் உடன் மாணவரோடு ஒழுகும் திறனும், வகுப்பறைக்கு வெளியேயும் குழந்தைகட்குக் கல்வி வழங்க வல்லது. கல்வி கற்கின்றோம் எனும் கட்டாய உணர்வின்றி, யாத்திரைகளாலும், வன போஜனத்தாலும் குழந்தைகள் அறிவு பெறுவதும் தேசியக் கல்வியில் இன்றியமையாதது. உலகப் பொது அறிவும், பல இயற்கை உண்மைகளை அழகுகளை உணர்தலும் இதனால் பெறப்படுகின்றன.

மேனாட்டார் காரணமாக இறக்குமதியான கல்வியை நீக்கி, நம் தேசத் தேவைக் கேற்ற கல்வியை ஆக்கிக் கொள்ளும் பாங்கைக் கவிஞர் உணர்த்துகிறார். கல்வித் தொடக்கமாக எழுத்து, படிப்பு, கணக்கு என்பன அமைவதைத் தருவது காந்தீயின் கருத்துக்கு வேறுபடுகின்றது. இவ் அடிப்படைக்கு மேலேயே இன்னின்ன பொருண்மைகள் கற்கப்பட வேண்டுமென வகுக்கிறார் பாரதியார்.

'சரித்திரப்' பாடங்கள் பல்கோணப் பரப்புடையதாக அமைகின்றன. வேதகால, புராணகால சரித்திரமும், பௌத்தகால ராஜபுதானகால சரித்திரமும் தரப்படுவதுடன், பள்ளி அமையும் மாகாண சரித்திரமும், அசோகன், சிவாஜி போன்ற வீரர் வரலாறும் பாடமாகின்றன. அன்றியும், ஒருபடி மேற் சென்று உலக வரலாற்றுப் பகுதிகளும் உட்படுகின்றன.

'பூமி சாஸ்திர'மும், உலகம், ஞாயிற்று மண்டலம், கிரகங்கள் போன்றவற்றுடன் வாழும் நாட்டின், மாகாணத்தின் உண்மைகளை அறிவுறுத்துவதாக அமைகின்றது. கண்டங்கள், நாடுகள், மக்கட்தொகை, அரசுக்ள், வணிகம் என்ற பொது அறிவுடன், பாரதத்தின் பிற மாகாணமக்கள், இனங்கள், மொழிகள், மலை, நதி, விளைபொருள், புண்ணியத் தலம் என இது விரிகின்றது.

சமயப் படிப்பும் கல்விப் பகுதியாக அமைவதன் தேவையைக் காந்தியைப் போலவே இவரும் தருகிறார். சமயப் பொறையை வளர்க்க உதவியாக சமய அறிவு வேண்டப்படுகிறது. பிற மதத்தினரைப் புரிந்து கொள்ளவும், உயிர்கள் ஒன்று ஒத்தன என உணரவும், உயிரிரக்கம் அமையவும் இது துணை நிற்கும் என வாழ்வியலும் கல்வியும் இணையுமாறு தெளிகின்றது.

அரசியல் கல்வியும், பொருள் நூல்கல்வியும் நம்மை, நம் நாட்டு நிலைமைகளை மாணவரும் தெளிவாக உணர்ந்து கொள்வதற்கு வாய்ப்பாக, நல்ல பொறுப்புள்ள குடி மக்களாக அவர்கள் உருவாகி வர உதவியாக அளிக்கப்படல் தேவையாகின்றது மக்களாட்சி. கிராம வளர்ச்சி, சட்டங்கள், நாட்டின் பொருளாதார நிலை, வரிகள். முதலியவற்றின் தன்மையும் பயன்பாடும், கூட்டுறவு வணிகப் பயன், வியாபார முறைகள் எனப் பல இதில் பொருந்தும்.

இவற்றுடன் அறிவியலும், காந்தி விரும்பியது போன்ற கைத்தொழிற் கல்வியும், விவசாயம், தோட்டக்கலை, வணிகம் போன்ற செய்முறைப் பயிற்சிகளும் வழங்கப்படல் தேவையாகச் சுட்டப்படுகின்றது. உடற் பயிற்சி இன்றியமையாத கூறாகப் பொருந்து கின்றது. இதனால் இக் கல்வியை நிறைவு செய்கின்ற ஒருவன், நல்ல உறுதியான உடலும், கல்வியறிவும் பெற்றதுடன், தொழிலொன்றில் ஈடுபட்டு வாழ்க்கையைக் கொண்டு செல்வதற்குரிய தகுதியும் திறமையும் பெற்றவனாகிறான்.

> ஆரம்பப் பாடசாலைகளில் படித்துத் தேறும் பிள்ளைகள் அந்த
> அளவிலேயே ஏதேனும் தொழில் அல்லது வியாபாரத் துறையில்

> புகுந்து தக்க சம்பாத்யம் செய்யத் தகுதியுடையோ
> ராய் விடுவர் (பக். 65)

என்பது பாரதியின் முடிவு.

பாரதியின் கல்விக் கொள்கைகள் காந்தியுடன் இன்னும் பிற பலர் கொள்கைகளின் தாக்கமும் கொண்டது. கவி தாகூரின் வழிவந்த எண்ணங்களும், மீர்ஜா ஸமிஉல்லாபேக், ஜினராஜ தாஸர் போன்றோர் எண்ணங்களும் அவரால் கொண்டு மொழியப்படுதல் இதற்குச் சான்றாகும். அன்றியும் இந்தியக் கல்வி வரலாற்றில் இன்னும் சுவாமி விவேகானந்தர், அரவிந்தர் போன்றோர் கருத்துக்களும் எழுந்துள்ளன. மேலும் விடுதலை இந்தியாவில் பல கல்விக் குழுக்களின் எண்ணங்களும், சான்றாக, டாக்டர். ராதாகிருஷ்ணன், கோத்தாரி, ஏ. எல். முதலியார், குறிப்பிடத்தக்கன.* பல வகைப்பட்ட கல்வி, பல தரப்பட்ட கல்வி, பல் வகை மாணவர்க்கேற்ப அவரியல்புக்குப் பொருத்த மான கல்வி, முதியோர் கல்வி, எனத் தனித்தனி நிலையினதாகவும், பன்முக நோக்கு டையனவாகவும், பொருளாதாரப் பயனுடையனவாகவும் இவை அமைந்துள்ளன.

**பெர்ட்ரண்ட் ரஸ்ஸலின்** கல்வி பற்றிய கொள்கைகள் தனித்தன்மை வாய்ந்தன.* எந்த முடிவை நோக்கி நாம் செல்ல, மாணவரை - இளைஞரைக் கொண்டு செல்ல விரும்புகிறோமோ அதன் படியே கல்வியை உருவாக்கல் வேண்டும். எனவே தேவை அல்லது பயன் அல்லது விளைவு என எதை எதிர் பார்க்கிறோம் என்பதைப் பொறுத்துக் கல்வி அமையும். **உண்மையும், நற்பண்புகளுமுள்ள அறம் நிறைந்த சமுதாயத்தை உருவாக்குவது நோக்கமாயின் அதற்கேற்ப உரிய கல்விமுறை ஆக்கப்படல் தேவை. இவ்வாறு கல்வி நோக்கம் விளைவு எதிர்ப்பார்ப்பைச் சார்ந்ததாக அமைகிறது.**

கல்வி, இருவகையானதாகச் சுட்டத்தக்கது. அவை, பண்புக் கல்வி (Education of character), அறிவுக்கல்வி (education in knowledge) என்பன. தொடக்க நிலையில், முன்ன வகையே முதன்மைபெறவேண்டும். இவ் அடிப்படையின் மீதே அறிவுக் கல்வி எழவேண்டும்.

கல்வி அனைவருக்கும் பொதுவுடைமை யாயினும் அனைவரும் ஒரே கல்வியையே பெறவேண்டுமென்பதில்லை. கல்வி ஒரு நல்லணியாக அமைவதைவிடப் பயனுடையதாக அமைய வேண்டுமென்ற கருத்து உண்டு. எனினும் ஆடவர்க்குச் செவ்வியல் (classical) கல்வியளிப்பதா அல்லது தற்காலக் கல்வியளிப்பதா என்பதிலும், மகளிர்க்கு இலட்சியப் பெண்மைநலமுடைமையா (ideal of the gentle woman) அன்றித் தன்னைத்தான் புரந்து கொள்ளுதலா - தன் காலில் நிற்றலா கல்வியடிப்படை என்பதிலும் கருத்து வேறுபாடு உண்டு. மன இன்பத்திற்காகவும, நிறைவுக்காகவும் கல்வியமைதல் ஒரு பாலாக, பொருட் பயன்பாடுகளுக்காக அமையும் கல்வி இன்னொருபாலாகவும் பொருந்துகின்றன. பொருட் பயன்பாட்டுக் கல்வியின் விளைவு மனிதனுக்கு நல்ல உடல் திறனையும் மிகுதியான ஓய்வுப் பொழுதையும் வழங்கும் போது, அதனைச் செவ்வை யாகப் பயன்கொண்டு நிறைவு செய்ய முன்னவகைக் கல்வி பயன்படுகின்றது.

---

* கல்வியின் தத்துவ சமூக அடிப்படைகள், பக் 46 - 80

* On Education, Especially in Early child hood, Bertrand Russell, Unwin Paper Backs, London, 1976.

கல்வி எத்தகு குறிக்கோளை நோக்கிச் செல்ல வேண்டும் என்பதைக் கருதினால் நால்வகைப் பண்புகளைக் கல்வி பெறுபவர்க்குத் தருவதாக அமைதல் வேண்டும் எனலாம். அவை வலிமை (Vitality), துணிவு (courage), நுட்பம் (sensitiveness), அறிவு (intelligence) என்பன. கல்வியால், இந் நான்கும் நிறைவாகப் பெற்ற ஆணும் பெண்ணுமுடைய சமுதாயம் மேன்மையுடையதாக அமையும். இதனால் மகிழ்ச்சி நிறைந்த வாழ்வும், அச்சமும் கோழைத்தனமும் நீங்கிய பெண்களும், சோம்பலற்ற சமுதாயமும் உருவாகும்.

பிறந்தது முதலே குழந்தைக்கு ஒழுக்கக் கல்வி யளித்தலை இவர் விரிவாக, வரன் முறையாக விளக்குகிறார். இந் நிலையால் ஆறு வயதாகும் நிலையில் குழந்தை மனிதப் பண்புக் கல்வி பெற்று அறிவுக் கல்விக்குத் தயாராகி விடும். இப் பருவத்திலிருந்து பள்ளிக் கல்வி, பல்வகைப்பொருண்மை பற்றிய பாடக் கல்வி வழங்கப்படும். பள்ளிக் குழந்தையின் பதினொன்கு வயது வரையுள்ள பாடத்திட்டம் எவ்வாறமைய வேண்டுமென ரஸ்ஸல் கூறுகிறார்.

ஐந்து வயதுக் குழந்தையாகும் போது, மாண்டிசோரி பள்ளி போன்ற குழந்தைப் பள்ளிகளின் வாயிலாக எழுதப் படிக்கத் தெரிந்து வந்த குழந்தைக்கு ஆறுவயதில் அடிப்படை பூகோளவியல் கற்பிக்கத் தொடங்கலாம். இவ் எளிய பாடங்களுக்குப் பின் வரலாறும் சிறிது வயது கூடியபின் கற்பிக்கலாம். பல மொழிகள் கற்கும் ஆற்றல் இப் பருவத்திற்குரிய தாகையால் அது வழங்கப்படும். இசை, ஆடல் போன்ற விருப்பக் கலைகள் சொல்லித் தரப்படல் நலம். இலக்கியக் கல்வி, எவ்வாறு எழுதுவது எனும் நடையியலுக்காகவும், எவ்வாறு தெளிவாக அழுத்தமாகக் கூறுவது எனும் வெளியீட்டு அறிவுக்காகவும் தரப்படல் வேண்டும். விவிலியம் இந் நிலையில் முன்னிற்கிறது. கணக்கும் அறிவியலும் பன்னிரு வயதளவில் கற்பித்தால் போதும். செவ்விலக்கியமும் இவ்வாறே; வகுப்பறைக் கல்வியுடன், மாணவர் புறத்தும் இயற்கைக் கல்வி பெற வழியமைய வேண்டும். பதினைந்து வயதுக்குப் பின் விருப்பத்திற் கேற்பச் சிறப்புக் கல்வி (1) செவ் விலக்கியம், (2) கணக்கும் அறிவியலும், (3) தற்கால மொழி, வரலாறு, இலக்கியம் எனும் ஒன்றில் அளிக்கப்படலாம் பின்பு பல்கலைக் கழகக் கல்வி அமையும்.

எக் கல்வியாயினும் அறிவுக்காக அன்றி பணத்திற்காகத் தேர்ந்து கொள்ளலாகாது.† கற்றலுடன் ஆய்தல் பல்கலைக் கழகத்தில் இடம் பெறுகின்றது. இவை இரண்டும் முதன்மையுடையன. அன்பால் பொதியப்பட்ட அறிவே கல்வியாளனுக்கு வேண்டுவது; இதனையே அவன் மாணவனுக்கும அளிக்க வேண்டும். அச்சமின்றி, உணர்வுகளை வழிப்படுத்திச் செல்லும் வாழ்வுக்கு நேரான மனநிலை வழங்கப்பட வேண்டும். இதுவே கல்வியின் குறிக்கோள்.

**தற்காலக் கல்வி நிலை**

தற்காலக் கல்வி நிலை பல வகையிலும் போதியதாக இல்லை என்ற பொதுக் கருத்து சிறிது காலமாக நிலவி வருகின்றது. இலவசக் கல்வித் திட்டம் காரணமாகவும் தெருத் தோறும் எழுந்த கல்விக் கூடம காரணமாகவும் கல்வி பெற்றோர் எண்ணிக்கை மிகுந்துள்ளது. ஆனல் கற்றோரின் தரம் உயர்ந்ததாகத் தெரியவில்லை. தரமான கல்வி

† Obviously, the principle of selection ought to be educational, not financial, p. 195.

யளிக்கப்பட்ட போதும், கல்வி முறையின் குறைகள் காரணமாக, நல்ல பண்புள்ள குடி மக்களை உருவாக்குவதில் தோல்வியே கண்டுள்ளது. கல்வியறிவு மிக்க, 'அரம் போலும் கூர்மை' யினரான மனிதரை உருவாக்குவதுடன் கல்வித்துறை அமைந்து விடுவதால் குறைபாடுகளுடைய மனிதனே உருவாகிறான். அன்பும், பண்பும், தழுவிச் செல்லுதலும் அமைவதில்லை.

அறிவும் வாழ்க்கையும், கல்வியும், பண்பாடும் இணைந்து செல்ல வேண்டும். ஆனால் கல்வியும் தொடர்ந்து வரும் வாழ்க்கையும் எதிரெதிர் திசையில், சிறிதும் தொடர்பற்று, அடிப்படை இணைவு இல்லாது செல்கின்றன. அடிப்படைக்கல்வி பெற்ற பின் வாழ்வுக்காகப் பொருளீட்டும் வேலை கிடைக்க வில்லை என்பதால் தொடர்ந்து, ஆர்வமின்றி, வேறுவழியில்லை எனும் நிலையில் கற்கின்றனர் பலர். இவ்வுயிரற்ற கற்றல், சோர்வு நிலை, நல்ல குடிமக்களை உருவாக்கத் தவறுவதில் வியப்பில்லை.

வாழ்வுக்குப் பொருளீட்டக் கல்வி என்ற நிலையிலேயே பெரும்பான்மையினர் கற்கின்றனர். சமுதாயத்திற்கு, மனுக்குலத்திற்குப் பணி செய்தல் எனும் கல்விப் பண்பு அற்று விட்டது. எனவே பொருளீட்டும் வாய்ப்புடைய தொழிற் கல்விக்கு மதிப்பும், தகுதியுமளிக்கப்பட்டு வருகின்றது. கலைக் கல்விக்கு மதிப்பிழப்பு உருவாவதுடன், இது பெற்றவரும், தம் படிப்புக்குத் தொடர்பில்லாத வேலைகளுக்குச் சென்று வாழவழிய மைத்துக் கொள்கின்றனர். தமிழ் முதுகலையும் ஆய்வுப் பட்டமும் பெற்ற பின் அலுவலகத்தில் எழுத்தராக அமைந்து நிறைவு காண்கின்றனர். இவர் கற்ற பாடத்திட்டத் திற்கும், உருப்போட்ட இலக்கண நூல்களுக்கும், பெற்ற இலக்கிய அறிவுக்கும் இப்போது நிகழ்த்தும் அலுவலக, வீட்டு வாழ்வுக்கும் எவ்வித இணைவும், இயைவும் இல்லை. ஏதோ கற்றோம், ஏதோ வாழ்கின்றோமெனும் நிலையே அமைகின்றது.

தமிழகத்தின் கல்லூரிக் கல்வித் துறையின் குறைகளையும், சீர் செய்யும் நிலை களையும் குறித்த சிந்தனைகள் எழுந்துள்ளன.* கல்லூரிக் கல்விக்கு முன் ஆரம்பக் கல்வியின் சீராக்கம் பற்றிய பன்முக நோக்கெண்ணங்களும் உருவாகியுள்ளன.* உணவு உடை உறையுளில் நிறைவளித்து, பொருளாதாரச் சுபிட்சமான வாழ்வளிப்பதற் கேற்ற கல்வி போதும் என்ற மனப்பான்மை எந்த அளவு போதுமானது என்பது சிந்திக்கத் தக்கது. இம் மும்முக நிறைவு பெற்ற மனுக்குலம தம் மனத்தை ஈடுபடுத்த, ஓய்வு நேரத்தைப் பயனுள்ளதாகக் கழிக்க, தன் உள்ளத்துக்கு அமைதியும் நிறைவு மளிக்க என்ன செய்ய வேண்டும என உணர்வதும் கல்விப் பயனாக வேண்டும் அறிவை நிரப்பு

---

* காலப்போக்கும் கல்லூரிப்போக்கும், க. ப. அறவாணன், சே. ச. இராசநாயகம், கல்வித் துறை உருப்பட, க. ப. அறவாணன், சூ. இராசநாயகம், தமிழ்க் கோட்டம், சென்னை, 1975

** ஆரம்பக் கல்வி, கொடுமுடி இராஜகோபாலன், ஸ்டார் பிரசுரம், சென்னை, 2 - ஆம், 1977

வதாக, தேவையை ஈடு செய்வதாக மட்டும் அமைந்து விடக் கூடாது; அறிவைத் தூண்டுவதாக, ஆர்வம் எழுப்புவதாக, தன்னிறைவில் நிறைவு கண்டு அமைந்து விடாது பிறர் பாலும் அருள் கொண்டு முயல்வதாக அமைதல் தேவை.

## தமிழ்க் கல்வி

கல்வி யாளரனைவரும் தாய் மொழிக் கல்விக்கே முதன்மையிடம் அளிக்கின்றனர். தாய் மொழியில் கற்கும் போது மொழிப் பிரச்சினை யின்றிப் பொருளை அறிவு பற்றிக் கொள்கின்றது. பிற மொழி வாயிலாகக் கல்வியமையின் அப்பிற மொழியே தடையாக, சுவராக, திரையாக அமைந்து தேவையற்ற மிகை முயற்சியை மாணவரிடம் வேண்டுகின்றது. பிற மொழியினும் தாய் மொழி எளிமையானது, பழக்கமானது, புரிந்து கொள்ளத் தெளிவானது இயல்பான ஊடு மொழியாக அமைய வல்லது.

ஆரம்பக் கல்வியில் மட்டுமன்றி, கல்லூரி, உயர்தரக் கல்வியிலும் தமிழே பயிற்று மொழியாக அமைதல் தமிழகத்திற்கு ஏற்புடையது எனும் கருத்தைப் பலர் பலவாறு நிறுவியுள்ளனர்*. எனினும் தமிழகத்தின் பல கல்விச் சாலைகள் குழந்தை வகுப்பு முதலே ஆங்கிலத்தை மட்டுமே அடிப்படை மொழியாகக் கொண்டு, தமிழ்க் குழந்தைகளே தமிழைப் பேச மட்டுமன்றி வேறு நிலையில் பயன் கொள்ள வியலாமல் செய்து விடுகின்றன. ஆங்கில ஆதிக்கத்தால் ஏற்பட்ட இந் நிலை நாட்டின் ஆட்சி வந்த பின்பும் தொடர்வது நாட்டு மொழிகளின் வாழ்வுக்கும், வளர்ச்சிக்கும் தடையாகும். அறிவியல் வளர்ச்சியாலும், பல் வகையறிவுத்துறைப் பெருக்காலும் ஏற்பட்ட உலகளாவிய கருத்துகளைப் பிறமொழியிலிருந்து தாய்மொழியில் மொழி பெயர்த்துத் தந்தும் அதற்கு வாய்ப்பாகத் தாய் மொழியில் கலைச் சொற்கள் உருவாக்கியும் மொழியை வளமுறச் செய்து காலத்திற்கேற்ற பரிமாணமும், பரிணாமமும் நல்குவது மொழியின் உயிர்ப் பாதுகாப்பாகும். தாய் மொழி வழிக் கல்வி இதற்கும் சிறந்ததுணையாகும். பல துறைகளிலும் தாய் மொழியைப் பயன் படுத்த அனுமதிப்பதால், அது வளர வாய்ப்பேற்பட்டு இதுவே தாய் மொழிக்குச் செய்யும் தொண்டுமாக அமையும். அதன் தொடக்கமாகக் கல்வி தாய் மொழியிலமைந்தால், பின்பு தொடரும் வாழ்வியல், பணித்துறைகள் ஆட்சி, நீதித்துறைகள், வணிகம், திட்டத் துறைகளனைத்தும் தமிழிலாகும் வாய்ப்பை வளர்க்கவல்லது.

தாய்மொழிக்கல்வி, குறுகிய கல்விப் பரப்புடையது எனக் கருதுவது தவறு. தாய்மொழிக் கல்வியால் நாம் தாய்மொழிக்கு ஆற்றல் வழங்கும் பணி புரிகிறோம். இக்

---

* கல்வி மொழி தமிழா ஆங்கிலமா, மா. பொ. சி. (தொகு) மா ரா. இளங்கோவன், சேகர் பதிப்பகம், சென்னை. 1981

தாய் மொழியில் உயர்தரக்கல்வி, ச. சோமசுந்தர பாரதியார், முன் சுட்டிய நூல், பக் 156

தாய் மொழி வழிக் கல்வி, கோ. இராமச்சந்திரன், தமிழரும் தமிழும், பாரி நிலையம், சென்னை. 1974, பக் 1-10

தமிழ் வழிக் கல்லூரிக் கல்வி, முத்துச்சண்முகன் வெ. சிவானுபாண்டியன் முத்துப் பதிப்பகம், மதுரை, ஆண்டு இல்லை.

கல்வி நிறைவுக்குப் பின் அதுவே ஊடு மொழியாகப் பிற பல மொழிகளையும் கற்க வாய்ப்பமைகின்றது. உடன் மொழிகள், உலக மொழிகளின் கல்விப் பேறால் அவற்றின் தன்மையுணர்வதும் தாய் மொழியின் உயர்வு நிறுவுவதற்கு நேரானதாக அமைவது தேவையாகும். தாய்க்கும், தாய் மொழிக்கும், தாய்நாட்டுக்கும் உண்மையாக இருக்கத் தாய்மொழிக் கல்வி ஊட்டமளிக்கிறது.

கல்வி ஒவ்வொரு மனிதனுக்கும் தேவையானது, அடிப்படைத் தேவைகளாக உடல் வேண்டும் உணவு, உடை, உறையுள் போல ஒவ்வொரு உள்ளத்திற்கும் இன்றியமையாதது; வாழ்வின் மும்முகங்களான உடல் வாழ்வு, உயிர் வாழ்வு, உள வாழ்வுக்கு துணையாவது பட்டமும், பதவியும், பணமும, வேண்டுவதாக அன்றி அறிவும், பண்பும் அறமும் வேண்டுவதாக அமைவதே உண்மைக் கல்வி.

*

# இயக்கம்

—டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

இயக்கம் எனும் சொல், இயங்குகை, குறிப்பு, வழி, இசைப்பாட்டு வகை, சுருதி, பெருமை, வடதிசை போன்ற பல பொருள்களுடையதாக அமைகின்றது[1]. தொல்காப்பியம் முதல் வழங்கும் இச் சொல்லின் அடிப்படைப் பொருள் நிலை இயங்குகை என்பதாக அமையும் எனத் தெரிகிறது.

மெய்யி னியக்க மகரமொடு சிவணும் (தொல். எழுத். 46)
உயிரில் லெழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான (தொல். பொருள். 351)

என எழுத்து இயங்குமாறும், உயிர் அடிப்படையாகுமாறும் குறிக்கப்படலால், இயக்கம் செயற்பாடாகப் புலப்படுதல் தெரிகிறது.

மெய், உயிரால் இயங்குவது எழுத்துக்கு மட்டுமன்றி வாழ்வுக்கும் ஒக்கும்; உடல் உயிரால் இயக்கம் பெறுகிறது; புடை பெயர்கிறது; செயல்படுகிறது; ஈடுபடுகிறது: ஊக்கம் கொள்கிறது; உயர்வு தருகிறது; பயன் விளைவிக்கிறது.

'உயிர்த்திறம் இயக்கம்' என்ற தொல்காப்பியத் தொடரால் இயங்குதல் உயிரின் இயல்பாகத் தெரிகின்றது.எனவே உயிருள்ளன அனைத்தும்இயக்கம் உடையன;இயங்குவன; இயங்குதல் வேண்டுமென்பது தெரிகிறது. ஆயின் உயிர்ப் பொருள்கள் மட்டுமன்றி உயிரில் பொருள்கள் சிலவும் இயக்கமுடையனவாக, போக்கு உடையனவாக, அசைவு உடையனவாக அமைவதுண்டு; உயிருக்கு, உயிர்ப்புக்கு அடிப்படையாக அமையும் காற்று, உயிரில் பொருள் - ஆனால் இயக்கமுடையது; உயிரினங்களைத் தாங்கும் இவ் வுலகு,தினச் சுழற்சியும், ஒரு குறிப்பிட்ட பாதையில் கதிரவனை மையமாகக் கொண்டு சுற்றிச் செல்லும் இயக்கமுடையது; இவ் வுலகுக்கு ஒளிதரும் ஞாயிறும் திங்களும் பிற பல, கோள்களும் இவ்வாறே இயக்க முடையன. இதனை இயல்பான இயக்கம் என 'இயற்கை' யாகவோ, சாட்டையில்லாப் பம்பரம் போல இயக்கும் 'இறை'ச் சார்பின்தாகவோ கருதலாம்.

சாட்டை யிற் பம்பர சாலம் போல்எலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து.... (ஆசை. 3)

எனத் தாயுமானவர் பாடல் இதனைக் குறிக்கும். இயற்கைமட்டுமன்றி உயிர்களும் இறைவனாலேயே இயக்கம் பெறுகின்றன, ஆட்டுவிக்கப் பெறுகின்றன எனும் பக்திக் காலக் கருத்தும் இங்குச் சுட்டத் தக்கது.

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே (அப்பர், 309.3)
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே (திருவாச. திருச்சத. 15)

என அப்பரும் மணிவாசகரும் கூறல் அமைகின்றன. 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' எனும் பழமொழியும் இவ் வடிப்படையை விளக்கும்.

---

[1] தமிழ் லெக்சிகன், சென்னப் பல்கலைக் கழகம், சென்னை, 1952, தொகுதி 1, பக். 299.

மனிதன்-சீவான்மா, ஒரு மேன்மனத்திற்கு - பரமான்மா - ஆட்பட்டு, நெறிப்பட்டு, தொடர்புற்று, ஒருமையுற்று இயங்குகிறான் என்பது பொது எண்ணம் இது உலகளாவிய எண்ணமாகவும் அமைவதை எமர்சனின் 'பேரான்மா' (The Over Soul) என்பது காட்டும்; நிலைத்த ஒன்று எனவும் மீமனமெனவும் இது அமையும்[2]. இயக்கும் இறையும் இயங்கும் உலகும் எனும அமைப்பு இங்கே தென்படுகிறது.

இயங்கும் உலகவுயிர்கள் ஓரறிவு முதல் ஆறறிவுவரை அமைகின்றன[3]. புல்லும் மானுமாகிய ஓறிவின, 'நிலைத்திணை' எனப்பட்டபோதும், அசைதல், வளர்தல், படர்தல், பரத்தல் என்ற இயக்குடையனவே யன்றிப் புடைபெயர்ச்சி யுடையன அல்ல; பிற ஈரறிவுயிர் முதலியன அவ்வியக்கமுமுடையன. ஆயின் ஆறறியுயிரான, மனத்தினையுடையவனான மனித வியக்கம், பிறவுயிரியக்கத்திலிருந்து ஒரு சில நிலைகளில் வேறுபட்டது. ஏற்ற முடையது. தம்மைப் புரத்தற்காக உணவிற்காகவும், பாதுகாப்பிற்காகவும், உயிர் வாழ்வுக்காகவும், இன விருத்திக்காகவும் மட்டுமே இயங்கும் பிற ஐயறிவுயிர்கள் போன்றமைந்துவிடுதல் மனித வியல்பல்ல; எனவே இத்தகு இயங்குதல்களன்றி. இவற்றிற்கும் மேலாக, சிறந்து மனிதன் செய்வனவும், ஈடுபடுவனவுமே அவனை இயக்கமுடையவனாக்குகின்றன எனலாம். மனித வாழ்வின் தொடக்கம், உணவுக்காக 'அலை'ந்த நிலையில் பிற உயிர்களை ஒத்தபோதும், பண்பாட்டு, நாகரிக வளர்ச்சியில் வேறுபட்டது.

ஒரு தனி மனிதன் அல்லது ஒரு குழு ஒரு குறிப்பிட்ட நோக்கம் பற்றி, அல்லது ஒரு சில உயர்ந்த நோக்கங்கள் பற்றி, ஒரு குறிக்கோளுக்கு நேராகச் செயற்படுதல் இயக்கம் என விளக்கலாம. சங்கம், குழு, கூட்டம், மன்றம், ஒன்றியம், கழகம் எனப் பல அமைப்புகள் இத்தகு இயக்க நோக்கம் பற்றி யுருவாகி அமைகின்றன. அடிப்படையாக, இவ் இயக்கங்களை இருவகைப்படுத்தலாம்; நிலவும் காரியங்களை மாற்ற, புரட்சி நோக்கமுடைய 'எதிர்ப்பியக்கம்' ஒருவகை; இவ்வாறன்றி, எதிர்ப்பு நோக்குக்கொள்ளாது, தூண்டுதல், துலங்கச்செய்தல், வளர்த்தல், பரப்புதல் எனும் எண்ணம் கொண்டமையும் 'ஊக்க இயக்கம்' மற்றொரு வகை.

உலகம் முன்னேறுவது இயக்கங்களால்; எதிர்ப்பு இயக்கங்கள் நோக்கம் நிறைவேறியதும் நின்றுவிடுகின்றன. நிறைந்து முடிந்துவிடுகின்றன. ஆயின் ஊக்க இயக்கங்கள் தொடர்கின்றன; உயர்ந்து வளர்கின்றன, ஓங்கிச் செல்கின்றன. தேவை நிறைவேற்றம் என்பதுடனமைந்து விடாது 'இன்னுமின்னும்' என மேனோக்கிச் செல்கின்றன. மலைபோன்று நிலைபேறுமடைகின்றன.

---

2 that unity, that Over-Soul, within which every man's particular being is contained and made one with all other......We live in succession, in division in parts, in particles. Mean time within man is the soul of the whole; the wise silence; the universal beauty, to which every part and particle is equally related; the eternal ONE.......and the heart which abandons itself to the Supreme mind finds itself related to all its works.

Emerson, The Over-Soul, in American Literature of the Nineteenth Century - An Anthology, ed. William J. Fisher, Euragia Publishing House, New Delhi, 1970, Pp. 83-96.

3 தொல், மரபு: 27 - 33.

தமிழின் தொடக்க கால வரலாறு முதல், உலக வரலாற்றினூடே நோக்கிச் செல்லும்போது பல இயக்கங்கள், பல் வகை இயக்கங்கள் தென்படுகின்றன. குறுகிய பரப்பினவாகவும், பரந்த நோக்கமுடையனவாகவு மமைவன உள. ஆழ வேரூன்றியன வாகவும், மேம்போக்கானவையாகவும் அமைந்தனவும் இருக்கலாம். நற்பயன்கள் விளை வித்தனவாகவும், தேய்ந்து ஓய்ந்து விட்டனவாகவும் அமைந்தனவும் தெரியலாம். உலகின் ஒரு பகுதியில் மட்டும் தோன்றியனவும், உலகெங்கும் பரந்தனவும் அமையலாம். ஒரு இயக்கம், பல இயக்கங்கட்கு வித்திட்டு, ஒருமுக நோக்கம் பன்முக நோக்கமாகி விரிந்து விளைவுகள் பயந்திருக்கலாம்.

பல நோக்கங்களுக்காக, பல்வேறு சூழல்களில் பல வகையான இயக்கங்கள் தோன்றியிருக்கின்றன. அடக்கப்படும்போது பீறிட்டெழும் உணர்வுகள் போல, நெருக்கப் படும்போது கொதித்தெழும் மாந்தர் ஒன்றுபட்டு இயக்கத்திற்கு நெறி வகுத்தது பெரும் பான்மை. விடுதலை இயக்கம்போன்ற அரசியல் இயக்கங்களுடன், சமய இயக்கம், தொழிற் புரட்சி, இலக்கிய இயக்கம், கலை யியக்கம் மொழியியக்கம், பகுத்தறிவு இயக்கம், கல்வி யியக்கம், சமுதாயச் சீர் திருத்த இயக்கம் என இது பல்கிப்பெருகும்.

மக்களின் உடல் நலன், வாழ்வு மேம்பாடு, பொருளாதார ஏற்றம், வாழ்க்கைத் தர உயர்வு, அறிவியல் வளர்ச்சி, மக்கட் தொடர்புச் சாதனங்கள், போக்கு வரத்து, கருத்துப் பரிமாற்றம், ஒருமைப்பாடு, உணவு உற்பத்தி, மக்கட் தொகைக் கட்டுப்பாடு, இயற்கை வளப்பெருக்கு, வணிக விரிவு, செயற்கைப்பொருட் குவிப்பு எனப் பல்துறையிலும் செயல்திறமும், ஆக்கச் செயற்பாடும் காணப்பட்டு இயக்க நிலை புலப்படுத்துகின்றன.

உலக இயக்க வகைகள

சமூக அறிவியல் (Social Sciences) துறை பல இயக்கங்கள் குறித்துச் சுட்டுகின்றது[4] நிலவுடமைப் பங்கீட்டு இயக்கம் (Agrarian movement), ஆயிரமாண்டு நல்லாட்சி (millenarism), தேசிய இயக்கம் (Nationalist movement), தம் இனத் தனித்தன்மையைப் புலப்படுத்தல் (Nativistic movement) மீட்டுயிர்ப் பூட்டுதல் (Revitalisation movement), சமூக இயக்கம் (Social movements) முதலிய பல தம்முள் தொடர்புடையனவாகவும், ஒன்றையொன்று அவாவும் பரப்புடையனவாகவும் அமைகின்றன.

நிலத்தை உடையவரொருவராகவும், அதில் உழவுத்தொழில் புரிபவர் எளியவ ராகவு மமைந்து, அதற்காகப் பணமோ பொருளோ வாடகையாக அல்லது வருவாயாக நிலவுடமை பெறும் நிலையையும், நிலத்தைத் திருப்பி யளித்தலையும் எதிர்த்து உழவுத்

---

4 International Encyclopaedia of the Social Sciences, (ed) David L. Sills; Collier Macmillan Publishers, London, Re 1972.

தொழிலாளர் இயங்கிய நிலை லத்தீன் அமெரிக்காவிலும் குடியேற்ற நாடுகளிலும் அமைந்தது.[5]

ஆயிரம் ஆண்டு எனும் சொற்பொருளடிப்படையில் (மில்லனியம்), உலக இறுதியில் மீட்பரான இயேசு கிறிஸ்துவின் ஆயிரம் ஆண்டு ஆட்சி பற்றிய அடிப்படை நம்பிக்கையில் உருவான 'மில்லனரிசம்' எனும் இயக்கம், பொதுநிலையில், பொருட் பெருக்குப்பெற்று, மீட்சிக்குரிய, இவ்வுலக பரமான சமய இயக்கங்களைக் குறித்து அமைகின்றது.[6] யூதமதம், கிறித்துவ சமயம், இசுலாம் ஆகியவற்றில் இவ் இயக்கம் தொடர் புற்றது. மிகவும் விரைந்து நெருங்கிக் கொண்டிருக்கும் இவ் ஆயிரமாண்டுத் தொடக்கத்திற்காகத் தம்மைப் பல்வழியிலும் தயார் செய்து கொள்ளுதல் இதன் முறையாக அமைகின்றது. இப்புது தெய்வீக அரசாட்சியால் வெறும் சீர்திருத்தமோ செப்பமாகுதலோ மட்டுமன்றி ஒரு முழுமையான நிறைவான மறுரூபமாதல் எதிர் பார்க்கப் படுகின்றது. தனிமனித ஈடேற்ற மன்றி முழுமையான மனுக்குல உயர் பேறாக இது உருவாகின்றது இவ்வுலகத்தில் இறைவனாட்சியைக் காண எதிர்பார்க்கும், வருங்காலம் பற்றிய சமயக் கொள்கையாகவும், மீட்பர் தொடர்புடையதாகவும் (messianism) இது அமைகின்றது. சமயமும் அரசியலும் இணையும் நிலையும், கழிந்ததும் இனிவருவதும் இணையும் பாங்கும் பெற்று தனிநிலையுறு மியக்கமாக இது அமைகின்றது.

தேசியம், தற்கால சமுதாயத்தில் நாமிருக்கும் நாடு நமதாட்சிக்கு உரியது எனும் அரசியல் கோட்பாட்டினதாக அமைகின்றது. இவ் வியக்கம் காலப் பழமையுடையதல்ல. அண்மை நூற்றாண்டுகள் சிலவே இதன் தோற்றம், வளர்ச்சிக்கு இடம் அளித்தன. 18-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவின் வடமேற்குப் பகுதியிலும், அமெரிக்காவின் வடபகுதியிலும் தோன்றி, இது உலகம் முழுவதையும் கவர்ந்து இருபதாம் நூற்றாண்டின் மையப்பகுதியில் உடன்கால வரலாற்றின் உலகளாவிய ஆற்றலாயிற்று. மிகவும் வேறுபட்ட கருத்து நிலைகளில் பரவி, குடியாட்சி (democracy), வல்லாண்மை (fascism), பொதுவுடமை (communism) தனிக் கருத்துத் தேட்டம் (search for an ideology) என வெளிப்பட்டது. நாட்டுக்கு நாடு, இடத்திற்கிடம், காலம், மனிதர் ஆகியவற்றிற்கேற்ப இத் தேசியம் பல்வேறு உருக் கொண்டது. அரசியல் புரட்சி யியக்கமாக

---

5 The peasant movement occur in societies where land is the property of ruling classes. Who are not necessarily engaged in agriculture but who draw rent or other in come incash, or in kind, or in services from the peasants. The typical peasant movement aims at abolition of these obligations and the return of the land to it's alleged or real original owners.

— Ibid, Vol. 14, p. 443.

6 The Latin term *millennium* and its Greak equivalent, *Chilias,* literally mean a period of thousand years. According to the millenarian tradition, which is based on Juwish apocalyptic literature and the Revelations of St. John Christ will reappear in the guise of a warriar, vanguish the devil and hold him prisoner. He will then build the Kingdom of God and reign in person for a thousand years......The term *millenarian (or Chiliastic)* is now used not in its specific and limited historical sense but typologically, to characterize religions movements that expect imminent, total, ultimate this worldly, collective salvation, used thus the term applies to a wide range of movements.

— Ibid, Vol. 10, p. 349.

உருவாகிய இது, 'கடவுளால் நியமிக்கப்பட்டவர் ஆட்சியாளர்' என்ற கருத்தை எதிர்த்ததுடன், இருபதாம் நூற்றாண்டில், ஒரு தேசத்தினரிடையே சமத்துவம் எதிர்பார்க்கும் நிலையையும் கொண்டது. இதனால் தாழ்த்தப்பட்டோரை உயர்த்தி, பொருளாதாரம் கல்வி போன்ற நிலையில் ஒப்புமை - ஒத்த நிலை வேண்டும் சமுதாய இயக்கமுமாயிற்று.[7] ஓரியக்கமாக அமையினும் பல்வகை மாற்றங்கட்குட்பட்ட தேசிய இயக்கம், தொடக்கத்தில் உயர்ந்தோர்க்குரியதாகவும் (elite), பின்பு நடுத்தரத்தினோர் இயக்கமாகி ("bourgeois" movement), நடுத்தர மக்கட்குரியதாகவும் (middle class). பின்பு மக்களியக்கமாக (mass movement) விரிந்தும் நாட்டின் அரசியல், சமூக, பண்பாட்டு வாழ்வில் பங்கு கொண்டது.

மீட்டுயிர்ப்பூட்டுதலியக்க (revitalization movement) வகைகளாகத் தம்மினத் தனித்தன்மையைப் புலப்படுத்துதலும் (nativism) மறுமலர்ச்சியியக்கமும் (revivalism) அமைந்து, சமுதாய இயக்க வகைகளாகவும் பொருந்துகின்றன. ஒரு சமுதாயப் பகுதியினர் அல்லது அதன் சில உறுப்பினர் இணைந்து, முயன்று, திட்டமிட்டு, இன்னும் மனத்திற்குகந்த பண்பாட்டை உருவாக்குவதாக இம் மீட்டுயிர்ப்பூட்டுதல் அமைகின்றது. மறுமலர்ச்சி இயக்கத்தில், பொற்காலமாக அமைந்த முற்காலத்திற்கு, அதன் மகிழ்வும் அறமும் நிறைந்த வாழ்வுக்குத் திரும்புதல் நோக்கமாகும். தம்மினத்திற்குப் புறமானதும் வேறானதுமான பண்பாட்டுக் கூறுகளை நீக்கி, தேவையற்ற புறத்தாரைக் களைந்து, தூய்மைப் படுத்தும்பாங்கு தம்மினத் தனித்தன்மையைப் புலப்படுத்துதலாகும். பெரும்பாலும் மறுமலர்ச்சியும்தனித்தன்மைப் புலப்பாடும் எல்லா-அல்லது பல இயக்கங்கட்கும் உரியதாகும்[8].

சமுதாய இயக்கங்கள் என்பதை எல்லா இயக்கங்கட்கும் பொதுப்பெயராக ஆளலாமெனினும், சமய அரசிய லியக்கங்களிலிருந்தும் குறிப்பிட்ட குழுவினரான பெண்கள், இளைஞரியக்கங்களிலிருந்தும் வேறுபடுத்தியும் கருதுவதுண்டு. பல்வகையான குழுமுயற்சிகளை, சமூக நிறுவனங்களை மாற்றிச் சீர்திருத்தி அல்லது முற்றும் புதியதை

---

7 Nationalism has from the beginning been a politically revolutionary movement: it has tried to transform or over throw the "legitimate" goverament of the past whose claim to authority was based upon divine ordination or heriditary rights.... The twentieth century has added another revolutionary dimension to nationalism. Nationalism has also become a socially revolutionary movement demanding equal economic and educational opportunities for all members of the national group and the active promotion of the socially underprivileged classes.

— Ibid. Vol. 11, p. 64.

8 "Revitalization movement," has been defined as a conscious, deliberate, organized effort on the part of some members of a society to create a more satisfying culture. In revivalism, the aim of the movement is to return to a former era of happiness, to restore a golden age, to revive a previous condition of social virtue. In nativism, the aim of the movement is to purge the society of unwanted aliens, of cultural elements of foreign origin, or of both. Frequently, a movement is both revivalistic and nativistic.

— Ibid, Vol 11, P. 75

உருவாக்கியமைக்கும் போது, இப்பெயரால் சுட்டுவது பொருந்தும். ஆயின், தொடக்கத்தில் இது. புதிய தொழிலாளி வர்க்கத்தினரிடையே எழுந்ததும், அவர்கள், சமூக, பொதுவுடமை, அரசாட்சி யெதிர்ப்பு மனப்பான்மையை ஒட்டியதுமாக அமைந்தது; ஆலைத் தொழிலாளிகளைப் பொருளாதாரச் சுரண்டலிலிருந்து மீட்டுத் தருவதை நோக்கமாகக் கொண்டது[9], இவ்வாறு, ஐரோப்பாவில், சமுதாய இயக்கம், தொழிலியக்கமாக (labour movement) உருப்பெற்றது.

தற்காலத்தில், வரலாற்று முதன்மை பெற்றவையாக இருவகை சமுதாய இயக்கங்கள் அமைகின்றன. ஒன்று வகுப்பியக்கம் (class movement), மற்றொன்று இனக்குழுவினரிடையேயுள்ள இயக்கங்கள் (movement of ethnic groups). முன்னதில் பலசான்றுகள் அமைகின்றன : உயர்குடியினருக்கு எதிராக நடுத்தர வர்க்கத்தினர்; நிலவுடமையினருக்கு மாறாக நிலத்தில் உழைப்போர்; முதலாளிக்கு முரணாகத் தொழிலாளர்; தரகருக்கு எதிராக உழவர் ; பெருவணிகத்திற்கு எதிர்ப்பாக சிறு நடுத்தர வர்க்கம்; செல்வந்தர்க்கு முரணாக ஏழை என இதுவிரியும்[10]. இனக்குழு-வியக்கமும் பல்விரிவு காட்டுகின்றது. சிறு பான்மையினராக அமைவோர், தமக்கென அரசியல்சுதந்திரம் வேண்டி இயங்குதல்; குடியிருப்பு நாடுகளின் பழங்குடியினரின் விடுதலை இயக்கம்; தேசிய ஒருமைப்பாட்டுக்கு நேரான இயக்கம்; குடியுரிமை, பண்பாட்டு சமத்துவம் அல்லது முதன்மை வேண்டும் பல் இன மக்கள் இயக்கம் போன்றன.[11] நாசி இயக்கம், நீக்ரோ இயக்கம் போன்றன பற்றியும் அறிய முடிகிறது.

உலகளாவிய இயக்கங்கள் (pan movements) பற்றிய எண்ணங்களும் காணப் படுகின்றன. ஓரிடத்தின், மொழியினரின், நாட்டின், இனத்தினரின் அல்லது சமயத்தினரின்

---

9 ...... the social movement meant the movement of the new industrial working class, with its socialistic, communistic and anarchistic tendencies ........ they gave expression and direction to the strivings of the industrial proletariat towards a new social order which would abolish economic exploitation and give the workers a chance to achieve full personality development.

— Ibid, Vol 14, P. 439

10 Examples of class movements are those of the middle class versus the nobility ; peasants versus landlords, workers against employers, farmers against middle men, petty bourgeoisie against big business, and, more vaguely speaking, the poor against the rich.

— Ibid, Vol 14, P 443

11 The term "ethnic group movement" is used to designate a variety of phenomena. The most important are (1) the movements for political independence of national minorities within the old empire states in Europe (2) the independence movements of natives in colonial countries of Asia and Africa (3) the movements for national unity (4) the movements of nationalities for civic and cultural equality within ethnically heterogeneous states and for superiority.

— Ibid.

ஒருங்கிணைப்பு முயற்சியாக இது அமைகின்றது[12]. இது பல காலத்திலும் உலகெங்கிலும் அமைந்திருந்தது. இசுலாம், கிறித்தவம் போன்ற சமயங்கள் ஐரோப்பா, அமெரிக்கா போன்ற நாடுகள், துருக்கியர், அரேபியர் போன்ற இனத்தினர் இந்நிலையில் குறிப்பிடத் தக்கவர். இயந்திரத் தொழிலாக்கத்தால் (industrialization) உருவாகிய தொழிற்சங்கங்கள் (trade unions), தொழிலாளரியக்கத்திற்கு (Labour movement) அடிப்படை எனலாம். ஆலைத் தொழிலாளியும் ஒரு குடிமகனாகக் கருதப்படுவதற்கும், பிற குடிமக்களையொத்த மதிப்பும், கல்வி, பொருளாதாரச் சமத்துவமும் பெறுவதற்கும், தொழிலாளரின் வாழ்க்கைத் தரம் உயர்த்தப்படுவதற்கும் இவ் இயக்கம் காரணமாகி உதவியது. மேலும் தொழிலாளியின் வேலை நேரம், ஊதியம், பணிச் சூழல், தொழில் உரிமை போன்றனவும் சிந்திக்கப்பட்டன[13].

## இலக்கிய இயக்கம்

வாழ்வின் பல துறைகளில், அதாவது சமுதாயம், அரசியல், பொருளாதாரம், தொழில் எனும் பல சூழல்களில் ஏற்பட்ட உலகளாவிய, அல்லது குறிப்பிட்ட இனம் இடம் சார்ந்த இயக்கங்கள் தவிர, இலக்கிய வளர்ச்சியும், ஆக்க நிலையில், பல இயக்கங்கட்குட்பட்டுள்ளது. இயக்கம், 'ஒரு சிறப்பான குறிக்கோளை நோக்கி, ஓரளவு தொடர்ச்சியாக ஒருகுழுவினரால் செய்யப்படும் கிரையான செயல்களும் முயற்சிகளும்'[14] என விளக்கப் படல் இலக்கிய இயக்கத்திற்கும் பொருந்தலாம். இலக்கியக் குழுக்களே (Schools) பெரும்பாலும் இலக்கிய இயக்கத்திற்குக் களனமைக்கின்றன. இவ்வாறு ஓரிடத்தில் தோன்றி, ஒரு நாட்டிலும் உலகெங்கிலும் பரந்து, ஒரு கால கட்டத்தில், ஒன்றோ பலவோ நாடுகளில் இலக்கியத்துறையில் செல்வாக்குடையதாகத் திகழ்கின்றது. புனைவியல், நடப்பியல், இயல்பியல், குறியீட்டியல் போன்றன இத்தகு இயக்கங்கள். எந்த அளவு விரிந்து பரவினவோ, அந்த அளவு அவை வகைமைப்பட்டு, தெளிவாக விளக்கப்பட வியலாததாயின. இலக்கியக் குழுக்களும் தம்மை இயக்கங்களாகக் காட்டிக் கொண்டமை வருங்காலவியல், மீமெய்ம்மையியல் போன்றவற்றில் அமைந்தது. பெரும்பாலும் ஒரு குழு சில ஆண்டுகட்கும், ஒரு இயக்கம் பத்தாண்டுக்காலத்திற்குமே தொடர்ந்தது[15]. ஆயின் அவற்றின் செல்வாக்கும் தாக்கமும் பல ஆண்டுக்காலம், மிகப் பல்வேறுபட்ட மொழியின் இலக்கியங்களில் காணப்பட்டு வருகின்றன எனலாம்.

இலக்கியத்தின் உருவம், உள்ளடக்கம், நோக்கம், பண்பு, போக்கு பற்றிய திட்டவட்டமான கருத்துகள் ஓரிடத்தில், ஒரு காலத்தில் உருவாகின்ற போதும், தொடர்ந்து பலரால் பின்பற்றப் பட்டு வளரும் போது இயக்கமாகிக் கால இட எல்லை

---

12 A pan movement is dedicated to the unification of a geographical area, linguistic group, nation, race or religion. The term pan is so broad that it can be, and has been, used to designate a vast variety of disparate phenomena

— Ibid, Vol 11, P. 365

13 See: Theories of the labour movement-Mark Perlman; Labour movements and collective bargaining in Europe - Adolf Sturmthal, International Encyclopaedia of the social sciences, Vol. 8. p 516, ff.

14 The Oxford universal dictionary illustrated (ed) C. T. Onions, Oxford 3rd 1976, Vol 11, p 1366.

15 Cassells Encyclopaedia of world literature, S. H. Steinberg, Cassells & Company Ltd., London, 1973 Vol. 1 p 504.

கடந்து பரவுவதுண்டு. ஐரோப்பிய நாடுகளில் உருவான இத்தகு பல இயக்கங்கள் உலகெங்கும் பரவியபோது தமிழிலும் தாக்கம் கொண்டன[16].

இலக்கிய 'இயங்'கள் (isms) அல்லது வாதங்கள் எல்லாம் புறத்திருந்தே வந்தன என்பதற்கில்லை. பழந்தமிழிலக்கியம், இடைக்கால ஆக்கங்களாகிய வற்றில் இத்தகு சில தன்மைகள் புலப்படுவது காட்டப்படுவது இவ் எண்ணத்தை எழுப்பும். ஒருவேளை, இயக்கமாகத் தமிழில் புலப்படாத போதும் இயல்பாக அமைந்தன எனலாம். ஒரு சில இலக்கிய இயக்கங்களே, இலக்கியத்திற்கு மட்டு முரியனவாக எழுந்து இயன்றுள்ளன; பிற பல, துறையையும் அலாவி, அல்லது பிறதுறையில் எழுந்து இங்கும் புகுந்து தாக்கம் ஏற்படுத்தியதாக அமைகின்றன. மார்க்சிசம், சோசலிச நடப்பியல் போன்றன பல பல்துறையிலும் பரந்து படர்ந்தன.

குறிக்கோளியல் (Idealism), நடப்பியல் (Realism), இயல்பியல் (Naturalism), புனைவியல் (Romanticism), குறியீட்டியல் (Symbolism), முன்மை மரபியல் (classicism) முருகியல் (Aestheticism) என இலக்கியத்திற்கே உரியதாகக் கூறத்தகுவன உள. சமயமும் அரசியலும் சிந்தனையாளரான தனிமனிதரும் பிறபல இயக்கங்களைத் தந்து இலக்கியத்தில் தாக்கம் கொண்டனர். ஆன்மீக வாதம் (Spiritualism), ஊழ்வலிவாதம் (Fatalism) பொருள் முதல் வாதமான லோகாயதம் (Materialism), சீர்திருத்த இயக்கம் (Reformation), இறைநிலைவாதம் (mysticism), பகுத்தறிவுவாதம் (Rationalism) என பல தத்துவ ஆய்வின் வெளிப்பாடாக அமைகின்றன, சோசலிசம் அல்லது சமதர்மம், சமுதாய, அரசியல் சார்புடன் புலப்படுகின்றது. தனிமனித இயக்கத்தில் மார்க்சிசம் புகழ் பெற்றதும் பெயர் போனதுமாகும். பிராய்டிசம், மீமெய்ம்மை வாதம் போன்றன தற்காலத் தமிழிலக்கியத்திலும் மிக்க தாக்கம் காட்டுவதாகத் தெரிகின்றது. நனவோடை, இருண்மை, படிமம், உருவ வாதம் (Formalism), தப்பி ஓடல் (Escapism) போன்றனவும் இந்நிலையின. ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திலும், சுட்டத்தக்க சில எழுத்தாளரிடையும் காந்தீயமும் செல்வாக்குக் கொண்டது.

## தமிழும் இயக்கமும்

தமிழில், இயக்கம் எனும் சொல், காலப்பழமையுடையதெனினும், தற்காலத்தில் வழங்கும் பொருளில், சமுதாய அல்லது அரசியல் அல்லது சமய அல்லது இலக்கிய இயக்கம் என்பதைக் குறித்து வழங்கவில்லை. இயக்குவோரொருவராகவும், இயங்குவது ஒன்றாகவும் அமையும் கருவி நிலை அங்குப் பெரும்பாலும் புலப்பட்டதாகத் தோன்றுகிறது. இசைக்கருவிகளை, இசையெழும்படி, பாணர் முதலியோர் இயக்குதலும்[17], தேர், வண்டி,

16 பார்க்க [1] இலக்கிய இயக்கங்கள், ந. பிச்சமுத்து, சக்தி வெளியீடு, சென்னை,1980. [2] இலக்கிய இயக்கங்களும் திறனாய்வும், சு.பாலச்சந்திரன் கோமதி நூலகம், சென்னை - 1982

17 கைவல் பாண்மகன் கடன் அறிந்து இயக்க - சிறு.37
கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க - புறம் 398.2
கடுங்கோட்டு இன்னியம் இயக்கினிர் கழிமின் - பெரும் 392
பதலையொருகண் பையென வியக்குமின் -புறம் 152.17
கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்-சிலம்பு 24.17
சீர் இனிதுகொண்டு நரம்பு இனிது இயக்கி - மது 657

ஓடம் போன்ற போக்குவரத்திற்குரிய சாதனங்களை இயக்குதலும்[18] அடிப்படையாகின்றன. இதனால் இசைப்பாட்டும், சுருதியும், வழியும் இயக்கமெனப்படுகின்றன.

இன்புற இயக்கி இசைபட வைத்து (சிலம்பு 3.66)
மூவகை இயக்கமு முறையுளிக் கழிப்பி (,, 8.42)
எறிநீ ரடைகரை யியக்கந் தன்னில் (,, 10.90)

அசைதலும், புடைபெயர்தலும் கூட இயக்கமாகியதைக் கண், மேகம போன்றன இச் சொற்றொடர்புடன் வருதல் புலப்படுத்துகின்றது.

செல்மழை இயக்கம் காணும் - நற் 44.11
கண்ணிணை யியக்கமும் காமனோ டியங்கா - மணி 25.8

இயங்காமையால் செயலற்று மட்டுமன்றி பயனற்றும் அமைவன, இயக்கத்தால் பயனுடையனவாகின்றன. எனவே எவ்வியக்கமும் பயன் விளைவிப்பதாகவும், நன்மை தருவதாகவும் அமைய வேண்டுமெனத் தெரிகின்றது. வெண்ணெய் உருவாக்கும் மத்தின் செயற்பாடு 'நெய் தெரி இயக்க'மாகவும் (நற் 12.3), செல்லுதலைக் கொண்ட மனிதத் செயற்பாடு 'கால் வல் இய்க்க'மாகவும் (அகம் 292.9) அமைந்து, இயங்குதலை மட்டும் குறித்த சொல், பின்பு பேரெழுச்சியுடைய இட காலப் பரப்புடைய, பெருநோக்கின் செயற்பாடுகளையும் குறிக்கும் படி விரிவுறுகின்றது.

தமிழில், இப் பொருளில், இயக்கம் என்ற சொல் ஆளப்படல், முன் இல்லாது' இருபதாம் நூற்றாண்டின் பண்பாகலாம். எனினும் சங்கம், பக்தி முதலியன முன், இடைக் காலங்களின் இயக்கமாக அமைந்தமை அறிஞரால் காட்டப்படுவதால், இயக்கப் பண்பும் பாங்கும் முன்பே பொருந்தியமை தெரிகின்றது. தமிழகம் ஒவ்வொரு காலங்களிலும் ஒவ்வொரு வகை இயக்கங்களைக் கண்டதும், அவை ஒவ்வொரு நோக்கமும் பயனும் பற்றி இயன்றதும், இலக்கிய, மொழி, சமய, அரசியல், சமுதாய இயக்கங்களாக அவை அமைந்ததும் வரலாற்றில் புலப்படுகின்றது. ஒரு நோக்கத்துடன் தோன்றின போதும், பல்துறைத் தாக்கம் காட்டியனவாகவும், எவ்வகை இயக்கமான போதும், அதன் செல்வாக்கு இலக்கியத்தில் பாதிப்புப் பெற்றதும் புலப்படுகின்றது[19].

---

18 இனமணி நெடுந்தேர் பாகன் இயக்க - நற் 19.6
கைவல் பாகன் பையென இயக்க - அகம் 230.12
வலவன் வண்தேர் இயக்க - அகம் 340.4
கால் பார் கோத்து ஞாலத் தியக்கும் - புறம் 185 1
அரிமுக வம்பியு மருந்துறை யியக்கும் - சிலம்பு 13.177
ஓங்குநீர் மாடமொடு நாவா யியக்கி - ,, 14.74

19 See: Literary movements - Tamil, in studies in Tamilology, S. V. Subramanian Tamil Patippakam, Madras 1982. Pp 206—224
(தொடர்ந்து வரும் செய்திகளும், இக் கட்டுரை அடிப்படையில் அமைகின்றன.)

**சங்கம்**

தமிழ்ச் சங்கங்களை, வரலாற்றில் அறியவியல்கின்ற முதல் தமிழ் இயக்கம் எனலாம். முச்சங்கம் பற்றிய எண்ணங்கள் உறுதியாயின் மும்முறை இம்முயற்சி நிகழ்ந்ததும், அவை இலக்கிய இயக்கமாக அமைந்ததும், இலக்கியப் பாதுகாப்பும் தொகுப்பும் புதிய இலக்கியமெழ ஊக்கமும் கொடுக்கப் பட்டதாகவும் கருதலாம். அரசரும், புலவரும், மக்களும், மகளிரும் பங்கு கொண்ட நாடளாவிய இயக்கமாக இது அமைந்திருக்கவேண்டும். இறையனார் களவியல் உரை தரும் சங்கம் பற்றிய எண்ணங்கள்[20], தற்கால இயக்கம் என்பது உணர்த்துவதை சங்கம் என்பதும் உணர்த்தியதைத் தருகின்றது. காலம், இடம், தலைவர், உறுப்பினர், செயல், திட்டம் போன்றன வெளிப்படுகின்றன. சங்கத் தொகை நூல்களான எட்டும், பத்துப்பாட்டும் விளைபயனாகி இயக்க நிறைவை வலியுறுத்துகின்றன.

தமிழரைப் போன்றே சைனரும் சங்கங்கள் ஏற்படுத்திய போதும் கல்வியும் சமயம் பரப்புதலுமே அவர்கள் நோக்கமாகத் தெரிகின்றது. எனினும், காதலும் வீரமும் குறித்துப் பாடிய தமிழரிடையே அற இலக்கியங்களை உருவாக்குதல், இவர்களால் இயக்கமாகிப் பரவியுள்ளது. கி. பி. 470-இல் இருந்ததாக எஸ். வையாபுரி பிள்ளை குறிக்கும் சைனரான வச்சிர நந்தியின் திரமிள சங்கம் தமிழ்ச்சங்கமாக அமைந்திருக்கவேண்டும்.[21] தமிழில் அற இலக்கியங்களான கீழ்க் கணக்கு நூல்கள் எழுந்தமைக்கு சமண, பௌத்த சமய சங்க இயக்கம் காரணம் என ஏ. வேலுப்பிள்ளையும் குறிப்பிடுவர்.[22] சைனரால் நாலடி, பழமொழி, சிறுபஞ்ச மூலம், ஏலாதி எழுதப் பட்டதையொட்டி தமிழ்க் குடியினரும் நான்மணிக்கடிகை, முதுமொழிக் காஞ்சி, திரிகடுகம் போன்றவற்றை அதே முறையில் ஆக்குகின்றனர்.

**பக்தி**

தமிழிலக்கிய வரலாற்றிலும், தமிழக வரலாற்றிலும், தமிழ்க்கலை வரலாற்றிலும் குறிப்பிடத்தக்க முதன்மையுடையதாக அமைவது பக்தி இயக்கம. தமிழகத்தில் பரவி, இடம் பிடித்து, ஆட்சியாளரின் சமயமுமாகி நிலைத்துவிட்ட சமண பௌத்த மதங்கட்கு எதிராக எழுந்த தமிழ்ச் சமய இயக்கமான இது சைவ, வைணவ சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்டது. அத்துடன் அமைந்து விடாது. கலையெழுச்சிக்கும் இடமளித்தது. இலக்கியம், இசை, நடனம், சிற்பம், சித்திரம், கோயிற் கட்டிடக்கலை போன்றவற்றில் புத்துயிர்ப்பு உருவாக்கிற்று. இச் சமய இயககம் சமுதாய இயக்கமாகவும் அமைந்தது என்பதை, சாதி இன வேறுபாடற்று பலரும் ஆழ்வாராகவும் நாயன்மாராகவும் கொள்ளப் பட்டது புலப்படுத்துகின்றது. மக்களை மட்டுமன்றி அரசரையும் இவ் இயக்கம் ஆட்கொண்டது. இதனால் இதனை சமதர்ம இயககமெனவும், ஒற்றுமையிக்கமெனவும், எதிரப்பியக்கமெனவும், முனைப்பியக்கமெனவும், ஆக்கவியக்கமெனவும் கூறலாம்.

---

20 இறையனார் அகப்பொருள், நக்கீரர் உரை, கழக வெளியீடு, சென்னை 1969, பக் 5-6 ( சூ. 1 உரை )

21 History of Tamil Language and Literature, S. Vaiyapuri Pillai, New Century Book House, Madras, 1956, Pp 58-59

22 தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ஆ. வேலுப்பிள்ளை. ( பதி ) ல. ராமகிருஷ்ணன், சென்னை, 1969, பக் 25-35

பல்வகையிடங்கட்குச் சென்று பதிகம் பாடியும், கோயில் கொண்ட இறை மூர்த்தங்களைப் பாசுரங்களில் ஓதியும், இறையடியார்க்குக் காப்பியம் புனைந்தும், இறை-நலம்சார் பிரபந்தங்கள் உருவாக்கியும் இலக்கிய வளம் சேர்த்தது இவ்வியக்கம். இடச் சிறப்பும், இறைச் சிறப்பும் மொழிந்து சமயத்தைப் பரப்பியது. பன்னிருதிருமுறை, நம்பியாண்டார் நம்பியாலும், நாலாயிரதிவ்வியப் பிரபந்தம் ஒன்பதாம் நூற்றாண்டில் நாதமுனிகளாலும் தொகுக்கப்பட்டு நிலைபெற்றமை இவ்வியக்க இலக்கிய ஆக்கத்திற்கு நிலைத்த சான்றாகும்.

பக்தி இயக்கம், ஏறத்தாழ ஐந்து நூற்றாண்டுகள் (7-11) நீண்டும், பல்லவ, பாண்டிய, சோழ அரசக் காலங்களில் இயன்று மமைந்த பேரியக்கம். அத்துடன், இதன் முடிவு, சமண பௌத்த மதங்கள் தமிழகத்திலிருந்து முற்றிலும் துடைக்கப்பட்டதில் நிறைவுற்றது எனக்கூறலாமெனினும் இதன் உருவம் மாறி வேறிரு நிலையில் தொடர்ந்து கால்வழி காட்டியமையும் இங்குக் கருதத்தக்கது. அவற்றைச் சித்தரியக்கமெனவும், சமயமடங்களெனவும் அணுகிக் காணலாம்.

### சித்தர்

பக்தி இயக்கக் காலத்துப் பரப்புதல் பெற்ற சைவ, வைணவ சமயங்கள், தேவைக்கு அதிகமான அல்லது தேவையற்ற சடங்குகளுடனும், மூடநம்பிக்கைகளுடனும், சாதிச் சண்டைகளுடனும் பல் நிலையில் உருமாறிச் சீரழிந்தபோது, இறையொருமையும், மனத்தூய்மையும் வலியுறுத்தி நெறிகாட்டும் நோக்கில் எழுந்த பக்தரே சித்தர் எனலாம். உயிர் ஈடேற்றமும், உடற்பாதுகாப்புமெனும் இருமுனைச் சிந்தனை பற்றி, மருத்துவக் கலையும் இவரால் வளர்ந்து வளம் பெற்றது. மக்களை, அவர்களுக்கு இயல்பான, பழக்கமான 'தாளலய' முடைய பாடல்களால் அணுகிக் கருத்துப் பரப்புதலைச் செய்தனர். இதனால் தமிழிலக்கியம், இளங்கோ, மணிவாசகர் காலத்திற்குப்பின் நாட்டுப் புறப்பாடல் வகைகளில் தொடர்ச்சி கொண்டது. வடிவ எளிமையால் நினைவு கூர்தலும், பயிற்சிப் பரப்பும் பெறற்கு வாய்ப்பேற்பட்ட போதும் மற்றைபொருளும், குறியீடும் இவற்றைக் கடின இலக்கிய வகையாகவும் ஆக்கியுள்ளன. சித்தர் பரம்பரை, தாயுமானவர், வள்ளலார், பாரதிவரைத் தொடர்ந்தமை சிறப்பாகக் கருதத்தக்கது. சித்தர்கள் சீர்திருத்த வாதிகளாகவுமமைந்ததால், தற்கால சமுதாயச் சீர்திருத்த இயக்கத்திற்கு அவர்களை முன்னோடிகளாகவும் கருதலாம். வள்ளலாரின் சுத்த சமரச சன்மார்க்க சங்கம் ஜீவகாருண்யம் (உயிரிரக்கம்) என்பதையும் உலக நேயத்தையும் இணையாகக் கொண்டு சென்றது.

### மடங்கள்

பக்தி இயக்க காலத்தை யொட்டித் தமிழகத்தில் பல சைவ மடங்கள் எழுந்தன. சமய வளர்ச்சி நோக்கமாக அமைந்து, கோயில் ஆட்சியைக் கவனிப்பனவாகவும் சமயக் கலவி நிறுவனமாகவும் கூட அமைந்திருக்க வேண்டும். இவற்றிற்கு சமணப் பள்ளிகளும், பௌத்த சைத்தியங்களும் முன்மாதிரி வழங்கியிருக்கலாம். மேலை நாடுகளில் கிறித்தவ சமய வளர்ச்சியில் இத்தகு மடங்கள் (monasteries)[23] இடம் பெற்றுள்ளன. இதனைச் சமய உலகப் பொது இயல்பாகவும், உலக சமயங்களின் சிறப்பியல்பாகவும் கருதலாம. இத்தகு மடங்களால் தத்துவ ஆய்வு வளர்ச்சியும், இலக்கண, இலக்கிய ஆக்கங்களும் வளாந்துள்ளதைத் தமிழிலக்கிய வரலாறு காட்டும்.

---

23 Monastery, Encyclopaedia Britannica, Vol 15, Pp 683-88.

பல்லவர் காலம் முதலே மடங்களமைந்ததாகவும், அவை சமயக் கல்வியையும், அறநெறி வாழ்வையும் போதித்ததாகவும் தெரிகின்றது. சோழர்காலம் மிகப் பல மடங்கள் ஏற்படக் களனமைத்ததுடன் சைவத்தின் பல வகுப்புகளும் மடங்கள் வழிப் பரப்புதல் பெற வாய்ப்பளித்தது. காளாமுகரின் கோமடம், காபாலிகர் மடம், கோளகி மடம், வீரசைவ மடம் போன்றன அமைந்தன.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமிழ்ச் சைவ மடங்கள் பல எழுந்தன. சத்திமுற்றத்தில் திருஞான சம்பந்தர் திருமடம், திருவிடை மருதூரில் மாளிகை மடம், திருவானைக் காவில் ஆண்டார் எம்பிரானார் திருமடம். திருவாரூரில் ஆசார மழகியான் திருமடம் என்பன குறிப்பிடத்தக்கன. சைவசித்தாந்த சாத்திரம், திருத்துறையூர், திருச்சலூர் போன்ற இடங்களின் மடங்களை அறிய உதவுகின்றன. மெய்கண்டாரும், உமாபதியும் பல மடங்களைப் பல இடங்களில் நிறுவினர். 16 முதல் 19 நூ. வரை தத்துவம் சமயம் உரை, புராணம், பக்திப் பாடல் என்பன எழ சூரியனார் கோயில், காஞ்சிபுரம், தர்மபுரம், திருவாவடுதுறை மடங்கள் காரணமாயின.

தமிழ் வளர்ச்சிக்குக் காரணமான திருவாவடுதுறைமடம் சுவாமிநாத தேசிகர், சிவஞான சுவாமிகள் ஆகியோர் படைப்புகளை உலகுக்கு அளித்தது. முன்னவரின் இலக்கணக் கொத்து, தசகாரியம். திருச்செந்தில் கலம்பகம் என்பனவும், பின்னவரின் சிவஞான போதஉரைகளும், காஞ்சி புராணப் பகுதி மொழி பெயர்ப்பும், திராவிடமகா பாஷ்யம் போன்றனவும் சுட்டத்தக்கன. பத்து நூல்களுக்குமேல் எழுதிய அம்பலவாண தேசிகரும் இம்மடத்தினர். இம்மடத்து முனிவர் படைப்புகள் பண்டார சாத்திரமாகத் தொகுக்கப்பட்டன. உ. வே. சா. அவர்களின் ஆசிரியரான இம்மட மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை முப்பதிற்கும் மேற்பட்ட பிரபந்தப் படைப்பாளர்.

திருஞான சம்பந்தர் தோற்றுவித்த தருமபுர மடத்தினரான குமரகுருபரர் தமிழிலக்கியத்திற்குப் பெருவளம் சேர்த்தார். இதே மடத்தின் வைத்தியநாத தேசிகர் இலக்கண விளக்கம் படைத்தார். சூரியனார் கோவில்மடம் உருவாக்கிய சிவாக்ரயோகி மணிப்ரவாள உரையான சிவநெறிப் பிரகாசம் படைத்தார். திருமங்கலம் வீரசைவ மடம் சிவப்பிரகாசரின் முப்பத்திரண்டு வேறுபட்ட இலக்கியங்களை வழங்கிய சிறப்பினது. திருவண்ணாமலை மடமும் குகை நமச்சிவாயர், ஆறுமுகசாமி போன்ற அறிஞரைக் கொண்டது. பெரும்பான்மை சமய இலக்கியங்களும் சமயச்சார்பு நூல்களுமே எழுந்து, பக்தி இயக்க காலமுதல். பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை சமயச் செல்வாக்கு பல் படைப்பிலும் ஆட்சி செலுத்தியதைக் காட்டுகின்றன.

## விடுதலை

தொடக்க காலம் முதல் தமிழில் பல, பல்வகை இயக்கங்கள் பற்றிய செய்திகள் அமையினும், பக்தி இயக்கத்தின்பின் பல நூற்றாண்டுகளில், இயக்கங்கள் பற்றிய செய்திப் பெருக்கு அமையாது பக்தி இயக்க வகை நிலை வளர்ச்சியே தென்படுகின்றது. அரசியல் இயக்கங்களோ, சமுதாய இயக்கங்களோ, மொழி, கல்வி இயக்கங்களோ, உழைப்பாளர் இயக்கங்களோ இருந்ததாகத் தெரியவில்லை. இயக்கங்கள் தோன்றாதே இருந்திருக்கலாம் ; அல்லது தோன்றியவை உருப்பெறாது அழிந்திருக்கலாம் ; அல்லது அடக்கப்பட்டு அழிக்கப்பெற்றிருக்கலாம்.

பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டுகளிலமைந்த விடுதலை யியக்கம் தமிழக இயக்கமாக, தமிழக அரசியலியக்கமாக மட்டுமன்றி இந்திய நாட்டியக்கமாக, இந்திய அரசியல் விடுதலை யியக்கமாகவும் அமைகின்றது. கட்ட பொம்மன் ஆங்கில அரசாட்சியை எதிர்த்ததில் தமிழகத்தில் இது தோற்றம் கொண்டமை குறிப்பிடத் தக்கது. காந்தியின் காலம் வரைப் பரந்த இது அரசியலில் மாற்றங்க ளேற்படுத்தியதுடன் அமைந்து விடாது மொழி, சமயம், கலை, பொருளாதாரம், சமூகத்துறைகளிலும் மறுமலர்ச்சி ஏற்படுத்திப் பல்துறையிலும் அமைந்த விடுதலையியக்கமாக அமைகின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில் (1792-1801) அமைந்த இயக்கம் மருது சகோதரர்கள், கட்டப்பொம்மன், ஊமைத்துரை ஆகியோர், புறஆட்சியை எதிர்த்ததால் உருவாயிற்று 1806-இல் வேலூரில் எழுந்து உருவழிந்த சிப்பாய்க் கலகமே, பின்பு 1857-இல் மீரட்டில் எழுந்த சிப்பாய்க் கலகத்திற்கு அடித்தளமானதாகக் கருதுவர். 20-ஆம் நூற்றாண்டு வ. உ. சிதம்பரம், சுப்பிரமணிய பாரதி ஆகியோரின் எதிர்ப்பியக்கக் களன் வகுத்தது. சுதேசிக் கப்பல் ஓட்டி முன்னவரும், பாடலாலும், எழுத்தாலும், பத்திரிகையாலும் பின்னவரும் மக்களை ஒருமைப்படுத்தியும், மாற்றாரை எதிர்த்தும் இயங்கினர்.

துணை விளைவுகளும், தனிப்பயன்களும் பலவாக அமைய விடுதலை யியக்கம் காரணமாயிற்று. இலக்கியம் வளர்ச்சியுற்றது. மொழி எளிமைப்பட்டது பத்திரிகைகள் தோன்றின. தாய் மொழிப் பற்று வளர்ந்தது. தமிழ்க் கல்வி வேண்டுமெனும் எண்ணம் எழுந்தது. தேசத் தலைவரும் விடுதலை வீரரும் பாடல் தலைவராயினர். காந்தியைப் பாரதியும், நாமக்கல் வெ. ராமலிங்கமும், அசலாம்பிகை அம்மையும் பாடினர். பாடலில் வடிவ எளிமையும், நெகிழ்ச்சியும் புகுந்தது. இளைஞர்க்கும், குழந்தைகட்கும் முதன்மை ஏற்பட்டது. திரு. வி. கலியாண சுந்தரம் போன்றோரால் தமிழ் உரை நடையும் எளிமைப் படுத்தப் பட்டது. எல்லாத் துறைகளிலும் புற ஆதிக்கம் எதிர்க்கப்பட்டு, விலக்கப்படும் முயற்சியில், பழமையும், மரபும், மக்கட் கலையும் மறுமலர்ச்சியுற்றது. உயர்வு-தாழ்வுச் சிந்தனைக ளற்றதால், தாழ்ந்தோருக்குரியதாகக் கருதப்பட்ட கூத்து எல்லோருக்கும் ஏற்ற நாடகமாக மலர்ந்தது; கற்றோர்க்குரியதாக நினைக்கப்பட்ட கவிதை, எல்லோர்க்கு முரியதாயிற்று; வடமொழியும் தெலுங்கும் ஆட்சி புரிந்த இசையரங்கு, தனித்தமிழிசைக்கு இடம் தந்தது

## தமிழிசை

தமிழிசைச் சங்கம் சென்னையில் 1943-இல் உருவாகித் தமிழிசை இயக்கம் உருவாக்குவதன் முன்பே ஆபிரகாம் பண்டிதர் (1859-1919) முன்னோடியாயினார் என நம்பியாரூரன் குறிப்பிடுவார்[24] 1917-இல் வந்த இவரது கருணாமிர்த சாகரமும், 1912 இல் இவர் தோற்றுவித்த தஞ்சை சங்கீத வித்யா மகாஜன சங்கமும் இப்பணியில் குறிப்பிடத் தக்கன. நாயன்மாரால் மலர்ச்சியுற்ற தமிழ்ப் பண்கள் ராஜா அண்ணாமலை இசைக் கல்லூரியினரால் மீண்டும் புதுப்பிக்கப் பெற்றது; முத்துத் தாண்டவர், அருணாசலக் கவிராயர், கோபாலகிருஷ்ண பாரதி போன்றோரின் இசைப்பாடல் இவர்களால் பரப்புப் பெற்றது.

---

24 Nambi Arooran, Tamil Iscai Movement, Journal of Tamil studies, Vol 7. International Institute of Tamil studies, June 1975.

## தனித்தமிழ்

தனித்தமிழியக்கம் இருமுனையிலிருந்து புறப்பட்டதாகத் தெரிகின்றது[25]. ஒன்று சுப்பிரமணிய சிவாவின் முயற்சி. மற்றொன்று மறைமலையடிகளின் முயற்சி. தமிழ் வரலாற்றிலுள்ள மொழியியக்கங்களுள் இது முதன்மையானது. எனினும் இதன் முன்னும் பின்னும் கூட மொழியியக்கங்கள் இருந்தமை தெரிகின்றது. இடைக் காலத்தில் வட மொழியை மிகுதியாகப் புகுத்தும் முயற்சி இருந்ததாகத் தெரிகின்றது. மிக அண்மைக் காலத்தில் இந்தி எதிர்ப்பியக்கம் நிகழ்ந்தது. இம் மொழியியக்க வரலாறுகளே தமிழர் எத்தகு புற அரசியலாதிக்கங்கட்கு ஆட்பட்டு, அதை எதிர்த்தனர் என்பதையும் விளக்க வல்லது.

வடமொழி ஆதிக்க எதிர்ப்பியக்கமாகத் தனித்தமிழியக்கம் தோன்றியதாகக் கருத்தொன்று நிலை பெற்ற போதும், இவ்வியக்கம் வட மொழி எதிர்ப்போ, அந்தண இன எதிர்ப்போ நோக்கமாகக் கொண்டிலது எனவும் கருதுவர். தமிழெனத் தனி மொழியொன்று இல்லை எனப் பதினெட்டாம் நூற்றாண்டில் பிரயோக விவேகம், இலக்கணக் கொத்து நூல்களால் சுப்ரமண்ய திக்ஷிதரும் சுவாமிநாத தேசிகரும் கூற, சிவஞான முனிவர் தம் சூத்திர விருத்தியால் தமிழின் தனித்த இயல்பை உணர்த்தியதில் இவ் வியக்க வேர்கள் புலப்படுகின்ற என்பர்[26].

தமிழின் தூய்மையை நிறுவிய வி கோ. சூரியநாராயண சாஸ்திரி தம் பெயரையும் தமிழ்ப்படுத்திப் பரிதிமால் கலைஞரென ஆக்கியது போன்றே, அவர் சீடரான வேதாசலமும் தம்பெயரை மறைமலையென ஆக்கினார். இலக்கியத்திலும், பெயரிலுமட்டுமன்றி, பேச்சிலும், மேடையிலும், எழுத்திலும் திரு வி. க போன்றவரால் தனித்தமிழ் வளர்க்கப் பட்டது.

## சுயமரியாதை

ஈ. வே. ராமசாமிப் பெரியாரின் சுயமரியாதை இயக்கம் தனித்தமிழியக்கமாகவும், அந்தண ரெதிர்ப்பியக்கமாகவும், புராண எதிர்ப்பியக்கமாகவும், பகுத்தறிவியக்கமாகவும், சமுதாயசீர்திருத்த இயக்கமாகவும், மூடநம்பிக்கை, சிலைவழிபாட்டை எதிர்ப்பதாகவும் அமைந்தது. இதன் தொடக்க நிலையை,

> அரசியல் துறையில், பிராமண எதிர்ப்பு வாதம் மக்கள் நிலையில்
> சுவறச் சுவற நீரீசுர வாதமாகவும் சுயமரியாதை
> இயக்கமாகவும் முனைப்புப் பெறத் தொடங்குகின்றது.

என்பர்[27]. புலவர் குழந்தையின் இராவண காவியம் இராமாயண எதிர்ப்பாகவும் என். எஸ். கிருஷ்ணனின் கிந்தனார், நந்தனார் கதைக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையிலும் எழுந்தன. இவ் வியக்கத்தில் முன்னணிக்குவந்த புலவர் பாரதிதாசன் சாதி, பெண்ணடிமை, உருவவழிபாடு, மூட நம்பிக்கைகளைக் கடிந்து பாடினார், எழுதினார்,

---

25 கா. சிவத்தம்பி, தனித்தமிழ் இயக்கத்தின் அரசியற் பின்னணி, சென்னை புக் ஹவுஸ், சென்னை, 1979.

26 Manickam, V. Sp. Pure Tamil Movement, World Conference on Malayalam, Kerala Culture and Development, 1977.

27 தனித்தமிழ் இயக்கத்தின் அரசியற் பின்னணி, பக் 44.

அரசியல் சார்புடையதாக இவ்வியக்கம் உருவாகியதைப் பெரியாரின் திராவிடக் கழகமும், அதைத் தொடர்ந்த அண்ணாவின் திராவிட முன்னேற்றக் கழகமும், அவை கட்சியாயினமையும் காட்டும்.

## இந்தி எதிர்ப்பு

கல்வியிலும், அரசியலிலும், இந்தியப் பொதுமொழியாக இந்தியைப் புகுத்துவதை எதிர்த்தது தமிழகம். தமிழ் மொழிப் பாதுகாப்பும், தேவையில்லாத பிறமொழி ஆதிக்கமும் இதற்குக் களமாயின.

1938 - இலேயே இந்தி, உயர்நிலைப் பள்ளிகளில் கட்டாயப் பாடமாகியது. இக் கட்டாயத்தால் காங்கிரசில் பிளவு ஏற்பட்டு, நாட்டுப்பற்றுடையோர் பலர், விடுதலை யியக்கத்திலிருந்து தம் மொழிப் பாதுகாப்புக்கு நேராகத் திரும்பும் நிலை ஏற்பட்டது. மொழிப்பற்றாளர் இணைந்து, பாரதி, வ. உ. சி. போன்றோருக்கு அஞ்சலி செலுத்தினர். ம. பொ. சி, திரு. வி. க போன்றோரின் முயற்சியால் இவ்வியக்கம் நாற்பதுகளில் தொடர்ந்தது. இந்திய விடுதலைக்குப் பின், இந்திய தேசப் பொது மொழியாக இந்தியை அரசியல் சட்டம் கொண்டுவந்து 1965 - இல் அதை அமுலுக்குக் கொண்டு வர முயன்ற போது, மீண்டும் இந்தியெதிர்ப்பு தமிழகத்தில் மூண்டெழுந்தது. இது. தமிழகத்தில் இந்தி ஆதிக்கத்தைத் தவிர்த்ததுடன், தமிழ் வளர்ச்சியையும் பெருக்கிற்று.

## ஆங்கில எதிர்ப்பு

ஆங்கில எதிர்ப்பியக்க வரலாறு[28], பல்லாண்டுப் பழமையுடையது. 1835 ஆம் ஆண்டு இந்தியாவில் புகுந்தது ஆங்கிலக் கல்வி முறை 1830 - 1840 ஆம் ஆண்டு களில் எதிர்ப்பியக்கம் தலை தூக்கிய போதும் பயன் விளைய வில்லை. திரு. வி. க போன்றோர் காலத்தில் மீண்டும் இவ் எண்ணம் எழுந்தது. விடுதலை பெற்ற பாரதம், மொழி வாரி மாநிலங்களாக உருவாகித் தாய்மொழி யாட்சி, கல்வி, வழக்குரை எனத் திட்டங்கள் கொண்டது. இதனை ஊக்குவித்தது. தேசிய எழுச்சியின் விளைவாக ஆங்கில எதிர்ப்பு கொழுந்து விட்டு எரிந்த போதும், விடுதலைக்குப் பின் சூடுதணிந்தே அமைந்தது எனினும் ம. பொ. சி போன்றோராலும், தமிழராட்சியாலும் தற்போது ஓரளவு ஆங்கில ஆதிக்கம் குறைக்கப்பட்டு தமிழ் பல் துறையிலும் இடம் பெற்று வருகின்றது.

பெரும்பாலும், விடுதலை இயக்கத்தைத் தொடர்ந்தும், அதனோடு தொடர்புற்றும் அமைந்தனவே இவ் இயக்கங்கள். தமிழகத்தில் இவை இயங்கியது போலவே, ஒத்த இயக்கங்கள் பிற மாநிலங்களிலும் அமைந்திருக்கக் கூடும்.

அன்றியும், தமிழகத்தில் தோன்றிப் பரந்த இயக்கங்களுடன், வெளியியக்கங்கள் பலவும் தமிழில் தாக்கம் செலுத்தியமை இவ் விடுதலைக் காலகட்டத்தில் தெரிகின்றது. வடபகுதியில் தோன்றிய பிரம்ம சமாஜம ஆரிய சமாஜங்களும், விவேகானந்தரின் இராமகிருஷ்ண இயக்கமும் தென்னகத்தையும் பாதித்தன. ருஷ்ய நாட்டின் அக்டோபர் புரட்சி அவ்வாறே தமிழகத்திலும், தமிழ்ப் படைப்பிலக்கியத்திலும் செல்வாக்குக் கொண் டது. பல்வகையான மக்கட் தொடர்புச் சாதனங்களின் பயன்பாட்டுப் பெருக்கும், உலக நாடுகளுடனுள்ள தொடர்பும, போக்கு வரத்து சௌகரியங்களால் உலகம் சுருங்கி

---

28 ம. பொ. சி. கல்வி மொழி தமிழர் ஆங்கிலமா, சேகர் பதிப்பகம், சென்னை, 1981, பக 5 - 17 (ஆங்கில எதிர்ப்பியக்க வரலாறு).

விட்டமையும், இன்று, பல இயக்கங்களும் விரைந்து பரப்புதல் பெற உதவி செய்கின்றன செயல் வன்மையும், கருத்து வன்மையு முடையதும், கொள்கைப்பிடிப்புடையது மான பொது நல இயக்கம் பல இந்நிலையில் சுட்டத்தக்கன. அவை செல்வாக்குடையன வாகவும், பல்பயன் விளைத்தனவாகவும் அமைகின்றன.

## தமிழ்க் கழகங்கள்

சங்கங்களும், கழகங்களுமமைத்துத் தமிழ் வளர்ச்சிக்கு உதவும் பாங்கு காலங் காலமாக அறியப்படுவதும், பரவலாக அமைந்து வருவதுமாகும். அண்மைக் காலமும் இப் பணியைத் தொடர்ந்து செய்கின்றது. மதுரைத்தமிழ்ச் சங்கம் (1901), கரந்தைத் தமிழ்ச் சங்கம் (1911), தஞ்சைத் தமிழ்ச் சங்கம் போன்றன இந் நூற்றாண்டுத் தொடக்கத்தின் குறிப்பிடத் தக்க சிறப்பு வாய்ந்தவை. இவை தமிழ்த் தேர்வுகள் நடத்தியும், தமிழ்ப் பள்ளி கல்லூரி நிறுவியும், தமிழ்ச் சுவடிகளைப் பதிப்பித்தும் தமிழ்த் தொண்டு புரிந்தன.

தனி மனிதரும், அரசும், குழுவினரும் இத்தகு அமைப்புகளை உருவாக்கி உழைத்து முன்னேற்றம் பல செய்தனர். தமிழ் வளர்ச்சிக் கழகம் வழி அரசு, கலைக் களஞ்சியம், குழந்தைகள் கலைக்களஞ்சியம் ஆகியவற்றைக் கொணர்ந்தது. தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வழி மொழி பெயர்ப்பு, பாட நூல் பல உருவாக வழி வகுத்தது.

சைவ சித்தாந்த மகா சமாஜம் (1906), திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், கிறித்தவ இலக்கியச் சங்கம், கம்பன் கழகங்கள், திருவள்ளுவர் கழகங்கள் எனப் பல இயங்கின; இயங்கி வருகின்றன. கருத்தரங்குகள் நிகழ்த்தியும், இதழ்கள் வெளியிட்டும், நூல்களைப் பதிப்பித்தும், பழந்தமிழ் இலக்கியங்களைப் பாதுகாத்தும் பரப்பியும் புகழ் சேர்க்கின்றன. உலகத் தமிழ் மாநாட்டை யொட்டி உருவாகிய உலகத் தமிழாய்வுக் கழகம் (IATR), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமாக உருவாகி, இத்தகு பன்னிலையிலும் செயற்பட்டு வருவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

## உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்

இயக்கங்கள் வெறுமையிலிருந்தோ, வெட்ட வெளியிலிருந்தோ உருவாவதில்லை; ஆழமாக வேரூன்றிய எண்ணங்களிலிருந்து, கொப்புளித்துப் புறப்படும் சிந்தனை ஊற்றுகளிலிருந்து, காலங்காலமாக எண்ணி வகுத்த திட்டங்களிலிருந்து, மின்னலாகத் தோன்றி நிலைக்க விரும்பும் ஆற்றலுடைக் கோட்பாட்டிலிருந்து, மலையன்ன உறுதியான மனங்களிலிருந்து உருவாகுகின்றன. கொள்கைகளைச் செயல்படுத்தி, எதிர்பார்ப்புகளை நிறைவேற்றி, ஆக்கங்கள் பலவற்றை உருவாக்கி, தேவைகளை நிரப்பி, மனிதனுக்கும் மண்ணுக்கும் தொண்டாற்றி, நோக்கமும் பயனும் முன்னிறுத்தி இயல்கின்றன.

இயக்கம் ஒன்றன் வேலையே இயங்குதல்தான்; குறிக்கோளை நோக்கிய அதன் இயங்குதலாகிய செயற்பாடு பன்முக விளைவுடன், உலகளாவிய பார்வையுடன் அமைதல் தேவை; ஒருங்கிணைப்பும் முன்னேற்றமும் இழையாகி இணைகின்றன. தமிழுக்கு, தமிழருக்குப் பல்நிலையிலும் உதவி, தமிழை உலகளாவப் பரப்பி அதன் பெருமையை

அறிவித்தும் நிலைநாட்டியும் சிறப்பிக்கும் முயற்சியில், இந்நிலையில், உலகத் தமிழ்க் கல்வி இயக்கம் உருவாகின்றது. வெறும் தமிழியக்கமாக வன்றி தமிழ்க்கல்வியியக்கமாகவுமமைவதால் கல்வித் துறையையும் வளர்க்கும் நோக்குடையது.

ஐம்புலன்களும் இயங்குகின்றன; மனம் அதனை இயக்குகின்றது. மனிதன் இயங்குகின்றான்; அறிவு அவனை இயக்குகின்றது. இவை இயக்கம்தான், ஆனால் இவ் இயக்கம் போதாது. ஆறறிவுயிரான மனிதன் தானியங்கித் தன்னைப் புரந்து மட்டுமைந்தால் பெருமைக்குரியவனாகான். தான் வாழும் சூழலுக்குப் பயன் விளைவிப் போனாகி, தான் பேசு மொழிக்கு நன்மை செய்பவனாகி, தான் இருக்கும் நாட்டிற்குப் பல்லாற்றானும் உதவிபுரிபவனாகி, தன்னைத் தாங்கிய உலகுக்கு உழைப்பவனாகி, தன்னலம் நீக்கிப் பொதுநலம் கொண்டு பணிபுரிவானாயின் பயனுடையவனாகின்றான்.

பயனான பிற நூல்கள்


1. ஆனைமுத்து. வெ., பெரியார் ஈ. வே. ரா. சிந்தனைகள், சிந்தனையாளர் கழகம், 1974.
2. இராசமாணிக்கனார், மா., சைவ சமய வளர்ச்சி, பாரிநிலையம், 1972.
3. கரந்தைக் கட்டுரை (வெள்ளிவிழா நினைவு மலர்), கரந்தைத் தமிழ்ச் சங்கம், 1938.
4. சஞ்சீவி, ந., இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும், சென்னைப் பல்கலைக் கழகம், 1974.
5. சிவஞானம், ம. பொ., விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, இன்ப நிலையம், 1970.
6. மணி, பெ. சு., பாரதியாரும் இராமகிருஷ்ணர் இயக்கமும், பூங்கொடி பதிப்பகம், 1977.
7. ரகுநாதன், அக்டோபர் புரட்சியும் தமிழ் இலக்கியமும், என். சி. பி. எச், 1977.




# சீனாவில் தமிழ்க் கல்வி

—டாக்டர் ந. கடிகாசலம்

உலகில் மக்கள் தொகையில் முன்னணியில் விளங்கும் நாடான சீனாவில், வேறு சில நாடுகளில் காணப்படுவது போன்று, தமிழ்க் கல்விக்கு அத்தகைய வாய்ப்பு ஏதும் இல்லை. எனினும், சீனாவில் தமிழுக்கு(ம்) இடம் உண்டு, என்பதே தமிழர் தம் செவிகளில் தேனாகப் பாய வல்லதாகும்.

**சீனாவில் தமிழர்கள்:-**

பொதுவாகச் சீனாவில், நிரந்தரமாகத் தங்கி வசித்து வரும் இந்தியர்களே இல்லை எனலாம். சாங்காய், டியான்ஜின் முதலிய துறைமுக நகரங்களில் துறைமுகப் பணியாளர்களாகவும், சில்லரை வியாபாரிகளாகவும் ஒரு சில இந்தியர் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் அதை உறுதிப்படுத்த இயலவில்லை.

தற்போது சீனாவில் ''வெளிநாட்டுத் திறப்புக் கொள்கை'' நடைமுறைப்படுத்தப் படுகின்றது. எனவே, வாணிக அல்லது தொழில் நிறுவனத்தைத் துவக்கும் பொருட்டு, இனிமேல் இந்தியர் - தமிழர் எவரேனும் சீனா வந்து, வசிக்க வாய்ப்பு உண்டு.

தற்போது சீனாவில் பணிபுரிந்து வரும் ஒரே ஒரு இந்தியத் தமிழராக இக் கட்டுரையாசிரியர் விளங்குகிறார். இவரைத் தவிர, பீகிங்கில் உள்ள அந்நியநாட்டுக் கம்பெனிகளில் இரு தமிழர் பணிபுரிகின்றனர். அவர்கள் இலங்கையைச் சேர்ந்தவர்கள். சீனாவின் பிற நகரங்களில் தமிழர் எவரும் பணிபுரிவதாகத் தெரியவில்லை.

மருத்துவம். பொறியியல், சீன மொழி ஆகியவற்றைக் கற்கும் பொருட்டு, இலங்கையிலிருந்து ஆண்டு தோறும் சுமார் ஏழு முதல் பத்து மாணவர்கள் வரை சீனாவுக்கு வருகின்றனர். அவர்களில் மூன்று தமிழ் மாணவர்கள் காணப்படுவதுண்டு. சீனமொழி கற்கும் பொருட்டு, இந்தியாவிலிருந்து ஆண்டுதோறும் ஐந்து முதல் ஏழு மாணவர்கள் வரை சீனாவுக்கு வருகின்றனர். இவர்களில், தமிழ் மாணவர்கள் காண்பதற்கரிது. ஆனால், கடந்த ஆண்டு வந்த மாணவர்களில் ஒரு தமிழர் உண்டு. அவர் பாண்டிச்சேரியைச் சேர்ந்தவர். மொத்தத்தில், தற்போது பீகிங்கில் மூன்று தமிழ் மாணவர்களும், குவாங்சோவில் இரண்டு தமிழ் மாணவர்களும் உள்ளனர். இவ் எண்ணிக்கை, ஆண்டுக்காண்டு மாறுபடக்கூடும்.

**சீனாவில் தமிழ்க் கல்வி:-**

சீனாவில் தமிழர்களே இல்லை என்ற நிலையில், தமிழ்ப் பள்ளிக்கூடம் உண்டா என்ற வினாவுக்கே இடமில்லை. பீகிங்கில் உள்ள தமிழர் தம் குழந்தைகள், இந்தியத் தூதரகப் பள்ளியில் சேர்ந்து கல்வி கற்கலாம். அங்குத் தமிழ் கற்பிக்கப்படுவதில்லை.

பிற பாடங்களுடன், ஆங்கிலமும், இந்தியும் மட்டுமே கற்பிக்கப்படுகின்றன. ''சர்வ தேசப் பள்ளி''யில் சேர்ந்து படிக்கலாம். அங்கு. பிற பாடங்களுடன் ஆங்கிலம் மட்டுமே கற்பிக்கப்படுகின்றது.

அப்படி எனில், சீனாவில் தமிழ்க் கல்விக்கு வாய்ப்பே இல்லயா? உண்டு. பீகிங் வானொலியில் தமிழ் ஒலிபரப்பு துவக்கப்பட்டதால், அங்குப் பணிபுரியத் தேர்ந் தெடுக்கப்பட்டோர்க்கென பீகிங் வானொலிக் கல்லூரியில் 1960-ஆம் ஆண்டில் தமிழ்க் கல்வி துவக்கப்பட்டது. படிப்புக் காலம் 4 ஆண்டுகள். இருபது பேர் தமிழ் மொழி யையும் இலக்கியத்தையும் கற்றனர். திரு நாதன் [மலேசியத் தமிழர்], திருமதி சாரதா வர்மா [இந்தியத் தமிழர்] ஆகியோர் தமிழைக்கற்பித்தனர். அடுத்த கட்ட வகுப்பு 1964 முதல் 1968 வரை நடைபெற்றது. இதில், மேலும் இருபது பேர் சேர்ந்து தமிழைக் கற்றனர். 1966-இல் சீனாவில் தோன்றிய ''பண்பாட்டுப் புரட்சி''யின் காரணமாக, இக் கல்லூரியில் 1968-க்குப் பின்னர் தமிழ்க் கல்விக்கு வாய்ப்பில்லாது போயிற்று.

எனினும், 1984-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் இக் கல்லூரியில் தமிழ்க் கல்வி மீண்டும் துவக்கப்பட்டுள்ளது. [தமிழ் தவிர, ஆங்கிலம், துருக்கி, வங்காளம், பிலிபினோ ஆகிய மொழிகள் இங்கு கற்பிக்கப்படுகின்றன.] மூன்று சீன மாணவர்கள் இவ்வகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளனர். ஆங்கிலம், அரசியல் முதலிய பாடங்களை முதலிரு ஆண்டுகளில் படித்த பின்னர், இலங்கையில் [அல்லது இந்தியாவில்] இரண்டு ஆண்டு கள் தமிழைக் கற்பார்கள். பின்னர். இம் மூவரும் பீகிங் வானொலியின் தமிழ்ப் பிரிவில் பணியில் சேர்வர். ஏனெனில், இப் பணிக்காகவே அவர்கள் தற்போது தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

### சீனாவில் தமிழ்:-

இனி, சீனாவில் எங்கெங்குத் தமிழ் இடம் பெற்றிருந்தது, இன்னும் இடம் பெற்று வருகின்றது என்பதைக் காண்போம்:-

#### அ) பீகிங் வானொலி நிலையம்

இங்குத் தமிழ்ப் பிரிவு உண்டு. நாள்தோறும் ஒரு மணி நேரம் [அரை மணி நேரம் வீதம் இருமுறை] நல்ல தமிழ் நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகின்றன. 1960 முதல் 1968 வரை பீகிங்கில் தமிழ் பயின்ற பதினோரு பேர் இங்கு பணிபுரிகின்றனர். அயல் நாட்டு நிபுணர் என்ற நிலையில், இலங்கையைச் சேர்ந்த திரு. மாத்தளை கந்தசாமி, திரு. சின்னத்தம்பி ஆகிய இரு தமிழர்கள் பணிபுரிந்துள்ளனர். 1983 ஜூன் முதல் இக் கட்டுரையாசிரியர் நிபுணராக பணி புரிந்து வருகின்றார்.

#### ஆ) தென்னாசிய ஆய்வுக் கூடம்

பீகிங் பல்கலைக் கழகத்தின் கீழ் உள்ள தென்னாசிய ஆய்வுக் கூடத்தில் தமிழ் ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

#### இ) சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் (அயல் நாட்டு) தொடர்புத் துறை

#### ஈ) சீன மக்கள் குடியரசு அரசாங்கத்தின் பாதுகாப்பு அமைச்சகம்

ஆகிய இரண்டிலும் தமிழ் மொழி பெயர்ப்பாளர் உண்டு.

உ) அயல் மொழிப் பதிப்பகம்

சீனா பற்றிய நூல்களையும், சீன இலக்கியங்களையும் அந்நிய மொழிகளில் வெளியிடுவது இப் பதிப்பகத்தின் பணியாகும். இங்கு, 1964-இல் தமிழ்ப் பிரிவு துவக்கப் பட்டது. இலங்கையைச் சேர்ந்த ராணி சின்னத்தம்பி எனும் பெண்மணி இங்குப் பணியாற்றினார். 1975-இல், தமிழ்ப் பிரிவு மூடப்பட்டது.

எதிர்காலத்தில் –

பீகிங்கில் உள்ள அயல்மொழிக் கல்லூரியில் தமிழ்க் கல்வியைத் துவக்கவும், அயல் மொழிப் பதிப்பகத்தில் தமிழ்ப்பிரிவை மீண்டும் துவக்கவும் முயற்சி மேற்கொள்ளப் பட்டால் - காலம் கனியும் போது, உறுதியாக நிறைவேறக் கூடும். முதல் வகுப்பு முதல் முனைவர் பட்டம் பெறும் வரை தமிழ்க் கல்வி இல்லாது போயினும், பீகிங் வானொலி நிலையம் உள்ள வரை சீனாவில் தமிழ் ஒலித்துக் கொண்டே இருக்கும்.

---

# செக்கோஸ்லோவேகியாவில் தமிழ்

## (சுருக்கமான வரலாறு)

— டாக்டர் யரோஸ்லாவ் வாசக்

0. செக்கோஸ்லோவேகியாவில் தமிழ்மொழி படிப்பது 2-ஆம் உலகப்போருக்குப் பின்பு ஆரம்பித்தது ஆயினும், இந்தியா, இந்தியாவின் பண்பாடு, மக்களின் வாழ்க்கை, வரலாறு, இலக்கியம், மொழிகள் முதலியவை பற்றி செக் மக்கள் பல விதமான புத்தகங்களைப் படித்துக் கொண்டு, போன நூற்றாண்டிலிருந்து ஆரம்பித்து, பெரிய ஆர்வங்காட்டினார்கள். அக்காலத்திலே செக்நாடு ஒஸ்டிரியா (AUSTRIA) என்ற ராஜ்யத்து ஒரு பகுதியாக இருந்தது, போன நூற்றாண்டில் ஐரோப்பாவில் பெரும்பாலும் வடமொழி, பழைய சமஸ்கிருத கலாச்சாரத்தைப் படித்துக் கொண்டிருந்தார்கள். இங்கிலாண்டைத் தவிர, தென்னிந்தியாவைப் பற்றி வேறு யாருக்கும் ஒன்றும் தெரியவில்லை, அல்லது கொஞ்சம் மட்டும் தெரிந்தது என்று சொல்லலாம். 19-ஆம் நூற்றாண்டு, செக் மக்களின் மறுமலர்ச்சிக் காலமாக இருந்தது ; அக்காலத்துக்கு முன் செக் மொழி ஏறக்குறையச் சிதைந்து, அறிவு வாழ்க்கையில் ஜெர்மன் மொழி உபயோகித்தார்கள். இந்தியாவின் பழைய பண்பாட்டைத் தெரிந்து கொண்டு, வட மொழியைப் படித்து, செக் அறிவு ஜீவிகள் செக் மொழிக்கும் வடமொழிக்கும் சம்பந்தம் உண்டு என்று தெரிந்து கொண்டார்கள். அது செக் மக்களுக்குச் செக் மொழிக்கு உரிமைகளைத் திரும்ப வழங்குவதற்கு ரொம்ப உதவியாய் இருந்தது. அக் காலத்திலிருந்து செக் நாட்டில் இந்தியாவின் பண்பாட்டைப் பற்றி யாருக்கும் அக்கறை இருக்கிறது என்று சொல்லலாம். 1-ஆம் உலகப்போருக்குப் பிறகு, செக், ஸ்லோவேக் ஆகிய இரண்டு மக்களும் சுதந்திரம் அடைந்து, ஒரு தனிமையான செக்கோஸ்லோவேகியா குடியரசு ஆயின பின், அந்த ஆர்வம் (இந்தியாவைத் தெரிய வேண்டும் என்னும் ஆர்வம்) இன்னும் வளர்ந்தது.

இந்த நூற்றாண்டு ஆரம்பத்திலிருந்து ஐரோப்பாவில் பலர் தென் இந்தியாவின் மேல் ஆர்வம் காட்டினார்கள், அதற்குப் பின் தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் படிப்பது செக் நாட்டிலும் ஆரம்பித்தது. அதை மூன்று காலக்கட்டமாகப் பிரித்துப் போடலாம்.

1. 2-ஆம் உலகப் போர் கடைசி வரை (தமிழ் நாட்டைப் பற்றி தெரிந்து கொள்வது)
2. ஐம்பதும் அறுபதும்
3. எழுபதும் எண்பதும்

### 1. தமிழ்நாட்டைப் பற்றி தெரிந்து கொள்வது

இந்தியாவின் பண்பாட்டையும் சமயத்தையும் படித்தவர் பேராசிரியர் ஒ. பெர்தோல்து (O. PERTOLD, 1884 - 1965) இருந்தார். அவர் இந்தியாவுக்கு முதல் தடவை போய் (1909), தென் இந்தியாவைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. ஆரம்பத்திலே வட இந்தியாவில் பிரயாணம் செய்த போது, அங்கே அவருக்கு ''தென் இந்தியாவின் பண்பாடும் வரலாறும் கொஞ்சம் வேறுபாடு, அது ஒரு சிறப்பான மரபாக இருக்கிறது'' என்று பலர் சொன்னார்கள். அதற்காகக் கொஞ்சம் சிந்தித்துத் தென் திசைக்குப் புறப்பட்டார் அவர். பேராசிரியர் பெர்தோல்து மொழிகளை எளிதாகப்

படித்தவர். அவருக்குச் சமஸ்கிருதத்தைத் தவிர இந்தி, பேங்கா்லி, குஜராதி தெரிந்தது. கொஞ்சம் பின்பு தென் இந்தியாவுக்கு வந்து, தமிழ் மொழியையும் ஈழத்து மொழியையும் (Singhelese) சீக்கிரம் படித்துக் கொண்டார்.

தமிழ் நாட்டிலே செய்த பிரயாணத்தைப் பற்றி ஊருக்குத் திரும்பிய பின் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார் (தென் இந்தியாவை ஞாபகம் பண்ணுவது, பிராகா, 1919, 108 பக்கங்கள். எல்லூர் (Ellora?), பம்பாய், கர்னாடக்கா வழியாகச் சென்னைக்குப் போன வழியைக் காட்டி, பிறகு தமிழ் நாட்டைப் பற்றிப் பலவிதமான புதுமையான விஷயங்களைத் தெரிவித்தார். தமிழ் நாட்டிலே அவர் பார்த்ததையும் கேட்டதையும் விசாலமாக எழுதினார். பல புதுமையான போடோப்படங்களைக் காட்டினார்.

அக்காலத்துச் சென்னையைப்பற்றி எழுதியதும் தவிர, மகாபலிபுரம் போனதைப் பற்றியும் எழுதியிருக்கிறார். அந்தக்காலத்திலே நேராகப் போகும் பஸ் கிடைக்கவில்லை. Egmore-இலிருந்து செங்கல்பட்டு வரை புகைவண்டியில் போய், பிறகு ''ஜட்கா' என்னும் சிறுவண்டியில் Buckingham Canal வரை போனது, அதற்குப் பின்பு ஏறத்தாழ ஒரு மணி நேரம் நடந்து போய் மகாபலிபுரம் சேர்ப்பது வழக்கம், அது மட்டும் அல்ல, பிறகு அதே வழியாகத் திரும்பி வர வேண்டும்.

இந்த மாதிரி தமிழ் நாட்டைப் பற்றிப் பலவிதமான புதுமையான விசயங்களை எழுதியிருக்கிறார் பேராசிரியர் பெர்தோல்து. அவர் பல முக்கியமான தலங்களுக்குப் போய்ப் பார்த்து, கோயில்களையும் இந்து மதத்தையும் பற்றி எழுதினார். அவர் புத்தகம் மூலமாகச் செக் நாட்டுக்காரர்கள் அக்காலத்திலேயே தஞ்சாவூர், ராமேசுவரம், மதுரை, சிரிரங்கம், திருச்சிராப்பள்ளி என்னும் பல சிறப்பான இடங்களைப்பற்றி வாசித்தார்கள்.

இதைத்தவிர பேராசிரியர் பெர்தோல்து தமிழ் கதைவாதிகள் அல்லது கதைக் காரர்களின் பேச்சைத் தெருவிலே கேட்டு, அதைக் குறித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பி வந்த போது செக் மொழிக்கு மொழிப்பெயர்த்து ஒரு பத்திரிகையில் 1913 1914-ஆம் ஆண்டில் வெளியிட்டார்.

அதற்குப் பிறகு பேராசிரியர் பெர்தோல்து தமிழ் நாட்டுக்கு இன்னும் சில தடவை வந்தார், அவர் பெரும்பாலும், இந்தியாவின் சமயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்தார் ஆயினும், பல்கலைக்கழகத்தில் அவர் சொற்பொழிவிலே மாணவர்களுக்குத் தென் இந்தியாவைப் பற்றி அதிகமாகச் சொல்லிக் கொடுத்தார்.

பேராசிரியர் பெர்தோல்து வேலையின் பயனாக இரண்டாம் உலகப் போருக்குப் பின் உண்மையான தமிழ் ஆராய்ச்சி ஆரம்பித்தது.

## 2. ஐம்பதும் அறுபதும்

1950 - 51-இல் பேராசிரியர் பெர்தோல்து பல்கலைக் கழகத்தில் (Charles-University) தமிழ் மொழியை முதல் தடவையாக சொல்லிக் கொடுத்தார். அவருடைய மாணவருக்குள் கமில் சுலாபில் (Kamil Zvelebil) இருந்தார். அவரும் இதைத் தவிர வட மொழியைப் படித்தவர். பிறகு தனியாகத் தமிழ் மொழியைப் படித்து தமிழ் ஆராய்ச்சியைப் பல போக்குகளில் வளர்த்தார். டா. சுலாபில் செய்த வேலை பெரும்பாலும் எல்லாருக்கும் தெரியும். அதற்காக அதைச் சுருக்கமாகச் சொல்லலாம். முக்கியமானவை: தமிழ்

இலக்கணம், தமிழ் வட்டார மொழிகள், தமிழ் வரலாற்று இலக்கணம், திராவிட மொழி ஒப்பான இலக்கணம் (Comparative grammar), தமிழ் இலக்கியவரலாறு.

ஆனால் டா. சுலாபில் செக் மொழியில் எழுதியது அப்படி நன்றாகத் தெரியப் படுவதில்லை. அவர் தமிழ் நாட்டையும் தமிழ் மரபுகளையும் பற்றி புத்தகங்களிலும் பத்திரிகைகளிலும் பலவிதமாக எழுதினார். அதைத் தவிர அவருடைய பெரிய ஆர்வம் இலக்கியம். சங்கக்காலத்து இலக்கியத்திலிருந்து பல பாட்டுக்களைச் செக் மொழிக்கு மொழிபெயர்த்து இரண்டு புத்தகமாக வெளியிட்டார். சிலப்பதிகாரத்தையும் மொழி பெயர்த்தார். புதிய காலத்து இலக்கியத்திலிருந்து பாரதியின் கவிதைகளையும் மொழி பெயர்த்தார் இப்போதைய சிறு கதைகளையும், ரகுநாதனின் பஞ்சும் பசியும் என்னும் நாவலையும் மொழி பெயர்த்தார். இது மட்டும் அல்ல, மலையாளத்திலிருந்து தகழி சிவசங்கரப் பிள்ளையின் புத்தகங்களையும் செக் மொழிக்கு மொழிபெயர்த்தார். தமிழ் இலக்கிய வரலாறும், திராவிட இலக்கிய வரலாறும் என்னும் பகுதிகளை ஒரு பல்கலைக் கழகப் பாடப் புத்தகத்தில் எழுதினார்.

டா. சுலாபில் கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தில் வேலை செய்தார். ஆயினும், 1960-ஆம் வருசம் ஆரம்பித்து பல்கலைக்கழகத்திலேயும் பாதிநேரம் தமிழ் மொழி சொல்லிக் கொடுத்தார். நாம் அந்த வகுப்பிலே படித்திருந்தோம், நாம், அது முடிந்தபின் தமிழ் ஆராய்ச்சி செய்கிறோம்.

## 3. எழுபதும் எண்பதும் (1984 வரை)

ஏறக்குறைய போன 15 ஆண்டுகளிலே தமிழ் மொழி ஆராய்ச்சியும் படிப்பதும் இரண்டு வழியாக நடந்தது : கீழ்த்திசை நிறுவனமும் பல்கலைக் கழகமும்.

கீழ்த்திசை நிறுவனத்தில் டா. யன் பிலிப்ஸ்கி (Jan Filipsky) பெரும்பாலும் வரலாறும் இலக்கியமும் ஆராயச்சி செய்வார். வரலாற்றில் கட்டபொம்மனைப் பற்றி ஆராய்ச்சி. இலக்கியத்தில் புதுக்காலத்துத் தமிழ்ச் சிறுகதைகளை மொழி பெயர்த்து இருக்கிறார். அதோடு அவர் ஈழத்து வரலாறு மேல் ஆர்வம் கொண்டவர். ஈழத்தைப்பற்றி ஒரு புத்தகம் எழுதினார்

பல்கலைக்கழகத்தில் நான் (Jaroslav Vacek) வேலை பார்க்கிறேன். தமிழ் மொழியும் சொல்லிக்கொடுக்கிறேன். பெரும்பாலும் இலக்கணம் படிக்கிறேன். சங்க காலத்து தமிழ், ஒலியமைப்பு, திராவிட மொழிக்கும், மொங்கொல் மொழிக்கும் (Mongolian'a Branch of Altaic) சம்பந்தம் முதலியவை. ஆனாலும் இலக்கியமும் சமயமும் என் கவனத்தை கவர்கிறது. உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்துத் தலைவர் டா. ச. வே. சுப்பிரமணியன் அவர்களோடு சேர்ந்து, திருமதி தே. தியாகராஜன் அவர்களுடன் ஆரம்பித்த சங்ககாலத்து களஞ்சியத்தை (Reader) முடித்திருக்கிறோம் (அச்சகத்தில் இருக்கிறது). இதைத் தவிர கடைசியான மூன்று வருஷமாக மொழிப் பள்ளிக் கூடம் என்னும் தனிமையான பள்ளிக்கூடத்திலும் மாலை வகுப்பில் தமிழ் மொழி சொல்லிக் கொடுத்திருக்கிறேன்.

மேலும், நானும் டா. பிலிப்ஸ்கியும் செக் மொழியில் இந்தியாவின் மரபுகள், தமிழ் பண்பாடும் இலக்கியமும், அது போன்றவைகளையும் பற்றி பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும். கலைக் களஞ்சியங்களிலும் (Encyclopaedias) எழுதியிருக்கிறோம்.

முடிவு

செக் நாடு சிறிய நாடு ஆயினும் வேறு நாடுகளின் பண்பாட்டைத் தெரிய வேண்டும் என்னும் ஆவல் இருக்கிறது. இந்தியாவின் பண்பாட்டைப் பற்றி பொதுமக்கள் ஆர்வத்தோடு வாசிப்பார்கள், இந்தியாவைப் பற்றிப் புத்தகம் அல்லது மொழிபெயர்ப்பு வெளியிட்டதும் பல ஆயிரம் காப்பி (பிரதிகள்) சில நாட்களுக்குள்ளே விற்கப்பட்டதைப் பல தடவை கண்டோம்.

செக்நாடு சிறிய நாடு அதன் காரணமாக, வேறு மக்களின் வாழ்க்கை அனுபவங்களைப்பலர் படித்திருக்கிறார்கள். இந்த மாதிரி தமிழ் நாட்டு மரபைத் தெரிந்து கொண்ட பிறகு அது செக் கலாச்சாரத்தில் ஒரு மரியாதையான இடத்தை அடைகிறது.

இந்தியாவின் பண்பாட்டைப் படித்ததின் பரம்பரை போன நூற்றாண்டிலிருந்து ஆரம்பித்தது. அந்தப் பரம்பரையின் ஒரு தனிமையான பகுதி, விசேஷமாகத் தமிழ் மொழியும் இலக்கியமும், எப்படி ஆகி விட்டது என்பதை இந்தச் சிறிய கட்டுரையில் காட்டினோம்.



# லண்டனில் தமிழ்க் கல்வி

— கே. ஞானசூரியன்

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களின் தலைமையில் இயங்கிவரும் "உலகத் தமிழ்க் கல்வி இயக்கத்"தின் தொடக்க விழாச் சிறப்புமலருக்காகப் பின் வரும் புள்ளி விபரங்களையும், லண்டன் தமிழர் / தமிழ்க் கல்வி பற்றிய செய்தி களையும் தொகுத்து வழங்குவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

## 1. தமிழர் தொகை :

பிரிட்டனில் ஏறக்குறைய 50,000 தமிழர்கள் வாழ்கின்றனர். தென்கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்தும், தென் ஆபிரிக்கா, மோரிசியசு நாடுகளிலிருந்தும், கணிசமானோர் 1960-ம் ஆண்டு தொடக்கம் குடியுரிமை பெற்று குடும்பங்களாக வாழ்கின்றனர். இவர்களுள் இலங்கையிலிருந்து மட்டும் குறைந்தது 20,000 தமிழர்கள் லண்டனிலும், சுற்றியுள்ள நகரங்களிலும் குடியேறியுள்ளனர். மலேசியா, சிங்கப்பூர், பீஜி நாடுகளிலிருந்து வந்தோர் பெரும்பாலும் 1962-ம் பிரிட்டனின் வந்தேறு குடிகள் (Immigration Act) சட்டத்திற்கு சற்று முன்பாகக் குடியேறியுள்ளனர்.

## 2. தமிழ்க் கல்வி நிலை

லண்டனிலுள்ள 10,000 பள்ளிச்சிறுவர்கட்கு தமது பாடசாலைகளில் தமிழ் மொழி கற்கும் வாய்ப்பு எதுவும் இல்லை. பாடசாலை ரீதியாகவும், வகுப்பு ரீதியாகவும் இவர்கள் பரந்து இருப்பதால் வட்டாரக் கல்வித் திணைகளங்கள் தமிழ் மொழிக் கல்வியைச் செயல்படுத்த முடியாது இருக்கின்றனர். (Hindi, Urudu முதலிய மொழி களில் இன்று மொழிப் பயிற்சி ஒரு சில பாடசாலைகளில் நடைபெறுகின்றன. இங்கு இந்தியர்களின் தொகை 10 லட்சம், பாகிஸ்தானியரின் தொகையும் 10 லட்சம்).

இன்று முழுமையான தமிழ்க் கல்வி பெறும் வாய்ப்பு லண்டனில் இல்லை என்றாலும், ஒரு சில தமிழ் இயக்கங்கள் இலண்டன் மேற்கு, விம்பிள்டன், ஈஸ்ட் காம், குரோயடன் ஆகிய லண்டன் வட்டாரங்களில் வாரம் ஒரு முறை, அதாவது சனிக் கிழமை காலையில், தமிழ் வகுப்புக்களை முதல் வகுப்பிலிருந்து நடத்தி வருகின்றன. இவ்வாறு படிக்கும் மாணவர்களின் தொகை 450க்கு மேற்படாது. இவற்றில் தொடர்ந்து ஐந்து, ஆறு வருடங்கள் தமிழ் மொழி கற்பவர்கள் மிகச் சிலரே. இதன் காரணங்கள் ஆராய்ச்சிக்குரியன. இன்னும் 30 ஆண்டுகளில் லண்டனில் தமிழ் மொழி அழிந்து விடும் என்ற பயம் எமக்கு உள்ளது.

## 3. உயர்தமிழ்க் கல்வியும், பல்கலைக்கழகங்களும்

ஒக்ஸ்போர்ட், லண்டன், எடின்பரோ ஆகிய மூன்று பல்கலைக்கழகங்களிலும், தமிழ் மொழி பி. ஏ. (பட்டம்) வரையும், பி. எச். டி. (ஆராய்ச்சிப் பட்டம்) வரையும் படிக்கும் வாய்ப்பு உண்டு. லண்டனில் டாக்டர் மார், எடின்பரோவில் டாக்டர் ஆஷர் ஆகியோர் தமிழில் ஆராய்ச்சியாளர்கள். உலகத்தமிழர் மறுமலர்ச்சி (72, King Edward Road, London E 17) நிலையம் இதுவரை ஏழு நூல்களைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிட்டுள்ளது. திரு. தானா, மஸகாஸி என்ற யப்பானிய மானிடவியல் - தமிழர் ஆராய்ச்சி (Ph. D) மாணவருக்கு நிலைய இயக்குனர் திரு ஞானசூரியன் தமிழ் - ஆங்கில மொழிபெயர்ப்பு மூலம் உதவி புரிந்து வருகிறார்.

## 4. லண்டனில் தமிழர் கலாச்சார இயக்கங்கள் / நிறுவனங்கள்

லண்டன் தமிழ்ச் சங்கம் கடந்த 30 வருடங்களாகத் தொடர்ந்து தமிழர் கலை / கலாச்சார நிகழ்ச்சிகளை நடத்திவருகின்றது. இதைவிட, கல்லூரிகள் தோறும், நகரங்கள் தோறும் தமிழ்ச் சங்கங்கள் கலாச்சார அடிப்படையில் ஆங்காங்கே அமைந்துள்ளன. தமிழ் இந்து சைவர்களுக்கென மூன்று ஆலய நிரந்தர அமைப்புகள் (Trusts) உள்ளன. விம்பிள்டனில் ஒரு விநாயகர் கோயிலும், கைகேற்றிலும், ஈஸ்ட்காமிலும் தனித்தனி முருகன் கோயில்களும் அமைந்துள்ளன.

லண்டன் சைவசித்தாந்த நிலையம் திரு ஞானசூரியன் ஆங்கிலத்தில் எழுதிய சைவ சமய நூல்களைப் பிரசுரித்துள்ளது. அரசியல், தமிழின அடிப்படையில் ஈழத்தமிழர் விடுதலைக்காக பல இயக்கங்கள் செயல் பட்டு வருகின்றன.

## 5. லண்டன் நூலகங்களில் தமிழ் நூல்கள் / லண்டனில் தமிழ் பத்திரிகைகள்

உலகத்தமிழர் மறுமலர்ச்சி நிலையம் எடுத்த விடாமுயற்சியின் காரணமாக இன்று வாதாம் ஸ்டோ நூல் நிலையத்தில் 500க்கும் மேற்பட்ட தமிழ் நூல்கள் உள்ளன. இவற்றில் தமிழ் நாவல்கள், பாடப் புத்தகங்கள், தமிழ் இலக்கியம் என்பன அடங்கும். எந்த நூலகத்திலிருந்தும் இவற்றைப் பெறும் வாய்ப்பு இங்கு உள்ளது இதை அடுத்து ஈஸ்ட்காம், விம்பிள்டன் பகுதி நூல் நிலையங்களிலும் தமிழ் நூல்கள் தற்போது உள்ளன.

''லண்டன் முரசு'' பத்தாண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து வெளிவரும் மாத சஞ்சிகை. ''Tamil Times'' என்ற ஆங்கிலச் செய்தித்தாளும் கடந்த மூன்று ஆண்டுகளாக வெளிவருகின்றது. ''தமிழன் குரல்'' என்ற பதிரிகையும் உண்டு.

## 6. முடிவுரையும் வேண்டுகோளும்

திரைகடலோடி திரவியம் தேட வந்த தமிழர்கள் தாம் கண்டு அனுபவிக்கும் செல்வச் சூழ்நிலையில் தமிழ் மொழியையும், தமிழ்ப் பண்பாட்டையும் மறந்தோ அல்லது மறுத்தோ வாழ்வதற்கு மேற்கு நாடுகளில் சந்தர்ப்பங்கள் அநேகம் உண்டு. இதைத் திசை திருப்புவதற்கு இதுவரை தமிழக அரசோ அல்லது தமிழக நிறுவனங்களோ எதுவுமே செய்யவில்லை என்றே மனம் வெதும்பி ''அல்லல் பட்டு ஆற்றாது'' நான் கூறுகின்றேன். இந்நிலையில், டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் தலைமையில் உருவாகியுள்ள ''உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்'' களம் அமைத்துத் தமிழ்க் கல்விப் பணியைத் தன் கடமையாக இயற்ற முன் வந்தமைக்காக அந்த இயக்க ஆர்வலர்கள் எல்லோரையும் வாழ்த்துகின்றோம். வரவேற்கின்றோம். உலகத் தமிழ்க் கல்வி மூலம் ஒற்றுமை ஓம்பி உயர்வு காண்போம்.

"If not we, who? If not now, when?"



# சிங்கப்பூரில் தமிழ்க் கல்வி

— எஸ். எஸ். சர்மா

சிங்கப்பூர்க் குடியரசு 617 சதுர கிலோமீட்டர் கொண்ட சின்னஞ்சிறிய நாடு. ஆனால் உலகில் வளர்ச்சி அடைந்த நாடுகளில் ஒன்றாக, உயர்ந்த வாழ்க்கைத் தரத்தையும் உறுதியான பொருளாதார நிலையிலும் உள்ளது சிங்கப்பூர்.

மலேசியாவுடன் சிங்கப்பூரும் முன்பு ஒரே ஆட்சியில் இருந்தன. 9—8—1965ல் சிங்கப்பூர் மலேசியாவிலிருந்து பிரிந்து, தனி சுதந்திர நாடானது.

சிங்கப்பூர்த் தீவின் மக்கள் தொகையில் அதிக எண்ணிக்கையுள்ளவர்கள் சீன இனத்தவர்கள். 25 லட்சம் பேரைக் கொண்ட சிங்கப்பூர் மக்கள் தொகையில் சீனர்கள் எண்ணிக்கை 19½ லட்சம்., அடுத்து மலாய் இனத்தவர்கள் 3¾ லட்சம்., இந்தியர்களின் எண்ணிக்கை ஒரு லட்சத்து 62 ஆயிரம். சிறுபான்மையராக உள்ள இந்தியர்களில் 75 விழுக்காட்டினர் தமிழ் மொழி பேசுவோர்.

## அதிகாரத்துவ மொழியாக தமிழ்

சிங்கப்பூரின் அதிகாரத்துவ மொழிகளாக ஆங்கிலம், சீனம், மலாய், தமிழ் ஆகிய நான்கு மொழிகளுக்கும் இடமளிக்கப்பட்டுள்ளன. பரவலாகப் பயன்படுத்தப் படுவது ஆங்கிலம். சீன மொழிகளில் "மேண்டரின்" மொழியே தொடர்பு மொழியாக உள்ளது. சிங்கப்பூரின் மிக உயர்ந்த ஆட்சிப் பொறுப்பில், அதிபராக உள்ளவர் திரு. சி. தேவன்நாயர். அமைச்சர்களாக எஸ். ராஜரத்தினம், எஸ். தனபாலன், ஜெயக்குமார், சந்திரதாஸ், நாடாளுமன்ற உறுப்பினர் ஜே. பி. ஜெயரத்தினம் ஆகியோர் உள்ளனர்.

## பாதுகாப்பு

எத்தகைய ஆட்சி மாற்றம் ஏற்பட்டாலும் சிறு பான்மையோரின் மொழி, நல உரிமைகளைக் காக்க அதிபரின் கீழ் ஒரு கண்காணிப்புக் குழு அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. எனவே மொழியால், இனத்தால் எந்தப் பாகுபாடும் காட்டப்படு மானால் அந்தக் குடிமகன் இந்தக் குழுவின் கவனத்திற்கு அதைக் கொண்டு செல்ல முடியும்.

## போதனா மொழி

சிங்கப்பூரின் கல்வித் திட்டத்தில் ஆங்கிலமே போதனா மொழியாக உள்ளது. தமிழ், சீன, மலாய் போதனா மொழியாகக் கொண்ட பள்ளிக்கூடங்கள் முன்பு இருந்தன. இப்போது அவை மறைந்து விட்டன. இதற்குக் காரணம் ஆங்கிலம் போதனா மொழியாக இருந்தாலும் தமிழ், சீன, மலாய் மொழிகளில் ஒன்றை இரண்டாம் மொழியாக, கட்டாயபாடமாக எடுக்க வேண்டும் என சிங்கப்பூர் கல்வித்திட்டம் அமைந்துள்ளது. இரண்டாம் மொழி எடுத்துத் தேறாதவர்கள் பல்கலைக் கழகத்தில் படிப்பைத் தொடர முடியாது.

தமிழை முதல் மொழியாகப் போதிக்கும் பள்ளிக் கூடங்கள் எதுவும் சிங்கப்பூரில் இப்போது இல்லை. ஆயினும் தமிழை இரண்டாம் மொழியாகப் பயிலும் வசதி சிங்கப்பூரில் 100 தொடக்கப் பள்ளிகளிலும் 40 உயர் நிலைப் பள்ளிகளிலும் உள்ளது.

## தமிழ் மையம்

சில ஆங்கிலப்பள்ளிகளில் தமிழ்ப் பாடம் நடத்துவதற்குப் போதிய தமிழ் மாணவர்கள் இல்லாத போது, இந்த மாணவர்களை ஒருங்கிணைத்து தமிழ் மையம் அமைத்து ஆங்காங்குள்ள பள்ளிகளில் நடத்துகிறார்கள்.

இதில் மிகப்பெரிய தமிழ் மையமாக விளங்குவது உமறுப் புலவர் தமிழ் மையம். இதில் 700 மாணவர்கள் தமிழ் மொழி பயில்கின்றனர். புறப்பாடத் திட்டத்தில் நடனம், வாத்திய இசை போன்ற கலைகளைப் பயிலவும் கல்வி அமைச்சு ஏற்பாடுகள் செய்துள்ளது.

சிங்கப்பூரில் தொடக்க, உயர்நிலைப் பள்ளிகளில் ஏறத்தாழ 22 000 தமிழ் மாணவர்கள் தமிழ்க் கல்வி பெறுகின்றனர். மலாய் மொழியை இரண்டாம் பாடமாகப் பயிலும் தமிழ் மாணவர்களும் கணிசமாக உள்ளனர். ஆங்கில எழுத்தில் உள்ள மலாய் மொழிப்பாடம் (''ரோமனைஸ்'' மலாய்) தமிழைவிட கற்பதற்கு எளிமையாக உள்ளது என இந்த மாணவர்கள் கூறுகின்றனர்! தமிழிடம் உள்ள பற்றை விட, ஏதாவது ஓர் இரண்டாம் மொழியில் தேர்ச்சி பெற்றால் போதும் என்ற எண்ணம் கொண்ட மாணவர்களும் உள்ளனர்.

பல்கலைக்கழகம், தொழில் நுட்பக்கல்லூரிகளில் இரண்டாம் மொழி இல்லை. ஆயினும் அந்தந்த மொழிப் பிரிவு மாணவர்கள் மன்றங்கள் அமைத்து மொழி, இலக்கிய, பண்பாட்டு, கலை நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

## தமிழ்ப் பேரவை

தேசியப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை ஈராண்டுகளுக்கு ஒரு தடவை தமிழ் இலக்கிய ஆய்வரங்கை நடத்தி வருகிறது. இது போன்று இதர கல்லூரிகளிலுள்ள தமிழ் மன்றங்களும் அவ்வப்போது கருத்தரங்குகள், கலை நிகழ்ச்சிகள் நடத்துகின்றன.

கல்வித்துறையில் தமிழ் மாணவர்கள் இன்னும் அதிக ஊக்கம் காட்ட சிங்கப்பூர் தமிழர் பேரவை என்ற அமைப்பு தமிழ் மாணவர்களுக்குத் தனி வகுப்புகளை நடத்தி வருகிறது. (இது பற்றி விரிவாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடுகின்ற ''1983ல் தமிழ்'' என்ற நூலில் எழுதியுள்ளேன்).

1983ல் கேம்பிரிட்ஜ் பொதுக் கல்விச் சான்றிதழ் சாதாரண நிலைத் தேர்வுக்கு (''O'' லெவல்) அமர்ந்த தமிழ்ப் பிரிவு மாணவர்கள் 100 விழுக்காடு வெற்றி பெற்றனர், ஆனால் இந்தத் தேர்வுக்கு எழுதிய தமிழ்ப் பிரிவு மாணவர்கள் 17 பேரே. அதே சமயம்

ஆங்கிலப் பிரிவில் 30,940 பேரும் (99 விழுக்காடு வெற்றிபெற்றனர்) சீன மொழிப் பிரிவில் 7662 பேரும் மலாய்ப் பிரிவில் 132 பேரும் தேர்வு பெற்றனர்.

### அறநெறிக் கல்வி

இளைய தலைமுறையினர் கட்டொழுங்கும் பணிவும் சமயப் புரிந்துணர்வும் நற்பண்பும் பேண அறநெறிக் கல்வி இன்றியமையாதது எனக் கருதிய அரசினர் சமயக் கல்வியையும் பாடத்திட்டத்தில் சேர்த்துள்ளனர்.

இந்து, முஸ்லீம், கிறிஸ்தவ, பௌத்த, சீக்கிய, கன்பூஷியஸ் சமய அறநெறிப் பாடம் கடந்த 1984 முதல் உயர் நிலை 3, 4ம் வகுப்பு மாணவர்களுக்குக் கட்டாயப் பாடமாகக் கொண்டு வரப்பட்டுள்ளது. எந்த சமயத்தையும் தழுவவோ, பிரசாரம் செய்யவோ, சமய சின்னங்களை அணியவோ, ஆசிரியர்கள் அனுமதிக்கப் படவில்லை. பிறசமயப் பாடத்திட்டங்களைப் போல் இந்து சமயக் கல்வியை குழப்பம் இன்றி எளிமையாகப் புரிந்து கொள்ளும் விதத்தில் பாட நூல்களை அறிஞர்கள் வெளியிட வேண்டும்.

### தமிழ் ஆசிரியர்கள்

சிங்கப்பூரில் உள்ள பள்ளிகளில் 300 தமிழாசிரியர்களுக்கு மேல் உள்ளனர். இவர்கள் தமிழ் ஆசிரியர்கள் சங்கம் என்ற அமைப்பில் உள்ளனர். இந்தச் சங்கம் பட்டறைகள் இலக்கியப் போட்டிகள் ஆகியவற்றை நடத்துகின்றது.

கல்வி அமைச்சும் தமிழ் மாணவர்களிடையே தொடர் சொற்போர் போட்டிகளை நடத்தி வருகிறது.

பிறமொழி ஆசிரியர்களுக்குத் தரப்படுவது போலவே தமிழ் ஆசிரியர்களின் ஊதியமும் உள்ளது. பட்டதாரிகளான ஆசிரியர்கள் உயர்ந்த ஊதியத்தைப் பெறுகிறார்கள் ஆயினும் தமிழில் பட்டறிவு பெறக்கூடிய வாய்ப்பு உள்ளூரில் கிடையாது. இவர்கள் தமிழகப் பல்கலைக் கழகங்களில் சேர்ந்து பட்டம் பெற வேணடும். உள்ளூர்ப் பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வு பெற்ற ஒன்றிரண்டு ஆசிரியர்கள் தமிழகப் பல்கலைக்கழகங் களில் படிக்க கல்வி இலாகா உபகாரச் சம்பளம் தருகிறது.

தமிழ்ப் பாடப் புத்தகங்கள் உள்ளூரிலுள்ள தமிழ் ஆசிரியர்களால் தயாரிக்கப் படுகின்றன, பாடப்புத்தகங்களைத் தயாரிக்கத் தொடக்கநிலை, உயர்நிலைகளுக்கென கல்வி அமைச்சு தனி ஆசிரியர்குழுக்களை அமைத்துள்ளது.

### கல்வி ஆற்றல்

உயர்ந்த கல்வி அறிவுபெற்ற திறமை வாய்ந்த தம்பதிகள் அதிகமான் குழந்தைகள் பெற சிங்கப்பூர் அரசு வருமானவரி போன்ற சில வகைச் சலுகைகளை அளித்து வருகிறது.

அது மட்டுமல்ல, உயர்ந்த கல்வி கற்றவர்கள் திருமணமாகாமல் இருப்பது அறிவாற்றல் உள்ள சந்ததி வளர்ச்சிக்குத் தடங்கலாக இருப்பதாகவும் கருதிய அரசாங்கம், திருமணமாகாத பட்டதாரிகளை ஜோடி சேர்த்துவைக்கும் அதிகார பூர்வ தரகர் சேவையையும் அரசாங்கமே துவக்கியது!

சிறந்த கல்விமான்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் நல்ல திறன்வாய்ந்த குடிமக்களாக வளருவார்கள். அதே சமயம் குறைவான கல்வி கற்றவர்களின் கட்டுப் பாடற்ற மக்கள் பெருக்கத்தால் எவ்வித பயனும் இல்லை. ''இந்த நிலை நீடித்தால் அறிவாளிகள் இரார். அதனால் நமது திறமை குறைந்து பொருளாதாரமும் நிர்வாகமும் சமுதாயமும் பாதிப்புறும்'' என்றார் சிங்கப்பூர் பிரதமர் திரு. லீ குவான் யூ. சிறந்த தரத்தை உருவாக்கும் அரசுக்கு நல்ல ஆற்றலுள்ள சந்ததியினரே தேவை என்ற சிங்கப்பூர் அரசினரின் கொள்கை திட்டமாக உருவாக்கப்பட்டது. இது மக்களைப் பாகுபடுத்தும் கொள்கை என எதிர்க்கட்சிகள் செய்த பிரசாரம் கடந்த பொதுத் தேர்தலில் ஆளும் கட்சியை ஆட்டம் காண வைத்தது!

பட்டதாரிப் பெற்றோருக்கு கல்வியில்; வருமான வரியில் தரப்படும் சலுகைகள் இனித் தொடராது என அண்மையில் நாடாளுமன்றத்தில் அறிவிக்கப்பட்டது.

எது எப்படியிருப்பினும் உயர்ந்த கல்வி பெற்றவர்களால் சமுதாயத்தில் அறிவாளிகளும் சிறந்த ஆற்றல் பெற்றவர்களும் திறமைசாலிகளும் இருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. அதே சமயம் உயர்ந்த கல்வி அறிவு பெற வாய்ப்பற்ற குடும்பங் களிலும் சிறந்த மேதைகள் உருவாகியிருப்பதையும் நாம் மறுப்பதற்கில்லை. சிங்கப்பூரில் தமிழ்மொழி, சமயம், பண்பாடு, கலை ஆகியவற்றை அடையாளம் காட்டும் விதத்தில் சிங்கப்பூரின் தேசிய கலாச்சாரத்தின் ஒரு கூறாக உள்ளது நாம் பெருமைப்படக் கூடியதாகும்.

## படைப்புகள்

சிங்கப்பூரில் அதிகாரத்துவ மொழி அந்தஸ்து தமிழுக்குத் தரப்பட்டிருப்பதாலும் தமிழ் கட்டாய பாடமாக நமது கல்வித் திட்டத்தில் இருப்பதாலும் இளைய தலைமுறை யினர் தமிழில் ஆர்வம் காட்டுகின்றனர்.

இந்த மொழி அறிவு பள்ளிப்பாடங்களுடன் மட்டும் நின்றுவிடாது, பட்டறிவு பெறுவதற்கு துணை நிற்கும் ஒரு மொழியாக மட்டும் தமிழ் இராமல் இளம் சந்ததி யினரின் வாழ்விலும் தமிழ் ஒன்றியிருக்கவேண்டும்.

இதற்கு மொழி அறிவை வளர்ப்பதற்கான வழிவகைகளை அறிஞர்கள் காண வேண்டும்.

தமிழில் இன்னும் அதிகமான அறிவியல், மருத்துவ, தொழில், வணிக, கலை நூல்கள், ஆய்வுகள் வெளிவர வேண்டும. இவற்றை அடிப்படையாகக் கொண்ட சஞ்சி கைகள் வெளியிடப்பட வேண்டும்.

ஆங்கில மொழியில் எந்தத் துறையினை எடுத்துக் கொண்டாலும் அது சம்பந்தப்பட்ட நூல்கள், மாத இதழ்கள் உளளன.

தபால் முத்திரை சேகரிப்பதிலிருந்து, படகு விடுவது, உடற்பயிற்சிகள், விளயாட்டுக்கள், வீட்டுக்கலைகள், அலங்கரிப்புகள், வானொலி, தொலைக்காட்சி, கணினி ....... இப்படிக் கணக்கற்ற நூல்கள், சஞ்சிகைகள் ஆங்கிலமொழியில் பல நாடுகளிலிருந்தும் வெளிவருகின்றன.

தமிழில் வரும் சஞ்சிகைகளில் பெரும்பாலும் புதினங்களும், கதைகளும்' சினிமாவும், சோதிடமுமே உள்ளன.

இளந்தலைமுறையினரின் அறிவுத்தாகத்தைத் தணிக்க ஆங்கிலப்படைப்புகளால் மட்டுமே முடிகிறது. தமிழின் வரலாற்றைப் புரட்டவும் ஆங்கிலநூல்களே உதவுகின்றன. தமிழில் இன்னும் அதிகமான படைப்பிலக்கியங்கள் வெளி வரவேண்டும். உலகம் முழுவதும் வாழும் தமிழர்கள் இது தங்களுக்குரிய பணியாகக் கருதிச் செயல் பட வேண்டும்.

உலகத் தமிழ்க் கல்வி இயக்கம் சரியான நேரத்தில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. இது அனைத்துலகத் தமிழர்களும் பெருமிதம் கொள்ளத்தக்க நிகழ்ச்சியாகும்!

இந்தக் கல்வி இயக்கம் தமிழ் அறிவுத்துறையில் மேம்பாடடைய எல்லோருக்கும் பயனளிக்கும் அருமையான திட்டம் என்பதால் இதனை வரவேற்றுப் போற்றுவோம்.



# மலேசியாவில் தமிழும் தமிழரும்

— டாக்டர் இரா. தண்டாயுதம்

தென்கிழக்காசியாவிற்கும் இந்தியாவிற்கும் வரலாற்றுக்கு முடிபட்ட காலத்திலிருந்தே தொடர்புகள் இருந்ததாக வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். பழைய நூல்களில் சுட்டப்படும் யவதீவம், காசறுதீபம், துவிபந்தாரா, சுவர்ணதீபம் ஆகிய பெயர்கள், இப்பகுதியையே குறிப்பதாக அவர்கள் கருதுகின்றனர். பொன்னும் வெள்ளியும் படைத்த தீவாக யவதீவு சுட்டப்பட்டுள்ளது. காசறுதீபம், என்பது வாயுபுராணத்தில் காணப்படும் பெயர். காளிதாசனின் இரகுவம்சத்திலும் தமிழ் குருபரம்பரை ஆறாயிரப் படியிலும் துவிபந்தாரா என்னும் பெயர் காணப்படுகிறது. இவற்றைவிடவும் சுவர்ணதீபம் என்ற பெயரே மிக அதிகமாக வழங்கப்பட்டுள்ளது. 'த்வீபம்' என்பது வடமொழியில் இருபுறம் நீர் சூழ்ந்த இடத்தைக் குறிக்கும், எனினும் நிலம் என்ற பொருளிலேயே அது பழங்காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. எனவே சுவர்ணதீபம் என்பதைப் பொன்னாடு எனக் குறிக்கலாம. இச் சுவர்ண தீபத்தோடு இந்தியாவிற்கிருந்த வாணிபத் தொடர்புகளைப் பற்றிய பல செய்திகளைக் கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய புத்த ஜாதகக் கதைகளில் காணலாம்.

தென்கிழக்காசியா எனப் பொதுவாகக் குறிப்பிட்டாலும் அதில் மலாயாத் தீபகற்பமே சிறப்பாகக் குறிக்கத் தக்கது. கிழக்கத்திய நாடுகளுக்குப் புறப்பட்ட இந்திய வணிகர்கள் இத்தீபகற்பத்தையே முதலில் அடைந்தனர். அவ்வாறே இந்தியப் பகுதிகள் பல இப் பகுதியுடன் தொடர்பு கொண்டிருந்தாலும், அவற்றில் சிறப்பாகக் குறிக்கத் தக்கது தமிழகமேயாகும். கி. பி. முதல் நூற்றாண்டில் தொகுக்கப் பெற்ற இந்தியக்கடல் தொடர்பான கையேடு ஒன்று காவிரிப்பூம்பட்டினத்தைக் காமரா எனக் குறிப்பிடுகின்றது. புதுவைக்கு அருகிலுள்ள பொதுகை என்ற துறைமுகத்தையும் இது குறிக்கிறது. இத்துறைமுகங்களிலிருந்து 'கொலந்தியா' போன்ற பெயருள்ள பெருங்கப்பல்கள் மலாயாத் தீபகற்பகம் நோக்கிப் புறப்பட்டது பற்றிய குறிப்பும் இதில் உள்ளது. இது தொடங்கிப் பல்லவர் காலத்திலும. பின்னர் பிற்காலச் சோழர் காலத்திலும் இவ்வாணிபத் தொடர்புகள் சிறந்திருந்தமைக்குப் பல வரலாற்றுச் சான்றுகள் காணப்படுகின்றன. சென்ற நூற்றாண்டில் கர்னல்லோ என்பவரும் குவார்ட்ஜ் வேல்ஸ் என்பவரும் அகழ்வாய்வின் மூலம் சுமார் முப்பது இடங்களைக் கண்டறிந்துள்ளனர். இவற்றில் பல தமிழகத்தோடு தொடர்புடையவை. கி பி. 1025, கி. பி. 1068 ஆகிய ஆண்டுகளில் இராசேந்திர சோழன் கடாரத்தை வென்று 'கடாரம் கொண்டான்' என்ற சிறப்புப் பெயர் பெற்றதும் வரலாறு கண்ட உண்மை. கடை (கெடை), முதல் (மொதல்), கப்பல் (கபால்) முதலிய பல வணிகத் தொடர்பான தமிழ்ச் சொற்கள் இன்றும் இந்நாட்டு மொழியான மலாய் மொழியில் காணப்படுகின்றன.

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து மலாயாவோடு தமிழர்கள் கொண்டிருந்த இத்தொடர்பை இரு காலகட்டங்களில் அடக்கிக்காண முடியும். முதல் காலகட்டம் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து பதினேழாம் நூற்றாண்டு வரை உள்ளதாகும். இது வணிக, பண்பாட்டுத் தொடர்புகள் நிறைந்த காலகட்டம். இரண்டாம் காலகட்டம் பதினெட்டாம் நூற்றாண்டில் தொடங்குகிறது. இக்கால கட்டத்தில் இலட்சக்கணக்கான

# மேற்கு மலேசிய மாநிலங்களில் இந்தியர் எண்ணிக்கை




ஆதாரம்: 1970 அரசாங்க மக்கள் தொகைக் கணக்கு

தமிழ் தொழிலாளர்கள் தொழிலின் நிமித்தம் இந்நாட்டில் குடியேறினர். சென்ற நூற்றாண்டில் ரப்பர் பயிரிடும் வாய்ப்புப் பெருகியதும் இந்த எண்ணிக்கையும் பெருகியது.

மலாயா ஆங்கிலேயரிடமிருந்து 1957-ஆம் ஆண்டு விடுதலை பெற்றது. அதற்கு ஆறு ஆண்டுகள் கழித்து 1963 செப்டம்பர் 16ந் தேதியன்று மலாயா, சிங்கப்பூர், சபா, சரவாக் ஆகிய நாடுகளும் இணைந்து மலேசியா, உருவானது இதற்கு மூல காரணமாக இருந்தவர் அன்றைய பிரதமரான துங்கு அப்துல்ரஹ்மான். அதனால் அவர் இன்றும் 'மலேசியத் தந்தை' (Bapa Malaysia) எனப் போற்றப்படுகின்றார். சிங்கப்பூர் பின்னர் இதிலிருந்து பிரிந்து தனி நாடாகி விட்டாலும், மற்ற நாடுகள் இணைந்து தொடர்ந்து மலேசியாகவே காட்சியளிக்கின்றன சபாவும், சரவாக்கும் கிழக்கு மலேசியா என்றும், தீபகற்ப மலேசியா மேற்கு மலேசியா என்றும் குறிக்கப்படுகின்றன.

## தீபகற்ப மலேசியாவில் தமிழர்கள்

மலாய்க்காரர்களும் சீனர்களும் இந்தியர்களுமாக முப்பெரும் இனங்கள் வாழ்கின்ற நாடு மலேசியா. கிழக்கு மலேசியாவில் இந்தியர்கள் மிகக் குறைவாகவே வாழ்கின்றனர். மேற்கு மலேசியாவாகிய தீபகற்ப் மலேசியாவே தமிழர்களை உள்ளிட்ட இந்தியர்கள் அதிகமாக வாழும் இடம். சென்ற ஆண்டு எடுக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்கின்படி தீபகற்ப மலேசியாவின் மொத்த மக்கள் தொகை ஒரு கோடியே இருபத்தாறு இலட்சம் பேர். இவர்களில் எழுபத்தொரு இலட்சம் பேர் மலாய்க்காரர்கள்; நாற்பத்திரண்டு இலட்சம் பேர் சீனர்கள்; பதின்மூன்று இலட்சம் பேர் இந்தியர்கள் மொத்த மக்கள் தொகையில் இந்தியர் தொகை ஏறத்தாழ 10.5 விழுக்காடாகின்றது.

இந்தியர்கள் எனப் பொதுவாகக் குறிப்பிடப்பட்டாலும் அவர்களில் பெரும்பான்மையினர் தமிழர்களே ஆவர். எடுத்துக்காட்டாக, 1970-இல் எடுககப்பட்ட புள்ளி விவரங்களின்படி இங்கிருந்த இந்தியர் தொகையில 83.4 விழுக்காட்டினர் தமிழர்; 4.5 விழுக்காட்டினர் மலையாளிகள்; 3.6 விழுக்காட்டினர் பஞ்சாபியர்; 3.2 விழுக்காட்டினர் தெலுங்கர்; 5.3 விழுக்காட்டினர் பிற மொழியினர்.

தமிழர்களில் பெரும் பகுதியினர் தோட்டப்புறங்களிலேயே வாழ்கின்றனர். ஏறத்தாழ 70-80 விழுக்காட்டினர் தோட்டப்புறங்களிலேயே வாழ்வதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன இந்தியர்கள் எனப் பொதுவாக எடுத்துக் கொண்டால், அவர்களில் அறுபது விழுக்காட்டினர் தோட்டப்புறங்களில் வாழ்வதாகக் குறிப்பிடலாம்.

தமிழர்கள் நாடு முழுவதும் பரவியிருந்தாலும், அவர்கள் அதிகமாக வாழும் மாநிலங்கள் எனச் சிலாங்கூர், பேராக், பினாங்கு, கெடா ஆகிய நான்கு மாநிலங்களைக் குறிப்பிடலாம் 1970-ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கின்படி அப்போதிருந்த 778 692 தமிழர்களில் 33 விழுக்காட்டினர் சிலாங்கூர் மாநிலத்தில் வாழ்ந்துள்ளனர். பேராக்கில் 24 விழுக்காட்டினர், பினாங்கில் 10 விழுக்காட்டினரும், கெடாவில் 9 விழுக்காட்டினரும், நெகிரி செம்பிலானிலும் ஜோகூரிலும் எட்டெட்டு விழுக்காட்டினருமாக அவர்கள் இருந்துள்ளனர். இவற்றை அடுத்துப் பஹாங்கில் நான்கு விழுக்காடும். மலாக்காவில் மூன்று விழுக்காடுமாகக் காணப்படுகின்றது. கிளந்தான், பெர்லிஸ், திரெங்கானது ஆகிய மூன்று மாநிலங்களே தமிழர்கள் மிகக் குறைவாக வாழும் மாநிலங்கள். இங்கு முறையே 0.5, 0.3, 0.2 விழுக்காட்டினராகத் தமிழர்கள்

வாழ்ந்திருக்கின்றனர். இன்று எண்ணிக்கையளவில் தமிழர் தொகை கூடியிருந்தாலும், ஒவ்வொரு மாநிலத்திலும் அவர்கள் தொகை அதே விழுக்காட்டளவிலேயே இருப்பதாகத் தெரிகிறது.

மலேசிய நகரங்கள் என்று எடுத்துக் கொள்ளும் போது, கோலாலம்பூர், பினாங்கு, ஈப்போ, சிறம்பான், கிள்ளான், சுங்கைப் பட்டாணி, ஜோகூர், மலாக்கா, கோலசிலாங்கூர், தைப்பிங் ஆகிய இடங்களில் அதிக அளவில் தமிழர்கள் வாழ்கின்றனர்.

## தமிழ்க் கல்வி

மலேசியாவின் தமிழ்க் கல்வி வரலாறு ஏறத்தாழ நூற்றெழுபது ஆண்டு கால வரலாற்றையுடையது. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பினாங்கு ஆங்கிலேயர் ஆட்சிக்கு உட்பட்டவுடன், இந்தியத் தொழிலாளர்கள் படிப்படியாக இந்நாட்டில் குடி யேறத் தொடங்கினர். பின்னர் காடுகளை அழித்துத் தோட்டங்கள் உண்டாக்கவும், அத்தோட்டங்களில் வேலை செய்யவும் சென்ற நூற்றாண்டில் அதிக அளவில் தொழி லாளர்கள் வரத் தொடங்கினர். முதலில் காபி, கரும்பு, தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்யவே வந்தனர். சென்ற நூற்றாண்டின் இறுதியில் ரப்பர்த் தோட்டங்கள் பெருகப் பெருக. தொழிலாளர்களின் வருகையும் பெருகத் தொடங்கியது. இவர்களில் தமிழ்த் தொழிலாளர்களே எண்ணிக்கையில் பெரும்பான்மையினர், மலேசிய ரப்பர்த் தோட்டங்களின் வரலாறும் தமிழர்களின் வரலாறும் ஒன்றிலிருந்து ஒன்று பிரித்துப் பார்க்க முடியாத அளவிற்குப் பின்னிப் பிணைந்தவை. இன்று தமிழர்கள் பல்வேறு தொழில் துறைகளிலும் அரசு வேலைகளிலும் நுழைந்த போதிலும், தோட்டப்புறங்களில் வாழும் தமிழர்களே எண்ணிக்கையில் அதிகமானோராகக் காணப்படுகின்றனர். தோட்டப்புறங்களில் அறுபத்தெட்டு விழுக்காட்டினர் வாழ்வதாகக் காட்டும் புள்ளி விவரங்களே இதற்குச் சான்றாகும்.

தமிழத் தொழிலாளரின் எண்ணிக்கை பெருகப் பெருக இங்குத் தமிழ்க் கல்வியின் தேவையும் பெருகத் தொடங்கியது. அதனை நிறைவு செய்யும் வகையில் 1816-இல் பினாங்கு இலவசப் பள்ளியில் (Penang Free School) ஒரு தமிழ் வகுப்பு தொடங்கப்பட்டது. இதுதான் இதுவரை கிடைத்துள்ள தகவல்களின்படி முதன் முதல் தொடங்கப்பட்ட தமிழ் வகுப்பாகும். போதிய மாணவர்கள் இல்லாமையால் இவ்வகுப்பு விரைவில் மூடப் பட்டது. பின்னர் 1934-இல் சிங்கப்பூர் இலவசப் பள்ளியில் ஒரு தமிழ் வகுப்பும், சிங்கப்பூர் கல்வி நிறுவனத்தால் ஒரு தமிழ் வகுப்பும் தொடங்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆனால் இவையும் தொடங்கப்பட்ட சிறிது காலத்திலேயே நின்றுவிட்டன. தோட்டங் கள் நாட்டின் பல பகுதிகளில் சிதறிக் கிடந்ததாலும், ஒரு தோட்டத்திற்கும் மற்றொரு தோட்டத்திற்கும் இடையே நெடுந்தொலைவு இருந்ததாலும், போதிய போக்குவரத்து வசதிகள் இல்லாததாலும் எந்தவொரு இடத்திலும் ஒரு வகுப்பு நடத்துவதற்கு வேண்டிய மாணவர்கள் கிடைக்காததாலேயே இத்தொடக்க முயற்சிகள் வெற்றி பெறவில்லை.

இதன் பின்னர் தோட்டப்புறங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தமிழ்ப் பள்ளிகள் அரும்பத் தொடங்கின. 1872-இல் நிபோங்திபால் என்ற இடத்தில் தொடங் கப்பட்ட தமிழ்ப் பள்ளியே காலத்தால் முற்பட்டதாகத் தெரிகிறது.

இருபதாம் நூற்றாண்டு தொடங்கியதும், ஆங்கில அரசாங்கத்தின் கல்விக் கொள்கையும் ஓரளவு மாறத் தொடங்கியது. தமிழ்க் கல்வியின் பால் காட்டப்பட்ட பரிவின் காரணமாக இக்கால கட்டத்தில் அரசாங்கமே பள்ளிகளை நிறுவ முன் வந்தது. பேராக் மாநிலக் கிரியான் மாவட்டத்தில் பாகன் செராயில் 1900 ஆம் ஆண்டில் கட்டப் பட்ட தமிழ்ப் பள்ளியே இவ்வாறு அமைந்த முதல் அரசினர் பள்ளியாகக் காணப்படு கின்றது. இதன் பின்னர் தமிழ்ப் பள்ளிகளின் எண்ணிக்கை பெருகத் தொடங்கியது.

இன்று இந்நாட்டில் 588 தமிழ்ப் பள்ளிகள் உள்ளன. இவற்றில் சுமார் 74,000 பிள்ளைகள் படிக்கின்றனர். இவையனைத்தும் தொடக்கப் பள்ளிகளே! இப்பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்கள் தமிழாசிரியர்கள் என அழைக்கப்படுகின்றனர். இங்கு பயிற்று விக்கும் ஆசிரியர்களை உருவாக்க ஸ்ரீகோத்தா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, பந்தாய் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி என இரு கல்லூரிகள் உள்ளன. மற்ற பாடங்களோடு தமிழில் போதனாமுறைப் பயிற்சி பெறவும் இங்கு வாய்ப்புள்ளது

தமிழர் அல்லாதார் தமிழ் கற்க மலாயாப் பல்கலைக்கழக மொழிகள் மையத் திலும் (Language Centre), மாரா தொழில் நுட்பக் கல்லூரியிலும்(MARA Institute of Technology) வாய்ப்புக்கள் உள்ளன. முன்னதில் பல்கலைக் கழக மாணவர்களே அன்றி, வெளியிடங்களில் பணியாற்றுகின்றவர்களும் தமிழ் கற்க வாய்ப்புக்கள் உள்ளன. பின்னதில் பல்வேறு பாடங்களில் பயிற்சி பெறும் மலாய் மாணவர்கள் தமிழையும் ஒரு பாடமாகக் கற்கும் வாய்ப்பு உள்ளது.

தொடக்கப் பள்ளிகள் இந்நாட்டில் இந்த அளவு நிறைந்திருப்பினும், தமிழ் இடைநிலைப்பள்ளி ஒன்றேனும் இல்லை. தொடக்கப் பள்ளிக்கும் பல்கலைக் கழகத்திற்கும் பாலமாக அமைவதே இடைநிலைப் பள்ளிதான். எனினும் இங்கு ஒரு தமிழ் இடைநிலைப் பள்ளியும் இல்லை. எனினும், எந்த ஒரு வகுப்பிலும் பதினைந்து தமிழ்ப் பிள்ளைகள் விரும்பினால் அங்கு ஒரு தமிழ் வகுப்பை உருவாக்க மலேசியக் கல்வித் திட்டம் இடம் தருகிறது.

தமிழ் இடைநிலைப் பள்ளிகள் இல்லையெனினும், மலேசியக் கல்விச் சான்றிதழ் (Malaysian Certificate of Education) உயர்கல்விச் சான்றிதழ் (Higher School Certificate) ஆகியவற்றில் தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் தேர்வுப் பாடங்களாக எடுக்க இங்கு வாய்ப்புள்ளது. இப்பாடங்களை எடுக்கும் மாணவர்கள் தாங்களாகவேதான் படிக்க வேண்டும். எனவே நாடெங்கிலும் உள்ள பல சமுதாய அமைப்புக்கள் தனிப் பட்ட முறையில் இப்பாடங்களை நடத்த வகுப்புக்களுக்கு ஏற்பாடு செய்கின்றன.

பாடப்புத்தகங்கள் என்று எடுத்துக் கொள்ளும் போது, தொடக்கப் பள்ளி களுக்கான பாடநூல்கள் அனைத்தும் இங்கேயே எழுதப்பட்டு வெளியாகின்றன. இடை நிலைக் கல்வித் தேர்வுகளுக்கு அண்மைக் காலம் வரை தமிழக நூல்களே முழுமையாகப் பயன்படுத்தப் பட்டன. இப்போது இந்நிலையில் ஒரு சிறு மாற்றம் ஏற்பட்டுள்ளது. மலேசியக் கவிஞர்களான ஐ. உலகநாதன், கரு. திருவரசு ஆகிய இருவரின் கவிதைகள் மலேசியக் கல்விச் சான்றிதழ் தமிழ் இலக்கியத் தேர்விற்குப் பாடமாகி உள்ளன. இவ்வாண்டிலிருந்து காரைக்கிழார், எல் லோன் ஆகியோரின் கவிதைகள் பாடமாகின்றன.

உயர்கல்விச் சான்றிதழுக்கான 'தமிழ்க் கவிக் கோவை' நூலை முதன் முறையாக 1973 - இல் மலாயாப் பல்கலைக் கழக இந்திய ஆய்வியல் துறை வெளியிட்டது. இவ்வாண்டு 'தமிழ்க் கவிக் கோவை' (இரண்டு), 'தமிழ்க் கட்டுரைக் கோவை' ஆகிய இரண்டு நூல்களை வெளியிடவுள்ளது. இவ்வாண்டு தொடங்கி இவையிரண்டும் உயர் கல்விச் சான்றிதழுக்கான தமிழ் இலக்கியப் பாட நூல்களாக அமைகின்றன.

இந்நாட்டின் தேசியப் பள்ளிகளான மலாய் தொடக்கப் பள்ளிகளுக்கும், தேசிய மாதிரிப் பள்ளிகளான தமிழ், சீனத் தொடக்கப் பள்ளிகளுக்குமான புதிய பாட திட்டமொன்றைக் கல்வி அமைச்சு அண்மையில் அறிமுகப்படுத்தியுள்ளது நாட்டின் எல்லாத் தொடக்கப் பள்ளிகளிலும் பாடதிட்டம் ஒன்று போல அமைவதே இதன் நோக்கம். அடிப்படைத் திறன்களான வாசித்தல் எழுதுதல் கணக்கிடுதல் ஆகிய முத் திறன்களிலும் திறமை பெற ஊக்குவித்தல், அறிவு ஒழுக்கம் சிறந்த மனப்பான்மை நல்ல பழக்க வழக்கம் ஆகியவற்றைப் பெறுதல், இயற்கைத் திறன் கற்பனை ஆர்வம் முதலியவற்றை வளர்த்தல் ஆகியவை இப்புதிய பாடதிட்டத்தின் குறிக்கோள்களாகும். இவற்றை அடைவதற்குத் துணையாகத் தொடக்கப் பள்ளிகளுக்கான புதிய பாடதிட்ட விளக்க நூல், பொது வழிகாட்டி நூல், மதிப்பீட்டுச் சிறப்பு வழிகாட்டி நூல், பன்மை வகுப்புச் சிறப்பு வழிகாட்டி நூல், பரிகாரப் போதனை சிறப்பு வழிகாட்டி நூல், பாடங்களுக்கான சிறப்பு வழிகாட்டி நூல், பாடங்களுக்கான போதனைக் களஞ்சியம், பாடங்களுக்கான போதனைப் பேழை, பாடதிட்டங்கள், வாசிப்பு நூல்கள் பாடநூல்கள், பாடல் நூல்கள், உடற் பயிற்சி நூல்கள் முதலியவற்றையும் கல்வி அமைச்சு வெளியிட்டுள்ளது.

தமிழ்ப் பள்ளிகளின் அமைப்பிலும் இப்போது ஒரு பெரிய மாற்றம் ஏற்படத் தொடங்கியுள்ளது. பல்வேறு இடங்களில் சிதறிப் போதிய வசதிகள் இல்லாமலிருக்கும் பள்ளிகளை ஒன்றிணைத்துக் கூட்டுப் பள்ளிகளாக்கும் திட்டமொன்றை அரசாங்கம் கூறியுள்ளது. இதன் படி குறிப்பிட்ட வட்டாரத்தில் உள்ள தமிழ்ப் பள்ளிகள் ஒன்றிணைந்து ஒரு கூட்டுப் பள்ளியாக உருப்பெறும். இப்போது உள்ள 588 தமிழ்ப பளளிகளையும் இவ்வாறு மாற்றுவதன் மூலம் 130 ஆகக் குறைத்து விடலாம என்றும், இவ்வாறு எண்ணிக்கையைக் குறைப்பதன் மூலம் ஆழமான கவனம் செலுத்த முடியும் என்றும் ஒரு சாரார் இந்தத் திட்டத்தை வரவேற்கின்றனர். மற்றொரு சாராரோ சிறுவர்கள் நெடுந்தூரம் பயணம் செய்ய வேண்டியிருக்கும் என்றும், இதனால் நேரம் அதிகமாகும் என்றும், செலவும் அதிகமாகும் என்றும் காரணங்கள் காட்டி எதிர்க்கின்றனர். தமிழ்ப் பள்ளிகளின் தொடர்பான இத்திட்டம் இப்போது சமூகத்தின் எல்லாப் பகுதியினர் கவனத்தையும் ஈர்த்துள்ளது.

## இந்திய ஆய்வியல் துறை

மலேசியாவில் இப்போது உள்ள மலாயாப் பல்கலைக் கழகம், தேசீயப் பல்கலைக் கழகம், அறிவியல் பல்கலைக் கழகம், வேளாண்மைப் பல்கலைக் கழகம், தொழில் நுட்பப் பல்கலைக் கழகம், இஸ்லாமியப் பல்கலைக் கழகம், வடமலேசியப் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் காலத்தால் முற்பட்டது மலாயாப் பல்கலைக் கழகம் இபபல் கலைக் கழகத்தில் உள்ள இந்திய ஆய்வியல் துறையே, இந்நாட்டில் பல்கலைக் கழக அளவில் தமிழும் தமிழ் இலக்கியமும் கற்க வாய்ப்புள்ள ஒரே இடம்.

இன்று இந்திய ஆய்வியல் துறையில் இந்நாட்டுத் தேசிய மொழியான மலாய் மூலமோ அல்லது தமிழ் மூலமோ பட்டம் பெற வசதியுள்ளது. இவ்வசதி ஏற்பட்டதே ஒரு சுவையான வரலாறு. ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பதுகளில் இந்நாட்டில் ஒரு பல்கலைக் கழகம் வேண்டும் என்ற கோரிக்கை நாட்டின் பல பக்கங்களிலிருந்தும் எழுந்தது. இதன் அடிப்படையில் கார் - சாண்டர்ஸ் (Carr Saunders) என்பவரின் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. 1948 - இல் அமைக்கப்பட்ட இக்குழு, தனது அறிக்கையில் இந்நாட்டின் மூவின மக்களின் மொழி, பண்பாடு ஆகியவற்றை மேம் படுத்தும் வகையில் மூன்று ஆய்வியல் துறைகள் அமைக்கப்பட வேண்டும் எனப் பரிந்துரைத்தது. இந்தியத் துறை அமைப்பதற்காகப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் அழைக்கப்பட்டார். அவர் வடமொழியைப் போதித்தால் போதும் எனப் பரிந்துரை செய்ய, இதனால் தமிழ்ச் சமூகமெங்கும் கிளர்ந்தெழுந்தது. தமிழவேள் கோ. சாரங்கபாணி இதற்குத் தலைமை தாங்கினார். இதன் பின்னர் பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் அழைக்கப்பட்டு, அவர் பரிந்துரையின் பேரில் தமிழும் தமிழ் இலக்கியமும் கற்பிக்க ஏற்பாடாயின. நூலகத்தில் தமிழ் நூல்கள் வாங்குவதற்காகவே 'தமிழ் எங்கள் உயிர் நிதி'யைக் கோ. சா. தொடங்கி வைத்தார். ''இங்கு தமிழ் உண்டு, தமிழ் மக்களுண்டு நாளும் செய்வோம் தமிழ்த் தொண்டு. இப்போது ஓரிலக்கம் வெள்ளி சேர்ப்பதே நமது தொண்டு'' என முழங்கி, நிதிசேர்த்து, அந்நிதியின் மூலம் வாங்கப்பட்ட பல அரிய தமிழ் நூல்கள் இன்றும் மலாயாப் பல்கலைக் கழக நூலகத்தில் உள்ளன.

மலாயாப் பல்கலைக் கழகத்தில் 1956 - இல் தொடங்கப்பட்ட இந்திய ஆய்வியல் துறை, இன்று கலை - சமூக அறிவியல் புலத்தின் ஒரு துறையாக விளங்குகின்றது. இளங்கலைப் பட்டத்திற்கான மூன்றாண்டு காலப் படிப்பில் இத்துறை இப்போது இரு பிரிவுகளிலான பாடங்களை அளித்து வருகின்றது. தமிழ் மொழியின் வாயிலாகப் பயிற்றப்படும் பழங்கால, இடைக்கால, தற்காலத் தமிழ் இலக்கியம், இலக்கணம், மொழியியல் ஆகிய பாடங்கள் முதற் பிரிவில ('A' Stream) உள்ளன. மலேசிய இந்திய சமூகம் உள்ளிட்ட இந்திய சமூகத்தின் பழங்கால, இடைக்கால, தற்கால வரலாற்று, சமூக பண்பாட்டுக் கூறுகள் தொடர்பான பாடங்கள் மலேசிய மொழியான மலாய் மொழி வாயிலாகப் பயிற்றப்படும் இரண்டாம் பிரிவில் ('B' Stream) உள்ளன. பட்டப் படிப்பிற்கு இத்துறை அளிக்கும் பாடங்கள் ஏனைய துறைகளில் பயிலும் மாணவர்களும் கற்பதற்கேற்ற வகையில் விருப்ப பாடங்களாகவும் அமைந்துள்ளன.

மலேசியக் கல்விச் சான்றிதழ் அல்லது உயர்கல்விச் சான்றிதழ் ஆகிய தேர்வு களில் தமிழும் தமிழ் இலக்கியமும் எடுத்து நல்ல புள்ளிகள் பெற்றுத் தேர்ந்தவர்கள் தொடர்ந்து தமிழில் படிக்க இத்துறை மாணவர்களாகச் சேர்கின்றனர். வரலாறு, மானிடவியல் - சமூகவியல், மலாய் ஆய்வியல் துறை, சீன ஆய்வியல் துறை, இஸ்லாமிய ஆய்வியல் துறை, ஆங்கிலத் துறை, தென்கிழக்காசியத் துறை, புவியியல் துறை, பொருளாதாரத் துறை ஆகியவற்றில் மூன்று துறைகளைத் தேர்ந்தெடுத்து முதலாண்டு பயில வேண்டும். தமிழில் பயிலும் மாணவர்கள் தமிழ்க் கவிதை இலக்கிய வரலாறு, தமிழ் உரை நடை வரலாறு, இலக்கணம் ஆகிய மூன்று பாடங்களை முதலாண்டு செய்ய வேண்டும். தமிழைத் தொடர்ந்து செய்ய விரும்பும் மாணவர்கள் இரண்டாவது, மூன்றாவது ஆண்டுகளில் தமிழை ஒரே சிறப்புப் பாடமாகவோ அலலது இரு பாடங்களில் ஒன்றாகவோ செய்யலாம். சங்க கால, இடைக்கால, தற்கால இலக்கியங்கள், இலக்கணம் மொழியியல் ஆகியவை இவ்வாண்டுகளில் கற்பிக்கப் படுகின்றன. தமிழக, இலங்கை, மலேசியத் தற்காலத் தமிழிலக்கியத்தை ஒப்பிட்டு ஆராயும் பாடம் மூன்றாம ஆண்டில் உள்ளது.

தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் கற்றுத் தேர்ந்து பட்டம் பெற்றவர்கள் தொடர்ந்து முதுகலை, டாக்டர் பட்டங்கள் பெறவும் இத்துறை வாய்ப்பளிக்கிறது. பொருளாய்வின் மூலமே இங்கு இப்பட்டங்களைப் பெற இயலும்.

இவ்வாறு தொடக்கப் பள்ளியிலிருந்து பல்கலைக் கழக உயர் பட்டங்கள் வரை தமிழையும் தமிழிலக்கியத்தையும் பயில இங்கு வாய்ப்புக்கள் உள்ளன. இடையில் இடைநிலைப் பள்ளிகளிலேயே இவ்வாய்ப்பு இல்லை. எனினும் மலேசியக் கல்விச் சான்றிதழ் தேர்வும், உயர்கல்விச் சான்றிதழ் தேர்வும் இதனைக் கடக்க உதவும் புணைகளாக இப்போது பயன் பட்டு வருகின்றன.

## தமிழ்ப் பத்திரிகைகள்

மலேசியத் தமிழ்ப் பத்திரிகை வரலாறு ஒரு நூற்றாண்டுக்கும் அதிகமானது. சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ்த் தொழிலாளர்களின் எண்ணிக்கை பெருகப் பெருக, அவர்களிடையே பத்திரிகையின் தேவை நன்கு உணரப்பட்டது இதன் காரணமாக 1876-இல் 'தங்கை நேசன்' என்ற பத்திரிகை பினாங்கிலிருந்து தொடங்கப்பட்டது. இரண்டாண்டுகளுக்குப் பின் இது நின்று விட்டது. பின்னர் 1887-இல் பினாங்கிலிருந்து 'உலகநேசனும்' சிங்கப்பூரிலிருந்து 'சிங்கைநேசனும்' தொடங்கப் பெற்றன. இவற்றில் 'சிங்கைநேசன்' மட்டுமே இன்று காணக்கிடைக்கின்றது. இதுவும் மூன்றாண்டுகள் நடந்து நின்று விட்டது இதன் பின்னர் தோன்றிய பத்திரிகைகள் கணக்கற்றவை. தோன்றிய சில காலத்திலேயே அவை மறைந்ததற்குப் பலப்பல காரணங்களுண்டு.

இன்று மலேசியாவில் மூன்று நாளிதழ்களும், ஒரு வார இதழும், சில மாத இதழ்களும் தமிழில் வெளிவருகின்றன

'தமிழ் நேசன்' 'தினமணி' 'தமிழ் ஓசை' என்னும் மூன்று நாளிதழ்களில் மிகப் பழமையான நாளிதழ் 'தமிழ் நேசன்'. சென்ற ஆண்டுதான் இது தன் அறுபதாம் ஆண்டு விழாவைக் கொண்டாடியது. மலேசியத் தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமான 'தமிழ் மலர்' நிறுவனமே இப்போது 'தினமணி'யை வெளியிடுகிறது. அண்மையில் தோன்றிய நாளிதழ் ஆனாலும் 'தமிழ் ஓசை' தமிழ் வாசகர்களிடம் பெரும் செலவாக்கைப் பெற்று வருகிறது.

நாளிதழ்களின் பணி செய்தியைத் தருவதுதான் என்றாலும், மலேசியத் தமிழ் நாளிதழ்கள அத்துடன் நின்று விடாமல், மலேசியத் தமிழ இலக்கிய வளர்ச்சிக்கும் அரும் பாடு பட்டுள்ளன. மலேசியத் தமிழ் நாளிதழ்களை ஒதுக்கிவிட்டு மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியை யாரும் ஆராய்ந்துவிட முடியாது. அந்த அளவிற்கு நாளிதழ்களும் மலேசியத் தமிழிலக்கிய வளர்ச்சியும் ஒன்றோடு ஒன்று பின்னிக் கிடக்கின்றன. வார நாட்களில் செய்தித் தாள்களோடு வெளிவரும் இவை, ஞாயிறு இதழ்களை இலக்கிய இதழ்களாக வெளியிடுவதைத் தம் வழக்கமாகக் கொண்டுள்ளன. அவ்வப் போது இவை நடத்தும் பல்வேறு போட்டிகளும் இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந் துணையாக நிற்கின்றன. எழுபதுகளின் தொடக்கத்தில் 'தமிழ் நேசன்' நான்கு ஆண்டுகள் தொடர்ந்து நடத்திய 'பவுன் பரிசுப் போட்டிகள்' பல புதிய எழுத்தாளர்களை அறிமுகம் செய்தது இங்குக் குறிப்பிடத் தக்கது.

மலேசியாவில் வெளியாகும் ஒரே நாளிதழான 'வானம்பாடி' கடந்த எட்டாண்டுகளாக வெளிவந்து கொண்டுள்ளது. உதயம், புதிய சமுதாயம், தூதன், சமநீதி, சலங்கை,

சித்ரா ஆகியவை இங்கிருந்து வெளிவரும் மாத இதழ்கள். இவற்றில் 'உதயம்' அரசாங்கத் தகவல் இலாக்காவினால் நடத்தப் பெறுகிறது. 'சலங்கை' 'சித்ரா' ஆகிய இரண்டும் பெண்களுக்காக நடத்தப் பெறுபவை.

## மலேசியத் தமிழ் இலக்கியம்

ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுகால வாலாற்றையுடைய மலேசியத் தமிழிலக்கியம், கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை முதலிய இலக்கியத் துறைகளைத் தன்னுள் கொண்டுள்ளது.

கவிதை இலக்கியமே இங்கு முதன் முதலில் தோன்றியுள்ளது. சி. ந. சதாசிவ பண்டிதர் இயற்றி 1887-இல் வெளிவந்த வண்ணையந்தாதி, வண்ணைநகரூஞ்சல், சிங்கை நகரந்தாதி, சித்திர கவிகள் ஆகியவையே இங்கு முதலில் வெளிவந்த கவிதை நூல்கள். சமயமே இவற்றின் உள்ளடக்கம். இதே போக்கு இந்நூற்றாண்டின் நாற்பதுகள் வரை நீடித்தது. முருகவேள் பஞ்சரத்தினப் பாமாலை (1928). தண்ணீர்மலை சிவசண்முகநாதனின் பக்திசுர கீர்த்தனை (1929), பினாங்கு தண்ணீர்மலை முருகன் ஆடுமயில் பாடல்கள் (1931), கோலாலம்பூர் பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம் (1936) ஆகியவை இக்காலகட்டத்தில் வெளிவந்த நூல்களில் குறிப்பிடத் தக்கவை. முப்பதுகள் தொடங்கிச் சீர்திருத்தக் கொள்கைகளும் கவிதை இலக்கியத்தில் ஒரு முக்கிய இடம் பெறத் தொடங்கின. 'சமத்துவ கீத மஞ்சரி' (1935), 'நவரச ஆனந்த கீத மலர்' (1939) ஆகிய இரண்டு நூல்கள் இவ்வாறு வெளிவந்த நூல்களில் குறிப்பிடத் தக்கவை. இவையல்லாமல் காதல், பிரிவு, பாசம் முதலிய தனிமனித உணர்வுகள்; மொழி, இனம், நாடு பற்றிய உணர்வுகள்; இயற்கை முதலியவற்றைப் பாடும் போக்கும் இக்காலகட்டத்தில் மிகுதியாகக் காணப் படுகிறது. அறுபதுகள் தொடங்கி மற்றொரு புதிய போக்கையும் இந்நாட்டுத் தமிழ்க் கவிதைகளில் காண முடிகிறது. பொருள், மொழி முதலிய எல்லாவற்றிலும் இந்நாட்டிற் கேயுரிய ஒன்றாகக் கவிதை இலக்கியம் விளக்க வேண்டும் என இந்நாட்டுத் தமிழ்க் கவிஞர்கள் சிந்தித்ததன் விளைவே அது எனலாம். கவிஞர்கள் ஐ. உலக நாதன், காரைக்கிழார், சி. அன்பானந்தன், எல்லோன், பாதாசன், வீரமான், சா. ஆ. அன்பானந்தன், சோமசன்மா முதலிய கவிஞர்களின் படைப்புக்களில் இதனைக் காணலாம். மறைமலையடிகள் நூற்றாண்டு விழாவை ஒட்டி அனைத்துலக அளவில் நடத்தப்பட்ட பிள்ளைத்தமிழ் போட்டியில் பினாங்கு சி. அன்பானந்தன் முதல் பரிசு பெற்றதும் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்றாகும்.

கவிதையை அடுத்து இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கு நாவல் இலக்கியம் அரும்பியது. 1917-இல் வெளிவந்த 'கருணாசாகரன் அல்லது காதலின் மாட்சி' என்ற நாவலே இங்கு முதன் முதலில் வெளியான நாவலாகத் தெரிகின்றது. இது தமிழகப் பின்னணியில் அமைந்துள்ளது. இதற்கு அடுத்த ஆண்டு வெளியான 'பாலசுந்தரம் அல்லது சன்மார்க்க ஜெயம்' இந்நாட்டுப் பின்னணியிலேயே அமைந்துள்ளது. இதுவும் இதற்குப் பின்னரும் வெளிவந்த பல நாவல்கள் துப்பறியும் நாவல்களாகவே காணப்படுகின்றன. இதுவரை வெளிவந்துள்ள நாவல்களில் சா. ஆ. அன்பானந்தனின் 'மரவள்ளிக் கிழங்கு' (1979), மலபார் குமாரின் 'செம்மண்ணும் நீல மலர்களும்' (1971), கா. பெருமாளின் 'துயரப்பாதை' (1978), ரெ. கார்த்திகேசுவின் 'வானத்து வேலிகள்' (1981), எம். ஏ. இளஞ்செல்வனின் 'பசித்திருக்கும் இளங் கொசுக்கள்' (1978), ஐ. இளவழகுவின் 'இலட்சியப் பயணம்' (1983) ஆகியவை குறிப்பிடத்தக்க சிறந்த நாவல்களாக விளங்குகின்றன.

மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் கவிதையையும் நாவலையும் அடுத்து முப்பதுகளில் தோன்றினாலும், இன்று செல்வாக்குப் பெற்ற இலக்கியத் துறையாகச் சிறுகதையே விளங்குகின்றது எனலாம். மலேசியத் தமிழ்ச் சமூகத்தின் பல்வேறு வாழ்க்கை நிலைகளையும் காட்டுவதில் இன்று இதுவே முன்னணியில் நிற்கின்றது. இங்கு சிறுகதை இலக்கியம் அரும்பிய காலம் பகுத்தறிவு இயக்க - சீர்திருத்த காலம். எனவே தொடக்க காலச் சிறுகதைகளில் இப்போக்கே ஓங்கி நிற்கின்றது. இந்நிலை ஐம்பதுகளில் மாறத் தொடங்கியது. இதற்குக் காரணமாகத் தமிழ்நேசன் 'கதை வகுப்பு' அமைகின்றது. எழுபதுகளில் வெளிவந்த கதைகள் அனைத்தும் இந்நாட்டுத் தமிழ்ச் சமுதாயம் எதிர்நோக்கும் பல்வேறு பிரச்சனைகளையே கருப் பொருள்களாக கொண்டுள்ளன. இதுவரை சுமார் எண்பது சிறு கதைத் தொகுப்புக்கள் இங்கு வெளிவந்துள்ள.

## தமிழ்ச் சங்கங்களும் அமைப்புக்களும்

மலேசியாவில் தமிழ்ச் சமூகத்தினிடையே பல்வேறு நோக்கங்களுக்காகப் பல நூறு அமைப்புக்கள் உள்ளன. இவற்றில் தமிழோடும் தமிழ் இலக்கியத்தோடும் தொடர்புடைய சில அமைப்புக்களைப் பார்ப்போம்.

இவ்வமைப்புகளில் தலையாயதாகக் குறிப்பிடத்தக்கது, மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம். 1963-இல் பதிவு பெற்ற இச்சங்கம் கடந்த இருபது ஆண்டுகளில் பல அரிய இலக்கியப் பணிகளை ஆற்றியுள்ளது. மலாய்ப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையுடன் இணைந்து 1964 இல் இது 'கல்கி கருத்தரங்கை' நடத்தியுள்ளது. நாட்டின் பல்வேறு மாநிலங்களிலும் சிறுகதைக் கருத்தரங்குகளை நடத்தியுள்ளது. அவ்வப்போது நாட்டின் பல பகுதிகளில் பல் வேறு தலைப்புக்களில் இச்சங்கம் நடத்தியுள்ள கவியரங்கம் தனிச்சிறப்புப் பெற்றவை. இக் கவியரங்கக் கவிதைகள் சிலவற்றைத் தொகுத்து 'அரங்கேறிய கவிதைகள்' என்ற பெரில் ஒரு நூலையும் இது வெளியிட்டுள்ளது. அவ்வாறே சிறுகதைக் கருத்தரங்குகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகளைக் கொண்டு பரிசு என்ற நூலையும் இது வெளியிட்டுள்ளது. மலேசிய இந்தியர் காங்கிரஸ் தேசிய நிலநிதிக்கூட்டுறவுச் சங்கம், தேசிய தோட்டத் தொழிலாளர் சங்கம் முதலிய அமைப்புகளின் ஒத்துழைப்போடு 1981 - இல் மலேசியத் தமிழ் இலக்கிய அறநிதியை அமைத்தது, இதன் சாதனைகளில் தலைசிறந்ததாகும். எழுத்தாளர்களின் நூல்களை வெளியிடத் தமிழ் நூல் வெளியீட்டுப் பண்ணை ஒன்றினை மாஜு ஜெயா இளைஞர் கூட்டுறவு அமைபபுடன் இணைந்து ஏற்படுத்தவும் இச்சங்கம் முயன்று வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் இரு சிறந்த எழுத்தாளர்களுக்குப் பொன்னாடை போர்த்திக் கேடயம் அளிப்பதுடன், எழுத்தாளர்களுக்கான பல பரிசுகளையும் ஏற்படுத்தியுள்ளது.

எழுத்தாளர்களுக்கான அமைப்புக்களிலேயே முதலில் தோன்றியது பினாங்கில் உருவான வட மலாயா எழுத்தாளர் சங்கமாகும். 1960-இல் தோன்றிய இச்சங்கம் பினாங்கில் சிறுகதை, கவிதை பயிற்சி வகுப்புக்களையும் பல இலக்கியக் கூட்டங்களையும் நடத்தியுள்ளது.

பேரா மாநிலத்தில் உள்ள எழுத்தாளர்களுக்கான ஓர் அமைப்பாகப் பேரா மாநில எழுத்தாளர் சங்கம் 1975-இல் உருவானது. பல இலக்கியச் சந்திப்புக்கள், நூல் வெளியீட்டு விழாக்கள், இலக்கிய வகுப்புகள், கலை விழாக்கள், ஆகியவற்றை இச் சங்கங்கள் நடத்தியுள்ளது. இச் சங்க உறுப்பினர்களால் எழுதப்பட்ட சிறுகதைகளைக் கொண்டு 'குழந்தை உள்ளம்' என்ற ஒரு சிறுகதை நூலையும இது வெளியிட்டுள்ளது.

நாடெங்கிலும் உள்ள எழுத்தாளர் அமைப்புக்களை ஒருங்கிணைத்து 'மலேசியத் தமிழ் எழுத்தாளர் தேசியப்பேரவை'யை உருவாக்கியது இதன் சாதனைகளில் சிறந்ததாகும்.

1970-இல் தோற்றுவிக்கப்பட்ட கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கம், பல இலக்கிய முயற்சிகளில் ஈடுபட்டுள்ளது. இலக்கிய வகுப்புகள் நடத்துதல், நூல்களை வெளியிடுதல் ஆகியவை அவற்றில் குறிப்பிடத்தக்கவையாகும். கெடா மாநில எழுத்தாளர்களால் எழுதப்பட்ட கதைகளைக் கொண்டு 'பட்டினிக் குருவி' 'ஊமைக் காயங்கள்' என்ற இரண்டு சிறுகதைத் தொகுப்புகளை இது வெளியிட்டுள்ளது.

1978-இல் உருவான நெகிரி செம்பிலான் தமிழ் எழுத்தாளர் சங்கம், மாணவர்களுக்கான தமிழ் இலக்கிய வகுப்புக்களை நடத்துவதில் தனி ஈடுபாடு காட்டி வருகின்றது.

ஜோகூர் மாநில எழுத்தாளர்களுக்காக 1979 - இல் தோன்றிய 'ஜோகூர் மாநில தமிழ் எழுத்தாளர் சங்கம்', மலேசியத் தமிழ் நூல்களின் மாநில நூலகம் அமைப்பதிலும் மாநில எழுத்தாளர்களின் விவரத் தொகுப்பு திரட்டுவதிலும் இப்போது ஈடுபட்டுள்ளது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தை அடுத்து, தமிழ் மொழி - இலக்கியம் ஆகியவற்றில் அதிக ஈடுபாடு காட்டிச் செயலாற்றி வரும் அமைப்பு தமிழ் இலக்கியக் கழகம் ஆகும். 1972-ல் பதிவு செய்யப்பட்ட இக் கழகம், தமிழ்க் கல்வி தொடர்பாக நான்கு கருத்தரங்குகளை நடத்தியுள்ளது. 1978, 1984 ஆகிய ஆண்டுகளில் இரு மலேசியத் தமிழர் மாநாடுகளைக் கூட்டியுள்ளது. ஆறு சிறப்பு மலர்களையும், அவ்வப் போது பல ஆய்வறிக்கைகளையும் இது வெளியிட்டுள்ளது.

தலைநகரில் இயங்கும் கவிதைக் களம் மாதத்திற்கொருமுறை கவிதை நிகழ்ச்சிகளை நடத்துவதோடு பல நூல் வெளியீட்டு விழாக்களையும் வெகு சிறப்போடு நடத்தி வருகின்றது.

இவை அல்லாமல் செப்பிராங் பிறை தமிழ் எழுத்தாளர் சங்கம், பகாங் மாநில எழுத்தாளர் சங்கம் ஆகியவையும் தம்மால் இயன்ற அளவில் பணியாற்றி வருகின்றன.

நாடெங்கிலும் இவ்வாறு தனித்தனியாக இயங்கிவரும் எழுத்தாளர் அமைப்புக்களை ஒருங்கிணைக்கும் முயற்சி பல ஆண்டுகளாக நடந்து வந்தாலும், 1982-ஆம் ஆண்டிலேயே அது செயலுருவம் பெற்றது. 'மலேசியத் தமிழ் எழுத்தாளர் தேசியப் பேரவை' என இவ்வாண்டில் அமைக்கப்பட்ட பேரவை உருவாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கமே செய்தது. பரந்த நோக்கங்களையும் செயல் திட்டங்களையும் கொண்ட இப் பேரவை 1982-இல் மலேசியத் தமிழ் எழுத்தாளர் முதலாம் தேசிய மாநாட்டையும், சென்ற ஆண்டு இரண்டாம் மாநாட்டையும் சிறப்புடன் நடத்தியுள்ளது.

எழுத்தாளர் அமைப்புக்களுக்கு வெளியே இருந்து கொண்டு தமிழ் மொழி, இலக்கியம் ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டுள்ள ஓர் இளைஞர் இயககம் தமிழ் இளைஞர் மணி மன்றம் ஆகும். அமரர் கோ. சாரங்கபாணியின் முயற்சியினால் 1956-இல் பதிவு பெற்ற இம்மன்றம் இன்று இருநூற்று ஐம்பது கிளைகளையும் ஒரு இலட்சத்து இருபதினாயிரம் உறுப்பினர்களையும் கொண்டுள்ளது. இம்மன்றத்தின் தலைவராகப் பல ஆண்டுகள் இருந்த அமரர் சா. ஆ. அன்பானந்தன் தம்மளவிலே ஓர் சிறந்த எழுத்தாளராக இருந்ததால், தமிழுணர்வு இன்றும் இம்மன்ற உறுப்பினர்களிடையே சிறந்து நிற்கின்றது. பேரவையும் கிளைகளுமாக அவ்வப்போது பல நல்ல தமிழ் நூல்களை வெளியிட்டுள்ளன.

# ஈழத்தில் தமிழ்க்கல்வி

—கலாநிதி இளையதம்பி பாலசுந்தரம்

உலகளாவிய நிலையில், தமிழ்க் கல்வி பற்றிய சிந்தனைகள் உருவெடுத்திருக்கும் இச்சந்தர்ப்பத்தில், ஈழத்தில் தமிழ்க்கல்வி எவ்வெவ் நிலைகளில் போதிக்கப்படுகின்றன; ஆரம்பப்பாடசாலைகள் முதல் பல்கலைக்கழகம் ஈறாகத் தமிழ்க் கல்வியும், தமிழ் மொழி மூலக்கல்வியும் எவ்வகையில் அளிக்கப்படுகின்றன; தனியார் நிறுவனங்கள் தமிழ்ச் சங்கங்கள் முதலியவற்றின் தமிழ்க்கல்விப் பணிகள் - ஆகிய விடயங்களையும் அறிதல் பொருத்தமுடையதாகும்.

**பண்டைய குருகுல பாரம்பரியம் :**

ஓர் இனத்தின் பண்பாட்டுச் செல்வத்தை அவ்வினத்தவர் அடையச் செய்வது கல்வியாகும. சிறந்த பண்பாட்டை உருவாக்குவதும் கல்வியே. சீரிய கல்வியும் உயர்ந்த பண்பாட்டுப்பாரம்பரியமும் கொண்ட பாரத நாட்டுடன் ஈழம் பண்டைக்காலந் தொட்டுக் கலாசார உறவுகளைக் கொண்டுவந்துள்ளது. இலங்கையில் தனிப்பட்ட இந்துப்பண்பாட்டுப்பாரம்பரியமொன்று ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகளில் பொலநறுவையைத் தலைநகராகக் கொண்டு அமைவதாயிற்று. அதன் பின்பு யாழ்ப்பாணத்தில் தமிழரசு தோன்றி அப்பாரம்பரியத்தை வளர்த்து வந்துள்ளது. அக்காலங்களில் குருகுலங்களில் தமிழ்க் கல்வி வளர்ந்துவந்துள்ளது. நல்லூர் யாழ்ப்பாண இராச்சியத்தின் தலைநகராகத் திகழ்ந்தமையாலும், அங்கு சரஸ்வதி மகால் என்ற நூலகமும் தமிழ்ச்சங்கமும் அமைத்து தமிழ்ப் புலவர்களை அங்கு வரவழைத்துப் பேணியமையாலும், நல்லூரில் ''குருகுலங்கள்'' சிறந்து விளங்கின. இக் குருகுலத்தில் வந்தவர்களே ஈழத்து இலக்கிய வரலாற்றின் பெரும புலவர்களாகவும், கல்விமான் களாகவும் திகழ்ந்தனர்.

19 ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் இந்துக்கள் பாடசாலைகள் அமைப்பதற்கான அனுமதி மறுக்கப்பட்டிருந்தது[1]. அக்காலகட்டத்தில் கிறிஸ்தவமிசனரிமாரின் ஆதிக்கம் தலைதூக்கியிருந்தது. அவர்களது பாடசாலைகளில் தமிழ்க் கல்விக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. எனினும் வீடுகளிலும் கோயில்களிலும் அமைந்த குருகுலங்களே தமிழ்ப்பாரம்பரியக் கல்வியைப் பேணிவளர்த்தன. 19 ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாணக்குடாநாடெங்கணும் பரவலாகத் திண்ணைப்பள்ளிக்கூடங்கள் ஏற்படலாயின. இப்பாடசாலைகளின் பாரம்பரியக்கல்விப் பாடத் திட்டம் எவ்வாறிருந்தது என்பது பற்றி உதயதாரகைப் பத்திரிகை (21-10-1841) பின் வருமாறு கூறுகிறது: இப்பொழுது படிப்பிக்கும் தமிழ்க் கல்விகளாவன அரிவரி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், திருவள்ளுவர் குறள், நல்வழி, வாக்குண்டாம், நன்னெறி, நீதி வெண்பா, நாலடியார், சதுரகராதி, வாழ்த்துமாலை, தொன்னூல விளக்கப் புகழ்ச்சிமாலை, திருவள்ளுவ மாலை, அந்தாதி, கணக்கு, நைடதம், சோதிடம், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், நிகண்டு, அரும்பொருள் விளக்கம், இராவணசித்தர்சூத்திரம், காவியம், நன்னூல், வைத்திய சாஸ்த்திரம், ஆகமம் முதலானவைகளே!

---

1. இலங்கையிற் கல்வி நூற்றாண்டு விழா மலர் — 1969.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஈழத்திலே தமிழ்க்கல்வியின் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றிய ஆறுமுக நாவலர் அவர்கள், வண்ணார்பண்ணை, கோப்பாய், புலோலி, முல்லைத்தீவு, சிதம்பரம், முதலிய இடங்களிலே தமிழ்ப் பாடசாலைகளை நிறுவினார். தமிழர் பலதுறைகளிலும் முன்னேறி ஏனைய உலகமக்களுடன் தலைநிமிர்ந்து நிற்கவேண்டுமாயின் அவருக்கு மேற்படிப்பு இன்றியமையாததென்பதை ஆறுமுகநாவலர் நன்குணர்ந்தார். இம்மேற்படிப்புக்குரிய போதனா மொழி தமிழாக அமையின் அது தமிழ் மக்களுக்குப் பெரிதும் பயன்படும் எனவும், அத்தகைய கல்வியே தமிழரின் உண்மையான ஆற்றலை வெளிப்படுத்துவதற்கு இயற்கையோடு பொருத்தமாயிருக்குமெனவும் அவர் கண்டார். எனினும் அந்நோக்கம் கைகூடுமுன் அவர் காலமாகி விட்டார்.[1] ஆறுமுகநாவலர் தொடங்கிய தமிழ் பாடசாலைகள் வட இலங்கையில் தமிழ்க்கல்விப் பாரம்பரியத்தை வளர்த்துவந்தன.

கிழக்கிலங்கையிலும் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குருகுலங்கள் இயங்கி வந்துள்ளன. அதனைத்தொடர்ந்து மிசனரிமாரின் பாடசாலைகள் மட்டக்களப்பிலும் திருகோணமலையிலும் தோன்றின. எனினும் அவற்றின் மதப்போதனைகள் செல்வாக்குப் பெறுமுன்பே, சுவாமி விபுலானந்தரால் கிழக்கிலங்கை முழுவதிலும் பரவலாக நிறுவப்பட்ட இராமகிருஷ்ண மிசன் தமிழ்ப் பாடசாலைகள் அப்பகுதிகளில் தமிழ்க் கல்வியையும் சைவத்தையும் வளர்ந்துவந்தன.

1898 இல் யாழ்ப்பாணத்தில் திரு. கைலாச பிள்ளை அவர்கள் பத்துத் தமிழ்ப் பேரறிஞர்களின் துணையுடன் ''யாழ்ப்பாணத் தமிழ்ச் சங்கம்'' ஒன்றை நிறுவினார். இச் சங்கம் பாலபண்டிதர், பாரதி பண்டிதன், புலவன், ஆசிரியன் என்ற பட்டப் பரீட்சைகளை நடாத்திவந்தது. மேலும் அவரவர் தகுதிகண்டு வித்துவான், கவிராசன், பௌராணிகன், நாவலன் என்ற தொடக்கத்துப் பட்டங்களும் இச்சங்கத்தினரால் வழங்கப்பட்டன.[2]

1948 - இல் இலங்கை சுதந்திரமடைந்ததும் கலை, கலாச்சார நடவடிக்கைகள் விரிவடையத் தொடங்கின. ஆங்கிலமொழிக் கல்விக்கெதிரான குரல் எழுப்பப்பட்டு, சுய மொழிக்கோஷங்கள் வலுப்பெற்றன. இதன் பயனாக 1952 இல் தாய்மொழியே போதனா மொழியானது. தமிழ் மொழி பாலர் வகுப்பு முதல் பல்கலைக்கழகக் கல்விவரை போதனா மொழியானது. இலங்கையின் சனத்தொகையில் சுமார் 25% வீதமானோர் தமிழ்மொழியைப் பேசுவோராவர், அவர்களது எண்ணிக்கையைப் பின்வரும் அட்டவணை மூலம் அறிந்து கொள்ளுதல் ஈண்டு அவசியமாகின்றது.

---

1. பேராசிரியர் சு. வித்தியானந்தம் — 1979 பக் — 62
2. மேலது பக். 63 - 64.

| இனம் | மொத்த எண்ணிக்கை | வீதம் |
|---|---|---|
| சிங்களவர் | 10, 985, 665 | 73. 98 % |
| இலங்கைத் தமிழர் | 1, 871, 535 | 12. 60 % |
| இந்தியத் தமிழர் | 825, 233 | 5. 56 % |
| சோனகர் - மலாயர் | 1, 100, 350 | 7. 41 % |
| பரங்கியர் | 38, 286 | 0. 26 % |
| ஏனையோர் | 28, 981 | 0. 20 % |

மூலம் : Statistical Abstract Census—1981

## பாடசாலைகளில் தமிழ்ககல்வி

கல்விமுறைகள் ஆரம்பக்கல்வி, உயர்கல்வி, மேற்றொடர்க்கல்வி என்ற மூன்று நிலைகளைக் கொண்டுள்ளன. இலங்கையின 1920 ஆம் ஆண்டின் 1 ஆம் இலக்கக்கட்டளைச் சட்டத்தின் கீழ் ஆரம்பக்கலவி, உயர்கல்வி தொடர்பான விதிமுறைகள் ஆக்கப்பட்டன. 8-ஆம் வகுப்பு வரையுளள பாடசாலைகள் ஆரம்பப்பாடசாலைகளாகின 1960 இல் சகல பாடசாலைகளும் அரசாங்கப் பாடசாலைகளாக மாற்றப்பட்டன. இவை போதனை அடிப்படையில் சிங்கள - தமிழ் - ஆங்கிலப்பாடசாலைகளாகப் பிரிக்கபபட்டன. தமிழ்ப் பாடசாலைகள், பெரும்பான்மையாகப் பயிலும் மாணவர்களின் அடிப்படையில் தமிழ்ப் பாடசாலைகள்-முஸ்லீம் பாடசாலைகள் எனப் பிரிக்கப்பட்டன. இவ்வகையில் 1982 இல் 1939 தமிழ்ப்பாடசாலைகளும், 634 முஸ்லீம பாடசாலைகளும் தமிழில் இயங்கின. ( School Census - 1982 ).

1943 - ஆம் ஆண்டுக்கல்விச் சிறப்புக் குழுவினர் பாலர் வகுப்பு முதல் பல்கலைக் கழகக் கல்வி வரை இலவசக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என்பதையும் போதனை மொழி தாய்மொழியாக இருக்கவேண்டும் என்பதையும் சிபார்சு செய்தனர். ஆங்கிலம் இரண்டாவது மொழியாக்கப்பட்டது. 1952-இல் பாடசாலைகளில் தாய்மொழி மூலமான கல்விப் போதனை ஆரம்பமாயிற்று. எனினும் தமிழில் போதிய விஞ்ஞானப் பாடப்புத்தகங்கள் இன்மையால் விஞ்ஞானபாடப்போதனைகள் 1964-க்குப் பின்பே தமிழில் நடைபெற்றன.

1945-இல் அறிமுகப்படுத்தப்பட்ட பாடவிதானத்தின்படி தமிழ்மாணவர்களைப் பொறுத்தவரை தமிழில் பாடத்திட்டங்கள் தயாரிக்கப்பட்டன. சிங்களம்/தமிழ் படிப்படியாக போதனைமொழியாகக்கப்பட்டதால், உயர்நிலைப்பாடசாலைகளுக்குரிய விஞ்ஞானம், கணிதம் முதலான பாடங்களிலே தாய்மொழியிற் புத்தகங்களை எழுத தனியார் முன்வராமையால், 1955-இல் சுயமொழிப்பாடப்புத்தக உற்பத்தி அலகு ஒன்றினை அரசாங்கம் அமைத்தது. இந்த அலகு விஞ்ஞான தொழில்நுட்பக் கலைச் சொற்றொகுதிகளை வெளியிட்டதோடு, விஞ்ஞான கணித நூல்களையும் தமிழிலும் சிங்களத்திலும் மொழிபெயர்த்தன. 1966-இல் தனித்துவமான கல்விவெளியீட்டுத் திணைக்களம் நிறுவப்பட்டது.

ஆரம்ப வகுப்பு முதல் கல்விப்பொதுச் சாதாரண பரீட்சைவரையிலும் தமிழ் கட்டாய பாடமாகவும், பல்கலைக்கழக அனுமதிக்குச்சகல மாணவர்களும் தமிழ் சித்தி யடைந்திருக்கவேண்டும் என்ற நிபந்தனையும் ஏற்படுத்தப்பட்டன. கல்விவெளியீட்டுத் திணைக்களம் வெளியிட்டுவரும் தமிழ்மொழிப் பாடப்புத்தகங்கள் அதன் தரத்தில் மிகவும் உயர்ந்தவை. தமிழ் தவிர்த்த கலை, விஞ்ஞான, வர்த்தக பாடங்களுக்கான தமிழ் நூல்களையும் இந் நிறுவனமே வெளியிட்டு வருகின்றது.

இலங்கையிலுள்ள தமிழ்மொழிமூல மாணவர்களின் எண்ணிக்கையை அறிந்து கொள்வதற்குப் பின்வரும் அட்டவணைகள் துணையாகலாம்.

Students Population - Tamil Medium 1982

| பாலர் வகுப்பு | 1ம் வகுப்பு | 2ம் வகுப்பு | 3ம் வகுப்பு | 4ம் வகுப்பு | 5ம் வகுப்பு |
|---|---|---|---|---|---|
| 87975 | 89811 | 88927 | 80673 | 72411 | 64650 |
| **6ம் வகுப்பு** | **7ம் வகுப்பு** | **8ம் வகுப்பு** | **9ம் வகுப்பு** | **10ம்வகுப்பு I** | **10ம் வகுப்பு II** |
| 51754 | 41533 | 34779 | 28627 | 22468 | 14428 |

School Census 1982 Table 6

தமிழ் மொழி மூல மாணவர்கள்.

| | | விஞ்ஞானம் | கலை | வர்த்தகம் |
|---|---|---|---|---|
| வகுப்பு — 11 | = | 3977 | 3932 | 1804 |
| வகுப்பு — 12 | = | 7576 | 6424 | 3376 |

School Census 1982.

## பல்கலைக்கழகங்களில் தமிழ்க்கல்வி

இலங்கையின் வரலாற்றை நோக்கும் போது விடுதலைக்கு முன்பே உயர்கல்விக் கான அவசியம் உணரப்பட்டு, ஆங்கிலேய ஆட்சிநிலவியபோதே பல்கலைக்கழகத்திற் கான சிந்தனை உருவானது. 1880-ஆம் ஆண்டில் கேம்பிறிஜ் பல்கலைக்கழகப் பரீட்சைகள் இலங்கையில் நடாத்தப்பட்டன. 1882-இல் இலண்டன் மற்றிக்குலேசன் பரீட்சைகளும் காலக்கிரமத்தில் பி.ஏ;பி.எஸ்.ஸி;எல்.எல்.பி. பரீட்சைகளும் நடாத்தப் பட்டன, 1870-இல் இலங்கை சட்டசபை உறுப்பினராக இருந்த திரு. பி. குமாரசாமி அவர்கள் இலங்கையின் உயர் கல்வியின் நிலையை மறுபரிசீலனை செய்வதற்கான குழுஒன்றை அமைக்கும்படி பிரேரணை கொண்டுவந்தார். 1906 - இல் சேர். பொன்னம்பலம் [1] தலைமையில் கூடிய ஐரோப்பியக் கல்விபெற்ற கல்வியாளர் சிலர்

1. இலங்கைப் பல்கலைக்கழகத்தின் தந்தை எனப்போற்றப்படுபவர்.

இலங்கைப் பல்கலைக்கழகச் சங்கம் ஒன்றை ஆரம்பித்தனர். இது பல்கலைக்கழக இயக்கமாக மாறியது, இதன் விளைவாக 1921 சனவரி மாதம் இலண்டன் பல்கலைக் கழகத்துடன் இணைந்த அரசினர் நிறுவனமாகக் கொழும்பிலே பல்கலைக்கழகக் கல்லூரி திறக்கப்பட்டு. 1942-இல் இது இலங்கைப் பல்கலைக்கழகமானது, 1942-இல் கலைத் துறைப் பீடத்தில் தமிழ்மொழியும் இடம் பிடித்துக்கொண்டது. 1959 இல் வித்தியோதய பல்கலைக்கழகத்திலும் தமிழ்மொழி பயிற்றப்பட்டது. (1960-இல் சுயமொழிமூலக்கல்விப் போதனை பல்கலைக்கழகத்திற்கு அறிமுகப்படுத்தப்பட்டபோது கலைத்துறைப்பாடங்கள் தமிழில் போதிக்கப்பட்டன. அதே வேளையில் மாணவர் எண்ணிக்கையும் அதிகரித்தது. 1967 - ஆம் ஆண்டிலிருந்தே விஞ்ஞானம், மருத்துவம் ஆகிய பீடங்களைச் சேர்ந்த பாடங்களையும் தமிழில் போதிக்கப்படும் நிலை ஏற்பட்டது. இன்றைய நிலையினைக் கூறுவதானால் தமிழ்மொழிமூலம் சகல பாடங்களும் போதிக் கப்பட வேண்டும் என இருந்தபோதிலும் மாணவர்கள வெளிநாட்டு வேலைவாய்ப்பை அடிப்படையாகக் கொண்டு அவர்களின் (சிறப்பாக விஞ்ஞான மருத்துவ மாணவர்கள்) விருப்பின் பேரில் தமிழுக்குப் பதிலாக ஆங்கில மொழிமூல போதனையே நடைபெற்று வருகிறது.

இலங்கையின் தமிழ்க்கல்வியின் மையமாகப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைகள் விளங்கின. பேராதனைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை. பேராசிரியர்கள் சுவாமி விபுலானந்தர், க கணபதிப்பிள்ளை, வி. செல்வநாயகம், சு. வித்தியானந்தன், ஆ. வேலுப்பிள்ளை, ஆ. சதாசிவம் ஆகியோரின் வழிநடத்தல்களில் வளர்ந்துவந்துள்ளது. கொழும்புப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை 1967 முதல் 1980 வரை பேராசிரியர் ஆ. சாதசிவம் அவர்களின் வழிநடத்தலில் தமிழ்க்கல்வியை வளர்த்தது 1980-இல் கொழும்புப் பல்கலைக்கழகத்திலே தமிழ்மொழிமூலப் பயிற்சி அனைத்தும் மூடப்பட்டது. 1972-1980 வரையும் களனிப் பல்கலைக்கழகத்திலும் தமிழ்மொழியும் தமிழ்மொழிமூல கலைப்பாடப்போதனைகளும் இடம்பெற்றன. 1974-இல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டதும் தமிழ்துறையில் பேராசிரியர் க. கைலாசபதி அவர்களைத் தொடர்ந்து பேராசிரியர் ஆ. வேலுப்பிள்ளை அவர்களின் வழிநடத்தலில் தமிழ்துறை தமிழ்க்கல்வியை நன்கு நெறிப்படுத்தி வருகின்றது. தற்போது இலங்கையில் எட்டுப் பல்கலைக்கழகங்கள் இயங்கி வருகின்றபோதிலும் பேராதனை, யாழ்ப்பாணம் ஆகிய இரு பல்கலைக்கழகங்களில் மட்டுமே தமிழ்க் கல்வி போதிக்கப்பட்டு வருகின்றது.

பல்கலைக்கழகங்களில் தமிழை ஒரு பாடமாகப் பயிலும் மாணவர் களுக்கெனப் புலமைப்பரிசில்கள் வழங்கப்பட்டுவருகின்றன. பேராதனைப் பல்கலைக் கழகத்தில் ஆறுமுக நாவலர், சுவாமி விபுலானந்தர், சி. வை. தாமோதரம் பிளளை பேராசிரியர் கணபதிப் பிள்ளை ஆகியோரின் நினைவுப் புலமைப்பரிசில்கள் வழங்கப் படுகின்றன. யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் திருமதி செல்லம்மா இராசேந்திரம், திருமதி கமலாவதி வித்யானந்தன், திரு, முத்துப்பிள்ளை, கனகசுந்தரம் பிள்ளை ஆகியோரின் நினைவுப் புலமைப் பரிசில்கள் வழங்கப்பட்டு வருகின்றன

இற்றைவரை இப்பல்கலைக்கழகங்களிலிருந்து தமிழில் ஆறுபேர் கலாநிதிப் பட்டங்களும் 19 பேர் முதுகலைமாணிப்பட்டங்களும் பெற்றுள்ளனர். மேலும் பலர் ஆய்வுக்குப் பதிவு செய்து தமிழில் ஆய்வு மேற் கொண்டு வருகின்றனர்.

இலங்கையிலுள்ள பேராதனை, கொழும்பு, யாழ்ப்பாணம், மொரட்டுவை, களனி, ஸ்ரீஜெயவர்த்தனபுர, குறுணை, மட்டகளப்பு ஆகிய எட்டுப் பல்கலைக்கழகங்களில் 1984 இலிருந்து பேராதனை, யாழ்ப்பாணம் ஆகிய இரு பல்கலைக்கழகங்களில் மட்டுமே தமிழ் மொழிமூலப் பயிற்சிகள் நடைபெறுகின்றன. 1983 இல் பல்கலைக்கழகங்களில் பயின்று கொண்டிருநத சகல தமிழ் மொழி மூலம் மாணவர்களின் எண்ணிக்கையைப் பின் வரும் அட்டவணை காட்டுகிறது.

| பீடங்கள் | கொழுமபுப் பல்கலைக்கழகம் | பேராதனைப் பல்கலைக்கழகம் | யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் |
|---|---|---|---|
| கலை | 43 | 527 | 1231 |
| கல்வி | 22 | --- | ---- |
| சட்டம் | 40 | --- | ---- |
| மருத்துவம் | 55 | --- | 348 |
| விஞ்ஞானம் | -- | 193 | 522 |
| பொறியியல் | -- | 134 | --- |
| விவசாயம் | -- | 122 | --- |
| மிருகவைத்தியம் | -- | 40 | --- |
| நுண்கலை | -- | -- | 159 |
| மொத்தம் | 160 | 1016 | 2260 |

மூலம்: University of Sri Lanka Hand Book 1983.

உயர் கல்விதிறமையின் அடிப்படையில் இடம்பெறுவதாகும். இலங்கையில் 1970இன் பின்னர் பல்கலைக்கழக அனுமதியில் அரசியல் தலையிடத் தொடங்கியதால் திறமையுள்ள அனைவருக்கும் பல்கலைக்கழக அனுமதி கிடைக்க முடியாதவாறு சமூக பொருளாதாரக் காரணிகள் அமைந்தன. இதனால் அரசாங்கத்தால் "தரப்படுத்தல்" முறை(Standardization) 1970 இல் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. மேலும் 30% திறமை அடிப்படையிலும் 55% மாவட்டக் கோட்டாமுறையிலும் 15% பின்தங்கிய மாவட்டங்களின் அடிப்படையிலும் பல்கலைக்கழக அனுமதி 1979 இல் இருந்து இடம் பெற்று வருகிறது.

தமிழ் அல்லது தமிழ்மொழிமூல மாணவர்களினதும் நகரப்புறமாணவர்களினதும் அனுமதியில் "தரப்படுத்தல்" மிகப்பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. இதனால் தமிழ் மாணவர்களின் பல்கலைக்கழக அனுமதி மிகப்பெரிதும் குறைவுற்றது. இது சமூக பொருளாதார அரசியல் துறைகளில் பெரும் பாதிப்புக்களை உண்டாக்கிற்று. தமிழ் மொழிமூலம் அனுமதி பெற்ற மாணவர்களின் எண்ணிக்கைக்கு உதாரணமாக 1981/82 ஆம் கலவியாண்டில இலங்கைப் பல்கலைக்கழகங்களுக்கு மொழிரீதியாக அனுமதி பெற்ற மொத்த மாணவாகளின் எண்ணிக்கையைக் காட்டலாம்: சிங்களம் 3847, தமிழ் 1138, ஆங்கிலம் 25. மொத்தம் 5010 (ஆதாரம்: Third Annual Report of the University Grants Commission-1981-Appendix 3 )

## தமிழ்ப்பல்கலைக்கழக இயக்கம்

இலங்கையில் தமிழ்ப் பல்கலைக்கழக இயக்கம் ஒன்றிருந்தது என்ற செய்தியை ஈண்டு குறிப்பிடல் மிகப் பொருந்தும். இலங்கைப் பல்கலைக் கழக வரலாற்றில் தமிழ்ப்

பல்கலைக்கழக இயக்கம் மேற்கொண்ட நடவடிக்கைகள் முக்கிய இடம்பெறுகின்றன. 1956இல் தனிச் சிங்களச் சட்டம் கொண்டு வரப்பட்டபோது இது தமிழ் மக்களின் ஆரம்ப, இடைநிலை, உயர்நிலைக் கல்வியைப் பாதிக்குமென உணர்ந்து அன்றைய தமிழ்க் கல்வியாளர்களால் இவ்வியக்கம் 1956இல் ஆரம்பிக்கப்பட்டது. இதன் நோக்கங்கள் பின்வருமாறு அமைந்திருந்தது.

(அ) தமிழ் பேசும் மக்களுக்கென பல்கலைக் கழகமொன்றை உருவாக்கல்.

(அ) தமிழ் மொழியையும் கலாச் சாரத்தையும் பேணக்கூடியமுறையில் செயல்பாடுகளை மேற்கொள்ளல்.

(இ) தமிழ் மக்களின் பொருளாதார சமூக நலன்களைப் பேணலும் அதிகரித்தலும்.

இவ்வியக்கத்தை நடாத்தியவர்களில் முக்கியமாகப் பேராசிரியர்கள் க. கணபதிப் பிள்ளை, ஆ. மயில்வாகனம், சி. எஸ். ஜே. எலியசர், ஆ. சின்னத்தம்பி, வண. தனிநாயகம் அடிகள், டாக்டர். ஏ. சுந்தரலிங்கம், சேர். வைத்திலிங்கம் துரைச்சாமி, திருவாளர்கள் திருச்செல்வம் கியூ.ஸி., ஆர். இராஜரட்ணம் முதலியோரைக் குறிப்பிடலாம். இவ்வியக்கத்தினரின் பல்கலைக் கழகம் பின்வரும் நோக்கங்களைக் கொண்டிருந்தது.

(அ) தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் கலாச் சாரத்தையும் பேணிககாத்து, அபிவிருத்தி செய்தல்.

(ஆ) தமிழ்க் கலாச் சாரத்துடன் இணைந்தவகையில் பல்கலைக்கழகக் கல்வியை ஏற்படுத்துதல்.

(இ) நுண்கலைகளை வளர்த்தல் (ஈ) உலகின் மதங்களைப் படிக்க ஊக்குவித்தல்.

(உ) ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளித்தல்.

(ஊ) தமிழ் போதனா மொழி-அறிவுவிருத்திக்காக ஆங்கிலத்தையும் பயன்படுத்துதல்.

மேலும் பல்கலைக் கழக அனுமதி, பல்கலைக் கழகத்தின் அமைப்பு, நிர்வாகம், மாணவர் விடுதி, பல்கலைக் கழக நிதி என்ற விடயங்களிலும் தீர்க்கமான விதிமுறைகளைக் கொண்டிருந்தனர். இச்சீரிய குறிக்கோளுடன் 14 - 01 - 1957 இல் அப்போதையப் பிரதமர் எஸ். டபிள்யூ. ஆர். டி. பண்டாரநாயக்காவைச் சந்தித்தனர். அவர் அதனை அரசியல் காரணங்கள் காட்டி முற்றாகவே நிராகரித்துவிட்டார். எனினும் த. ப. இயக்கம் தொடர்ந்தது. 10 - 05 - 1959இல் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கான அடிக்கல் திருகோணமலையில் நாட்டப்பட்டது. இதேவேளையில் செனட்டர் எஸ். நடேசன் 'இந்துப் பல்கலைக்கழகம்' கோரினார். தமிழ்ப்பல்கலைக் கழகம் திருகோணமலையிலும் இந்துப் பல்கலைக்கழகம் யாழ்ப்பாணத்திலும் அமைய வேண்டுமென்ற இருகோஷ்டிகளின் செயற்பாடுகளும் தமிழ்ப் பல்கலைக்கழகம் கிடைப்பதற்குரிய அரியவாய்ப்பை 1968இல் இழக்கச்செய்தன. மிகவும் ஆர்வத்துடன் அதிசிறந்த கல்விமான்கள், பேராசிரியர்கள் சேர்ந்து 10 இலட்சம் ரூபாவுக்குமேல் முதலீடு செய்து இயங்கிவந்த தமிழ்ப் பல்கலைக் கழக இயக்கம் அரசியல் காரணங்களால் கைவிடப்பட்டமை ஈழத்தில் தமிழ்க்கல்விக்கு ஏற்பட்ட பேரிழப்பாகும்.

### ஆசிரியர் பயிற்சிக் கலாசாலைகள் :

இலங்கை முழுவதிலுமுள்ள 2573 தமிழ்ப் பாடசாலைகளில் 20, 295 தமிழாசிரியர்கள் கல்விபுகட்டிவருகின்றனர்.[1] தமிழ் ஆசிரியர்களைப் பயிற்றுவிக்கும் அடிப்படையில்

---

1. School Census - 1982.

இலங்கையில் பலாலி, கோப்பாய், மட்டக்களப்பு, அட்டாளைச்சேனை, அழுத்கம, தலவாக்கொல்ல ஆகிய இடங்களில் தமிழ்மொழிமூல ஆசிரிய பயிற்சிக்கலாசாலைகள் அமைந்துள்ளன. இவை பொதுவாக ஈராண்டு பயிற்சிநெறிகளைக் கொண்டவை. மேலும் 1953ஆம் ஆண்டிலிருந்து பட்டதாரி ஆசிரியர்களுக்குப் பல்கலைக்கழகங்களில் ஈராண்டு பயிற்சிநெறியுடைய டிப்ளோமாப் பயிற்சிகளும் அளிக்கப்பட்டு வருகின்றன.

## தேசிய மொழிகளும் அரசாங்க சேவையும் :

சிங்களமும் தமிழும் இலங்கையின் தேசிய மொழிகளாகும். சுயமொழிகள் சகல அரசாங்கத் தேர்வுகளுக்கும் அரசாங்க சேவையில் சேர்வதற்கும் கட்டாய பாடமாக்கப் பட்டதனால் முக்கியத்துவம் பெறலாயின. அதேபோன்று க. பொ. த. சாதாரண தேர் வுக்கும் சிங்களமும் தமிழும் கட்டாய பாடங்களாக்கப்பட்டன. இம்மாற்றங்களுடன் இசைவாக உயர்நிலைப் பாடசாலைகளில் சிங்களம் தமிழ் ஆகிய மொழிகளைப் போதிப் பதில் புதிய முறைகள் கையாளப்பட்டதோடு, மொழிரீதியான கலாசார நிகழ்ச்சிகளுக் கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டன. தமிழ்ப் பாடசாலைகளில் நாடகம், நாட்டார் கலைகள், நடனம, இசை என்பன தமிழில் போதிக்கப்பட்டன.

## மலையகமக்களின் கல்விநிலை :

மலையகத் தமிழ் மக்கள் ஆங்கிலேயராட்சியில் பெருந்தோட்டங்களுக்கு வேலைக் கென வரவழைக்கப்பட்டமையினால் அவர்களது கல்வி, சமூக வாழ்வு என்பன மிகவும் சிக்கலாகவே இருந்துவந்துள்ளன. அதிகபட்சமான சுரண்டல், குறைந்தபட்சக் கூலி இந்நிலையில் அவர்களது கல்வி பெரிதும் புறக்கணிக்கப்பட்டது. ஒருசில வசதிபடைத்த வர்களின் பிள்ளைகள் யாழ்ப்பாணத்தில் படித்து உயர்நிலைக்கல்வி பெற்றனர். மலைய கத்தில் உயர் கல்வி என்பதைவிட இடைநிலைக் கல்வி என்பதே அடிப்படைப் பிரச்சினை யாக இருந்துவந்துள்ளது. ஆரம்பக்கல்வி, இடைநிலைக்கல்வி என்பன ஒழுங்கற்றமைய உயர்நிலைக் கல்வி தானாகவே பின்னிலையடைகின்றது. இந்நிலை தற்போது மாறி வருகின்றது. பல்கலைக்கழகத்திற்கு அனுமதிபெறும் மலையக மாணவர்களின் பெறுபேறு களை நோக்கும்போது அவர்களின் திறமை பாராட்டும்வகையில் அமைந்திருக்கிறது. எனவே இவாகளுக்கு கல்வி ஒளியூட்டப்பட்டால் மலையகப்பிள்ளைகளின் கல்வி வளம் பெறும்.

1980 - இல் தோட்ட நிர்வாகத்தின் கீழ் 358 பாடசாலைகள் இயங்கி வந்துள்ளன. அங்கு 13, 640 மாணவர்கள் பயின்று வந்துள்ளார்கள் ( School Census 1980 Table - I). ஆனால் இந்நிலை 1982 - இல் மாற்றம் பெற்றுள்ளது. 1982 - இல் தோட்ட நிர்வாகத்தில் 29 தமிழ்மொழி மூலப் பாடசாலைகளே இருந்தன. அங்கு 2510 மாணவர்களே கல்வி கற்றனர். ( School Census - 1982—அட்டவணைகள் 2+3 ). இது தோட்டப்பாடசாலைகளில் தமிழ்மொழி மூலக் கல்விவளர்ச்சியையே காட்டுகிறது. இப்போதுள்ள அரசாங்கம் தோட்டப்பாடசாலைகளை அரசாங்கப் பாடசாலைகளாக தரம் உயர்த்தி, அவர்களது கல்விக்கு ஆவன செய்துள்ளது.

## முஸ்லீம்களும் தமிழ்க்கல்வியும்

இலங்கையில் வாழும் சோனகர், மலாயர் ஆகியோரின் எண்ணிக்கை முழுச் சனத் தொகையில் 7.41% வீதமாகும் இவர்களுக்கென 634 தமிழ்மொழிமூலப் பாடசாலை கள் உள்ளன (School Census 1982 Table 3). அட்டாளைச்சேனை (1941), அழுத்கம (1941) ஆகிய இடங்களில் முஸ்லீம் ஆசிரியர் பயிற்சிக்கலாசாலைகளும் அமைந்துள்ளன.

இப்பயிற்சிக் கலாசாலைகளில் போதனைகள் தமிழில் நடைபெறுவதோடு தமிழும் ஒரு பாடமாகும். தமிழகத்தைப் போன்றே ஈழத்திலும் வாழ்கின்ற முஸ்லீம் மக்களின் தாய் மொழி தமிழே. 'இந்நாட்டு முஸ்லீம்களின் தாய் மொழியாகவும் போதனா மொழியாக வும் தமிழே இருப்பதற்கான காரணங்களுள் ஒன்று, அவர்களது சமய நூல்களும் இலகியங்களும் தமிழ் மொழியிலேயே உண்டென்பதாகும். இதன் காரணமாக இன்னும் பல்லாண்டுகளுக்குத் தமிழ் மொழிமூலமே இந்நாட்டு முஸ்லீம்கள் தமது சமய அறிவினைப் பெறல் இயலும். மேலும் இலங்கை முஸ்லீம்கள் எம்மாவட்டத்தில் வாழ்ந்தாலும் அவர் களது தாய்மொழி தமிழே. அவர்களது குழந்தைகளிற் பெருந்தொகையானோர் கற்பது தமிழ் மொழி மூலமே. முஸ்லீம் ஆசிரியர்களும் ஏறக்குறைய எல்லோருமே தமிழ் மொழியிலேயே கற்பிக்கின்றனர்'— (முஹமத் ஜெமில் 1983 : பக். 255 - 257).

அல்ஹாஜ் எம். ஐ. எம். நளீம் ஜே. பி. அவர்களால் வேருவளையில் பலகோடிரூபா செலவில் 1973இல் தாபிக்கப்பட்டுள்ள 'ஜாமியா நளீமியா கல்வி நிறுவனம்' - இஸ்லாமிய ஆராய்சி நிலையமாக இயங்கிவருகிறது. மத்திய நூலகமும் அங்கு அமைந்துள்ளது. மேலும் வெளிவாரிப்பட்டப்படிப்புப்போதனைகளையும் மேற்கொண்டுள்ளது. இஸ்லாமிய நூல்களைத் தமிழிலும் வெளியிட்டுவருவதோடு தமிழ், தமிழ்மொழிமூலக் கல்விக்கும் இந் நிறுவனம் அரிய தொண்டாற்றிவருகின்றது. அண்மைக் காலங்களில் பல்கலைக் கழகங்களில் தமிழை ஒருபாடமாகச் செய்வோரது எண்ணிக்கையில் கணிசமானோர் முஸ்லிம் மாணவர்கள் என்பதைச் சிறப்பாகச் சுட்டிக்காட்டல் பொருந்தும்.

## தமிழ்க்கல்வியில் நிறுவனங்கள்

தமிழ் மக்களின் உயர்கல்வி வளர்ச்சியில் தனியார் நிறுவனங்கள் பெரும்பங்கு வகித்துள்ளன. இவ்வகையில், இலங்கையில் முதலாவது மருத்துவக் கல்லூரியான ( Green School of Medicine ) முதலில் குறிப்பிடத்தக்கது. இலங்கையில் மத போதனை செய்யவந்த அமெரிக்கத் திருச்சபைத்துறவிகளின் நலன்பேண வந்த வைத்தியர்களில் டாக்டர் சாமுவேல் ஃபிஸ்க் கிறீன் அவர்கள் தமது வைத்திய சாலையில் மூன்று வருட பயிற்சித் திட்டத்தை வகுத்து ஆங்கில மொழியில் மருத்துவப் போதனையை மேற்கொண்டார். மேலை நாட்டு மருத்துவத்தைத் தமிழில்விருத்திசெய்ய வேண்டுமானால் மருத்துவ நூல்களை மொழிபெயர்த்தலும், புதிய கலைச்சொற்களை உருவாக்குவதும் அவசியமென உணர்ந்த டாக்டர் கிறீன் பதின்மூன்றிற்கு மேற்பட்ட வைத்திய நூல்களை தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். 1864 - 1875க்குமிடையில் தமிழ்மொழிப் போதனைமூலம் வைத்தியம் கற்று 40 டாக்டர்கள் வெளியேறினார்கள். 1872இல் இக் கல்லூரி மூடப்பட்டமையும் தமிழ்க்கல்வியின் பேரிழப்பே

அடுத்ததாக உயர்கல்வியிலும் தமிழ்க்கல்வியிலும் சிறப்புப் பணிபுரிந்து வரும் தனியார் நிறுவனம் யாழ்ப்பாணக் கல்லூரியாகும். இது அமெரிக்க திருச்சபையினால் 1872 இல் நிறுவப்பட்டது. இக்கல்லூரி தொடக்கத்தில் கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் ஒரு பகுதியாகவும், பின்பு சென்னைப் பல்கலைக்கழகத்துடனும் இணைக்கப்பட்டு இயங்கி வந்தது. பின்பு 1919இல் இலண்டன் பல்கலைக்கழப் பரீட்சைக்கு மாணவர்களுக்குப் போதனைகளையும் நடாத்தியது பல்கலைக்கழக அனுமதி கிடைககாத மாணவர்கள் வெளிவாரியாகப் பட்டப்படிப்பை மேற்கொள்வதற்குத் துணையாக இது இருந்துவருகிறது. இவற்றைவிட யாழ்ப்பாணம், மட்டகளப்பு ஆகிய நகர்களில் அமைந்துள்ள தனியார் கல்வி நிறுவனங்கள் (Tutaries) பல்கலைக்கழக அனுமதி பெறுவதற்கான போட்டிப் பரீட்சைக்கு மாணவர்களைத் தயார்செய்வதோடு, வெளிவாரிப்பட்டப் படிப்புப் போதனைகளையும் நடாத்திவருகின்றன.

பொதுசனத்தொடர்பு சாதனைகளின் பங்களிப்பும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. இலங்கை ஒலிபரப்புப் கூட்டுத்தாபனத்தின் கல்விச்சேவையும் தமிழ்க்கல்வி வளர்ச்சிக் கான பணியைச் செய்து வருகிறது. வானொலியில் இடம் பெறும் முறைசார்ந்த (Formal) முறைசாராத (Non - Formal) கல்வி நிகழ்ச்சிகளை இவ்வகையில் குறிப்பிடலாம். அதே போன்று வானொலி தமிழ்சேவையினரும் தமிழ் இலக்கியம், மொழி, இசை முதலான பல்வேறு விடயங்கள் அடிப்படையில் தமிழ்அறிவை மக்களுக்குப் போதனை செய்து வருகின்றனர். இதே வரிசையில் ஈழத்துதமிழ் தினசரிகளான ஈழநாடு, தினகரன், வீர கேசரி, தினபதி என்பனவும், சிறப்பாக அவற்றின் வாரமலர்களும் தமிழ்கலை, கலாசார பணிகளைத்தொடர்ந்து ஆற்றிவருகின்றன. மாதாந்த சஞ்சிகைகளும் பல்கலைக்கழகத் தமிழ் இதழ்களும் இவ்வரிசையில் இடம் பெறுகின்றன.

நல்லூர் திருஞானசம்பந்தர் ஆதீனம், கொழும்புத்தமிழ் சங்கம், பல்கலைக் கழகத்தமிழ் மன்றங்கள், யாழ் இலக்கிய வட்டம், மட்டக்களப்புத் தமிழ் எழுத்தாளர் மன்றம், கல்முனைத்தமிழ் எழுத்தாளர் மன்றம், மலையகத்தமிழ் எழுத்தாளர் மன்றங்கள், இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கங்கள் என்பனவற்றின் ஆக்க இலக்கியப்பணியோடு அவற்றின் அறிவு வளர்ச்சிரீதியான கருத்தரங்குகள், மாநாடுகள், இலக்கிய விழாக்கள் என்பவையும் தமிழ்கல்வியின் நெறிசார்ந்தனவாகவே அமைகின்றன.

மேலும் ஆரிய திராவிடபாஷா அபிவிருத்தி சங்கம், கொழும்பு விவேகானந்தா சபை, யாழ்சைவபரிபாலனசபை, வடமாகாண ஆசிரியர் சங்கம் என்பவை கல்விப்பாடத் திட்டத்தை அடிப்படையாகக் கொண்ட பரீட்சைகளையும் போட்டிகளையும் நடாத்தி வருகின்றன.

தமிழ்கல்வியின் மையங்களான இலங்கையில் அமைந்துள்ள நூலகங்களில் பேராதனைப் பல்கலைக்கழக நூலகம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழக நூலகம், யாழ்ப் பாணக் கல்லூரி நூலகம், எல்வின் இரத்தினம் பல்லினப்பண்பாட்டு நிறுவன நூலகம், யாழ்ப்பாண மாநகரசபை பொதுநூலகம், மட்டக்களப்பு மாநகரசபை நூல்கம், கல்முனை பட்டினசபை பொதுநூல்கம், யாழ் கத்தோலிக்கத் தொடர்பக நூல்கம், என்பவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. இவற்றைவிடத் தமிழ் அறிஞர்களின் சொந்தத் தேட்டங்களாகவுள்ள நூலகங்களும் தமிழ்க்கல்வியாளருக்குப் பயன்படுகின்றன.

இலங்கையில் தமிழ்க்கல்வியாளர்கள் அரசாங்க சேவையிலும் பல்கலைக்கழகங் களிலும் உயர் பதவிகளைப் பெற்றுவந்துள்ளனர். உதாரணமாக தமிழ்க்கல்விமான்களாகிய பேராசிரியர் க. கைலாசபதி அவர்கள் யாழ்வளாகத் தலைவராகவும், அவரைத் தொடர்ந்து யாழ் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப்பேராசிரியர் சு. வித்தியானந்தன் அவர்களும் உயர்பேறு பெற்றமை தமிழ்க் கல்வியின் மேம்பாட்டைக் காட்டிநிற்கின்றன. ஈழத்தில் தமிழ்க்கல்விப் பாரம்பரியம் ஆறுமுகநாவலர், சுவாமி விபுலாநந்தர் வழியாக, பல்கலைக்கழக மரபில் வளர்ந்து வருகிறது. அது மேலும் விரிவடைய வேண்டிய கால கட்டத்தை அடைந்துள்ளது.

## துணை நூல்கள்


1 இலங்கையில் கல்வி நூற்றாண்டு விழா மலர். 1969.

2. "இலங்கையில் உயர் கல்வி" — ஆய்வுக் கட்டுரை — பொருளியல்துறை. யாழ் பல்கலைக்கலக்கழகம் : 1981.

3 பேராசிரியர் சு. வித்யானந்தன், "தமிழியற் சிந்தனை" முத்தமிழ் வெளியீட்டுக்கழகம் யாழ்ப்பாணம் : 1979.

4. ஷாகுல்ஹமீத்முஹமத் ஜெமில்.-"1982இல் இருந்து இலங்கையில் இஸ்லாமியக்கல்விச் சிந்தனை வளர்ச்சியும்; இலங்கை முஸ்லீம் கல்விமான்களின் அதற்கான பங்களிப்பும்"- முதுமாணி ஆய்வுக்கட்டுரை. யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் : 1983.

5. Statistical Abstract - Census - 1981, Colombo,

6. School Census - 1980, Statistics Branch, Ministry of Education, Colombo - 2.

7. School Census - 1982, Statistics Branch, Ministry of Education, Colombo - 2.

8. University of Sri Lanka Hand Book - 1983. University Grants Commission, Colombo.

9. Third Annual Report of the University Grants Commission, 1981. Colombo.

# TEACHING OF TAMIL IN THE USSR

— ALEXANDER DUBIANSKI

It seems that one of the first information about Tamil language in Russia was presented by the so called "A comparative vocabulary of all languages and dialects", which was published in Russian by St. Petersburg Academy of Sciences in 1786 - 1789. The vocabulary contained 130 Dravidian words, among them 54 Tamil words.

In the end of the 19th century an eminent Russian scholar Professor S.K. Bulich studied some Tamil manuscripts and wrote an article on Tamil language, which was included in the Encyclopedia. But it was not until the 20th of the 20th century that Tamil came to be investigated more closely and began to be taught. This is connected with the activities of an outstanding Russian ethnographist and linguist A. M. Mervart.

Alexander Mervart and his wife Lyudmila Mervart went to India in 1917 on a scientific expedition organized by the Museum of ethnography and anthropology of Russian Academy of Sciences. They stayed in India and Sri Lanka for 4 years and collected huge and valuable scientific material. Besides they mastered several Indian languages, and the language to which they paid attention most of all was Tamil.

On returning to Russia A. Mervart continued to work on Tamil. He wrote to a famous Russian orientalist, academician S. F. Oldenburg: "One of the results of our journey to India is a possibility to teach Tamil and investigate problems connected with dravidology".

A. Mervart worked as a teacher in Leningrad University from 1927 to 1928 and among many subjects he taught was a comparative grammar of Dravidian languages. At the same time he gave lessons in the Leningrad Institute of living oriental languages. He taught Tamil to students, read classical Tamil texts with them.

Unfortunately the tradition of Russian tamilology due to unhappy concatenation of circumstances was broken. It is not known exactly how many students A. Mervart had and who they were. The only movement of his activity as a teacher is the book; "Grammar of Tamil conversational language", which was published in 1929.

After the World War II, in the 50th there appeared a group of enthusiasts in the Soviet Union who decided to start Tamil studies again. Among them were S. Rudin (in Leningrad), M. Andronov, Y. Glazov and A. Piatigorsky (in Moscow). They learned Tamil partly themselves, partly with the help of Tamiliars who happened to come to the Soviet Union. Especially great help was rendered to them by the late Mr. Purnam Somasundaram, who was the Tamil guru of several soviet scholars.

Semion Rudin (known in India as Sembiyan) was the first who organised a group at Leningrad State University in 1958. The group consisted of 4 students. S. Rudin worked out not only plans and methods of teaching Tamil but also prepared several special courses (Tamil grammar, History of Tamil literature). The experiment was a success (two former students of this group up to this time work as dictors in Tamil section of the Moscow radio) and in 1965 the second Tamil group was organized (4 students).

At the same time the Tamil group was started at Moscow University Institute of Oriental languages (6 students). The teachers were: Y. Glazov, V. Makarenko, A. Piatigorski. In 1970 two graduates from the group were left at the University and when the next Tamil group (7 students) was organised in 1971 they became its teachers (they were: Miss Alla Rogovtseva and Alexander Dubianski). The third (and for the time being the last) group existed from 1976 to 1981. It consisted of 9 persons.

The teaching of Tamil in Moscow University (Institute of oriental languages, *now Institute of Asian and African countries) provides not only language studies but* several theoretical courses for students, such as history of Tamil language, history of Tamil literature, theoretical grammar, lexicology, Tamil prosodical system, history of Tamil studies in the world. Every year a student must work on a Paper, the theme *of which depends on his speciality (philology: linguistics or literature; or history or* economics). Those who specialise on philology maintain close contact with Tamil language and literature. The range of materials under their study is very wide (from Cangam classics to modern novels). The same can be applied to their diplomas *as well.*

In addition to Moscow and Leningrad Universities there was a group of students, who learnt Tamil in Moscow Institute of International relations (the *teacher — Mrs. S. Trubnikova).*

Thus, more than 30 students studied Tamil in the Soviet Union (apart from those who studied it under A. Mervart). Many of them still deal (in this or that *form) with the language working at such places as Radio Moscow, "Progress"* "Raduga", "Miz" publishing houses, news agencies. They work together with a number of people who learnt Tamil by themselves or with the help of others.

*Now, temporarily, no formal Tamil class exists in the Soviet Union.* The teaching of Tamil is maintained only in the publishing houses of "Progress" and "Raduga" where those who work in Tamil sections study Tamil in order to improve their qualification.

# கேரளத்தில் தமிழ்க்கல்வி

— டாக்டர் கி. நாச்சிமுத்து

## பழங்காலம்

கேரளம், பழந்தமிழகத்தின் ஒரு பகுதியாக முன்பு இருந்தது. அன்று இப்பகுதியில் பேசும்மொழி தமிழாக இருந்ததால் கல்வி மொழியும் தமிழாகவே இருந்தது. நமக்குக் கிடைக்கிற சங்க இலக்கியத் தொகுப்பில் புரவலர்களாக அமைகிற சேரமன்னர்களே சோழ, பாண்டிய மன்னர்களைவிட அதிகமாக உள்ளனர். அது போன்றே புலவர்களிலும் பலர் சேர நாட்டினராக இருக்க வாய்ப்புண்டு. சங்க நூல்களிலே சுமார் 350 பாடல்கள் சேர நாட்டோடு தொடர்புடையன என்பார் பேராசிரியர் மு. ராகவய்யங்கார் (சேர வேந்தர் செய்யுட்கோவை முதற்பகுதி [1947] முன்னுரை, பக். VII). இது சங்க நூல்களில் ஆறில் ஒரு பாகம் என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழைப் போன்றே வடமொழி, தர்க்கம் முதலிய கல்வித்துறைகளிலும் பண்டைய சேர நாடு முன்னின்றது. 'வண்டமிழ் மறையோற்கு (பாலைக்கௌதமனார்க்கு) வானுறை கொடுத்த திண்டிறல் நெடுவேற் சேரலனாகிய பல்யானைச் செல்கெழு குட்டுவன் முதலிய குலவுவேற் சேரமன்னரின் கொடைத்திறம் கேட்டு' (சிலம்பு 23:62-64) சோழ, பாண்டிய நாடுகளிலிருந்து அந்தணர்கள் பலர் சேரநாட்டுக்குச் சென்றனர்.

பண்டைச் சேரமன்னர் அவையில் நடந்த தர்க்க ஆராய்ச்சிகள் மிகவும் புகழ் பெற்றவையாக இருந்தன. மதுரை அங்காடித் தெருவின் ஓசைக்கு,

கொடும் பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்துந்
தண்கட னாட னொண்பூங் கோதை
பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை (மதுரைக் காஞ்சி : 523-526)

யை உவமிப்பார் மருதனிள நாகனார். 'பல சமயத்தாரும் தம்மிற்றாம் மாறுபட்டுக்கூறும் தருக்கத்தைச் சேரக் கூறக் கேட்டிருக்கின்ற கம்பலை என்பது நச்சினார்க்கினியர் விளக்கம். சேரநாட்டுத் தலைநகர்மாகிய வஞ்சியில்,

தேவகுலமுந் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங் கினரும்
நன்னெறி காணிய தொன்னூற் புலவரும்
எங்ஙனும் விளங்கிய எயிற் புற இருக்கை
[மணிமேகலை : 26: 72-76]

கள் விளங்கின என்றும் அங்கே மணிமேகலை சமய வாதங்களில் ஈடுபட்டாள் என்றும் சாத்தனார் உரைப்பார்.

## இடைக்காலம்

இடைக்காலத்தில் ஸ்ரீ மூலவாசம் என்ற புத்தவிகாரை கேரளக் கரையில் புத்த மதக் கல்விச் சாலையாக விளங்கியது. காந்தளூர்ச் சாலை, பார்த்திவ சேகரபுரம் போன்ற இடங்களில் இருந்த சாலைகள், மிகுந்த புகழ் பெற்றவைகளாம். வடமொழியுடன்,

பிராகிருதம், வானநூல், ஆயுர் வேதம் முதலியவற்றிலும் கேரளத்திலிருந்தோர் தலை சிறந்து விளங்கினர்

மேனாட்டுத்தொடர்பால் யூதர், கிறித்தவர், முஸ்லீம்கள் ஆகியோரின் கல்வி நிலையங்களும் இங்கு எழுந்தன

முதல் தமிழ் நூல் அச்சிடப்பட்ட இடம் கொல்லம்தான். பிற்காலத்தில் கொச்சி, திருவிதாங்கூர் மன்னர்களின் ஆரம்பக்காலம் வரை ஆட்சி மொழியாகத் தமிழ் விளங்கியது. கல்வெட்டுக்களில் காணப்படும் மொழி பழம் மலையாளக் கூறுகள் [=கேரளத் தமிழ்] கலந்த தமிழேயாகும்

மலையாள மொழியின் முதல் இலக்கண நூலாகிய லீலா திலகம் (14 நூ.) மலையாளத்தை மலைநாட்டுத் தமிழ் என்றே கூறும். மலையாளத்தில் தொடக்கத்தில் வழக்கிலிருந்த பாட்டு, மணிப்பிரவாளம் என்ற இரண்டு இலக்கிய நெறிகளில் பாட்டு தமிழ் மரபை ஒட்டியதாகும். மணிப்பிரவாளம வட மொழியையும் வட மொழி இலக்கிய மரபுகளையும் மித மிஞ்சித் தழுவிக் கொண்ட ஓர் இலக்கிய மரபு.

**கல்வி வளர்ச்சியின் விளைவுகள் :**

கேரளத்தில் செல்வாக்குப் பெற்ற பிராமணர் செல்வாக்கும், இனக்கலப்பும், அதனால் ஆழமாகக் கற்கப்பட்டு வந்த வடமொழிக் கல்வியுமே மலைநாட்டுத் தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாளமொழி உருவாகக் காரணமாயிற்று. இக்காலத்தில் தமிழ்க் கல்வியும் இருந்ததைப் பாட்டு மரபு காட்டுகிறது. காலப் போக்கில் பிராமணர் அரசர் முதலிய உயர்வருக்கத்தினர் மணிப்பிரவாளத்தை ஆதரித்து, அதை மெல்ல மெல்லப் பேச்சு மொழியாக உயர்த்தி அதையே பின் மலைநாட்டுப் பொது மொழியாக உருவாக்கினர். இதில் மலைநாட்டு வட்டார வழக்கு மொழியின் வளர்ச்சியும், வரலாற்று மாற்றங்களும் பெரும்பங்கு வகித்தன. எனலாம். மலைநாட்டுத் தமிழுக்கும் ஏனைத் தமிழுக்கும் பொதுவாக இருந்த வட்டெழுத்தை (இதை மாற்றி இன்றைய தமிழ் எழுத்தை தமிழகப்பகுதியில் சோழர்கள் புகுத்திவிட்டனர்) ஒழித்து வடமொழி எழுதப் பயன் படுத்திய ஆரிய எழுத்தை (கிரந்தம்) தழுவிக்கொண்டது, மலைநாட்டுத் தமிழ் முழுமையும் வடமொழிச் செல்வாக்கிற்குட்பட வசதி செய்து கொடுத்தது.

மலை நாட்டுத் தமிழ், சோழ பாண்டியத் தமிழிலிருந்து பிரிய பூகோள அமைப்பு உதவி செய்தது போல வேறு இரண்டு காரணங்களும் இருந்தன.

ஒன்று, சங்க காலம் - சிலப்பதிகாரக் காலம் வை , படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டு வரும் மூவேந்தர் ஆண்டாலும் தமிழகம் ஒரு நாடு என்ற தமிழ்த் தேசீய உணர்வும் அதற்கேற்ற பழங்கதைகளும் வழங்கி வந்தன. சேரனாகிய செங்குட்டுவன் வடவர் சோழரைப் பழித்த போது - அது தமிழையும், தமிழகத்தையும் பழித்ததாகக் கருதி வட நாட்டின் மீது படை எடுத்த வரலாறு இத் தமிழ்த் தேசீய உணர்வை வற்புறுத்தும் ஓர் எடுத்துக் காட்டாகும், ஆனால் காலப் போக்கில் தமிழ் பேசும் நில மெல்லாம் ஒரு நாடு என்ற உணர்வு மறைந்து சேரர், சோழர், பாண்டியர் என்ற இன வழிப்பட்ட உள்நாட்டுணர்வுகள் வளர்ச்சியடைந்தன. சோழர் காலத்தில் இது உச்சத்தை அடைந்தது. சோழர் ஆதிக்கத்தை எதிர்க்கச் சேர நாட்டினருக்கு இவ்வுள் நாட்டுணர்வு கை கொடுத்தது. இதை வெளியிடும் குறியீடாகவே கேரளத்தை மேற்பால் கடலிலிருந்து

பரசுராமர் மழுவெறிந்து மீட்டு உருவாக்கினார் என்ற பழங்கதை இக்காலத்தில் தோன்றியது. உண்மையில் இப் பழங்கதை படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டு வந்த மூவரசர் ஆண்ட தமிழகத்திலிருந்து மேற்குத் திசையில் சேர நாட்டைப் பெயர்த்தெடுத்துத் தனி - மொழி - நாடாக அமைக்க உதவியது எனலாம்.

இரண்டாவதாக இக் காலகட்டத்தின் வரலாறும் இதற்கு உதவி செய்தது. சேர நாடொழிந்த ஏனைய தமிழ்ப் பகுதிகள் சோழருக்குப் பின் முசுலீம், கன்னட, தெலுங்கு, ஆங்கில அரசுகளின் கீழ் வந்தன. அன்றிலிருந்து தமிழ் நாட்டவர் கல்வியிலும், பொருள் வளத்திலும, கலையிலும், பண்பாட்டிலும் மற்றும் பல துறைகளிலும் தாழ்நிலையடைந்து அடிமைகளாயினர். ஒரு புறம் வடபாலிருந்து வந்த பண்பாட்டு மாற்றங்கள் தமிழ் மொழி, பண்பாடு முதலியவற்றைப் பாதித்து மாற்றங்களை ஏற்படுத்தின. மறுபுறம், சேரநாட்டோடு இருந்த அரசியல், மொழி, பண்பாட்டுத் தொடர்புகள் குறைந்து போயின. சேரநாடும் வடக்கு, மேற்குப் பாகங்களிலிருந்து வந்த பண்பாட்டுத் தொடர்புகளால் பாதிக்கப் பட்டுத் திரிபடைந்தது. இவ்வாறு மலை நாட்டுத் தமிழ் ஏனைத் தமிழிலிருந்து வேறுபட்டு, தமிழ் - மலையாளமாக வேறு வேறு வேறாகப் பிரிந்தன.

மலையாள மக்கள், பேசும் மொழி இன்றைய மலையாளமாக மாறிவிட்ட பின்பும், மலையாளம், வடமொழி இவற்றுடன் தமிழையும் கற்று வந்தனர். தவத்திரு. நாராயண குரு அடிகளார் போன்றோர் இதற்கு எடுத்துக் காட்டானவர்கள். கேரளப் பல்கலைக் கழகத்திலுள்ள ஐயாயிரம் தமிழ்ச் சுவடிகள், இங்கு தமிழ் கற்கப் பட்டதற்கு அடையாளமாக இருக்கின்றன. இது தமிழகத்திற்கு வெளியே உள்ள மிகப் பெரிய தொகுப்பாகும். கி. பி. 16 ஆம் நூற்றாண்டிலேயே திருக்குறள் மலையாளத்தில் மொழி பெயர்க்கப் பட்டிருந்ததையும், கம்பராமாயணம் பாவைக் கூத்தாக நடிக்கப்பட்டு வருவதையும் இங்கு சுட்டிக் காட்டலாம்.

விடுதலைக்குப் பிறகு இந்தி தேசீய மொழியாக ஆகிவிட்டபின் தமிழை முறையாகப் படிக்கும் மலையாளிகள் தொகை குறைந்து விட்டது. எனினும மலையாளத்துடன் நெருங்கிய பிணிப்புடைய தமிழை இன்றும் சொந்த முயற்சியால் கற்றுக் கொள்கிறவர்களும் இருக்கவே செய்கின்றனர். 1961 மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் படி தமிழை இரண்டாவது மொழியாகத் தெரிந்து வைத்துள்ளவர்கள் தொகை 28, 966 (ஆண் : 21, 833, பெண் : 7, 133). திருமண உறவு, வேலைத் தொடர்பு, வணிக உறவு, கலை, இலக்கிய மொழி உறவு முதலிய காரணங்களால் பல மலையாளிகள் தமிழை அறிந்து வைத்திருக்கின்றனர். தென்னகத்தின் அங்கீகரிக்கப்படாத இணைப்பு மொழியாகத் தமிழ் ஒரு காலத்தில் விளங்கியது. ஆங்கிலம், இந்தி மொழிகளின் செல்வாக்கும், கலை, இலக்கியத் துறையில் தமிழின் தரம் குறைவதும், பொருளாதார நிலையில் தமிழரின் தாழ்வும் தமிழ் இணைப்பு மொழி நிலையை இழந்து வருவதற்குக் காரணங்களாகும்.

### இன்று கேரளத்தில் தமிழ் பேசுவோர்

தமிழ் மலையாள வேறுபாடு நிலையாக ஏற்பட்ட பின்னர் கி. பி. 17 - ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் தமிழ்கத்திலிருந்து குடியேறிய மக்கள் இன்று தமிழர்கள் என வேறு படுத்தி அழைக்கப் படுகின்றனர் என்று தோன்றுகிறது.

தென் கேரளத்தில் தமிழரைப் பாண்டி (பாண்டி நாட்டவர்) என்றும், வட கேரளத்தில் கொங்கன் (கொங்கு நாட்டவர்) என்றும் அழைக்கின்றனர். இது ஆந்திரர் தமிழரை அரவாடு (அருவா நாட்டவர்) என்றும் கன்னடர் கொங்கவாரு (கொங்கு

நாட்டவர்) என்றும் தமது நாட்டை ஒட்டியுள்ள உள்நாட்டுப் பிரிவின் பெயரால் அழைக்கும் முறையை ஒத்துள்ளது.

சென்னை மாகாணத்தில் உட்பட்டிருந்த பழைய மலபார் மாவட்டத்திலிருந்த கோழிக் கோடு, பாலக்காட்டுப் பகுதியில் கோவை, சேலம் மாவட்டப் பகுதியிலிருந்து வேளாளர்கள், வன்னியர்கள், நெசவாளர்கள், தமிழ் நாடு 24 மனை தெலுங்குச் செட்டியார்கள், தஞ்சைப் பகுதியிலிருந்த பிராமணர்கள் முதலியோர் குடியேறினர். இடுக்கிப்பகுதியில் மலைத் தோட்டத் தொழிலாளர்களாக நிறையப் பேர் தென் மாவட்டங்களிலிருந்து குடியேறினர். திருவனந்தபுரம், கொல்லம் மாவட்டங்களில் பழைய திருவிதாங்கூரிலிருந்த தமிழ் பேசும் பகுதிகளிலிருந்தும், தென் மாவட்டங்களிலிருந்தும் வேளாளர், ரெட்டியார், செட்டியார், நாடார், பிராமணர் முதலியோர் குடிபெயர்ந்து வாழ்ந்தனர். 1971 மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் படி கேரளத்தில் தமிழ் பேசுவோர் தொகையும், அவர்கள் வாழுமிடங்களும் கீழ்க்கண்டவாறு அமைகின்றன. (1971-க்கு முன்பிருந்த மாவட்டப் பிரிவினை அடிப்படையிலேயே இக்கணக்கு அமையும்)

## 1971 மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி கேரளத்தில் தமிழ் பேசுவோர் தொகை

| வ. எண். | கேரள மாவட்டங்கள் | தமிழ் பேசுவோர் தொகை |
|---|---|---|
| 1. | கண்ணனூர் | 5, 743 |
| 2. | கோழிக்கோடு | 14, 098 |
| 3. | மலப்புறம் | 1, 603 |
| 4. | பாலக்காடு | 170, 574 |
| 5. | திருச்சூர் | 17, 393 |
| 6. | எரணாகுளம் | 24, 762 |
| 7. | கோட்டயம் | 172, 553 |
| 8. | ஆலப்புழை | 9, 812 |
| 9. | கொல்லம் | 25, 238 |
| 10. | திருவனந்தபுரம் | 63, 564 |
| | மொத்தம் | 505, 340 |
| | கிராமப்புறம் | 359, 479 |
| | நகரங்கள் | 145, 867 |

மேலே கண்ட பட்டியலிலிருந்து கோட்டயம் (இன்றைய இடுக்கி மாவட்டமும் சேர்ந்தது) பாலக்காடு மாவட்டங்களில் தமிழ் பேசுவோர் தொகை மிகுதி என்பதை உணரலாம்.

கேரளத்தில் மலையாளத்திற்கு (96. 0154%) அடுத்ததாக அதிகம் பேசப்படும் மொழி தமிழே ஆகும் (2. 3672%).

## 1911 – 1971 வரை ஒவ்வொரு பத்தாண்டுகளிலும் தமிழ் பேசுவோர் தொகையில் ஏற்பட்ட மாற்றங்களின் சதவீதம்

| ஆண்டுகள் | 1911 | 1921 | 1931 | 1951 | 1961 | 1971 |
|---|---|---|---|---|---|---|
| பேசுவோர் எண்ணிக்கை | 352, 795 | 323, 425 | 421, 230 | 342, 677 | 527, 708 | 505, 340 |
| மாற்றம் % | . . | —8.32 | +30. 24 | —18. 60 | +53. 61 | —4. 24 |
| மாநில மொத்த சதவீதம் | +5 12 | 4. 29 | 4. 58 | 2. 92 | 3. 12 | 2. 37 |

1941-க்குப் புள்ளி விபரங்கள் கிடைக்கவில்லை. 1911-இல் + 5. 12 சதவீதமாக இருந்த தமிழ் பேசுவோர் தொகை 1971-இல் 2. 37% ஆக சரிபாதிக்கும் கீழாகக் குறைந்து விட்டது. 1961-இல் இருந்ததை விட 1971-இல் - 4. 24 % ஆகத் தமிழ் பேசுவோர் தொகை குறைந்துள்ளதைப்பார்க்கலாம்.

இன்று கேரளத்திலுள்ள தமிழர்களைக் கீழ்க் கண்டவாறு பிரித்துப் பார்க்கலாம்

1. அண்மைக் காலத்தில் தொழில், வேலை முதலியவற்றுக்காகத் தமிழகத்திலிருந்து கேரளத்திற்கு வந்து குடியேறியவர்கள். இவர்கள் வீட்டில் தமிழ் பேசுவதோடு, பெரும்பான்மையும் தமிழ் மூலம் கல்வி பெறவோ, தமிழை முதல் மொழியாக படிக்கவோ செய்கின்றனர்.

2. தமிழ்நாட்டிலிருந்து முற்காலத்திலேயே கேரளத்தில் குடியேறி வாழ்பவர்கள். தமிழ்ப் பிராமணர்கள், வேளாளர்கள், விசுவகர்ம குலத்தினர், நாடார்கள், ரெட்டியார்கள் முதலியவர்கள் இத்தகையவர்கள். இவர்களை இரு பிரிவினராகப் பிரிக்கலாம்.

   அ. வீட்டில் தமிழ் பேசுவதோடு வெளியில் கல்வி முதலியவற்றைத் தமிழில் பெறுபவர்கள்.

   ஆ. வீட்டில் தமிழ் பேசுபவர்கள்; ஆனால் வெளியில் கல்வி, வாணிபம், தொழில் முதலியவற்றிற்கு மாநில மொழியாகிய மலையாளத்தைப் பின்பற்றுபவர்கள்.

3. தொடக்கத்தில் தமிழ் பேசுபவர்களாக இருந்தோர் காலப்போக்கில் தமிழையே மறந்து வீட்டு மொழியாகவும், தாய்மொழியாகவும் மலையாளத்தைத் தழுவிக் கொண்டு மலையாளிகளாக மாறிவிட்டவர்கள். பழைய திருவிதாங்கூர்ப் பகுதியில் இருந்து பின் கேரள மாநிலத்தில் சேர்க்கப்பட்ட பகுதியிலுள்ள மக்களில் பெரும்பகுதியினர் (நாடார், வேளாளர்.) இன்று தமிழை முற்றிலும் விட்டு மலையாளம் பேசுபவர்களாக மாறிவிட்டனர். இவர்களில் சிலர் தமிழ் மலையாளம் இரண்டையும் கையாளும் இருமொழியாளர்களாக இருப்பினும் இவர்களுக்குத் தமிழோடு உள்ள தொடர்பு மிகவும் சுருங்கியது. பாலக்காட்டுப்

பகுதியில் காணப்படும் மூத்தான் என்ற சாதியினரும் இங்ஙனம் காலப்போக்கில் தமிழை விட்டவர்களாகத் தோன்றுகின்றனர். ஆனால் அதே சமயம் வீட்டில் பேசும் தெலுங்கையும் விடாமல் தங்கள் முதல் மொழியாகத் தமிழையும் விடாமல் இருப்பவர்கள் ரெட்டியார்கள், செட்டியார்கள் முதலியோர். விசுவகர்ம குலத்தினரும் வீட்டில் விடாது தமிழ் பேசி வருகின்றனர்.

மேலே கண்ட பிரிவினரில் முதற்பிரிவினரும் இரண்டாவதின் முதல் துணைப் பிரிவினரும் கல்வித்துறையில் தமிழை மிகுதியும் பயன் படுத்த முனைகின்றனர். இரண்டாம் பிரிவில் துணைப்பிரிவினர் பத்திரிக்கைகள், கலை பண்பாட்டளவில் தமிழோடு தொடர்பு கொள்கின்றனர்.

முதல் இரு பிரிவினரும், காலப்போக்கில் மண உறவு, பொருளாதார சமூகப் பாதுகாப்பு நடை முறை வசதி முதலியவற்றால் மூன்றாம் பிரிவினராக மாறிவிடுகின்றனர். எடுத்துக்காட்டாகத் தென் கேரளத்தில் வேளாளர் - நாயர் மண உறவு காரணமாக முன்னவர் பின்னவராக மாறுகின்றனர். நாடார் மற்றும் சில பிரிவினர் கேரளப்பகுதியில் உள்ளவர்கள் இன்று மலையாளம் மட்டுமே பேசுகின்றனர். இன்னொன்று பள்ளியில் மயைாளம் படிக்கும் தமிழர்கள், விண்ணப்பம் முதலியவற்றில் தாய்மொழியைப் பதிவு செய்யுமிடங்களில் தமக்குத் தெரியாத தமிழைக் கொடுப்பதை விட மலையாளத்தையே தாய்மொழியாகக் குறிக்கின்றனர். இவையே கேரளத்தில் தமிழர் தொகை புள்ளி விவர அடிப்படையில் குறைந்து வருவதற்கான காரணங்கள். அடுத்தது கேரளத்திலிருந்து தமிழர்கள் வெளியேறுவதாலும் தமிழர் தொகை ?குறையக் கூடும். ஆனால் அதை உறுதி செய்யவோ, மறுக்கவோ போதிய ஆதாரங்கள் இல்லாததால் அதை இப்போது காரணமாக எடுத்துக் கூற இயலாது.

இவ்விடத்தில் தமிழகத்திலும் ஏனைய இடங்களிலும் காணப்படும் நிலைகளை எடுத்து ஒப்பிடலாம். தமிழ் நாட்டில் வாழும் மலையாளம், தெலுங்கு, கன்னடம், முதலிய மொழிகள் பேசும் மக்கள் வெளியில் தமிழை முதல் மொழியாகக் கொண்டிருந்தாலும், வீட்டில் தம் தாய் மொழியை விடாது பேசி வருகின்றனர். ஆனால் கேரளத்தில் வாழும் வேளாளர், நாடார் முதலியோர் தமிழை விட்டு விட்டனர். ஏன்?

ஒரு மொழி பேசும் மக்கள் பிறமொழிச் சூழலில் வாழும் போது தம்மொழியை விட்டு விட [1] அவர்கள் வாழும் பிற மொழிச் சூழலின் வற்புறுத்தல் (பொருளாதார வாய்ப்பின்மை — சகிப்பின்மை முதலியன) [2] தம் மொழியை விடத் தயாராகும இணக்க நிலை முதலியவை காரணங்களாக அமையும். அதே போன்று ஒரு மொழி பேசும் மக்கள் பிறமொழிச் சூழலில் வாழும் போது தம் மொழியை விட்டு விடாதிருக்க [1] அவர்கள் வாழும் பிறமொழிச் சூழலின் நல்லிணக்கம் (பொருளாதார வாய்ப்பு, சகிப்புத்தன்மை முதலியன) [2] தம் மொழியை விடாத பற்று நிலை முதலியவை காரணங்களாக அமையும். இவற்றை வைத்துப் பார்க்கும் போது முதல் நிலைக்குக் கேரளமும், இரண்டாம் நிலைக்குத் தமிழகமும் எடுத்துக் காட்டாக விளங்குவதைப் பார்க்கலாம். சுருங்கச் சொன்னால் தமிழர்கள் தமிழகத்தில் பிற மொழியாளர்களைச் சகித்துக் கொள்பவர்களாகவும், வெளியிடங்களில் தமிழை விட்டுவிட்டுப் பிறரோடு ஒன்றிவிடத் தயாராக இருப்பவர்களாகவும் உள்ளனர் எனலாம். இவ்வுண்மை தமிழர்கள் தம் மொழியைவிடாத பற்றாளர்கள் வெறியர்கள் என்று பிறரால் வெளியில் புனைக்கப் பட்டுள்ள கருத்தை பொய்ப்பிக்கிறது. உண்மையில் தமிழர்களை விடப் பிறரே தமிழர்கள் மீது தம்மொழியைத் திணிப்பவர்களாகவும், சகிப்புத் தன்மை இல்லாதவர்களாகவும்

உள்ளனர். தமிழர்கள் மொழி விருப்பெல்லாம், வெறும் ஆரவாரத்தோடு சரி, நடைமுறையிலும் செயலிலும் அவர்கள் சகிப்புத்தன்மையும், பெருந்தன்மையும், எதையம் ஏற்றுக்கொள்கிற விரிந்த மனநிலையும் உள்ளவர்களாக இருக்கின்றனர்.

தமிழ்நாட்டில் எழுந்துள்ள தமிழ் ஆர்வ இயக்கத்தை ஐயக்கண் கொண்டு நோக்கி அதை ஒரு வெறியாகவும், பிற மொழியாளர்க்கு எதிரானதாகவும் நினைக்கின்ற பிறமொழியாளர்கள் உண்டு. இதுவும் ஒரு தவறான கருத்தாகும். தமிழ்நாட்டில் தமிழியக்கம் எழக் காரணமே, தம் நாட்டில் தம் மொழி ஆட்சி, கல்வி, சமயம், கலை முதலிய் துறைகளில் தீண்டா மொழியாக ஆண்டாண்டுகளில் ஒதுக்கி நசுக்கப்பட்டதற்கு எதிர்ப்பைக் காட்டுவதுதானே ஒழிய, அது எவர் மீதும் வெறுப்பை வளர்ப்பதோ, எவரையும் அழிப்பதையோ நோக்கமாகக் கொண்டதன்று என்பதை வரலாறு கற்ற எவரும் உணர்வர். இவ் வரலாற்றுண்மையை மறைப்பவரும், திரிப்பவரும் உண்மையில் வெறியர்களும் சுரண்டல்காரர்களும் ஆவர்.

## சட்டமன்றப் பிரதி நிதித்துவம்

மொழிச் சிறுபான்மையினருக்குச் சட்டசபையில் தனிப் பிரதிநிதித்துவம் இல்லை. தேயிலைத்தோட்டம், மற்றும் எல்லைப் பகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட தமிழ்ச் சட்டமன்ற உறுப்பினர்களும், ஓரிரு அமைச்சர்களும் உள்ளனர். அரசு தேர்வாணைக் குழுவில் தமிழ் மொழிச் சிறுபான்மையினர் சார்பில் ஓர் உறுப்பினர் உள்ளார்.

## மொழிச் சிறுபான்மையினருக்கான நிர்வாக வசதிகள்

கேரள மாநிலத்தில் மொழிச் சிறுபான்மையினர்க்குரிய உரிமைகளைப் பாதுகாக்கும் வண்ணம், நிர்வாகக் கல்வி வசதிகள் செய்யப்பட்டுள்ளன. தமிழ் பேசுவோர் மிகுதியாக உள்ள பகுதியில் நிர்வாகத்தில் தமிழைக் கூடுதல் மொழியாகக் கையாளவும் தமிழ் மூலம் கல்வி பெறவும் ஏற்பாடுகள் உள்ளன. தமிழ் பேசும் பகுதியில் அமர்த்தப் பெறும் அலுவலர்கள் தமிழிலும் தேர்ச்சி பெற்றால் ஊக்க ஊதியம் அளிக்கப் பெற்று வந்தது. சட்டமன்றத்தில் தமிழ் மொழிபெயர்ப்புப் பிரிவும் மொழி பெயர்ப்பாளர்களும் உள்ளனர்.

## கல்வி வசதிகள்

கேரளத்தில் தமிழ் பயில வசதி உள்ள தொடக்கப்பள்ளிகளும், உயர்தொடக்கப் பள்ளிகளும் பற்றிய புள்ளி விபரங்கள் கிடைக்கவில்லை.

## உயர் நிலைப் பள்ளிகள்

முப்பத்தைந்து பள்ளிகளில் தமிழை ஒருமொழியாகப் படிக்கவும், தமிழ்ப் பயிற்று மொழிவழி படிக்கவும் சில பிரிவுகள் காணப்படுகின்றன. திருவனந்தபுரம், சாலை தமிழ் உயர்நிலைப்பள்ளி மட்டும் முற்றிலும் தமிழ் மொழி வழி படிக்க அமைந்த ஒன்றாகும். மேலே குறிப்பிட்ட பள்ளிகளின் பெயர்களையும், அவற்றில் 1984 மார்ச்சில் பள்ளி இறுதி வகுப்புத் தேர்வு எழுதியோர், வெற்றி பெற்றோர் பற்றிய எண்ணிக்கை விவரங்களையும் கீழே காணலாம்:

## 1984 - மார்ச்சு. கேரள மாநிலப் பள்ளி இறுதி வகுப்பில் தமிழ்ப் பயிற்று மொழியில் படித்த மாணவர்கள் பற்றிய விவரங்கள்

| வரிசை எண். | பள்ளியின் பெயர் | தேர்வு எழுதியோர் | வெற்றி பெற்றோர் | முதல் வகுப்பு |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1 | அரசு உயர் பள்ளி, மூணாறு. | 172 | 13 | 3 |
| 2 | அரசு உயர் பள்ளி, தேவிகுளம் | 32 | 11 | — |
| 3 | அரசு உயர் பள்ளி, சோத்துப்பாறை | 5 | — | — |
| 4 | அரசு உயர் பள்ளி, வாகவரை | 8 | — | — |
| 5 | அரசு உயர் பள்ளி, செண்டு பாறை | 8 | தேர்வுக்கு வரவில்லை | — |
| 6 | அரசு உயர் பள்ளி, கூடார விளை | 8 | — | — |
| 7 | அரசு உயர் பள்ளி, குமிளி | 16 | — | — |
| 8 | அரசு உயர் பள்ளி, மறையூர் | 7 | 6 | 0 |
| 9 | அரசு சி. எம். உயர் பள்ளி, பீர்மேடு | 21 | 4 | — |
| 10 | ஊராட்சி உயர் பள்ளி, ஏலப் பாறை | 60 | 3 | — |
| 11 | சீந்தலாறு உயர் பள்ளி, பசுப்பாறை | 27 | 3 | — |
| 12 | ஊராட்சி உயர் பள்ளி, வண்டிப் பாறை | 83 | 26 | 3 |
| 13 | லிட்டில் பிளவர் பெண்கள் உயர் பள்ளி, மூணாறு, கட்டப்பனை | 41 | 25 | 2 |
| 14 | தூய இருதய உயர் பள்ளி, காந்தளூர் | 18 | 8 | 0 |
| 15 | அரசு மாதிரி ஆண்கள் உயர் பள்ளி, கொல்லம் | 9 | 3 | — |
| 16 | அரசு மாதிரி பெண்கள் உயர் பள்ளி, கொல்லம் | 4 | — | — |
| 17 | அரசு பெண்கள் உயர் பள்ளி, கரமனை | 16 | 6 | 2 |
| 18 | அரசு மாதிரி உயர் பள்ளி, திருவனந்தபுரம் | 23 | 22 | 5 |
| 19 | அரசு மைய உயர் பள்ளி, திருவனந்தபுரம் | 66 | 33 | 5 |
| 20 | அரசு தமிழ் உயர் பள்ளி, சாலை, திருவனந்தபுரம் | 79 | 51 | 9 |
| 21 | அரசு பெண்கள் உயர் பள்ளி, காட்டன் ஹில், திருவனந்தபுரம் | 4 | 4 | 3 |
| 22 | அரசு பெண்கள் உயர் பள்ளி, பார்ட்டன் ஹில், திருவனந்தபுரம் | 4 | 1 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 23 | எல். எம். எஸ். தமிழ் உயர் பள்ளி, பாறசாலை | 32 | 18 | 4 |
| 24 | அரசு உயர் பள்ளி, பாலராமபுரம் | 14 | 1 | — |
| 25 | தூய பவுல் உயர் பள்ளி, கொழிஞ்சாம்பாற | 163 | 46 | 5 |
| 26 | அரசு உயர் பள்ளி, கஞ்சிக் கோடு | 15 | — | — |
| 27 | அரசு உயர் பள்ளி, கோழிப் பாறை | 78 | 19 | 1 |
| 28 | பி. எம். அரசு உயர் பள்ளி, பாலக்காடு | 61 | 13 | 2 |
| 29 | ஹேமாம்பிகா சமஸ்கிருத உயர் பள்ளி, கல்லேக் குளங்கரை | 13 | 9 | 3 |
| 30 | அரசு ஆண்கள் உயர் பள்ளி, சிற்றூர் | 30 | 8 | 2 |
| 31 | விக்டோரியா அரசு பெண்கள் உயர் பள்ளி, சிற்றூர் | 31 | 10 | 1 |
| 32 | அரசு உயர் பள்ளி, முதல மடை | 18 | 2 | 0 |
| 33 | அரசு உயர் பள்ளி, அகளி | 12 | 2 | 0 |
| 34 | அரசு எஸ். எம். உயர் பள்ளி, தத்தமங்கலம் | 23 | 2 | 1 |
| 35 | சமஸ்கிருத உயர் பள்ளி, நல்லேப் பிள்ளி | 6 | 2 | — |
| | | 1199 | 351 | 53 |

மேலே கண்ட புள்ளி விவரங்களிலிருந்து சுமார் 29% மாணவர்களே தேர்வுகள் வெற்றி பெற்றுள்ளதையும் சுமார் 45% மாணவர்களே முதல் வகுப்பில் தேர்வு பெற்றுள்ளதையும் அறிகிறோம். சில பள்ளிகளில் யாருமே தேர்வு பெறவில்லை என்பதுவும் குறிப்பிடத்தக்கது. இது மிகவும் வருந்தத்தக்கநிலை. இது பற்றிக் கேரளச் சட்ட சபையில் கேள்வி கேட்டார்கள். சில பள்ளிகளில் போதிய ஆசிரியர்கள் நியமிக்கப்படவில்லை என்று அமைச்சரே ஒத்துக்கொண்டார். அரசு தரப்பில் பள்ளி வசதிகளை ஏற்படுத்தாமை, தமிழ் படித்தவர்களுக்குப் போதிய வேலைவாய்ப்பின்மை முதலியவை எதிர்த்தரப்பில் குற்றம் என்றாலும், இக்கீழ் நிலைக்குக் காரண கர்த்தர்கள் தமிழர்களே என்பதில் ஐயமில்லை.

கல்வித்துறையில் மிக முன்னணியில் நிற்கிற மாநிலம் கேரளம்; ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாகப் போட்டி போட்டுக் கொண்டு கல்வி கற்பதிலும், அதன் வழியாகத் தம் அறிவையும், வாழ்க்கை நிலைகளையும், வசதிகளையும் உயர்த்திக் கொள்ள இடையறாது விழிப்போடும் முனைப்போடும் முயலகிற மலையாள நாட்டவர் நடுவில வாழும் தமிழர்கள் மட்டும் கண்ணிருந்தும் குருடர்களாய், தம் அறிவுக் கண்களைத் திறக்கும் கல்வியில் ஈடுபாடோ, கவனமோ, முயற்சியோ, முனைப்போ இன்றி இருப்பது ஏன்?

1. பெரும்பாலும் கல்வியறிவில் தாழ்ந்திருக்கும் தமிழர் கல்வியின் இன்றியமையாமையை உணராமல் அறியாமையில் மூழ்கிக்கிடப்பது ஒரு காரணம்.

2. இரண்டாவது காரணம் தமிழர்களின் வறுமையும் நோயும். கேரளத்தில் தமிழர்களில் பலரும் குறைந்த வருமானப் பிரிவினராகவே உள்ளனர். வாழ்க்கைப் போராட்டங்களுக் கிடையே கல்விபெறப் பொருளாதாரக் காரணங்கள் முட்டுக் கட்டை இடலாம்.

3. தமிழர்களில் பலரும் முயற்சிக் குறையும் முனைப்பின்மையும் மிக்கவர்கள். இதுவும் அவர்கள் கல்வியில் முன்னேறாமைக்கு ஒரு காரணமாகும்.

4. தமிழர்கள் இன்று பொதுவாக அநீதிக்கு எதிராகப் போராடும் உணர்வையும் எழுச்சியையும் இழந்து விட்டார்கள். தம்மைப் பிறர் யாராவது காத்து ஆறுதல் தரவேண்டும் என்று எதிர் பார்ப்பவர்களாக உள்ளனரேயன்றி, தம் உரிமையை நிலைநாட்டத் தம்மாலான முயற்சிகளைச் செய்வதில் முனைப்பற்றவர்களாக உள்ளனர்.

5. அடுத்தது, ஒற்றுமையின்மை. தமக்கு இழைக்கப்படும் அநீதியை எதிர்த்துப் போராடவும் தம் நலனைக் காக்கவும் ஒற்றுமையே வலிமை என்பதை உணராது தமக்குள் பூசலை வளர்த்துப் பிரிந்து நின்று தமிழர்கள் தம்மையே ஒழித்துக் கொள்வதில தலைசிறந்தவர்களாக உள்ளனர்.

6. மத்திய தர, தாழ்த்தப்பட்ட தமிழர்களிடையே உள்ள அறியாமை மூடநம்பிக்கை முதலியவற்றைச் சுட்டிக்காட்டி, அவர்களின் வாழ்வை மேம்படுத்தும் அடிப் படைப் போராட்ட உணர்வை வளர்த்து வழிகாட்டும் சரியான தத்துவமோ, தலைமையோ, கேரளத்திலும், தமிழகத்திலும் ஏன் உலகெங்கும் உள்ள தமிழர்கள் எல்லோருக்குமே இல்லாமை அடுத்த காரணம். இதனால் தம்முடைய பகற்கனவில் மூடசொர்க்கங்களை உருவாக்கித் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொண்டு அதற்கு அனுசரணையான சுரண்டல், கலை, இலக்கிய, அரசியல் இயக்கங்களாலும் அவற்றின் போக்குகளாலும் பாதிக்கப்பட்டு ஏமாற்றப்பட்டு வாழ்ந்து வருவது இன்னொரு காரணம்.

7. கல்வி பரவினால் தம் சுரண்டல் நடவாது என்ற உயர்வர்க்கத்தினரின் சூழ்ச்சிகளால் பெரும்பான்மையான ஏழைத் தமிழன் கல்வி பெறும் வாய்ப்புக்களை பயன் படுத்தாமை மற்றொரு காரணமாகும.

மேலே கூறியவையும் இன்னும் இது போன்ற காரணங்களும் கேரளத் தமிழர்க்கு மட்டுமின்றித் தமிழ்நாட்டுத் தமிழர்க்கும் உலகெங்கிலுமுள்ள எல்லாத் தமிழர்களுக்கும் பொருந்தும்.

## இன்றைய கல்வித் துறை பற்றிப் பொது நிலையில் ஒரு சீர் தூக்கல்

இந்த இடத்தில் இன்றைய கல்வித்துறைபற்றிய ஒரு மதிப்பீடு இன்றியமையாதது. இன்று கல்வி, முன்பு போலவே சுரண்டல், பொருளாதார ஏகாதிபத்தியம் முதலியவற்றின் கருவியாக மறுபடியும் மாறியுள்ளது. அரசும் சட்டங்களும், பொருளாதாரம், சமூகம், கல்வி முதலியவற்றில் தாழ்ந்துள்ள மக்களுக்கு எவ்வளவோ பாதுகாப்புகள் கொடுத் திருந்தாலும், அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளும் நிலையில் அவர்களில் பலரும் இல்லை. பழைய ஆளும் வர்க்கம் அப்பாதுகாப்பைப் பயனற்றதாகச் செய்ய ஒருபுறம் முயற்சி செய்வதோடு வேறு புத்தம் புது முறைகள் மூலம் அரசின் அடிப்படை நோக்கத் தையும் கல்வியின் பயனையும் ஒன்றுமில்லாமல் தகர்த்தெறியக்கங்கணம் கட்டிக்கொண்டு முயற்சி செய்து வருகின்றனர்.

இதற்கு ஒரு எடுத்துக்காட்டுக் கூறலாம். 'அனைவருக்கும் கல்வி' என்பது நமது தேசீயக் குறிக்கோள். இக்குறிக்கோளை அடைய அரசு கல்வியைத் தன் கண்காணிப்பிலும் அதிகாரத்திலும் வைத்துக் கொள்வது மிகமிகத் தேவையாகும். கல்வித்துறையில் அடைய வேண்டிய குறிக்கோளை வகுப்பதற்கும் அதற்காக நடைமுறைப் பணிகளை மேற்கொள்வதற்கும் அரசு முழு அதிகாரமும் வசதியும் படைத்ததாக இருக்க வேண்டும். இன்று உண்மையில் கல்வித்துறை அரசின் பரிபூரண ஆட்சியில் இல்லை. தந்நலச்சார் புள்ள தனியார் துறையினரே கல்வித் துறையில் இன்று முன்னிற்கின்றனர். இதன் காரணமாக அரசு வகுக்கும் கல்வித் திட்டங்களை முழுமையாக நிறைவேற்ற இயலாத நிலை. இதில் இரண்டு நிலைகள் கவனிக்கத்தக்கவை. ஒன்று அரசின் கல்வித்துறைகளும், பள்ளிகள், கல்லூரிகள் முதலிய நிறுவனங்களும் மிகவும் தரம் குன்றியவைகளாகவும், கல்விபரப்பும் குறிக்கோள் நிறைவேற்ற இயலாத முடத் தெங்குகளாக உள்ளமை. இரண்டு. அரசின் கல்வி நிலையங்களுக்குப் போட்டியாக விளங்கும் தனியார் கல்வி நிலையங்கள இதற்கு மறுதலையாக உள்ளமை. கல்வி படிப்பிப்பதிலும், அவற்றைச் செவ்வையாக நடத்துவதிலும், அவற்றை வைத்து ஊதியம் அடைவதிலும் சிறந்து விளங்குகின்றனர். ஆனால் 'நலிந்த மக்கள் மேம்பாடு' என்பது இத் தனியார் நிறுவனங்களுக்குக் குறிக்கோளல்ல; அவற்றில் பலவும் வணிக முயற்சிகளாய் பணம், அதிகாரம், இனம், குழு முதலியவற்றின் கைப்பாவைகளாய், மேல்தட்டு வர்க்கத்தினரின் தேவைகளை நிறைவேற்றும் கொடும் குத்தகையமைப்புக்களாய் விளங்குகின்றன. நல்ல நிறுவனங்கள் என்று பெயர் பெற்று விளங்கும் தனியார் கூடங்களில் திறமையிருந்தாலும் ஏழை எளியவன் நுழைய முடியாது. அதே சமயம் திறமையுள்ள ஏழை எளியவன் தன்னை வளர்த்துக் கொள்ள உதவும் அமைப்புக்களாய் அரசு நிறுவனங்கள் விளங்கவும் இல்லை. எனவே பழைய குருடி கதவைத் திறடி தான். கடையவன் எப்பாடு பட்டாலும் கடைத்தேற இயலாது. மழலைப் பள்ளியிலிருந்து நன்கொடை கொடுத்து ஏழை அம்பலமேறிப் படிக்க முடியுமா ?

அண்மையில் சுயநிதித் தொழிற் கல்லூரிகள் என்ற போர்வையில் தமிழ் நாடு அரசு நடத்தி வரும் கல்விக் கொள்கை இதில் ஒரு புரையோடிப் போன நிலையைக் காட்டுகிறது. உண்மையில் இது ஒரு மாய்மாலமாகும். ஒரு புறம் பார்த்தால் தொழிற் கல்வி பரவுவது போன்ற தோற்றம், நடை முறையில் கல்வி, பணம் படைத்தவர்க்கு மட்டுமே இவ்வழிகளில் உதவும். தனியார் பின்பற்றி வரும் அநீதியான கல்விக் கொள்கைகளுக்கு இது சட்ட முறையிலான அங்கீகாரத்தைத் தந்து கையூட்டுக்கு ரசீது தந்து, பொருளாதாரக் கொள்ளைக் காரர்களை ஊக்குவிக்கும் திட்டமே இது. எல்லோருக்கும் கல்வியளிக்க அரசிடம் பணம் இல்லை என்ற வாதம் பொய்யானது. அனைவருக்கும் கல்வியளிக்கும் உயரிய அடிப்படையான குறிக்கோளை நடை முறைப் படுத்த முடியாத அரசைப் பொது நல மக்களரசு என்று (அது எக்கட்சியைச் சார்ந்தாயினும்) கூற முடியுமா ? தனியார் துறையின் கோட்டைகளாகிய ஜெர்மனி, பிரான்சு போன்ற முன்னேறிய நாடுகளில் கூடக் கல்வித் துறையில் தனியார் ஆதிக்கம் அனுமதிக்கப் படுவது இல்லை. பொதுவுடமை நாடுகளைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை

இன்றைய இந்தியக் கல்வித் துறை முழுமையும் அரசின் ஆதிக்கத்தின் கீழ் வர வேண்டும் ஆனால் அது மீண்டும் ஒரு கவைக்குதவாத, திறமையற்ற, உதவாக்கரை அரசு நிறுவனமாக ஆகாமல், தேசீயக் குறிக்கோள்களை எட்டிப் பிடிக்க நடக்கும் ஒரு மாபெரும் களப் போராட்டமாக மாறவேண்டும். இன்று கல்வித் துறையில கையோங்கிக் களையாக வளரும் தனியார் துறையின் பொருளாதாரச் சுரண்டற் கொடுங்கோன்மையை ஒழிக்க ஒரே வழி இதுவே. மழலைப் பள்ளி முதல் பல்கலைக் கழக உயர் கல்வி வரையுள்ள கல்வித் துறையின் எல்லாக் கட்டங்களையும் அரசே ஏற்று அனைத்து மக்களின்

நன்மைகளுக்காகக் குறிக்கோள்களை வகுத்துத் திறமையாக நடை முறைப் படுத்த வேண்டும். ஆனால் இன்று நடை முறையிலுள்ள போலி மக்களாட்சி முறையில் இது சாத்தியம் என்று தோன்றவில்லை. மக்களுக்காக, மக்களால் தேர்ந்து கொள்ளப்படும் ஒரு அசலான மக்களாட்சி முறையிலேயே இது நடை முறை சாத்தியமாகும். நாம் அந்த நிலையை எட்டிப் பிடிக்க இன்னும் போக வேண்டிய பாதை மிகவும் நீண்டு கிடக்கிறது.

## தாய் மொழியில் கல்விப் பயிற்சி

தாய்மொழிக் கல்வி பற்றி விரிவாகப் பேசுவதற்கு உரிய இடம் இது அன்று எனினும், சில தொடர்புடைய கருத்துக்களை எடுத்துரைப்பதில் தவறில்லை.

1. தாய் மொழியில் கல்விப் பயிற்சி சிறந்தது என்பது அறிவியல் பூர்வமாக நிரூபிக்கப் பட்டிருந்தாலும் - அது மட்டுமே சிறந்த வழி அன்று என்று கூறுகின்றவர்களும் உண்டு. இவர்கள் முதற் பிரிவினர்.
2. தாய்மொழியில் கல்விப் பயிற்சியை ஏற்றுக் கொள்கிறவர்களும் நாட்டு நிலை தற்கால நடை முறை வசதி இவற்றை எடுத்துக் காட்டி ஆங்கிலத்தின் மூலம் கல்வி பயிலும் இன்றைய நிலையே நீடிக்கட்டும் என்று கருதுகிறவர்கள் அடுத்த பிரிவினர்.
3. தாய் மொழியில் கல்விப் பயிற்சியை உடனடியாக எப்பாடு பட்டாயினும் நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும் என்று விரும்புகிறவர்கள் மூன்றாம் பிரிவினர்.

இதில் முதற் பிரிவினர் கருத்து, சில அசாதாரணச் சூழ்நிலைகளுக்குப் பொருந்தக் கூடியதாக இருக்கலாம். ஆனால் அதுவே எல்லோருக்கும பொருந்தக் கூடிய பொதுக் கருத்தல்ல. எனவே வேண்டுமென்றே சாதிக்கும் அவர்கள் கருத்தை அலசுவதால் பெரிய பயனொன்றும் இல்லை.

இரண்டாவது பிரிவினர் கருத்து சற்று ஆராயத்தக்கது. இவர்கள் கருத்துப்படி தாய் மொழியில் ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ளவர்கள் கல்வி கற்கத் தொடங்கினால் பிற மாநிலங்களுக்கு வேலைக்குப் போக முடியாது - கற்றவர்கள் விருப்பம் போல் எல்லா இடங்களுக்கும் செல்ல இயலா நிலை ஏற்படும் என்பதாகும். ஆனால் ஆழ்ந்து பார்த்தால் இது உண்மையன்று. முதலாவது. தம் மாநிலத்தை விட்டு வெளி மாநிலங்கள், நாடுகள் முதலியவற்றிற்கு வேலைக்குப் போகிறவர்கள் தொகை-அவ்வம் மாநிலங்களில் வேலை பெறுகிறவர்களை விட மிகவும் குறைவு. இரண்டாவது, தாய்மொழியில் படிக்கும்போது, ஆங்கிலம். போன்ற பொதுமொழியின் அறிவு குறைந்து விடாமல் அம் மொழிக்கல்வியை அழமானதாகச் செம்மைப் படுத்தினால் போதுமானது. அத்தோடு தாய்மொழியில் கற்றதை ஆங்கிலம் வழி வெளிப்படுத்தும் திறமையையும் கற்பித்துவிட்டால் போதும்-அவர்கள் எங்கும் போகலாம்.

அடுத்து பல்வேறு மாநிலத்தவர்களும் தத்தம் மொழிகளில் பயில்வதால் பிரிவினை உணர்வு பெருகிவிடும் என்பது தவறான வாதமாகும். ஒரே மொழி பேசும் நாடுகள் (பங்களாதேஷ், மேற்கு வங்காளம், இரண்டு ஜெர்மனிகள்) வேறு வேறு காரணங்களால் (மதம், கொள்கை) தனித்தனி நாடுகளாகப் பிரிந்துள்ளதை நாம் அறிவோம். எனவே உடன்பாட்டு நிலையில் அத்தகைய வேறு காரணங்களே - அதாவது இந்திய நாட்டின் நில, பண்பாட்டு ஒருமை, பொது வரலாறு, தேசீய மரபுகள், மற்றும் சமகால அரசியல், இராணுவ இன்றியமையாமை முதலியவை, மொழி வழி ஏற்பட்டுவிடக் கூடிய நாட்டுப் பிரிவினையைத் தடுக்கும் வலிமையான மாற்றுச் சக்திகளாகும்.

அடுத்துப் பாடப் புத்தகப் பற்றாக் குறை, போதிய பயிற்சி பெற்ற ஆசிரியர் இல்லாமை, சிறு பான்மையினர் பாதுகாப்பு இவற்றைக் கூறி முட்டுக் கட்டை போடு வார்கள். இவை உண்மையில் முயன்றால் தீர்க்கக் கூடியவைகளே. சிறுபான்மையின ருக்குப் போதிய பாதுகாப்புத் தருவதும் கடினமான காரியம் அன்று.

எனவே மூன்றாவது பிரிவினர் கருத்துப்படி நாட்டு மொழிகளில் கல்வியைத் தொடக்க நிலையிலிருந்து உயர் நிலை வரை கொண்டு வருவதிலே முன்பின் யோசிக்கவே நேரமில்லை. இப்போதே மிகவும் சுணங்கி விட்டோம். இனியும் சுணக்கினால் எதிர் காலம், நம்மீது உறுதியாகப் பழி சுமத்தும். மாநில அரசுகளும் மத்திய அரசும் நாட்டு மொழி வழியாகக் கற்றவர்க்கு(ச் சிறுபான்மையினர் நலம் கெடாதவகையில்) வேலை வாய்ப்பில் முன்னுரிமை அளித்தால் போதும். நிலை உடனடி மாறிவிடும்.

எனவே பாரதி பாடியது போன்று பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம் விழிபெற்றுப் பதவி கொள்ளக் கல்வியின் மேன்மையை எடுத்துரைத்துத் தமிழர்கள் அனைவரையும் விழிப்படையச் செய்து பல கல்வி தந்து அவர்களைப் பாரிடை உயர்த்தச் செய்ய வேண்டிய இரண்டாம் விடுதலைப் புரட்சியை நடத்த வேண்டிய காலம் இது. இம் முயற்சியில் உலகத் தமிழ்க் கல்வி இயக்கம் வரலாறு பூர்வமான தன் பணியை நிறை வேற்றும் என்று எதிர்பார்க்கிறோம்.

## மையப் பள்ளிகளும் மைய அரசின் கொள்கைகளும்

இங்கே மைய அரசு அறிவித்துள்ள மாவட்ட மையப் பள்ளிகள் அமைப்பது பற்றிச் சில சொற்கள். தற்போது உள்ள மையப்பள்ளிகள் மைய அரசு ஊழியருக்காக இயங்கி வருகின்றன. அவை ஒரு வகையில் தேர்ந்தெடுத்த சிலருக்கு உயர் கல்வி அளிப்பவை போன்றே விளங்கி வருகின்றன. மாணவர்களைக் கல்வியடிப்படையில் பல சாதிகளாக வகுக்கும் இன்றைய கல்வி முறையில் அச்சாணிகளில் இதுவும் ஒன்று மேலும் இப்பள்ளிகளில் ஆங்கிலம், இந்திவழி பயில வசதிகள் உள்ளன. மாநில மொழிகள் வழி பயில இயலாது; மாநில மொழிப் பயிற்சியும் குறைவு; உண்மையில் நகரங்களில் பள்ளி யளவில் ஆங்கிலப் பயிற்றுமொழி மோகத்தை வளர்க்கத் தூண்டு கோல்களாக இருந்த வைகளில் ஒன்று இப்பள்ளிகள். மாவட்டந்தோறும் உருவாகும் இப் பள்ளிகள் கிராமப்புற மாணவர்களை மிகுதியும் சேர்த்துக் கொள்ளுமாம். இம்முயற்சி கிராமப் புறங்களிலும் கல்வியடிப்படையில் புதிய மாணவச் சாதிகளை உருவாக்கவே உதவும் என்று தோன்று கிறது. அடுத்ததாக, ஆங்கிலப் பயிற்று மொழி மோகத்தைக் கிராமப் புறங்களில் வலுவடையச் செய்து, இந்தி பயிற்று மொழி மோகத்தையும் தமிழர்களிடையே இது பரப்பும் என்பது உறுதி இப்பள்ளிகளில் மாநில மொழிவழிக் கல்வி வசதியையும் சம நிலையில் அளிக்க வேண்டும் என்று மாநில அரசுகள் வற்புறுத்த வேண்டும். அத்தகைய வசதிகள் செய்து தர முன்வரவில்லை எனில் இம்மையப் பள்ளிகள் நிறுவுவதற்கு மைய அரசுக்கு வேறு உள்நோக்கங்கள் உண்டு என்ற ஐயத்தைத் தோற்றுவிக்கும். குறுக்கு வழியில் இந்தியைப் பரப்புவது இதன் நோக்கம் என்று சிலர் தெரிவிக்கும் அச்சம் சரியானதாக ஆகிவிடும். இத்தகைய சில பள்ளிகள் பெரும் பொருட் செலவில் அமைப் பதைவிட (கல்வி முழுமையையும் தேசீய மயமாக்கி) அப்பொருட்செலவு கொண்டு கிராம புறங்களிலுள்ள அரசு பள்ளிகளை மேம்படுத்த முயலுவது நமது சமதர்ம நோக்கங்களுக்கு உகந்ததாக இருக்கும்.

## கேரளத்தில் தமிழ்க்கல்வி: உயர் நிலைப் பள்ளிகளில்: ஒரு சீர்தூக்கல்

உயர் நிலைப் பள்ளி மட்டத்தில் தமிழ்க்கல்வியின் (மொழி/மொழிவழி) தரம் மிகவும் தாழ்ந்து கிடக்கிறது என்பது வெளிப்படையான உண்மை. இது பற்றி இத்

துறையில் பணிபுரிவோர் கருத்துக்களை அறிந்து கொள்வது பயன்தரும். கேரள மாநிலம் மூணாறு அரசு உயர் பள்ளியில் பணிபுரியும் தமிழாசிரியர் திரு ஆ. தாமஸ் கீழ்க்கண்ட கருத்துக்களைத் தெரிவிக்கிறார்:

"ஆசிரியர் பற்றாக்குறை தீர்த்தல், தோட்டத் தொழிலாளர் பகுதியில் மதிய உணவு அளித்தல், நூலகங்களில் நல்ல மேற்கோள் நூல்களை (reference works) வைத்தல்; பாட நூல்களைக் கல்வி ஆண்டின் ஆரம்பத்தில் வழங்கல்; ஆசிரியர்களுக்கு இடைக்காலப் பயிற்சி அளித்தல்; பொருத்தமற்ற பாடப் பகுதிகளை நீக்குதல். தனிக் கல்வி ஆய்வாளர் (Tamil Inspectors) களை நியமித்தல்; ஒருங்கிணைந்த பல்கலைக்கழகத் தமிழ்த் துணைவேந்தரை நியமித்தல்; படித்த தமிழ் மாணவர்க்குப் போதிய வேலை வாய்ப்பளித்தல்; கல்லூரிக் கல்வி வசதியைத் தேயிலைத் தோட்டப் பகுதிகளில் ஏற்படுத்துதல் போன்றவற்றை மேற் கொண்டால் தமிழ்க் கல்வித் தரம் உயர்வது மன்றிப் பயில்வோர் எண்ணிக்கையும் பல்கிப் பெருகும்." இக்கருத்துக்கள் கவனிக்கத் தக்கன.

அடுத்தது கேரள அரசு அண்மையில் கொண்டு வந்துள்ள புதுவிதிப்படி மலையாளம் முதல் மொழியாகப் படிக்காதவர் (எ. டு. தமிழ், கன்னடம் படிக்கிறவர்கள்) தாய்மொழி, இந்தி, ஆங்கிலம் ஆகியவற்றுடன் மாநில மொழியாகிய மலையாளத்தையும் நான்காவது மொழியாகக் கற்க வேண்டியுள்ளது. இத்தகைய விதி தமிழ்நாட்டில் நடைமுறைப் படுத்தப்படவில்லை. அரசியல் சட்ட அமைப்பு விதிகளுக்கும் எதிரானது இது. ஏனெனில் மொழிச் சிறுபான்மையினர் நான்கு மொழி கற்கும் மொழிச் சுமைக்கு உட்படுத்தப் படுகின்றனர். அடுத்தது, பிஞ்சுக் குழந்தைகள் நான்கு மொழிகளைப் படிக்க நேரும் போது, மற்ற பாடங்களில் போதிய கவனமும், திறமையும் செலுத்த இயலாது. இது மொழிச் சிறுபான்மையினரைப் பாதிக்கும என்றும், காலப் போக்கில் மொழிச் சிறுபான்மையினர், தம் மொழிகற்பதை விட்டு விடுவர் என்றும் தமிழாசிரியர் திரு. பகவதியப்பன் கருதுகிறார். இது உண்மையல்ல என்று கூற இயலாது. ஒரு மாநிலத்தில் வாழ்கிறவர்கள அம்மொழியைப் படித்திருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதும் தவறல்ல, ஆனால் அது சிறுபான்மையினரைப் பாதிக்காத முறையில் (விருப்ப பாடம் அல்லது தேர்விற்கு அடிப்படையில்லாத பாடம் என்ற நிலையில்) நடைமுறைப் படுத்தலாம் என்று தோன்றுகிறது.

## கல்லூரிகள் / பல்கலைக் கழகங்கள்

கீழே கண்ட கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் முதலியவற்றில் தமிழ் மொழி பயில வசதிகள் செய்யப்பட்டுள்ளன:

### கேரளத்தில் தமிழ் பயில வசதி உள்ள கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் முதலியன.

| வரிசை எண் | கல்லூரிப் பெயர் | ஆசிரியர் எண்ணிக்கை | மொழி பயில வசதி | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | இரண்டாம் மொழி | இலக்கியம் பயில | | | |
| | | | | இளங்கலை | முதுகலை | எம்.பில் | டாக்டர் |
| 1 | அரசு கலைக்கல்லூரி, திருவனந்தபுரம் | 3 | × | — | — | — | — |
| 2 | அரசு பெண்கள் கல்லூரி, ,, | 2 | × | — | — | — | — |
| 3 | பல்கலைக் கழகக் கல்லூரி, ,, | 5 | × | × | — | — | × |
| 4 | மார் இவானியஸ் கல்லூரி, ,, | 1 | × | — | — | — | — |
| 5 | வேலுத்தம்பி நினைவு, என்.எஸ்.எஸ். கல்லூரி, தனுவச்சபுரம். | 2 | × | — | — | — | — |
| 6 | விக்டோரியா அரசினர் கல்லூரி, பாலக்காடு. | 4 | × | × | — | — | — |
| 7 | அரசினர் கலைக் கல்லூரி, சிற்றூர். | 11 | × | × | × | — | × |
| 8 | தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக் கழகம் காரியவட்டம், திருவனந்தபுரம். | 6 | — | — | × | × | × |
| 9 | அரசு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, திருவனந்தபுரம். | 1 | — | பிஎட் | — | — | — |

தனிப்பட்ட முறையில் படித்துக் கொண்டால் தமிழைப் பாடமாக எடுத்துக் கொள்ளக் கல்லூரிகள் அனுமதிக்கின்றன. புதிதாகத் தொடங்கியுள்ள கோட்டயம் காந்திஜி பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை ஒன்றினை ஏற்படுத்தினால் இடுக்கி மாவட்டத் தமிழர்களுக்குத் தமிழ் படிக்க வாய்ப்புகள் உண்டாகும். கான்பெட் என்ற நிறுவனம் முதியோர் கல்விக்காகச் சில தொடக்க நூல்களை வெளியிடுகின்றது. கேரள மாநில மொழிகள் நிறுவனத்தில் முன்பு தமிழ்நாட்டரசு பொருளுதவியுடன் தமிழ் கற்பிக்கப்பட்டு வந்தது.

## பல்கலைக் கழகக் கல்லூரி, திருவனந்தபுரம்

இங்கு சுமார் ஒரு நூற்றாண்டு காலமாகத் தமிழ்த்துறை செயல்பட்டு வருகிறது. கிறித்தவக் கம்பன் எச். ஏ. கிருஷ்ண பிள்ளை, போராசிரியர் ஜேசுதாசன் முதலியோர் பணியாற்றிய இடம் இது. இங்கு தமிழ் இளங்கலை படிக்கவும், டாக்டர் பட்டத்திற்கு ஆய்வு செய்யவும் வசதிகள் உள்ளன.

### கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை

வள்ளல் அழகப்பர் அறக்கொடையால் 1944-இல் உருவான தமிழ்த் துறையில் பேராசிரியர் மு. இராகவையங்கார், பேரா. ச. வையாபுரிப் பிள்ளை, பேரா. வ. அய். சுப்ரமணியம், பேரா. ச. வே. சுப்பிரமணியன், காலஞ்சென்ற பேரா. மா. இளைய பெருமாள் முதலியோர் இருந்து தற்காலத் தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சிக்குக் காரணர்களாக இருந்தார்கள். இத்துறையிலிருந்து இதுவரை 15 ஆய்வு நூல்கள் வெளியாகியுள்ளன. சுமார் 150 எம். ஏ, 3 எம். லிட், 45 எம். பில், 30 பி. எச். டி. பட்டதாரிகள் இங்கிருந்து படித்து வெளியேறியுள்ளனர். தற்போது டாக்டர் பட்ட ஆய்வாளர்கள் உதவித் தொகையுடன் ஆராய்ச்சிப்பணியை மேற் கொண்டிருக்கின்றனர்.

### அரசினர் கல்லூரி, சித்தூர்

வடகேரளத்தில் தமிழ் ஆராய்ச்சி நிலையமாக இங்குள்ள தமிழ்த்துறை விளங்கி வருகிறது. இளங்கலை முதல் டாக்டர் பட்டம் வரை இங்கு படிக்க வசதிகள் உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

### கேரளத்திலுள்ள தமிழ் மொழி, பண்பாட்டு நிறுவனங்கள் சில

1. திருவனந்தபுரம் தமிழ்ச்சங்கம், கிள்ளிப்பாலம், திருவனந்தபுரம்.
2. பூஜப்புரைத் தமிழ்ச் சங்கம், பூஜப்புரை, திருவனந்தபுரம்.
3. திருவள்ளுவர் தமிழ் மன்றம், பெருந்நா, சங்கனாச் சேரி.
4. முத்தமிழ் மன்றம், கொச்சி-11.
5. பாரதி தமிழ்ச் சங்கம், உத்தியோக மண்டல், கொச்சி.
6, சித்தூர் தமிழ்ச் சங்கம், சித்தூர், பாலக்காடு.
7. முத்தமிழ்ச் சங்கம், பாலக்காடு
8 கொழிஞ்சாம் பாறைத் தமிழ் மன்றம், கொழிஞ்சாம் பாறை
9. மன்னார்க்காடு தமிழ்ச் சங்கம், பாலக்காடு
10. பாலக்காடு மாவட்ட முத்தமிழ்ச் சங்கம்
11. கோழிக்கோடு தமிழ்ச் சங்கம், கோழிக்கோடு
12. மூணாறு இளைஞர் தமிழ்ச் சங்கம், மூணாறு
13. சைவப் பிரகாச சபை, திருவனந்தபுரம் (பேராசிரியர் சுந்தரம் பிள்ளை தோற்றுவித்தது, நூறாண்டுப் பழமையுடையது)
14 திருவனந்தபுரம் பைன் ஆர்ட்ஸ் சொசைட்டி, திருவனந்தபுரம்.

### பத்திரிகைகள்

வஞ்சிநாடு வார இதழ் (ஆசிரியர் எம். ஆர் கிருஷ்ணன்) சுமார் 25 ஆண்டுகட்கும் மேலாக வந்து கொண்டிக்கிறது. திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கம் கேரளத் தமிழ் என்ற மாத இதழ் வெளியிடுகிறது. நெம்மாராவிலிருந்து சேர நாடு என்ற பெயரில் ஓ

இதழ் வெளிவந்தது. இது போக ஏலக்காய் வாரியம் ஏலக்காய்ச் செய்தி என்ற செய்தி மடல் வெளியிடுகிறது. கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை 1970 முதல் ஆண்டு தோறும் ரிசர்ச் பேப்பர்ஸ் என்ற ஆய்விதழை வெளியிட்டு வருகிறது. கேரள கெஜட் ஒரு பகுதி, சட்டமன்றக்குறிப்பு ஆகியவை தமிழிலும் வெளியாக வசதிகள் உள்ளன.

### வானொலி, தொலைக்காட்சி

வாரந்தோறும் ஞாயிறு காலை 9 - 10 வரை தமிழ்ச் சொல் மாலை என்ற தலைப்பிலும் வெள்ளியன்று மாலை 8-8.15 வரை குறிஞ்சி மலர் என்ற தலைப்பிலும் வானொலி நிகழ்ச்சிகள் திருவனந்தபுரத்திலிருந்து ஒலி பரப்பாகின்றன. அது போன்றே மாதந்தோறும் மூன்றாம் வார வியாழனன்று மாலை 7-7.30 வரை தமிழ் மலர் என்ற தொலைக்காட்சி நிகழ்ச்சி திருவனந்தபுரம் நிலையத்திலிருந்து ஒளிபரப்பாகின்றது.

### நூலகங்கள்

தமிழ் கற்பிக்கப்படும் பள்ளிகள், கல்லூரிகள் முதலியவற்றிலும், சில பொது நூலகங்களிலும், தமிழ்ச் சங்க நூலகங்களிலும் தமிழ் நூல்களும் பத்திரிக்கைகளும் காணப்படுகின்றன. அவற்றில் குறிப்பிடத் தக்கவை வருமாறு.

| | | |
|---|---|---|
| 1. | மாநிலப் பொது நூலகம், திருவனந்தபுரம். | மிகப் பழைய நூல்கள் உள்ளன |
| 2. | கேரளப் பல்கலைக் கழக நூலகம், திருவனந்தபுரம். | மிகப் பழைய நூல்கள் உள்ளன |
| 3. | கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை நூலகம் காரியவட்டம். | சுமார் 20 ஆயிரம் நூல்கள் உள்ளன. |
| 4. | கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகம், காரியவட்டம். | சுமார் 5 ஆயிரம் சுவடிகள் உள்ளன. |
| 5. | பல்கலைக்கழகக் கல்லூரித் தமிழ்த் துறை நூலகம். | மிகப் பழைய நூல்கள் உள்ளன. |
| 6. | திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கநூலகம். | சுமார் 2 ஆயிரம் நூல்கள் |
| 7. | சித்தூர்த் தமிழ்ச் சங்கம். | பேரா. சுப்பையா நினைவு நூலகம் |

### எழுத்தாளர்கள்

கேரள மாநிலத்தில் நல்ல தரமான தமிழ் எழுத்தாளர்கள் பலர் வாழ்ந்து வருகின்றனர். அவர்களில் திருவனந்தபுரத்தில் வாழும், திரு. நகுலன், காசியபன், ஆ. மாதவன், நீல. பத்மனாபன், திரு. சண்முக சுப்பையா முதலியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

### சில யோசனைகள்

கட்டுரையை முடிக்கும் முன் சில பயனுள்ள யோசனைகளை அறிஞர் கவனத்திற்கும் நிர்வாகிகள் பார்வைக்கும் வைக்கிறேன்.

1. தமிழரிடையே கல்வியின் இன்றியமையாமையை வற்புறுத்த இயக்கம் தேவை. தமிழர் பொருளாதார நிலையில் உயரக் கல்வியும் ஒரு கருவி என்பதைப் பொது நிலையில் எடுத்துரைத்தல் மிக மிக வேண்டப் படுவதாகும்.

2. தமிழர் மற்றவர்களை விடக் கல்வித் துறையில் பின்தங்காமல் கற்று முன்னேற உரிய வசதிகளை ஏற்படுத்த வேண்டும். தமிழ் மூலம் கல்வி பெற உள்ள வசதிகளைச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளவும், மேலும் வசதிகளைப் பெருக்கவும் முயற்சிகள் மேற் கொளள வேண்டும். சிறுபான்மையோர் உரிமைகளையும் நன்மைகளையும் ஒற்றுமையாய் இருந்து விழிப்போடு போராடியே பெற வேண்டும். இதற்கு இயக்கரீதியான ஒற்றுமை தேவை.

3. தமிழ் மூலம் கற்க இயலாவிடினும் தமிழ் மொழியாவது கற்கத் தமிழரைத் தூண்ட வேண்டும்.

4. தமிழையே கல்வித் துறை வாயிலாகக் கற்க இயலாத தமிழர்கள் தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்கள், அற நூல்கள், தத்துவ நூல்கள் முதலியவற்றைப் படிக்கத் தமிழ்ச் சங்கங்கள் மற்றும கல்லூரியினர், பல்கலைக்கழகத்தினர் குறுகிய காலத் தமிழ் மொழி, இலக்கிய வகுப்புக்களை மாணவர்க்கும் முதியோர்க்கும் ஆர்வலர்களுக்கும் நடத்தலாம். இவற்றுக்கு நல்ல நூலக வசதிகளைப் பெருக்கிச் சொற் பொழிவுகள், இலக்கியக் கலை நிகழ்ச்சிகள் மூலம் பணி செய்யத் தமிழ்ச் சங்கங்களுக்கே நிறையப் பொறுப்புள்ளது என்பதில் ஐயமில்லை.

5. தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் பயில விரும்பும் மலையாளிகளுக்கும் தமிழை ஓய்வு நேரத்தில் படிக்கத் தகக வகுப்புகளை அஞ்சல்வழிக் கல்வித் திட்டங்கள், மக்கள் பள்ளிகள் முதலியவை மூலம் நடத்தலாம்.

இவை எல்லாவற்றிற்கும் தமிழ்ப் பல்கலைக் கழகம் முதலிய நிறுவனங்களும் உலகத் தமிழ்க் கல்வி இயக்கம் போன்ற தொண்டு நிறுவனங்களும் திட்டம் தீட்டிச் செயல் பட வேண்டும். இப் பணிகளை எல்லாம் ஒருங்கிணைக்கத் தக்க விதத்தில் ஒவ்வொரு மாநிலங்களிலும் தமிழ்நாட்டரசு சார்பில ஒரு தமிழ்ககலை பண்பாட்டுச் செய்தித் தொடர்பு நிறுவனங்களை தமிழ்நாடு இல்லங்கள் என்ற பெயரில் நிறுவலாம். அவை கீழ்க்கண்ட பணிகளைச் செய்யலாம் :-

1. அவ்வம் மாநில மொழிகளிலும், தமிழிலும், தமிழ்மொழி, இலக்கியம், கலைகள் பற்றிய பயிற்சி வகுப்புகளை நடத்தலாம்.

2. தமிழ் நூல்களடங்கிய நூலகங்கள் ஏற்படுத்தல்.

3. மொழிபெயர்ப்பு வசதிகள் ஏற்படுத்தல்.

4 செய்தித் தொடர்பு முயற்சிகள் : அவ்வம் மாநில மொழிகளில் துண்டு வெளியீடுகள், பருவ வெளியீடுகள் நடத்தல் (சோவியத் நாடு போல) ; திரைப்படங்கள் காட்டல், கலை விழாக்கள் நடத்தல் முதலியன

5. சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், கலந்துரையாடல்கள், கண்காட்சிகள் முதலியன நடத்தல்

6. கலை. பண்பாட்டுப் பரிமாற்றத்தைத் திட்டமிட்டு நடத்தல் (சுற்றுலாவளர்ச்சியோடு இதை இணைத்துக் கொள்ளலாம்)

சுருங்கச் சொன்னால், பிரெஞ்சுப் பண்பாட்டுத் தொடர்புநிலையம், அமெரிக்கச் செய்தி நிறுவனம், உருசியப் பண்பாட்டு நிறுவனம் முதலியவற்றின் அமைப்பில் இவை செயல் படலாம். இவை தேசீய ஒருமைப்பாட்டினை வளர்ப்பதோடு, மொழிச் சிறுபான்மையினரின் தொடர்புக்கும் பயன்படும். தொடர்புடையவர்கள், இதைக் கவனித்து ஆவன செய்க!

## நன்றி

இக்கட்டுரை தயாராகுங்காலத்து வேண்டிய செய்திகள் கொடுத்தும், ஆலோசனை வழங்கியும் உதவிய திரு சு. பகவதியப்பன், திரு. ஆ. மாதவன் (தலைவர், திருவனந்தபுரம் தமிழ்ச்சங்கம்), திரு. ஆ. தாமஸ் முதலியோர்க்கு நன்றி. மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் புள்ளி விவரங்களுக்கு ஆதாரம்: Vijayendra Bhas. V. S. LANGUAGE INFORMATION OF SOUTH INDIA, M A. dissertation. Dept. of Linguistics, Kerala University, 1979.

# கர்நாடகத்தில் தமிழ்

— டாக்டர் சு. சண்முக சுந்தரம்.

'தமிழன் என்றொரு இனமுண்டு தனியே அவனுக்கொரு குணமுண்டு' என்ற பாடலுக்கு, என்னால் வேறு மாதிரி தான் பொருள் கொள்ள முடிகிறது. அதாவது, சொந்த நாட்டில் பிழைக்க முடியாமல் தேசாந்திரமாகப் போவதிலாகட்டும், அடிமை வியாபாரமான கங்காணி முறையிலாகட்டும் நாடு பிடிக்கிறேன் போவழி என்று போய் அந்நாட்டிலேயே பிடிபடுவதிலாகட்டும் தமிழனுக்கு நிகர் தமிழனே.

இவ்வாறு தேசங்களுக்குப் போன தமிழர்களில் கர்நாடகத் தமிழர்களும் அடக்கம். இவர்களில் பலர் இடமாறியவர்கள். இன்னும் சிலர் பூர்விகமானவர்கள். இவர்களின் வாழ்க்கை நிலை கல்விவசதிகள், சங்கங்கள், பத்திரிகைகள், எழுத்துக்கள், கலைகள், விழாக்கள், நூலகங்கள் போன்றவற்றை இக்கட்டுரையில் சிறிது ஆராயலாம்.

### தமிழ்ப் பகுதிகள

உலகில் தமிழர்களின் மொத்த தொகை 8 கோடி என்பர். இதில் தமிழ்நாட்டில் 5 கோடி எனவும பிற இடங்களில் 3 கோடி எனவும் கணக்கிட்டுள்ளனர். இவர்கள் வெளி இடங்களுக்கு உழைத்துப் பிழைக்கவே அழைத்து செல்லப்பட்டனர். காடுகளிலும் தொழிற்சாலைகளிலும் தங்கள் குருதியைக் கொட்டத் தயாராய் இருந்தனர். கங்காணி முறையால் கடல் கடந்தவர்களும் உண்டு.

கர்நாடகத்திலும் தமிழர்கள் உழைப்பதற்காக வந்தனர் என்று கூறுவதோடு சில இடங்கள் பழங் காலம் தொட்டு தமிழர்களுக்கே உரியதாக இருந்தது என்றும் குறிததுள்ளனர். கர்நாடகத் தமிழாகளின் எண்ணிக்கை 30 இலட்சம ஆகும்.

1956 - ஆம் ஆண்டில் மொழி வழி மாநிலங்கள் அமைக்கப்பட்ட போது பெங்களூர், தங்கவயல், குடகு, பெல்லாரி, சித்திரதுர்க்கா போன்ற இடங்களில் தமிழர்கள் பெருமளவில் வாழ்ந்தனர். பத்திராவதி, சிமோகா, சித்திர துர்க்கா, சிக்க மகளூர் போன்ற பகுதியில வெள்ளையர்களால் தமிழர்கள் கங்காணி முறையால் அழைத்துச் செல்லப்பட்டனர் இவர்கள், இரும்புக்கனிகளிலும், உருக்காலைகளிலும் தோட்டக்காடுகளிலும் வேலை செய்து வருகின்றனர்.

பெங்களூர் தமிழர்கள் மொத்த மக்கட் தொகையில் 52 %; கன்னடரோ 15 %. இவர்களும் 1956 க்குப் பின் பம்பாய் மாநிலத்திலிருந்து வட கன்னட மாவட்டங்களையும், பழைய சென்னை மாவட்டத்திலிருந்த குடகு, தென்கன்னடம் பெல்லாரி போன்ற பகுதிகளையும் நிசாம் ஆண்டு வந்த அய்தராபாத் ஆட்சிக்குட்பட்டிருந்த சில பகுதி களையும் பழைய மைசூருடன் சேர்ந்த பெருங்கருநாடகத்தை அமைத்த பிறகே பெங்களூருக்கு வந்து குடியேறியவர்கள் ஆவர்.

தங்க வயலை கி. பி. முதல் நூற்றாண்டு முதல் வாணர் அல்லது பாணர் எனும் தமிழ் அரசர்கள் ஆண்டனர். சோழர்கள் 9-ஆம் நூற்றாண்டில் ஆண்டனர். பெரியபுராணம் 'கொங்கிற் கனகம்' எனக் குறிப்பிடுவதாக அறிகிறோம். பின்னர் திப்புசுல்தான் கைப்பற்றிட அவனிடமிருந்து வெள்ளையர்கள் 1791 - இல் பிடுங்கிக் கொண்டனர்.

1880 - இல் ஃசான் டெய்லர் கம்பெனி சுரங்கம் வெட்டத் தொடங்கியதும் வட ஆர்க்காடு சேலம், தருமபுரி, கிருட்டின்கிரி தமிழர்கள் கங்காணி முறையில் கூலிகளாய் வந்தனர். 1956 - இல் மைசூர் அரசும், 1958 - இல் மத்திய அரசும் சுரங்கத்தை நிர்வகிக்க ஆரம்பித்தன.

## கர்நாடகத்தில் தமிழர்களின் பழைய வரலாறு

பத்தாம் நூற்றாண்டில் பெங்களூர் மாவட்டத்தின் பகுதிகள் காஞ்சிப் பல்லவர்களுக்கு உட்பட்டது. கி. பி 997 - இல் ஒசக்கோட்டை சோழன் இராசாதி தேவனால் வெல்லப்பட்டது. 1139 - இல் சோழர்கள் மாகடி பட்டணத்தை நிறுவினர். 13 ஆம் நூற்றாண்டில் சோழ வளநாடான இலைப்பாக்க நாடே இன்று எலஅங்கா என மாறியுள்ளது. இது போலவே காடனூர் தொட்ட பல்லாபூர் ஆனது.

பெங்களூர் மாவட்டத்தில் அகரம், அய்கண்டபுரம், ஆவதி, பய்ச்சபுரம், பேகூர், பின்னமங்கலா, தொம்மலூர், கங்காவரம், அலசூர், சுசிகலா, எக்குண்டா, ஒசக்கோட்டை கொண்டரள்ளி, கூடலூர், குப்பேப் பள்ளி, மாகடி, மண்குண்டா, மண்ணே, நந்தகுடி, நெலமங்கலா, திருமலை, வகட்டா, வணக்கனள்ளி, வரநாயக்கனள்ளி போன்ற இடங்களில் தமிழ்க்கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

1537 - ஆம் ஆண்டில் பெங்களூர்ப் பட்டணத்தை நிறுவிய கெம்பே கவுடாவின் (1526-1574) முன்னோர்கள் காஞ்சிபுரத்திலிருந்து தப்பி வந்த 'முரசு ஒக்கலு' வேளாளர் குடியினரின் வழியினர் என்பர். 17 ஆம் நூற்றாண்டில் பெங்களூர் தஞ்சை மன்னனுக்குச் சொந்தமாக இருந்தது. மைசூர் உடையார் 1687 - இல் 3 இலட்சம் ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கினார். 1758 - இல் இது திப்புசுல்தானுக்கு உரிமையானது. 1799 - இல் கார்ன் வாலிஸ் போரால் கைப்பற்றினார். 1809 ஆம் ஆண்டில் இவர்கள் தண்டுப் பகுதி (Contonement) - யைஉருவாக்கினர்.

1876 - 78 இல் மைசூரில் பெரும் பஞ்சம் வந்தபோது கன்னடமக்கள் பெங்களூர், கோலார், ஆசன், துமுக்கூர், அத்திக்குப்பம், நாகமங்கலம், சித்திரதுர்க்கா, மண்டியா போன்ற இடங்களில் குடிபெயர்ந்தனர். 1881 - இல் ஆங்கிலேயர்கள் ஆட்சிப் பொறுப்பை உடையாரிடம் திருப்பிக் கொடுத்தனர். தண்டுப் பகுதியை மட்டும் தமக்காக வைத்துக் கொண்டனர். 1948 வரை சிறை வசதி, வழக்குமன்ற வசதி, கல்வி வசதி போன்றவற்றுக்கு தண்டுப் பகுதியினர் தமிழகத்தையே நாடினர். பெங்களூர் பேட்டையும் தண்டுப்பகுதியும் தனித் தனி ஆட்சிக்குக் கீழேயே இருந்தது. ஓரிடத்திலிந்து இன்னொரு இடத்திற்குச் செல்பவர்கள் சுங்க வரி கட்ட வேண்டும். 1950 - இல் இரண்டும் இணைந்து பெரு நகராட்சி தோன்றியது.

## தமிழ்ச் சமயங்கள்

தமிழர்கள் கர்நாடக மண்ணில் வேர் கொண்டாலும் கூட சமய வழிபாட்டில் தமக்கென தனியிடம் கொண்டுள்ளனர்.

பெங்களூரிலும் பிற இடங்களிலும் மாரியம்மன் கோவில்கள் ஏராளமாக நிர்மாணிக்கப் பட்டுள்ளன. அல்சூர் பகுதியில் தொன்மையான முருகன் கோவில் உண்டு. இதற்கு ஆண்டு தோறும் காவடி விழாவும், தைப்பூசத்தன்று தெப்ப விழாவும், நடைபெற்று வருகின்றது.

பங்குனியில் பச்சைக்கரகம் பெங்களூரில் சிறப்பான இடத்தைப் பெறுகின்றது. மாரியம்மன் கோவில்களில் இருந்தும் பிற அம்மன் கோவில்களில் இருந்தும் பல்லக்குகள் புறப்பட்டு ஊர்வலம் போய் ஓரிடத்தில் கூடுவதுண்டு.

காளியம்மன் கோவிலுக்கு இராணுவப் பகுதியில் தனியான விழா நடைபெறுவதுண்டு.

ஒடுக்கத்தூர் மடம் போன்றவற்றில் சமயச் சொற்பொழிவுகளைக் கீரன், கிருபானந்தவாரியார் மூலமாக நடத்துவதுண்டு. மார்கழி மாதங்களில் திருப்பாவை விரிவுரைகளும் செய்து வருகின்றனர்.

தமிழ்க் கிறித்தவ மதத்தினரும் தமிழிலேயே வழிபாடு செய்து வருகின்றனர். இதற்கான எதிர்ப்புகள் அவ்வப்போது எழும் போது கூட இவர்கள் இதுபற்றி அஞ்சாமல் தமிழ் வழிபாட்டினையே செய்து வருகின்றனர்.

## தமிழ்க் கல்வி

பெங்களூர் சிட்டி, தண்டு ஆகிய இரு பகுதிகளிலும் 1948ஆம் ஆண்டுவரையிலும் முழுக்க முழுக்க தமிழ்ப்பள்ளிகளே அதிகமாக இருந்தன. பிறகு உருது, தெலுங்குப் பள்ளிகளும் நடத்தப்பட்டன. பெங்களூர் சிட்டிப்பகுதியில் பொதுக்கல்வி துணை இயக்குநர் ஒருவர் கல்வித்துறையைக் கவனித்து வந்தார். அவரது அலுவலகம் சிமோகாவைத் தலைமையாகக் கொண்டிருந்தது. பெங்களூர் பேட்டையில் ஒரு மாவட்ட அதிகாரி இருந்தார்.

தண்டுப் பகுதியில் கல்வித்துறையின் பொறுப்பு சென்னைப் பல்கலைக் கழகத்திடமும் அரசிடமும் இருந்து வந்தது. 1956 ஆம் ஆண்டுக்குப் பின்னரே அந்தப் பொறுப்பை மைசூர் அரசு முழுமையாக எடுத்துக் கொண்டது.

1948 - க்குப் பிறகு கல்வித் துறையில் மாற்றம் வந்து சிட்டிப்பகுதியில் தெலுங்குப் பள்ளிகளும் கன்னடப் பள்ளிகளாக மாற்றப்பட்டன; புதிய கன்னடப் பள்ளிகளும் தோன்றின.

கருநாடகத்தில் 1978-79ஆம் ஆண்டில் மொத்தம் 267 தமிழ்த் தொடக்கப்பள்ளிகள்இருந்தன. அவற்றில் 76, 309 மாணவர்கள் படித்து வந்தனர். 1574 ஆசிரியர்கள் இருந்தனர்.

தமிழானது தாய்மொழிக் கல்வியாகத் தொடக்கப்பள்ளி, உயர் தொடக்கப் பள்ளி, நடு நிலைப் பள்ளி, உயர் நிலைப் பள்ளி ஆகிய மட்டங்களில் கற்பிக்கப் பட்டு வருகின்றது. உயர் நிலைப் பள்ளிகள் ஏறக் குறைய 70 உள்ளன.

தாய் மொழி வழிக் கல்வியாகத் தமிழானது 7 வது வகுப்பு வரை கற்பிக்கப் படுகின்றது. ஹுப்ளியில் 10 ஆண்டுகளாக இம்முறை உள்ளது. தற்போது தமிழ்ச் சங்கத் காமராஜர் பள்ளியை நிறுவி தமிழ்வழிக் கல்வியைப் பயிற்றுவித்து வருகின்றனர்.

அரசின் பழைய அறிக்கைப்படி தமிழை முதலாம் இரண்டாம் மூன்றாம் மொழியாகக்கற்கலாம். தற்போது ஹோக்காக் திட்டப்படி பள்ளிகளை மூடிக் கொண்டே வருகின்றனர்.

### கல்லூரி நிலை

கல்லூரி நிலையில் இங்கு பிளஸ் டூ வை புகுமுக வகுப்பு முதலாண்டு புகு முக வகுப்பு இரண்டாமாண்டு என அழைக்கின்றனர். இரண்டிலும் முதன் மொழியாகத் தமிழ் விளங்குகின்றது. ஏறக்குறைய 30 கல்லூரிகளில் தமிழ் மொழியானது புகு முக நிலையில் பயிற்றுவிக்கப்படுகிறது. ஆண்டுக்கு 2000 - க்கு மேலான மாணவர்கள் தேர்வு எழுதுகின்றனர். இதற்கான கல்லூரிகள் பெங்களூர், கோலார் தங்கவயல், பங்காரு பேட்டை, மைசூர் போன்ற இடங்களில் உள்ளன.

பி. ஏ., பி, எஸ்ஸி, பி. காம். எனும் பட்ட வகுப்புகளிலும் தமிழ் முதல் மொழியாகப் பயிற்றுவிக்கப்படுகிறது. பெங்களூர் பல்கலைக் கழகத்திற்கு வேறாகவும் மைசூர் பல்கலைக் கழகத்திற்கு வேறாகவும் பாடத் திட்டம் அமைந்துள்ளது. செய்யுள், உரைநடை, துணைப்பாடம், இலக்கணம் போன்றவை இவர்களுக்கு அமைந்துள்ளன, தமிழ் நாட்டில் இல்லாத நிலை இங்கு ஒன்றுண்டு. அதுதான் பி. காம். வகுப்புக்கும் தமிழ் பயிற்று விக்கப்படுவது. முதலாமாண்டுக்கு பி. ஏ. பி. எஸ். ஸி போலவே இருக்க, இரண்டாம் ஆண்டு மட்டும் உரை நடைப் பகுதியில் பாதியைக் குறைத்து மொழி பெயர்ப்பு, கடிதம், கட்டுரை என்று வைத்துள்ளனர்.

கல்லூரி நிலையில் தமிழுக்கு ஒரே தாள் தான் உண்டு, மதிப்பெண்கள் 100 எனும் அளவு தான்.

ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும் இங்கு உண்டு. அதிலும் தமிழ் முதல் மொழியாகக் கற்பிக்கப் படுகிறது. 2 தாள்கள் உண்டு. சென்ட்ரல் கல்லூரியில் முன்பு இருந்தது. இப்போது ஜெயராம், பாத்திமா எனும் பள்ளிகளில் உள.

சிறப்புத் தமிழ் கற்றுக் கொள்ள இரண்டு கல்லூரிகளில் வாய்ப்புண்டு. இரண்டும் அரசுக் கல்லூரிகள். படிக்கும் மாணவர்களோ இரண்டு அல்லது மூன்று தான்.

### பல்கலைக்கழக நிலை

பெங்களூர் பல்கலைக் கழகத்தில் தமிழுக்கென தனியான துறையோ கூட்டுத் துறையோ இல்லாதது மிகவும் இரங்கத் தக்க ஒன்றாகும். தமிழ் நாட்டில் உள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களிலும் கன்னடத் துறைகள் (கன்னடர்கள் அந்தந்தப் பகுதிகளில் வாழா விட்டாலும் கூட) இருக்க பெங்களூரில் தமிழர்கள் பெரும்பான்மையாக வாழ்ந்தும் இங்குள்ள பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை இல்லாதது ஒரு பெருங் குறையாகும். கன்னடத்துறையில் மொழிபெயர்ப்பாளர் என்ற நிலையில் திரு. கார்லோஸ் பணியாற்றுகிறார். இதைத்தவிர பெங்களூர் பல்கலைக் கழக காம்பவுண்டுக்குள் ஒரு தமிழ் எம். ஏ. வைக் கூடக் காணமுடியாது.

மைசூர் பல்கலைக் கழகத்திலும் அவ்வாறே. ஆனால் மானச கங்கோத்ரியில் உள்ள Central Institute of Indian Languages இல் தமிழ் பிரிவுண்டு. அங்கு நாலைந்து பேர் பணியாற்றுகின்றனர்.

தார்வாடில் உள்ள கர்நாடகப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை உண்டு. இங்கு ஒரே ஒரு ரீடர் மட்டும் இருந்து Certificate course நடத்துகிறார். தமிழுக்கு தமிழர்கள்

இல்லாத பகுதியில் பேருக்குத் தமிழ்த்துறை இருக்க தமிழர்கள் உள்ள பகுதியில்இல்லாதது எண்ணிப் பார்க்கத் தக்கது.

கர்நாடகத்தில் ஒரு தமிழன் தமிழ் எம். ஏ. இலக்கியம் படிக்க முடியாது. எனவே ஆய்வுக்கு மேற்பார்வை செய்ய பலர் இருந்தும் எம். பில்; பிஎச். டி. ஆய்வு செய்ய வழி இல்லாமல் போய் விடுகிறது.

## தமிழ்ப் பத்திரிக்கைகள்

குறிப்பிடத் தகுந்த வகையில் கர்நாடகத்தில் இருந்து பத்திரிகைகள் வெளி-வந்திருக்கின்றன. இவற்றில் நாளிதழ், மாதஇதழ், காலாண்டுஇதழ் எனப் பலவகையுண்டு.

படிகள் என்னும் கலாச்சார காலாண்டு இதழ் 1978-ஆம்ஆண்டு பெங்களூரில் டிசம்பர் குளிரில் தொடங்கியது. இது தனது ஆறு ஆண்டு சாதனையை அசாத்தியமான முறையில் முடித்து ஏழாவது ஆண்டில் அடிஎடுதது வைத்துள்ளது.

''படிகள், பத்தோடு பதினொன்றாக வெளி வருகின்ற பத்திரிகை அல்ல; சில அடிப்படைகளைப் புரிந்து கொண்டு பொறுப்புடன் இந்தத் தமிழ்ச் சூழலில் நடந்து கொள்ளும் ஜீவித முறையின் இயல்பான செயல் வடிவ எழுத்து ரூபமே படிகள்'' என்ற பிரகடனத்தோடு வெளிவந்தது. இன்று தமிழில் தலை சாய்க்காமல் தலை நிமிர்ந்துள்ள சிறுபத்திரிகைகளில் படிகள் முதலிடம் வகிக்கின்றது.

புதிய பார்வையுடனும் புதுமையான முறையிலும் இப்பத்திரிகை 21 ஆவது இதழுக்காகக் காத்திருக்கிறது. கௌதமன், ஞானி சிவராமன், டி. ஜி. வி, தமிழவன், ஜெனகப்பிரியா, சிவசேகரம், மணிக்கண்ணன், நாகார்ஜுனன் போன்றோரின் கட்டுரைகளும் சில மொழி பெயர்ப்பு கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. சிவசு, பிரபஞ்சன், சுரேஷ் குமார், இந்திரஜித் ஆகியோரின் சிறுகதைகளும், சார்த்தர், மார்க்வெஸ் போன்றோரின் சிறுகதை மொழிபெயர்ப்புகளும் வெளியாகின. ஆத்மாநாம், சேரன் சுந்தரபாண்டியன் ஆகியோரின் கவிதைகளுடன் சுஜாதா, க. நா. சு. போன்றோரின் பேட்டிகளும் அச்சாகி-யுள்ளன.

படிகள் கர்நாடகத் தமிழர்களுக்கு மட்டுமல்லாமல் உலகத் தமிழர்களுக்கே உதாரணமாக விளங்கும் தகுதியைப் பெறுகின்றது.

பிருந்தாவனம் என்ற பெயரில் பெங்களூர் அனைத்துக் கல்லூரி மாணவர்களும் சில ஆசிரியர்களின் உதவியுடன் இலக்கிய இதழை 1980 - இல் ஆரம்பித்தனர். 4 ஆண்டில் ஆறு இதழ் மட்டுமே வெளிவந்து 1984-ல் நின்று போனது, மாணவர்களின் துரதிர்ஷ்டமே.

''இந்தச் சமூகத்தைப் பற்றி எங்களுக்குத் தெரிந்த கருத்துக்களைப் போலித்-தனமில்லாமல் அனைவருக்கும் எடுத்துரைப்பது தான் எங்கள் நோக்கமே அன்றி இலக்கியத்தை விற்பனை செய்வது அல்ல'', என்ற கொள்கையுடன் பிறந்தது; விற்க முடியாததாலேயே இந்த இதழ் நின்று போனதாகத் தெரிகிறது.

பதிலுக்குப் பதில், Short films ஒரு கண்ணோட்டம், நவீன ஓவியம், மாலன் பாலகுமாரனுடன் ஒரு பேட்டி, சினிமா விமர்சனங்கள், நூல் அறிமுகங்கள், பத்திரிகை

உலகம், ஓவிய கண்காட்சிகள் போன்றவை வித்தியாசமான வரவேற்க தக்க அம்சங்கள்.

பிருந்தாவனம், ப்ருந்தாவனம ஆகி, வெறும் வனமாகிப் போனது எதிர்பாராத இழப்பு.

தினச்சுடர் எனும் நாளிதழ் இங்கிருந்து பி. எஸ். மணி அவர்களால் நடத்தப் படுகின்றது. இது மாலை முரசுக்கு ஒரு மாற்று அவ்வளவு தான். இவர் மாலை முரசின் தலைமை ரிப்போர்ட்டராக இருந்தார். முன்பு. கடந்த 20 ஆண்டுகளுக்கு மேலாக இபபத்திரிகை லாபகரமாக நடத்தப்பட்டு வருகின்றது.

''கர்நாடகத் தமிழர்களுக்கு இங்கு நடக்கிற விவகாரங்கள்ள அக்கரையும் அறிவும் உண்டாகணும்னு தான் ஆரம்பித்தார்'' என்பார் பத்திரிகாசிரியர். இதன் புண்ணியத்தால் மக்கள் எங்கெங்கே கொலை களவு கற்பழிப்பு தவறாமல் நடக்கின்றது என்பதையும் விவரமாகப் போட்டோவுடன் தெரிந்து கொள்ளுகின்றனர். 'மர்ம மாளிகை' இதற்கு சான்றாகும்.

பெங்களூர் தமிழ்ச் சங்கத்தில் மாதம் தவறாமல் பீறிட்டெழும் ஊற்றில் ஏனோ தண்ணிர் குடிக்கும் படியாக (படிக்கும் படியாக) இல்லை. காரணம் இதில் செய்திகளும் கணக்குகளும் துணுக்குகளும் அறிவிப்புகளுமே அதிகமாக உள்ளன.

உ. த. க. வின் 'மீட்போலை' கழகத்தார்களை மீட்கும் பணியைச் செய்து வருகின்றது. தலைவர் செயலாளர்களின் கட்டுரைகளோடு சில செய்திகளையும் வெளி-யிட்டு வருகின்றது.

Stencil இதழான குறள் ஒலி 85முதல் அச்சினைக்காணும் பாக்கியம் பெற்றுள்ளது. இதில் திருவள்ளுவர் சங்கத்தின் கணக்கு வழக்குகளே அதிகம். 'வாழட்டும் குறள் பண்பு வளரட்டும் ஒருமைப்பாடு' என்பது இதன் கொள்கை.

எழுபதுகளில் சில பத்திரிகைகள் முளைத்து முடிந்து போயிருக்கின்றன. மலேசிய கவிஞர் உலகநாதனின் 'திருப்பம்' சரியான திருப்பம் காண முடியாமல் அவரது விருப்பத்தோடேயே நின்று போனது என்பர்.

தேவராசனின் 'தொடுவானம்' சில மாதங்கள் வெளி தெரிந்தது. கட்டுரைகள் கவிதைகள் என்று தொடங்கி கதையாக முற்றியது.

இராமியின் 'தெருக்கூத்து'ம் சில மாதங்களோடு முடிவுற்றது. நாட்டுப்புற-கலைகளைப் புனருத்தாரணம் செய்தால் நல்லது என்பது இதன் நோக்கம்.

### தமிழ்ச் சங்கங்கள்

பெங்களூரில் 1950 - இல் பேரா. தண்கியார் தலைமையில் இலக்கியப் பணியை ஆரம்பித்து பின்னர் அதனைச் சங்கமாக 1958 - இல் மாற்றினர். இன்று மூன்று மாடி கட்டிடத்தில் மிகக் கம்பீரமாக் எழுந்து நிற்கிறது. இங்கு வந்து கலந்து கொள்ளாத இலக்கிய வாதிகளே இல்லை என்று சொல்லலாம். 35 ஆண்டுகள் ஆன இத் தமிழ்ச்சங்கம் கலை நிகழ்ச்சிகள், இலக்கிய நிகழ்ச்சிகள் ஆகியவற்றோடு தேர்வுகள் போட்டிகள் நடத்தியும் தமிழ் வளர்க்கிறது. கராத்தே, யோகா, தையல் போன்ற தமிழுக்குப் புறம்பான

காரியங்களைச் செய்து வந்தாலும் தமிழும் கன்னடமும் சொல்லித் தருவதோடு வீணை, வாய்ப்பாட்டு போன்றவற்றையும் கற்றுத் தருகின்றது. ஆண்டு மலர்கள் வெளியிடுவதோடு மாதந்தோறும் ஊற்று எனும் இதழையும் (அப்படித்தான் Regd செய்திருக்கிறார்கள்) வெளியிடுகிறார்கள். பல திட்டங்களை எதிர் காலத்துக்கென வைத்திருக்கும் இவர்கள் திருவள்ளுவரை எப்படியாவது சங்கத்திற்கு எதிரே உட்கார வைத்து விடுவது என முயல்கின்றார்கள்.

பெங்களூரில் உள்ள கல்லூரிகளில் செயின்ட் ஜோசப் கல்லூரி 100 ஆண்டுகளைக் கடந்து வெற்றிநடை போடுகிறது. இங்குள்ள தமிழ்ச்சங்கம் 1932 - இல் திரு. தொ. வே. செங்கல்வ ராயனால் நிறுவப்பட்டு பேரா. தண்கியாரால் வளர்க்கப்பட்டு இன்று பொன் விழாவை முடித்து உள்ளது. வயதில் இது பெங்களூர் தமிழ்ச் சங்கத்தைவிட மூத்தது. சேதுப் பிள்ளை முதல் சி. பா. வரை பல பேராசிரியர்களும், அண்ணா முதல் காளிமுத்து வரை பல அமைச்சர்களும், எம். கே. தியாகராச பாகவதர் முதல் டி. எம். எஸ். எதிரொலி வரை பலபாடகர்களும், கண்ணதாசன் முதல் வைரமுத்து வரை பல கவிஞர்களும் வந்து சங்கத்தில் அரங்கேறி இருக்கிறார்கள். மாணவர்களுக்காகப் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளாக மட்டுமல்லாமல் சிறுகதை பட்டறை, போட்டிகள் போன்றவற்றையும் நடத்தி வருகின்றனர்.

பி.இ எல். தமிழ் மன்றம் 1958-இல் நூலகமாகத் தொடங்கி 1959-இல் மன்றமாகப் பதிவு செய்யப்பட்டது. தமிழகத் தலைவர்களையும், அமைச்சர்களையும், பேரறிஞர்களையும், கே. பி. சுந்தரம்பாள் போன்ற பாடகர்களையும், எம். ஆர். ராதா போன்றோரின் நாடகங்களையும் நிகழ்த்தியுள்ளது. சென்ற ஆண்டு வெள்ளிவிழா கொண்டாடி மலர் வெளியிட்ட இம் மன்றம் ஆண்டு தோறும் கையெழுத்து மலரையும் வெளியிட்டு வருகிறது.

தூர வாணி நகர் தமிழ் மன்றம் 1959 - இல் தொடங்கப்பட்டு கலை இலக்கியப் பண்பாட்டினை வளர்ப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளது. இங்குள்ள நூலகத்தில் 500 க்கும் மேற் பட்ட நூல்கள் உள. சென்ற ஆண்டு இம் மன்றமும் வெள்ளிவிழாவைக் கொண்டாடியது.

சி. டி. ஓ. தமிழ் மன்றம், எச். ஏ. எல் தமிழ் மன்றம், என். ஜி. எப். தமிழ்ச் சங்கம் போன்றவை குறைந்த பட்சம் பொங்கல் விழாவையாவது தவறாமல் கொண்டாடி வருகின்றன.

இண்டியன் இன்ஸ்ட்டிடியூட் ஆப் சயன்ஸ் தமிழ் மன்றம் ஆண்டு தோறும் குறிப்பிடத்தக்கப் போட்டிகளையும் முத்தமிழ் விழாவையும் கொண்டாடி வருகின்றது. அனைத்துக் கல்லூரி மாணவர்களும் ஆர்வத்துடன் இங்கு கலந்து கொள்கின்றனர்.

ஆர். சி. கல்லூரி, ஆர். பி. ஏ. என். எம். எஸ். கல்லூரி, மகாராணியார் கலைக் கல்லூரி, அரசு கலைக் கல்லூரி, அலாசியஸ் கல்லூரி போன்றவற்றில் தமிழ் மன்றம் உண்டு. ஆனால் எப்பொழுதாவது மழை வந்தால் குடை பிடிகிறது போல மகிழ்ச்சி வரும் போது வள்ளுவரையோ பாரதியாரையோ நினைத்துக் கொள்ளுகிறார்கள்.

ஆர். பி. ஏ. என். எம். எஸ் உயர் நிலைப் பள்ளி, செயின்ட் மேரி உயர் நிலைப் பள்ளி, செயின்ட் அல்போன்ஸ் உயர் நிலைப் பள்ளி போன்றவை ஆண்டு விழாவை

கொண்டாடும் போது மறக்காமல் தமிழ் நிகழ்ச்சிகளையும் சேர்த்துக் கொள்ளுகின்றனர்.

அல்சூர் பகுதியில் குறள் நெறி மன்றம் என்பது திருக்குறளைப் பரப்பும் நோக்கத்தில் ஆண்டு தோறும் பள்ளி மாணவர்களுக்குப் போட்டி நடத்தவும், பரிசு அளிப்பு விழாக்கள் நடத்துவதும் ஆக செயல் பட்டு வருகின்றது. திருக்குறள் மன்றம் என்ற அமைப்பு நூலகமாக இயங்கி வருகின்றது. 10,000 நூலுக்கு மேல் உள்ள இந்த அமைப்பும் திருக்குறளைப் பரப்பிட, நூலகத்திற்கு வருபவர்கள் ஒரு குறளை எழுத வேண்டும் என்றும் திருக்குறள் முழுவதையும் தப்பில்லாமல் எழுதுபவர்க்குத் திருக்குறள் நூலைப் பரிசாகக் கொடுப்பது என்றும் அறிவித்து அதனைச் செயல்படுத்தியும் வருகின்றனர். ஸ்ரீராம்புரம் பகுதியில் திருவள்ளுவர் சங்கமும் வள்ளுவர் கருத்துக்களைச் சொற்பொழிவுகள், பட்டி மன்றங்கள், சிறு விழாக்கள் மூலம் பரப்பி வருகின்றனர்.

அல்சூரில் ஔவைக் கழகமும், பாரதி நகரில் பாரதி கழகமும், அசோக் நகரில் வ. உ. சி. நூலகமும் தமிழ் வளர்க்கும் கூடங்களாகும். மறைமலையடிகள் நூலகமும் அல்சூர் மார்க்கெட்டில் தமிழ் வளர்த்து வருகிறது.

பாரத கனரக மின்பொறி ஆலையில முத்தமிழ்ச் சங்கத்தினை நிறுவியுள்ளனர். இது மைசூர் ரோட்டில் உள்ளது இது போல பல தொழிற் சாலைகளிலும தமிழர்கள் சிறு சிறு அமைப்புகளை வைத்துள்ளனர்

பெங்களூருக்கு வெளியே மைசூர், பத்ரவதி, சிவமுகா, ஆசன், சிங்கினமனை பி. ஆர். பிராஜக்ட் போன்ற இடங்களிலும் தமிழ்ச் சங்கங்கள் செயல் பட்டு வருகின்றன. இவற்றில் சிங்கினமனை பி. ஆர். பிரா ஜக்ட் தமிழ்ச்சங்கம் 15 ஆண்டுகளாகவும் மற்றவை இதற்கு முன்பிருந்தும் செயல்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது. இச் சங்கங்கள் கலை நிகழ்ச்சிகள் விழாக்கள் போன்றவற்றிலேயே கவனம செலுத்தி வந்தாலும் தமிழர் ஒற்றுமைக்கு இவை வழிவகுத்து வருகின்றன.

## தமிழ் ஆசிரியர்கள்

இங்குள்ள பள்ளி ஆசிரியர்கள் இணைந்து கர்நாடக மாநிலத் தமிழாசிரியர் சங்கம் என்ற பெயரிலும் கல்லூரி ஆசிரியர்கள் இணைந்து கர்நாடக தமிழ்ப்பேராசிரியர் மன்றம் என்றும் நிறுவியுள்ளனர்.

கருநாடக மாநில தமிழாசிரியர் சங்கம் 1979 இல் இலக்கிய மாநாடு அமைத்து சிறப்பு மலரை வெளியிட்டனர் தமிழ்ப் பேராசிரியர் மன்றம் 1982 இல் இந்தியப் பல் கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற 14 வது கருத்தரங்கை நடத்தி சிறப்பு மலரை வெளியிட்டனர்.

1976 இல் க. சுப்பிரமணியம் தலைமையில் தமிழாசிரியர் சங்கம் உருவானது. இத்துடன் கோலார் தங்கவயல் தமிழாசிரியர் சங்கத்தையும் இணைத்துக் கொண்டனர். 1962 இல் மைசூர் மாநில தமிழாசிரியர் சங்கம் உருவானது. அது செயலிழந்த நிலையில் தான் புதிய அமைப்பு தோன்றியது. 65 தமிழாசிரியர்கள் பணியாற்றுவதாக இன்றைய நிலையில் பெயர்ப்பட்டியல் கிடைத்துள்ளது. இவர்களில் இராசமாணிக்கனார் க. சுப்பிரமணியன், மா. சிவசங்கரன், சண்முக குப்புசாமி போன்றவர், தமிழ்ப்புலமையும் முதுமையும் கொண்டவர்கள். ஒய். சந்தன சிலுவை 'தமிழ் எங்கள் உயிர்' என்னும் நாடகம் எழுதி வெளியிட்டுள்ளார். நடேச முதலியார் பல்வேறு நூல்கள் எழுதியவர்.

கல்லூரி ஆசிரியர்களாக 35 பேர் பட்டியலில் இடம் பெறுகின்றனர். தொ. வே செங்கல்வராயனார், எஸ். உருத்திராபதி போன்றோர் முப்பதுகளில் பேராசிரியர்களாகப் பணிபுரிந்தனர்.

பேரா. தி. க. நாகாம்பாள், பேரா. தண். கி. வேங்கடாசலம் போன்றோர் ஓய்வு பெற்றுள்ளனர். இவர்களில், பேரா. தண்கி. பல்வேறு நூல்கள் எழுதியும் சங்கப் பொறுப் பேற்றும் தமிழ் வளர்த்து வந்தார். அம்மையாரும் சில நூல்கள் எழுதியுள்ளார். இவரது வசவண்ணர் குறிக்கத்தக்கது.

திரு. ப. பாலசுப்பிரமணியம், த. கிருட்டிணமூர்த்தி, இராசமாணிக்கம் போன்றவர்கள் தமிழ்ப் புலமை கொண்ட சீனியர்கள். பேரா. ப. பெருமாள் எழுத்தார்வம் மிக்கவர். இவரது கட்டுரைகள் இல்லாத மலர்கள் மலர்களே இல்லை எனலாம். இவரது தமிழ் பற்றிய ஆங்கில நூலும் குறிக்கத்தக்கது. திரு. நடராசன் குறிப்பிடத்தக்க பாடகர்.

திரு. கார்லோஸ் நவீன இலக்கியத்தில் அறிவும் ஆர்வமும் கொண்டவர். தமிழவன் எனும் பெயரில் சில சாதனைகளைச் செய்துள்ளார். இந்தியாவிலேயே முதன் முதலில் ஸ்டரக்சுரலிசம் பற்றி நூல் எழுதியவர். டாக்டர் இளங்கோ பாரதிதாசனுக்கே அதாரிட்டி என்று சொல்லும் வகையில் பல நூல்களை படைத்துள்ளார். டாக்டர் சு. சண்முக சுந்தரம் (அதாவது இந்தக் கட்டுரை ஆசிரியர்) நாட்டுப்புற இலக்கியத்தில் அதிக ஆசையுள்ளவர். அதன் காரணமாகப் பல நூல்களை எழுதியுள்ளார். 'பகல் கனவுகள்' இவரது புதுக்கவிதை நூல். நாவலும் எழுதியுள்ளார். பேரா. சீனிவாசன் சக்தி வழிபாடு எழுதியும் இவரது துணைவியர் பேரா. சங்கரி சீனிவாசன் 'பெரிய புராணத்தில் உவமைகள்' எழுதியும் புகழ் பெற்றனர். பேரா. பூங்காவனம் துடிப்பான ஆய்வாளர், பேச்சாளரும் கூட. பேரா. கிருஷ்ணசாமி, கவிதைகள் கட்டுரைகள் எழுதும் நவீன இலக்கிய வாதி. சிலர் பட்டி மன்றம் பேசுவதில் வல்லவர்கள்.

மைசூரில் டாக்டர் இ. அண்ணாமலை, டாக்டர் திருமலை, டாக்டர் தங்க மணியன், டாக்டர் வீரப்பன் போன்றவர்கள் பணியாற்றி வருகின்றனர். இவர்கள் ஆய்வுலகில் அரிய சாதனைகளை புரிந்து வருகின்றனர்.

## தமிழ்க் கலைகள்

பொய்க்கால் குதிரை ஆட்டத்தில் வல்லவர் என்று டி. சி. சுந்திர மூர்த்தி விளங்குகின்றார் 'ஸ்ரீ சுந்தர புரவி நாட்டியக் கலா மன்றம், என்ற பெயரில் அமைப்பு வைத்துள்ளார். 68 வயதுள்ள இவர் ஆட்டத்தில் இன்னும் இளமையாகவே இருக்கிறார். உலகப்புகழ் புரவியாட்டப் பேரரசு என்று தம்மை அழைத்துக் கொளளும் கலைமாமணி யான இவர் உண்மையான கலைமணி என்றால் பொருந்தும்.

நாடகக் கலை மன்றங்கள் கர்நாடகத்தில் மிகுதி. குறிப்பாகப் பெங்களூரில் இவை அதிகம். தனிநபர்களின் குழுக்களோடு, சத்தியா நுண்கலைக்குழு, 515 நுண் கலைக்குழு, தியஸ் ஒர்க்கர்ஸ், தென்கலை நாடகமன்றம், ஐ. டி. ஐ. நுண்கலைக்குழு எச். ஏ. எல் நுண்கலைக்குழு, மைக்கோ நுண்கலைக்குழு, பாவேந்தர் கலைக்குழு, என். கே. நுண்கலைக்குழு, விக்னேஸ்வரா குழு, பாரத மாதா நுண்கலைக்குழு, யூனிகார்ன் நுண்கலைக்குழு, கலைவாணி நுண்கலைக்குழு, பெங்களூர் யுனைடெட் ஆர்ட்ஸ் அன்பு நாடக மன்றம், ஏஞ்சல் சில்ரன் நுண்கலைக் குழு, யூனிவர்சல் நுண்கலைக்குழு,

மூவண் நுண்கலைக் குழு, சித்திர பிரியா நுண்கலைக் குழு டாக்டர் அம்பேத்கார் நுண் கலைக்குழு, ஏ. எல். நாதர் குழு, யு. எஸ். ஏ. குழுவினர், ஜெய ஸ்ரீ நுண் கலைக் குழு, சிடி அமெச்சூர் குழு, ராயல் நுண்கலைக்குழு, எஸ். எஸ். எஸ். நுண்கலைக்குழு, இராதா நுண்கலைக்குழு போன்ற குழுக்கள் பெங்களூரில் நாடகத்தை நடத்திக் கொண்டு வருகிறார்கள். பெங்களூர் -தமிழ்ச் சங்கம் நடாத்தும் நாடகப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளைப் பெறுகிறார்கள்.

PSCO நாடகக்குழு ஒன்று வீதி நாடகங்களாக பெல்ஜி, படப்பாயி மாதப்பா போன்ற நாடகங்களை நடத்தி வந்தனர். இவர்கள் 'சமுதாயா' எனும் கன்னட நாடகக் குழுவைப் பார்த்து பாதிப்பு பெற்றவர்கள்.

சுஜாதாவின் நாடகங்கள் சில அவரது துணைவியாரும் சேர்ந்து பி. இ. எல். கலை மன்றங்களில் நடிக்கப் பெற்றுள்ளன. இவை புது முயற்சிகள்.

இசைக் கலையைப் பத்மி, மேகால்யா, சரசகலா, விஜயகலா, பிருந்தாவன், சித்ராலயா போன்ற குழுவினர் சினிமாப் பாடல்கள் மூலம் தமிழிசையை வளர்த்து வருகின்றனர்.

## தமிழ் நூலகங்கள்

தனியாகத் தமிழ் நூலகங்கள் அரசு சார்பில் இல்லை. தனியார் பொறுப்பில் நிறைய உள்ளன. அரசு நூலகங்களில் முன்பு தமிழ் நூல்கள் நிறைய வாங்கினார்களாம். இப்போது அதுவும் இல்லை.

தமிழ்ச் சங்கத்தில், நூலகம் அளவிலும் எண்ணிக்கையிலும் மிகப் பெரியது. திருக்குறள் மன்றம் எனும் நூலகம் மிகப் பழமையான நூல்களுடன் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இந்த இரண்டுமே நிறுவனமாக சிறந்த முறையில் இயங்கு கின்றன.

கல்லூரி அளவில் பல நூலகங்கள் உள்ளன. செயின்ட் ஜோசப் கல்லூரி கடந்த ஐம்பது ஆண்டுகளாக நூல்களைச் சேகரித்து வைத்துள்ளது. ஆர்பி. ஏ. என். எம். எஸ். கல்லூரி நூலகமும் நூல்களை நிறைய தொகுத்துள்ளது. இதை தவிர ஏறக்குறைய 10 கல்லூரிகள் தமிழ் நூலகங்களைச் சிறப்பாக வைத்துள்ளன.

மறைமலை அடிகள் நூலகம், சிதம்பரனார் நூலகம், பைந்தமிழ் நூலகம், திருக்குறள் நூலகமும் குறிப்பிடத்தக்கன. இவை தனியாரால் நடத்தப்பட்டு வருகின்றன.

தொழிற்சாலைகளில் உள்ள தமிழ்ச் சங்கங்கள் தனித்தனி நூலகங்களை ஏற்படுத்தி தமிழ் நூல்களைப் பெருக்கி உள்ளனர். தபால் தந்தி அலுவலக நூலகத்தில் நூல்களும் மாத, வார இதழ்களும் தொகுத்து வைத்துள்ளனர்.

பெங்களூரைப் போலவே தங்கவயல், மைசூர், ஆசன், பத்ராவதி போன்ற இடங்களில் தமிழ் நூலகங்கள் இருப்பது தெரிய வருகின்றது.

## தமிழ் எழுத்தாளர்கள்

பெங்களூர் பொதுவாகத் தனது தட்பவெப்ப நிலையாலும் தோட்ட வளத்தாலும் அழகாலும் எழுத்தாளர்க்கு ஏற்ற இடமாக விளங்குகின்றது. பல எழுத்தாளர்கள் வந்து தங்கி, கதை, கவிதை, வசனம் எழுதுவதாக அறிய முடிகின்றது. கலைஞர் கருணாநிதி, கண்ணதாசன் போன்றவர்களுக்குப் பெங்களூர் மிகப் பிடித்த இடம் என்பர்!

இதைத் தவிர வேலை காரணமாகப் பல எழுத்தாளர்கள் இங்கு வந்து பணி புரிகின்றனர். எழுதியும் வருகின்றனர். சிலர் இங்கேயே வாழிடமாகக் கொண்டுள்ளனர்.

சுஜாதா எனும் ஸ்ரீரங்கம் ரெங்கராஜன் பி. இ. எல்லில் உதவி ஜெனரல் மேனேஜராகப் பணியாற்றிக் கொண்டே 17 ஆண்டுகளாக எழுதி வருகின்றார். 70 க்கும் மேலான நூல் எழுதிய இவரது கதைகளில் பல திரைப்படமாகியுள்ளன; சில. மலையாளம் கன்னடம் இந்தி போன்ற மொழிகளில் பெயர்க்கப் பட்டுள்ளன. எலக்ட்ரானிக்ஸ், காசளவில் ஒரு உலகம், கம்பியூட்டர் போன்ற விஞ்ஞான நூல்களையும் எழுதியுள்ளார்.

ஆதவன், நேஷனல் புக் டிரஸ்டில் பணியாற்றுபவர். டில்லியிருந்து இப்போது இங்கு வந்துள்ளார். இவரது காகித மலர்கள், என் பெயர் ராமசேஷன் போன்ற நாவல்கள் குறிப்பிடத் தக்கன.

இந்திய பாஸ் போர்ட், இந்திரா காந்தியின் இரண்டாவது முகம் போன்ற சிறு கதைகளை எழுதி சாவி குங்குமம் போன்ற இதழ்களில் புகழ் பெற்ற இராமச்சந்திரன் இங்குள்ள தனியார் நிறுவனத்தில் பணியாற்றும் கோயம்புத்தூர்க்காரர்.

பெங்களூரைச் சார்ந்த வாஸந்தி புது டில்லிக்குப் போய் கதை எழுதி வருகிறார். டி. ஆர். நடராஜன் எனப்படும் ஸிந்துஜா மதுரையிலிருந்து இங்கு வந்து மைசூர் சேல்ஸ் இண்டர் நேஷனலில் பணி செய்கிறார். கணையாழியில் 10 ஆண்டுகள் எழுதியவர் அமுதவன் என்ற பெயர் கொண்ட திருச்சி மெல்க்யூ ஐ. டி. ஐ. யில் பணி செய்து கொண்டே கதை எழுதுகிறார். கங்கை யெல்லாம் கோலமிட்டு எனும் நாவல் குறிக்கத் தக்கது.

சு. சமுத்திரமும் இப்போது இங்கிருந்து எழுதி வருகிறார். அனிதா ராமச்சந்திரன், ப. மூர்த்தி, அ. குமார், தஞ்சைமா இராஜேந்திரன, மதுரை மோகனராஜன் போன்றவர் இங்குள்ள துணுக்கு எழுத்தாளர்கள். ஞான பீட பரிசு பெற்ற, நிறைய எழுதிக்குவித்த மாஸ்தி வெங்கடேச ஐயங்கார், கே. வி. ஐயர் போன்றவர்கள பழம் பெரும எழுத்தாளர் கள். இவர்கள் கன்னட மொழிக்குச் செய்த தொண்டு மிகுதி.

இவ்வாறு கர்நாடகத்தில் தமிழர்களின் வாழ் நிலையையும், தமிழ் நிலையையும் விளக்கமாகக் காணலாம். இத்துடன் தமிழின் எதிர்கால நிலை, தமிழர்களின் வேலை வாய்ப்பின்மை. தமிழக அரசின் அக்கறையின்மை, கர்நாடக அரசின் கண்ணோட்டம் போன்றவையும் ஆராயத் தக்கன.



# அலிகாரில் தமிழ்க் கல்வி

— டாக்டர். தே. சீனிவாசவரதன்

## தொடக்கம்

அலிகார் தில்லியிலிருந்து தென்கிழக்கில் 130 கிலோ மீட்டர் தொலைவில் கல்கத்தா செல்லும் பாதையில் உள்ளது. இது மாவட்டத் தலை நகரமாகும். உத்திரப் பிரதேசத்திலுள்ள மற்ற மாநகரங்களான இலக்னொ, அலகாபாத், ஆக்ரா, வாரணசி, மீரட்டு போன்ற இடங்களில் தமிழர் எண்ணிக்கை கணிசமாக உள்ளது. அலிகாரில் மிகக் குறைந்த தமிழரே உள்ளனர். அலிகாரில் தொழில் வளம் உண்டு. இங்கு நடக்கும் பூட்டுத் தொழில உலகச் சிறப்புப் பெற்றது. எனினும் அலிகார் தமிழரைத் தன்மாட்டு ஈர்க்க வில்லை. இதன் காரணம் புலனாகவில்லை. உலகில் எந்த மூலைக்குச் சென்றாலும் தமிழன் தன் முகங்காட்டி வருவான். ஆனால் அலிகார் வரும் ஒரு தமிழன் தன் இனத்தைத் தேடித்தான் கண்டு பிடிக்க வேண்டும். இஃது எவ்வாறேனும், இங்கும் தமிழ் மொழி தளிர்த்து வளர இடம் பிடித்துக் கொண்டிருக்கிறது.

## முஸ்லிம் பல்கலைக் கழகம்

சுமார் நூற்றுப்பத்து ஆண்டுகளுக்கு முன்னர் [கி. பி. 1875] இந் நகரத்தின் தெற்கே மூன்று கிலோ மீட்டர் தொலைவில் அக்காலத்துத் தலை சிறந்த முஸ்லிம் தலைவர்களுள் ஒருவரும், கல்வி கேள்விகளிற் சிறந்தவருமான 'ஸர். சையது அகமத் கான்' என்னும் பெரியார் ஓராங்கிலப் பளளி நிறுவினார். அஃது பின்னர் 'ஆங்கிலோ-ஓரியண்டல் காலேஜ்' ஆக மாறியது. இக் கல்லூரி கி. பி. 1920 இல் பல்கலைக் கழகமாகப் பரிணமித்தது இபபல்கலைக் கழகத்தில் பதினையாயிரத்திற்கும் மேற்பட்ட உள்நாட்டு - வெளிநாட்டு மாணவர் வந்து தங்கிப் படிக்கின்றனர். [Residential University] இஃது நடுவரசாங்கத்தின் கீழ் செயல்படும் சில பல்கலைக் கழகங்களுள் ஒன்றாகும். [Central University]

## பல்கலைக் கழகத்தில் தமிழ்

இப் பல்கலைக் கழகத்தில் 1959 - ஆம் ஆண்டு, இந்திய மொழிகளாகிய 1- தமிழ், 2- மலையாளம் 3- தெலுங்கு 4- மராத்தி 5- பெங்காலி எனும் ஐந்து மொழிகள் இந்தித் துறையில் இணைக்கப்பட்டுக் கற்பிக்க வழி செய்யப்பட்டது. எனினும் தமிழிற்குத் தனி விரிவுரையாளா 1969 - இல் தான் நியமிககப் பட்டார். அதுமுதல் இங்கே தமிழ் கற்பிக்கப்பட்டு வருகிறது.

## வகுப்புகள்

தமிழிற்கு மூன்று வகுப்புகள் நடத்தப்படுகின்றன. 1 - சான்றிதழ் [Certificate] வகுப்புகள். தமிழ் ஓராண்டு பயின்று சான்றிதழ் பெறலாம். 2 - டிப்ளோமா - சான்றிதழ் பயின்று தேர்ச்சி பெற்றவர் டிப்ளோமா ஓராண்டு பயிலச் சேர்த்துக் கொள்ளப் படுவர். இவ்விரண்டு வகுப்புக்களும் தமிழ் முன்னர் அறியாதார்க்குக் கற்பிக்கப்படும் நோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

சான்றிதழில் சேரும் மாணவர் ஐவர்க்கு மாதம் ரூ 20/- உம், டிப்ளோமாவிற்கு சேரும் மாணவர் ஐவர்க்கு மாதம் ரூ 25/- உம் பல்கலைக் கழகம் உதவித் தொகையாக வழங்குகிறது. 3 - பி - ஏ (ஆனர்சு) கலைப்புலனில் [Faculty of Arts] பயில வரும் தமிழ் மாணவன் இணைப்பாடமாகவோ [Subsidiary] முக்கியப் பாடமாகவோ [Main] தமிழைக் கற்கலாம். சில ஆண்டுகள் இவ்வகுப்பில் மாணவர் பயின்றிருக்கின்றனர்.

வரும் ஆண்டு முதல் மலையாள எம். ஏ யில் தமிழும் ஒரு பாடமாகப் படிக்க வழி வகுக்கப் பட்டுள்ளது.

## ஆராய்ச்சி

இந்தித் துறையில் எவரேனும் தமிழர் இந்தியில் ஆராய்ச்சி செய்ய வந்தால் அவரைத் தமிழினை இந்தியுடன் ஒப்பிடும்படிக் கேட்டுக் கொள்வது வழக்கமாக இருந்து வருகிறது. இம்முறையில் இருவர் தமிழ் - இந்தி ஒப்பாய்வு செய்து பட்டம் பெற்றுள்ளனர்.

1 - திரு. மாலிக் முகம்மது ''ஆழ்வார்களின் நாலாயிர திவ்ய பிரபந்தமும் - இந்தி கிருஷ்ண காவ்யங்களும்'' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்து பிஎச். டி. பட்டம் பெற்றார். இவரது நூல் வடநாட்டவர்க்கு ஆழ்வார்களை அறிமுகப் படுத்துவதுடன் அமையாது, இருபுறத்துமுள்ள கவிஞர்களின் கருத்து ஒப்புமைகளையும் விளக்கிக் காட்டுகிறது.

2 - திரு. சீனிவாசவரதன் [இக் கட்டுரை ஆசிரியர்] ''தமிழ்ப் பரணியும் - இந்தி இராசோவும்'' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். இவரது ஆராய்ச்சி நூல் 1982 - இல் வெளியிடப் பட்டது. நடுவரசின் பரிசினையும் பெற்றுளது. தற்சமயம் இவர் பல்கலைக் கழக மானியக் குழுவின் அனுமதியுடன் ''தமிழ்ச் சிற்றிலக்கியம் ஓராய்வு'' என்ற தலைப்பில் ஆராய்ந்து வருகிறார்.

## மற்றைய தமிழ்ப்பணி

ஸூர்தாஸ் இயற்றிய ''ஸூர்ஸாகர்'' என்ற நூலிலிருநது தொகுக்கப் பட்ட நூறு பாடல்கள் டாக்டர் தே. சீனிவாசவரதனால் மொழிபெயர்க்கப்பட்டு பாரத அரசின் - கல்வியமைச்சரகத்தின் மூலம் வெளியிடப்பட்டுள்ளது. மகாகவி பாரதியின் நூல்கள் அனைத்தும் இந்தியில் மொழி பெயர்த்து வெளியிடும் திட்டம் நடுவரசின் செய்தித் துறை அமைச்சரகத்தில் உள்ளது. மொழிபெயர்க்கும் அறிஞர் பட்டியலில் டாக்டர் சீனிவாசவரதனின் பெயரும் இடம் பெற்றுள்ளது. இவர் பல்கலைக்கழகப் பேராளராக ஒவ்வொரு ஆண்டும் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் வெளியிடும் மாநாட்டு மலருக்குக் கட்டுரை வழங்கி வருகிறார். ஏழு எட்டு ஆண்டுகள் மாநாட்டில் கலந்து கொண்டு கட்டுரை படித்துள்ளார்.

## தற்கால இந்திய மொழியியல் துறை

இந்தித்துறையின் கீழ் மற்றைய இந்திய மொழிகள் நன் முறையில் வளர வழியில்லை என்பதனை உணர்ந்த பல்கலைக்கழக மானியக்குழு [ University Grants Commission ] இம் மொழிகளைத் தனித்துறையாக்க அனுமதி வழங்கியுள்ளது. எனவே இத்துறை 21 - 9 - 84 முதல் தனித்து இயங்கத் தொடங்கியுள்ளது. தமிழில் ஆராய்ச்சி தொடங்க திட்டமிடப்பட்டு வருகிறது.

## நூல் நிலையம்

பொது நூல் நிலையத்தில் கடந்த பதினைந்து ஆண்டுகளாகக் கிடைத்து வந்த சிறு சிறு உதவித்தொகை கொண்டு சுமார் 600 நூல்கள் வாங்கப்பட்டுள்ளன. இவ்வாண்டு மட்டும் 300 நூல்கள் சுமார் ரூ5000/-க்கு வாங்கப்பட்டுள்ளது. இனி வரும் ஆண்டுகளிலும் பெருமளவில் நூல்கள் வாங்கப்படும்.

## நகரத்தில் தமிழ்

பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் இரண்டு மூன்று தமிழரின் குடும்பமும் - பால் பௌடர் தயார் செய்யும் ''கிளாக்ஸோ'' கம்பனியில் பணி புரியும் இரண்டொரு தமிழரின் குடும்பமுமே அலிகாரில் நிரந்தரமாக வாழும் தமிழர் குடும்பமாகும்.

இங்கே பாரத அரசின் அச்சுக்கூடம் [Govt of India's Press] உள்ளது. கானரா பாங்கு, இந்தியன் பாங்கு - இவற்றின் கிளைகள் உள்ளன. மேலே குறிப்பிட்ட நிறுவனங்களில் அவ்வப்போது வெளியூரிலிருந்து மாற்றப்பட்டு ஒரு சில ஆண்டுகள் இங்கே பணி புரியச் சில தமிழர் வருகின்றனர். தமிழகத்திலிருந்து எவரேனும் மாற்றப் பட்டு இங்கு வந்தால் தமக்கு ஏதோ தண்டனை தரப்பட்டதாகவும் மறுபடியும் தாம் எப்போது மாற்றப் படுவோம் என்றும் ஏங்கித் தவிக்கின்றனர். இதற்குக் காரணம் - அவர் இந்தி மொழி அறியாததும், உள்ளூர் சூழ்நிலையை உடனாகப் புரிந்து கொள்ள முடியாமையும் ஆகும். வடநாட்டிலேயே பிறந்து வளர்ந்த தமிழர் இவ்வாறு நினைப்பதில்லை என்பதும் ஈண்டுக் கருதத்தக்கது.

மேலே குறிப்பிட்ட குடும்பத்தினர் தம்முள் கலந்து உரையாடுவதுண்டு. ஆனந்த விகடன், குமுதம் போன்ற தமிழ் ஏடுகளை வாங்கிப் படிப்பர். மேலே குறிப்பிட்டவர்களில் பலர் வருவதும் போவதுமாக [Transferable Service] உள்ளவர் ஆதலால் நிரந்தரமாக ஒரு கழகம் அமைத்துச் செயல்பட முடியாத நிலை உள்ளது.

## புறநகர்த் தமிழ்

அலிகாருக்கு அருகில் ஆறு கிலோமீட்டர் தொலைவில் ''காசிம்பூர்'' என்ற ஊர் உள்ளது. இங்கு ''அனல் மின் நிலையம்'' உள்ளது. இந் நிலையத்தில் 30 - 35 தமிழர் பணிபுரிகின்றனர். இவர்களுடைய குடும்பம் தங்க நிலையத்திற்கு அருகிலேயே விடுதிகள் கட்டப்பட்டுள்ளன. இக் குடும்பத்தினரும் தமிழை மறவாதிருக்க - தமிழகச் செய்திகளை அவ்வப்போது உணர வார - மாதத் தமிழ் ஏடுகளை வாங்கித் தவறாது படிக்கின்றனர் இவர்கள் குழநதைகள் அலிகாருககும் படிக்க வருவர். அவ்வப்போது தமக்கு வேண்டிய சாமான்களையும் அலிகாரிலிருந்தே வாங்கிச் செல்வர். அலிகார் வந்து செல்ல இவர்க்கு அலுவலக உந்துகள் உதவும்.

## முடிப்புரை

மேலே குறிப்பிட்டவாறு அலிகாரிலும், இந் நகர்ப்புறத்திலும் தமிழ் ஓரளவு வளர்ந்து வருகிறது என்பதனை அறிந்து நாம் மகிழ்ச்சி கொள்ளலாம்.



# வங்காளத்தில் தமிழ்க்கல்வி

— டாக்டர் ரங்கநாயகி மகாபாத்ரா.

தமிழ்கூறு நல்லுலகங்களுள் ஒன்றாய்த் திகழும் வங்க மாநிலத்தில் கிழக்கு, வடக்கு இந்தியாவிலேயே மிகுதியான அளவு தமிழ்ப் பண்பாடு, கல்வி, கலை, முதலியன வேரூன்றி யிருக்கின்றன. இலட்சக் கணக்கான தமிழரும் மற்றத் தென்னிந்தியர்களும் பல தலைவர்களும் பல தலை முறைகளாக வாணிகம், தொழில், அரசு மற்றும் தனியார் நிறுவனங்களில் பணி முதலியவற்றால் இங்கே வந்து தங்கி விட்டனர். வந்தேறிய மக்கள் என்றாலும் இந்த மண்ணில் ஒன்றி அமைதியாக வாழ்ந்து அதே நேரத்தில் தங்கள் கலை, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றையும் ஆர்வத்தோடு போற்றிப் பாதுகாக்கிறார்கள். எனவே தமிழ்க் கல்வியும் இங்கே எத்தனையோ ஆண்டுகளாக வேரூன்றியிருக்கிறது. தமிழ் படிக்க வசதியுள்ள பள்ளி என்பதற்காகவே தம் குழந்தைகளை நெடுந்தூரத்திலிருந்து பெற்றோர்கள் அனுப்பவும் செய்கிறார்கள்.

வங்காளம் என்னும் போது கரக்பூர் போன்ற இடங்களையும் குறிக்குமென்றாலும் இங்கே வங்கத் தலை நகராகிய கல்கத்தாவைப் பற்றியே கூறப்படுகிறது.

## பள்ளியில் தமிழ்க் கல்வி

முதல் வகுப்பிலிருந்து பள்ளி இறுதி வகுப்பு வரையிலும், பிறகு புகுமுக வகுப்பிலும் தமிழை முதன் மொழியாக (ஆங்கிலம் இரண்டாம் மொழி) எடுத்துப் படிக்க முடியும். தென் கல்கத்தாவிலும், அவுராவிலும பெருவாரியான தென்னிந்தியர்கள் வசிக்கின்றனர். தென் கல்கத்தாவில் தேசீய உயர் நிலைப் பள்ளியொன்று பெரும்பாலும் தமிழரால் நடத்தப்படும் ஒரு பள்ளியும் ஆந்திரச் சங்கத்தால் நடத்தும் உயர் நிலைப் பள்ளியும் அனைவராலும் அறியப்பட்டவை. இவ்விரண்டிலுமே தமிழ் படிக்கும் வசதியுண்டு.

கடந்த இருபத்தைந்தாண்டுகளில் முதல் வகுப்பிலிருந்து பள்ளி இறுதி வகுப்பு வரை ஒவ்வொரு வகுப்பிலும் சராசரியாக 35 முதல் 40 வரை மாணவர் எண்ணிக்கை (இரு பள்ளிகளிலுமாக) இருந்திருக்கிறது. ஆனால் இது நாளுக்கு நாள் மிகக் குறைந்து தற்போது இரு பள்ளிகளிலுமாக 20 வரை வந்திருக்கிறது.

## புகுமுக வகுப்பு

1974 முதல் தொடங்கிய பள்ளி உயர் நிலை (Plus Two) அல்லது புகுமுக வகுப்புகளிலும் தமிழ் பயிற்றும் பணியைத் தேசீய உயர் நிலைப் பள்ளி அப்போதிலிருந்தே நடத்தி வருகின்றது. ஆந்திரர் பள்ளியிலும் அண்மையில் நான்காண்டுகளாகத் தொடங்கியுள்ளனர். தேசீய உயர் நிலைப் பள்ளியில் 1980 - இல் 35 ஆக இருந்த மாணவர் எண்ணிக்கை 1985 - இல் 20 ஆகக் குறைந்துள்ளது. ஆந்திரர் பள்ளியில் பத்து மாணவர்களே தமிழ் படிப்பவர். City College என்ற வாணிபக் கல்வி பயிற்றும் கல்லூரியில் தற்போது புகுமுகக்கல்வி தமிழ் வகுப்புகளை நிறுத்தி விட்டனர்.

## இளநிலைப் படிப்பு

B. Com. படிக்கும் மாணவர்க்கான தமிழ் வகுப்புகள் மேற்குறித்த கல்லூரியின் மாலைப் பிரிவில் நடந்து வந்தன. மாநில அரசின் கல்விக் கொள்கையால் (இள நிலை

யளவில் மொழியறிவு கட்டாயப் பாடமில்லை) அவ்வகுப்புகளுக்கும் தேவை போய்விட்டது. B. A தேர்வுகளில், 200 முதல் 300 மாணவர் வரை தமிழ் படித்த காலத்திலும் கல்கத்தா வில் எந்தக் கல்லூரியிலும் அதற்கான வகுப்புகள் இருந்ததில்லை. மாணவர் தாமாகவே படிக்கத் தனிப்பட்ட முறையில் தமிழ்ச் சங்கங்கள் உதவி புரிந்தன.

உயர்மட்ட நிலையில் பல்கலைக் கழகத்தைப் பொறுத்தவரை இந்தியாவிலேயே பழமையான கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரான சர். அஷுடோஷ் முகர்ஜி என்பவர் முதன் முறையாக இந்திய மொழிகளில் கல்வி பயிலும் வசதியைப் பல்கலைக் கழகத்தில் தோற்றுவித்தார். நாட்டு ஒருமைப்பாட்டின் தேவையை மிக நன்கு உணர்ந்த அவர் வங்க மொழியில் M A. படிக்கும் மாணவர் கட்டாயமாக 200 மதிப்பெண்களுக்கான இரு தாள்களில் ஒன்றில் தமிழ், தெலுங்கு, மலையாளம் போன்ற ஒரு திராவிட மொழியின் வரலாற்றையும் இன்னொன்றில் அந்த மொழிப் பயிற்சியை யும் பெற்றாக வேண்டும் என்று விதித்தார் (அல்லது ஒரியா, அஸ்ஸாம் போன்ற மற்ற மொழியொன்றை எடுக்க வேண்டும்). அவ்வாறே கி. பி. 1940 வரை தமிழ் வகுப்புகள் எடுக்கப்பட்டன. உலகப் போருக்குப் பின் ஏற்பட்ட பல மாறுதல்களில் பாடத்திட்டங் கள் மாறியதும் ஒன்று. 1940 க்குப் பின் தமிழ் கைவிடப்பட்டது. மீண்டும் சென்னை யிலிருந்து தமிழரசின் தலையீட்டால் தமிழ்த்துறை தொடங்கும் எண்ணம் எழுந்தது. தமிழரசு ஆண்டொன்றுக்குப் பத்தாயிரம் ரூபாயாக ஐந்து ஆண்டுகளுக்கு உதவி வழங்க யு. ஜி. ஸி. தன் நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு பேராசிரியர், ஒரு இளநிலைப் பேராசிரியர், இரு விரிவுரையாளர்கள் ஆகிய பதவிகளை வழங்கியது. அதன்படி 1978-ம் ஆண்டு மார்ச் மாதம் தமிழில் முதன் முறையாக முதுகலை எம். ஏ வகுப்புகள் தொடங்கின. ஒப்பிலக்கியம், மொழியியல் முதலியவற்றை முதல் முறையாகக் கல்கத்தாப் பல்கலைக் கழக எம். ஏ. திட்டத்தில் புகுத்திய பெருமையும் அதற்குக் கிடைத்தது.

முனைவர் பட்டத்திற்குரிய ஆராய்ச்சிக்கும் அப்போதிருந்து வசதியேற்பட்டது. அதன்படி மூவர் தற்போது முனைவர் பட்டத்திற்காகப் பதிவு செய்து கொண்டு ஆராய்ச்சி செய்கின்றனர். அது தவிரத் தமிழ்த்துறை ஆசிரியர்களும் தனியாகவும், கூடியும் ஆராய்ச்சித் திட்டங்களில் ஈடுபட்டுள்ளனர்.

பல்கலைக் கழகத்தில் 1981-ம் ஆண்டிலிருந்து பிற மொழியாளர்களுக்குத் தமிழ் கற்பிக்கும் (Certificate, Diploma) வகுப்புகளும் நடக்கின்றன.

கல்கத்தாவிலுள்ள மற்றொரு பல்கலைக் கழகமாகிய ஜாதவ்பூர் பல்கலைக் கழகத்திலும் மூன்றாண்டுகளாகத் தமிழ் கற்பிக்கப்படுகிறது. இங்கே B.A. (Hons) ஒப்பிலக் கியம் பயிலும் மாணவர்கள் 50 மதிப்பெண்களுக்கான தமிழ் மொழியறிவு பெற்றுத் தேர் வெழுத வேண்டும். ஏறத்தாழ Certificate வகுப்புகளின் தரம் இதில் இருக்கும்.

இவை தவிரத் தனிப்பட்ட தமிழ்ச் சங்கங்கள், மன்றங்கள் இவையும் மிக ஆர்வ மாகத் தொண்டு ஒன்றே குறியாகத் தமிழ் வளர்த்து வருகின்றன. உண்மையில் இன்று வரை தமிழார்வம் மங்காமல் இங்கே தமிழை மாணவர்களிடையே, பொதுமக்களிடையே காத்து வருவன இவ்வமைப்புகளே.

### தற்போதுள்ள தமிழ்ச் சங்கங்கள்

1. பாரதி தமிழ்ச் சங்கம்
2. தமிழ் மன்றம்
3. தமிழ் எழுத்தாளர் சங்கம்

4. திருவள்ளுவர் கலை மன்றம்
5. கல்கத்தா தமிழ்ச் சங்கம்

பாரதி தமிழ்ச் சங்கம் 1950 முதல் கல்லூரியில் இடை நிலை, புகுமுக வகுப்பு, இளநிலை (B.A.), B.com. ஆகிய மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்து அவர்களைப் பல்கலைக் கழகத் தேர்வுகளுக்குத் தக்க வகையில் உருவாக்கி வந்தது. இதுவரை ஏறத்தாழ 3500 முதல் 4000 மாணவர்களுக்குப் பாரதி சங்கம் இவ்வுதவியைச் செய்துள்ளது. தற்போது B.A. B.Com வகுப்புகளில் மொழி விருப்பப் பாடமாக மாற்றப் பட்டுவிட்டதால் மாணவர்கள் இல்லை. எனவே பள்ளி உயர்நிலை (Plus 2) வகுப்பினரான ஏழு அல்லது எட்டு மாணவர்களே தற்போது சங்கத்தில் தமிழ் பயில்கின்றனர்

இது தவிர ஆந்திரா மெட்ரிக், பனாரஸ் மெட்ரிக், ஆந்திர மாநிலப் புகுமுக வகுப்பு, B Com. நுழை முகத் தேர்வு, உஸ்மானியாப் பல்கலைக் கழக I. S. S. G. போன்ற தேர்வுகளுக்கும் தமிழுக்குரிய பயிற்சி தருகிறது பாரதி தமிழ்ச் சங்கம்.

(சென்னைப் பல்கலைக் கழகம் நடத்தும் B. A., M. A. அஞ்சல்வழித் தேர்வுகளுக்குக் கிழக்கிந்திய மாநிலத்து மாணவர்கள் வந்து தேர்வு எழுதும் இடமாகப் பாரதி தமிழ்ச் சங்கம் விளங்குகிறது.)

1950 இலிருந்து பிற மொழியாளர்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுக்கும் வகுப்புகளும் இங்கு நடந்து வருகின்றன. 30, 35 மாணவர்கள் இருந்த அவ்வகுப்புகளும் தற்போது சிறியதாகிவிட்டன.

1966 முதல் ஆங்கிலப் பள்ளிகளில் படிக்கும் தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழ் எழுதவும் படிக்கவும் கற்றுத் தர வகுப்புகள் நடக்கின்றன. ஒவ்வோராண்டும் 30 முதல் 35 மாணவர் இதில் சேருகின்றனர்.

அவுராவில் ராமகிருஷ்ணபுரம் சந்தில் தமிழ் வகுப்புகளை நடந்தும் பெண்கள் பள்ளியொன்றும் உள்ளது. 1970 க்குமுன் 40 மாணவர்கள் வரை தமிழ் படித்த இடத்தில் இன்று 20 முதல் 25 ஆகக் குறைந்திருக்கிறார்கள்.

பாரதி தமிழ்ச் சங்கம், தமிழ் மாணவர் மன்றம் ஆகிய இரண்டுமே தமிழருக்கு ஓரளவு நூல்நிலையமில்லாத குறையைப் போக்குபவை. தங்களுக்கிருக்கும் மிகக் குறைந்த வசதிகளிலும் கூட இவர்களும் அவுராவின் திருவள்ளுவர் கலை மன்றத்தினரும் இலக்கியக் கூட்டங்கள் கூட்டித் தமிழார்வம் வளர்த்துத் தமிழ்ப் பசி தீர்த்துத் தமிழ் மாணவர்க்குப் போட்டிகள் நடத்திப் பரிசுகள் தந்து தமிழ்க் கல்வியை ஊக்கப்படுத்துகின்றனர்.

காசி திருப்பனந்தாள் மடத்தாரின் இரண்டு அறக் கட்டளைகள் பல்கலைக் கழகத்தில் இடைநிலை வகுப்பு (Inter), B. A ஆகிய இரண்டிலும் தமிழில் முதல் எண் வாங்கும் மாணவர்க்குப் பரிசு தர ஏற்பட்டுள்ளன.

இத்தகைய சூழ்நிலை இருந்தும் பல காரணங்களால் தமிழ்க் கல்வி நாடும் மாணவரின் எண்ணிக்கை மிகக் குறைந்து வருகிறது. அவர்களை ஊக்கப்படுத்த வங்கத் தமிழர் தமிழ் நாட்டிலிருந்து பல உதவிகளை எதிா நோக்குகிறார்கள்.

(நன்றி. தகவல். K. S. ராமன்)



# தில்லியில் தமிழ்க் கல்வி

—டாக்டர். கே. மீனாட்சி

தலைநகர் வாழ் தமிழ் மக்கள் பல மத்திய அரசாங்க அலுவலகங்களிலும் வேறு பல அலுவலகங்களிலும் பல பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகங்களிலும் பலநிலைகளில் பணியாற்றுகிறார்கள் அவர்கள் தில்லியின் பல பகுதிகளிலும் வசிக்கிறார்கள். மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த காலனிகளான இராமகிருஷ்ணபுரம், லோடி காலனி, வினயநகர் ஆகிய இடங்களிலும் மற்றைய பகுதிகளான கரோல்பாக், ஜனக்புரி போன்ற இடங்களிலும் அவர்கள வசிக்கிறார்கள்.

மற்ற கல்வி நிலையங்களில் வேண்டிய கல்வி வசதிகள் கிடைத்த போதிலும், தமிழர்கள் தமக்கென ஒரு கல்வி நிலையத்தையும் ஏற்படுத்தியுள்ளார்கள் (Delhi Tamil Education Association). மேலும் தங்களுடைய அறிவுப் பசியைத் தீர்த்துக் கொள்ள மிகப் பெரிய ஒரு சிறந்த தமிழ்ச் சங்கத்தையும் (Delhi Tamil Sangam) நிறுவியுள்ளார்கள்.

தமிழர்கள் எங்கு சென்றாலும் தங்களுடைய கலாசாரத்தையும் மறப்பதில்லை. தலைநகரும் இதற்கு விதி விலக்கல்ல. தங்களுடைய கடவுளர்களுக்கும் தலை நகரிலேயே பல கோவில்கள் அமைத்திருக்கிறார்கள். குறிப்பாக தமிழ் கடவுளான முருகனுக்கு ஒரு கோவில் எழுப்பி, ஆண்டுதோறும் கந்தசஷ்டி விழா எடுத்து, அதற்காக தமிழ் நாட்டிலிருந்தே வாண வேடிக்கைகள், கரகம் காவடி போன்ற பழந்தமிழ் ஆட்டக்காரர்களையும் வரவழைத்து தமிழரல்லாத மற்ற மக்களையும் இவ்விழாவில் பங்கேற்கச் செய்து மகிழ்விக்கிறார்கள்.

தில்லித் தமிழ் கல்வி மன்றத்தையும், தில்லித்தமிழ்ச் சங்கப் பணிகளையும் இப்போது சற்று விரிவாகக் காண்போம்.

**தில்லித் தமிழ் கல்விக் கழகம்** (Delhi Tamil Education Association)

தில்லித் தமிழ் கல்விக் கழகம் ஏழு மேல்நிலைப் பள்ளிகளை (Senior Secondary + two) நடத்துகிறது.

இப் பள்ளிக் கூடங்களில் பாடங்கள் முதல் வகுப்பிலிருந்து 4 ஆம் வகுப்பு வரை தமிழில் நடத்தப் படுகின்றன. 5 ஆம் வகுப்பிலிருந்து 12 ஆம் வகுப்பு வரை ஆங்கிலத்தில் நடத்தப்படுகிறது. 5 ஆம் வகுப்பிலிருந்து 12 ஆம் வகுப்புவரை தமிழ் கட்டாயப் படிப்பு (Compulsory). 9 ஆம் வகுப்பிலிருந்து 12 ஆம் வகுப்பு வரை இஷ்டப் பாடம் (Elective language).

கீழ்நிலை வகுப்புகளில் தமிழரல்லாத மாணவ மாணவிகளும் தமிழைக் கட்டாயமாகப் பயில வேண்டும்.

இளநிலை வகுப்பில் (B. A.) தமிழை முக்கியபாடமாக எடுத்துப் படித்தவர்களே (T. G. T) 6 ஆம் வகுப்பிலிருந்து 8 வது வகுப்பு வரைத் தமிழாசிரியர்களாகப் பணியாற்றுகிறார்கள்.

9 ஆம் வகுப்பிலிருந்து 12 ஆம் வகுப்பு வரை தமிழ் பயில்விக்கும் ஆசிரியர்கள் தமிழில் M. A. பட்டம் பெற்றவர்கள் (P. G. T.)

உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்

தொடக்கப் பள்ளி வகுப்புக்களில் தமிழ் தெரிந்த ஆசிரியர்கள் தான் பாடம் நடத்துகிறார்கள் மேலும் இப் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்கள் பெரும்பாலும் தமிழகத்தைச் சேர்ந்தவர்களே.

தமிழ்ப் பாட புத்தகங்கள் தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனத்திலிருந்து வர வழைக்கப் படுகின்றன.

தமிழில் முதன்மையாக வந்த மாணவ மாணவியர்களுக்குத் தமிழ்ப் புத்தகங்கள், பரிசாக, இப் பள்ளிகளில் வழங்கப்படுகின்றன.

பண்பாடு கலை நடவடிக்கைகள்

தில்லித் தமிழ்ச் சங்கம் நடத்தும் எல்லா விழாக்களிலும் இப்பள்ளி மாணவ மாணவியர்கள் பங்கேற்கிறார்கள். வானொலி நடத்தும் வெளிநாட்டு ஒலிபரப்புகளிலும் இப்பள்ளி மாணவ மாணவிகள் பங்கேற்று, சொற்பொழிவு, விவாதம், தமிழ் நாட்டுக் கலை நிகழ்ச்சிகளான கும்மி, கோலாட்டம் போன்றவைகளை அளிக்கிறார்கள். மேலும், பாரதி விழா, ஒவ்வொரு ஆண்டும் இங்கு கொண்டாடப்படுகிறது.

திரு பார்த்தசாரதி, திருமதி பார்வதி அம்மாள் நினைவுச் சொற்பொழிவுகள் ஆண் தோறும் இங்கு நடைபெறுகின்றன.

நூலகம்

எல்லாத் தமிழ்ப் பள்ளிகளிலும் நூலகங்கள் உண்டு. அவைகளில், மாணவ மாணவியர்களுக் கேற்றவாறு அருமையான தமிழ்ப் புத்தகங்கள் உள்ளன.

ஆண்டுமலர்

இப் பள்ளிகளில் ஆண்டு மலர் வெளியிடப்படுகிறது. அதில் பல தமிழ்க் கட்டுரைகளும் இடம பெறுகின்றன.

மற்ற பள்ளிகள்

வேறு சில பள்ளிகளிலும் தமிழ் கட்டாயப் பாடமாக இருக்கிறது. சர்தார் படேல் வித்யாலயத்தில் 5 ஆம் வகுப்பிலிருந்து 8 ஆம் வகுப்பு வரை தமிழை இஷ்ட பாடமாக எடுத்துக்கொளளலாம்.

இதைத்தவிர புதுதில்லி மாநகராட்சியின் கீழுள்ள (New Delhi Municipal Corporation School) சில தொடககப் பள்ளிகளில் தமிழ் மொழி போதனா மொழியாகவும் தமிழ் கட்டாயப்பாடமாகவும் உள்ளது

தில்லிப் பல்கலைக் கழகம

தில்லிப் பல்கலைக் கழகத்தைச் சோந்த லேடி ஸ்ரீ ராம் கல்லூரி, மிராண்டா ஹவுஸ் வெங்கடேசுவரா கல்லூரி, தயால் சிங் கல்லூரிகளில் தமிழ் இஷ்டபாடமாக உள்ளது. தில்லிப் பல்கலைக் கழகத்தில், முனைவர் பட்டம் பெறும் வரையில் தமிழ் படிக்க வசதியுள்ளது.

நூலகம்

தில்லிப் பல்கலைக் கழக நூலகத்திலும், தில்லி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மற்று கல்லூரிகளின் நூலகங்களிலும், தமிழ்ப் புத்தகங்கள் உள்ளன.

## ஜவஹர்லால் நேரு பல்கலைக் கழகம்

*ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் வரலாற்றுத் துறையில் வரலாற்று* ஆராய்ச்சிக்கு உதவும் வகையில், தமிழ்ப் பாடங்களைத் தயாரித்து, M. A, M. Phil/PH. D மாணவ மாணவிகளுக்குத் தமிழ் மொழிப் பயிற்சி யளிக்கப் படுகிறது.

இப் பல்கலைக் கழக நூலகத்திலும், பல சங்க இலக்கிய நூல்களும், தேவாரம், திருவாசகம் போன்ற மத்ய காலத் தமிழிலக்கியங்களும் மற்ற நாவல்கள், வரலாற்று நூல்களும் உள்ளன.

## மற்ற நூலகங்கள்

சாகித்திய அகாடமி நூலகம், மத்திய அரசாங்கச் செயலக நூலகம் (Central Secretariat Library) இவைகளிலும் பல தமிழ் நூல்கள் உள்ளன.

## தமிழ்ச் சங்கங்கள்

தில்லியில், மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருகின்றன. அவைகள் வருமாறு 1) தில்லித் தமிழ்ச் சங்கம். 2) ஹரிநகர் தமிழ்ச் சங்கம். 3) தில்லித் தமிழ் எழுத்தாளர் சங்கம்.

## தில்லித் தமிழ்ச் சங்கம்

தலைநகரில் தமிழுக்கும் தமிழ்வளர்ச்சிக்கும் மிகச் சிறந்த முறையில் பணியாற்றி வருகிறது தில்லித் தமிழ் சங்கம்.

''நியு மதராஸ் போர்டிங் அவுசு'' என்னும் தென்னிந்திய உணவு விடுதியின் ஒரு சிறிய அறையில் 1946 ஆம் ஆண்டு தோன்றியது தில்லித் தமிழ்ச் சங்கம். தலை நகரில் வாழ்ந்து வரும் தமிழன்பர்களை ஒன்று கூட்டித் தமிழ்ச் சுவையை அவர்கள் அனுபவித்து, பயனுறும் பொருட்டு, இயல் இசை நாடகம் என்ற முத்தமிழை வளர்க்கவும், தமிழிலக்கியத்தைப் பற்றியும், தமிழ்ப் பெரியார்களைப் பற்றியும் தமிழரல்லாத மற்றை யோர்களிடம் அவரவர் மொழிகளில் எடுத்துக் கூறுவதையும் முக்கிய நோக்கங்களாகக் கொண்டு முத்தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தார்கள். சில தமிழன்பர்களின் ஆதரவுடன் அவர்கள் அன்புடன் அளித்த பல தமிழ்ப் புத்தகங்களை வைத்துக் கொண்டு ஒரு நூலகமும் உடனுக்குடன் சங்கம் நிறுவிய தமிழன்பர் ஒருவரின் வீட்டில் தொடங்கப் பட்டது.

இவ்வாறு தோன்றிய தில்லித்தமிழ்ச்சங்கம் தற்போது தென்தில்லியிலுள்ள இராமகிருஷ்ணபுரம் என்னும் பகுதியில் இரண்டு மாடிக் கட்டிடமாக வளர்ந்திருக்கிறது. இக் கட்டிடத்தின் கீழ்ப் பகுதியில் சிண்டிகேட் வங்கியும், முதல் மாடியில் சங்க அலுவல கமும், தமிழ் வகுப்பு இலக்கியச் சொற்பொழிவுகளுக்கான அறைகளும், கூடமும், இரண்டாவது மாடியில் நூலகமும் படிப்பகமும், விருந்தினர் அறைகள் ஆகியவையும் அமைந்துள்ளன. சங்கக் கட்டிடம் அமைந்திருக்கும் சாலைக்குத் ''தமிழ்ச் சங்க மார்க்'' என்று தமிழ்ச் சங்க வெள்ளி விழாவின்போது பெயரிடப்பட்டது. தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் திருவள்ளுவர் சிலை நிறுவப்பட்டிருக்கிறது.

## தில்லித் தமிழ்ச் சங்கத்தின் முக்கிய பணிகள்

தலைநகரில் வாழும் தமிழன்பர்களை ஒன்று கூட்டி பொங்கல் புத்தாண்டு விழா மூலம் அவர்களைத் தமிழ்க்கலைகளில் திளைக்கச் செய்கிறது.

இலக்கியச் சொற்பொழிவுக் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம், கலந்துரையாடல், வரவேற்பு வழியனுப்பு கூட்டம் ஆகியவற்றை நடத்துகிறது.

தமிழ்க்கவிஞர்கள் மற்றும் பெரு மக்களின் நினைவாக ஆண்டுதோறும் இலக்கியச் சிறப்பு விழாக்களை நடத்துகிறது. சங்கத்தின் முக்கிய விழாக்களில் ஒன்று பாரதி விழாவாகும். இவ்விழா கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தப் படுகிறது. இதையொட்டி நடத்தப்படும், இசை பேச்சு கட்டுரைப் போட்டிகளில் பல பள்ளி, கல்லூரி மாணவ மாணவிகள் கலந்து கொள்கிறார்கள். பாரதி நூற்றாண்டு விழாவை மூன்று நாட்கள் சிறப்பாகச் சங்கம் கொண்டாடியது. "சிந்தனைக்குழு" என்ற ஆராய்ச்சி அரங்கம் ஒன்றைத் தமிழ்ச் சங்கம் நடத்துகிறது. இதில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கப் பெற்று அலசப்பட்டன.

ஆண்டு தோறும் தமிழ்ச் சங்கம் 'சுடர்' என்ற ஆண்டு மலரை வெளியிடுகிறது. தொடக்க காலத்தில், சுடர் அந்த ஆண்டுகளின் பெயர்களைக் கொண்டே வெளியிடப் பட்டன. 1958 ஆம் ஆண்டுக்குப் பிறகு பல பெரியார்களின் பெயரில் சிறப்பு மலராக 'சுடர்' வெளியிடப் படுகிறது. இதைத் தவிர தமிழைப் பற்றிய ஆங்கில நூல்களையும் தமிழ் நூல்களின் ஆங்கில ஆக்கங்களையும் அவ்வப்போது சங்கம் வெளியிடுகிறது.

இலக்கிய வகுப்புகளை நடத்தி இங்குள்ள தமிழர்களுக்குப் பழந்தமிழ் இலக்கியங்களில் ஒரு ஆர்வத்தை உண்டு பண்ணுகிறது.

தலைநகரில் உள்ள பிறமொழியாளர்களுக்காகத் தமிழ் வகுப்புக்களை இச் சங்கம் நடத்துகிறது.

தமிழ்ச் சங்கம் அவ்வப்போது சில நூல்களை வெளியிட்டுள்ளது. திரு. வ. வெ. சு. அய்யரின் "Kamba Ramayana-A Study," "Maxims of Tiruvalluvar" திரு. ஜி. வன்மீகநாதன் அவர்களின் "Kamban's Sita" "Pathway to God through literature - Thiru - Vasakam" ஆகியவை சங்கத்தின் சிறப்பு வெளியீடுகளாகும்.

மாணவ மாணவியரிடையே தமிழார்வத்தையும் ஆற்றலையும் இலக்கியச் சிந்தனையையும் வளர்க்கும் நோக்கத்துடன் அனைத்துக் கல்லூரிகளுககான பேச்சுப் போட்டியை நடத்த, சங்கம் கீழ்க்கண்ட கல்லூரிகளுக்குச் சுழற் கோப்பைகளை வழங்கியுள்ளது.

| | | |
|---|---|---|
| திருவேங்கடவன் கல்லூரி | — | சத்தியமூர்த்தி நினைவுச் சுழற் கோப்பை |
| லேடி ஸ்ரீராம் கல்லூரி | — | தில்லித் தமிழ்ச் சங்கம் வெள்ளி விழா — திருவள்ளுவர் நினைவுச் சுழற் கோப்பை. |

இவைகளைத் தவிர "மகாகவி சுப்பிரமணிய பாரதியார் நினைவுச் சுழற் கோப்பை"க்கான பேச்சுப் போட்டியும், "அறிஞர் அண்ணா நினைவுச் சுழற்கோப்பை"க் கான பேச்சுப் போட்டியும் அனைத்துத் தமிழ்ப் பள்ளி மாணவர்களிடையே, தமிழ்ச் சங்கம் நடத்தி வருகிறது.

மேலும் ஆண்டு தோறும் பள்ளி இறுதித் தேர்வில் தமிழில் அதிக மதிப்பெண்கள் பெறும் மாணவருக்கு ரூ. 100/-உம் சான்றிதழும் தமிழ்ச் சங்கம் அளிக்கிறது.

சைவ சமயத்தில் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகளை ஆண்டு தோறும் தமிழ்ச் சங்கம் நடத்த, ஓர் அறக்கட்டளையை திருப்பனந்தாள் மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ தவத்திரு காசிவாசி முத்துக்குமார சாமி தம்பிரான் அவர்கள் நிறுவியுள்ளார்கள் தலைநகரில் தமிழுக்காக நிறுவப்பட்டுள்ள முதல் அறக்கட்டளை இதுவேயாகும்.

### நூலகம்

வட இந்தியாவிலேயே மிகப் பெரிதான ஒரு தமிழ் நூலகத்தையும் படிப்பகத்தையும் தன்னோடு இணைத்துக் கொண்டுள்ள பெருமை தில்லித் தமிழ்ச் சங்கத்தைச் சாரும்.

இந்நூலகத்தில் சுமார் 14,000 தமிழ்ப் புத்தகங்களும் தமிழ் இலக்கியங்களைக் குறித்து ஆங்கிலம் மற்ற பிற மொழிகளிலும் வந்துள்ள நூல்களும் உள்ளன. இராமகிருஷ்ண புரத்தில் உள்ள தலைமை நூலகத்தைத்தவிர கரோல்பாக் பகுதியிலும் ஒரு கிளை நூலகம் உள்ளது. தலைமை நூலகம் வாரத்தின் எல்லா நாட்களிலும் இயங்கி வருகிறது.

இங்குள்ள இலவசப்படிப்பகத்தில் தமிழ், இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் வெளிவரும் நாளிதழ்களும், வாரஇதழ், மாதம் இருமுறை, மாதஇதழ்களும் உளளன. எல்லா மொழியினரும் இந்த இலவசப் படிப்பகத்தைப் பயன்படுத்துகின்றனர்.

தமிழ்ச் சங்கம் தனக்கென ஒரு கலை அரங்கத்தையும் தற்போது உருவாக்கிக் கொண்டிருக்கிறது.

### ஹரிநகர்த் தமிழ்ச் சங்கம்

இச் சங்கம் சமீபத்தில் தோன்றியது. சஙக இலக்கியங்களில் ஊக்கத்தையும் ஆர்வத்தையும் கூட்டுவது, இச்சங்கத்தின் முக்கிய பணிகளில் ஒன்றாகக் கூறப்படுகிறது.

### தில்லித்தமிழ் எழுத்தாளர் சங்கம்

தில்லி நகரிலுள்ள தமிழ் எழுத்தாளர்களையும், மற்றவர்களையும் உறுப்பினர்களாகக் கொண்ட இத்தமிழ் எழுத்தாளர் சங்கம், அவ்வப்போது பேச்சுக்கள், கலந்துரையாடல், ஆகியவற்றை நடத்துகிறது.

—★—

# தென் பொதிகைச் செந்தமிழ் சிந்து தந்த அண்ணாமலை

(சென்னி குளம் அண்ணாமலை ரெட்டியார்)

— அறிஞர். சரசுவதி இராமநாதன்

தாமிரபருணிக்கரையைத் தமிழ்க்குழவியை வளர்ந்த மடித்தலம் எனலாம். காவிரிக்குக்கலை வளர்க்கும் திறமும், பொருனைக்குத் தமிழ் வளர்க்கும் சிறப்பும் இயல்பானவை! திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில்தான் எத்துணைத் தமிழ் அறிஞர்கள், கவிஞர்கள், தோன்றி வாழ்ந்துள்ளனர்! வாழையடி வாழைஎன வந்த தமிழ்ப்புலவர் கூட்டத்தில் நம சென்னிகுளம் அண்ணாமலையும் ஒருவர்.

ஒப்பனையாளுடன் பால் வண்ண நாதர் அருளாட்சி செய்யும் கரிவலம் வந்த நல்லூருக்கு ஒரு கல் தொலைவில் தென்கிழக்கில், சென்னிகுளம் என்ற சிற்றூர் அமைந்துள்ளது. 1861 ஆம் ஆண்டு சென்னவ ரெட்டியார் - ஓவு அம்மாளின் திருமகனாக வந்து அவதரித்தவர் நம் அண்ணாமலையார்.

கல்வி

திண்ணைப் பள்ளியிலேயே சுப்பிரமணிய பிள்ளை அவர்களிடம் தமிழ் நூல்கள் கற்று மகிழ்ந்தவர். பின்னர் சுந்தரசுவாமிகள் என்ற பெரியவரிடம் மேலும் தமிழ் நூல்கள் பல ஆய்ந்து கற்றார், பாப்புனையும் திறம் ஒருவர் காரிகை கற்பதால் மட்டும் வருவதன்று, கவிஞர்கள் பிறக்கிறார்கள் (Poets are born) என்ற படி இவரும் பிறவிக் கவிஞராக விளங்கினார்.

பாப்புனைதல்

சேற்றூர் மன்னர் வடமலை திருவரத சுந்தரராசுத்துரையின் கட்டளைப்படி காரிகை என்ற சொல் ஏழு இடங்களில், வெவ்வேறு பொருளில் வருமாறு, பாடி மகிழ்வித்தார்.

மாகக் கார் இகைக்கும் மக வானுடன்
  மருவும் காரிகை போல் எழில் வாய்ந்தவள்
மோகக் காரிகை மிஞ்சும் மயல் கொண்டாள்
  மொழியும் காரிகை மெத்தையிற் சேர்குவாய்
பாகக் காரிகையால் செய்த காரிகை
  பார்த்துப் பாடிய பாவாணர் தம்மிடி
போகக் காரிகை என்னத் தனம் தரும்
  போசனே சுந்தரராசு பூமானே.

அப்பாடலின் பொருள் பின்வருமாறு :-

**கட்டளைக் கலித்துறை — யாற் செய்யப்பட்ட காரிகை** என்ற நூலைக் கற்று பாப்புனையும் பாவலர்க்குக் காரியின் கைபோல் தனம் அள்ளித்தரும் சுந்தரராசு துரையே! கார் மேகம் வாகனமாகக் கொண்டு செலுத்தும் இந்திரனுடைய காரிகை

(இந்திராணி) போன்ற அழகிய பெண் உன்னை எண்ணி மோகம் கொண்டாள். அழகிய பஞ்சணையில் அவளைச் சேர்வாயாக.

பின்னர் திருவாடுதுறை ஆதீன கர்த்தர் மேலகரம் சுப்பிரமணிய தேசிகரிடம் போய்ச் சேர்ந்தார். தமிழ்த் தாத்தா உ. வே. சா. அவர்களிடமும் பாடம் கேட்கும் பேறு பெற்றார். ஊற்றுமலைக்கு வந்து அவ்வரசரை 300 பாக்களுக்கு மேல் பாடிப் புகழ்ந்தார். 24வது அகவையில் குருவம்மாளை மணந்தார். மகப்பேறின்றி வருந்திய துடன் - நோயுற்றும் தளர்ந்தார். இருதயாலய மருதப்ப தேவர் என்ற ஊற்றுமலையரசரே பன்னாளும் நம் அண்ணாமலையாரைப் புரந்த வள்ளல். அவர் புரவலர் மட்டுமல்லாது புலவராகவும் விளங்கியவர்.

மடக்கு

சொல்லணியில் 'மடக்கு' மிகச் சிறப்பானது. சொல்லைப் பிரித்தால் ஒரு பொருள் ; சேர்த்தால் மறு பொருள் என்று வருமியல்புடையது மடக்கு.

''எழுத்தின் கூட்டம் இடை பிறிதின்றியும்
பெயர்த்தும் வேறு பொருள்தரின் மடக்கே''

என்பது தண்டியலங்காரம். ''நினைத்தேன் என நான் நினைத்தேன்'' என்பது போல வரும். (நினை = உன்னை ; தேன்என = தேன் என்று ; நினைத்தேன்).

இந்த மடக்கணி தோன்ற அண்ணாமலையார் பாடிய பாடல்கள் பல. கந்தசாமிக் கவிராயர் ஒருமுறை கருவையில் ஒரு பெண்ணுக்குப் பாடல் கற்பித்துக் கொண்டிருந்தார். அந்த இனிமையில் சொக்கிய அண்ணாமலையார் அவ்வீட்டுத் திண்ணைக்கு வந்து ஒரு தாளும், எழுதுகோலும் கேட்டார். எதற்கு என்று வினவிய கவிராயரிடம் பாடல் புனைய என்று விடை தந்தார் அண்ணாமலை.

''கனைச் சாரீரம் தனை நேர் குயிலினங்கள்
அனுதினமும் கனம்ப டிந்து
கனைச்சாரீ ரந்தனை மேவும பொழில்விட்
டுயர் வரையைக் கையில் வில்லா
கனைச் சாரீ ரந்தனையர் தமிலிளையோன்
அன்ன கந்த சாமி வித்த
கனைச்சாரீர அந்தனைய மான இசை
யிற்சிறிது கற்கத் தானே !

(பெண்குரல் போல் — இனிமையாய்ப் பாடும் குயில்களே ! அங்கனை - என்பதன் முதற் குறை கனை. கனைத்து — ஆர் — ஈரம் மேவும் பொழில் — கனைச்சார் ஈரம் தனைமேவும் மேகம் இடித்து மழை பொழிவதால் ஈரமான பொழிலை விட்டு நீங்கி. உயர்வரையை வில்லாக நைச்ச — சிவபெருமான், ஈர் அம் தனையர் — இரு அழகிய புதல்வரில் இளையவனான முருகனை ஒத்த கந்தசாமியைச் சாரீர் இசை கற்கத்தானே)

இத்தகைய மடக்கணியமைந்த பாடல்களை, யமகம், திரிபு நிறை பாடல்களை ''உயிரில்லாத பாட்டுக்கள்'' என்றனர். முட்டிமோதி மிறைக் கவிகளைப் பாடியபின் அவை பொருள் நல மில்லாமல் போகலாம். பாடினவனுக்கே மயக்கம் தரலாம்'' என்று பரிதிமாற்கலைஞர், மறைமலையடிகள் போன்றோர் கருதினர். ஆயினும் சந்தச்சுவை, சொல்லணி, பொருள் நயமிக்க இத்தகு பாடல்கள் இயற்றமிழ் மாணவர்க்குப் பரந்த அறிவும், சொல்லணிப் பயிற்சியும் தந்து பயன் மிகத் தருவன.

பலநூறு சொல்லணி நிறை தனிப் பாடல்களும், சீட்டுக் கவிகளும் விரைந்து பாடி வரைந்து தள்ளிய அண்ணாமலையாரின் நின்ற புகழுக்குச் சான்று பகர்வது அவர் பாடிய காவடிச்சிந்தே. கழுகுமலை முருகனைப் பாடிப் பரவிக் காவடிச் சிந்து பாடினார். காவடி சுமந்து கந்தனை வேண்டுவோர் வழி நடைப் பாடலாகக் காவடிச் சிந்து பாடுவது வழக்கம்.

காவடிச் சிந்து

மூன்று சீர்கள் — தனிச் சொல் — பின் மூன்று சீர்கள் அல்லது நான்கு சீர்கள் இப்படி வரும் நடையைச் சிந்து நடை என்பர். காவடிச் சிந்து, வழி நடைச் சிந்து, நொண்டிச் சிந்து என்ற இவற்றினுள் காவடிச் சிந்து இலக்கிய நயம் செறிந்து விளங்குவது. அண்ணாமலையாரின் காவடிச் சிந்து போலத் தானும் பாட விரும்பிய பாரதியார் — ''காலமாம் வனத்திலண்ட கோலமா முகட்டில் மகாகாளி சக்தி என்ற பெயர் கொண்டு — ரீங் காரமிட்டுலவும் ஒரு வண்டு'' என்று பாடினார். இராமாயணக் காவடிச் சிந்து ஒன்றுள்ளது. அதற்கும் காவடிக்கும் சம்பந்தம் இல்லை. கழுகுமலை மீது குடிகொண்ட முருகப் பெருமான் மீது அண்ணாமலையார் பாடிய காவடிச்சிந்து குறித்துச் சற்று காண்போம். நமக்குக் கிடைத்துள்ள காவடிச் சிந்து நூல்களில் முழுமையானதும், கவிநயமிக்கதும், நடைச் சிறப்புடையதும் அண்ணாமலையாருடையதே. ''சிந்து நடை தந்தவர்'' என்று இவரைப் புகழலாம். பரணிக்கோர் செயங் கொண்டான் என்றபடி ''காவடிச் சிந்துக்கு ஒரு கவி அண்ணாமலை'' எனலாம். ''சந்தச் செய்யுளின் தந்தை இவர்''. வாய்மொழிப்பாடல் வகையாக இருந்த காவடிச் சிந்துக்குக் கவிதை அந்தஸ்து தந்தவர் இவர். நாட்டுப்புறப் பாடல்கள் ஒரு நாட்டின் கலாச்சார பாரம்பரியத்தின் முக்கிய அம்சம் என்பார் பி. சாம்பமூர்த்தி. எளியபதங்கள், யாவரும் பாடக் கூடிய மெட்டுக்கள், சுலபமாகப் பாடக்கூடியதன்மை, அனைவரும் விரும்பக்கூடிய சிறப்பு இவற்றுக்கு உண்டு. செழுமைமிக்க மனோபாவமும், கற்பிக்கப்படாத கட்டுப் பாடற்ற கற்பனையும் நிறைந்த களஞ்சியங்கள். இவ்வகைப் பாடல்களில் பேர்லாண்டோ (Parlando) என்பது அதிக அளவில் அலங்கார அணிகள் கலந்து பாடுவது. காவடிச்சிந்து அவ்வகையினதே. நாட்டுப்புறப் பாடல்கள் ஆகாயப் பூக்களல்ல, மண்ணின் மலர்கள்; இந்த வகையில் பக்தி இலக்கிய வகையிற் சேர்ந்தது காவடிச்சிந்து. பக்தி வழிக்களியாட்டங்கள் பொழுது போக்காகவும் பயன் படுகின்றன. பக்தியையும் பெருக்குகின்றன என்பதைக் காவடிச் சிந்தில் காணலாம். இருதயாலய மருதப்பதேவர் கழுகுமலைக்குக் காவடி எடுத்தபோது இதைப் பாடினார் — என்பர் அறிஞர்.

அண்ணாமலையார் தமிழ்க் கவிஞர், தமிழன்பர். அவர் போற்றிப் பராவிய முருகன் தமிழில் வைதாரையும் வாழவைப்பவன்; சங்கத் தமிழின் தலைமைப்புலவன். அண்ணாமலையார் முருகனுக்குத் தன் தமிழின் மீது நேசமுண்டு என்று பாடுகிறார்.

i. தெள்ளு தமிழ்க் குதவு சீலன் - தமிழ்
   செப்பும் அண்ணா மலைக் கனு கூலன்''
ii. சென்னிகுள நகர் வாசன் - தமிழ்
   தேரும் அண்ணாமலைதாசன் - செப்பும்
   செக மெச்சிய மதுரக்கவி அதனைப்புய வரையில்புனை
   தீரன் — மயில் — வீரன் ''

முருகன் தோளில்! சந்தனத்துடன் தமிழ் மாலையும் சேர்ந்து மணம் தருகிறதாம்.

"அன்னவயற் செந்தூர் வாசன் - மந்த காசன் - அன்பர் நேசன்
நாளும் அண்ணாமலைக் கவிராசன் - பாடும்
அமுதச் சுவை தருமுத்தமிழ் களபத்தொடு கமழ் பொற்புய
வேலன் —"

"சென்னி மாநகர் அண்ணாமலை
செப்பும் செந்தமிழுக் கதி நேசனே"

"எந்த நேரமும் வந்தனை செய்தடி
எண்ணும் அண்ணாமலைதாசன்"

என்றெல்லாம் பாட்டுக் கொரு தலைவனாம் முருகனைப் புகழ்கிறார்.

## நூலமைப்பு

பாயிரவியல், இயற்கை எழிலியல், களவியல், கற்பியல் என்ற அமைப்புடையது இந்த நூல்.

1. பாயிரவியலில் கணபதிகாப்பு, முருகன் துதி, சிவன் துதி
2. இயற்கை எழிலியலில் நகர்வளம், கோவில் வளம், மலைவளம், வாவிவளம்' சோலைவளம்.
3. களவியலில், தலைவன் வருத்தம், தலைவிஊடல், பாங்கி தூது, தலைவிநிலையைப் பாங்கி கூறல், தலைவி வருத்தம், நற்றாய் வினவல், சுரம் போக்கு.
4. கற்பியலில் தலைவியின் ஊடல், தலைவி வருத்தம், நற்றாய் வினாவுதல், இப்படி உள் தலைப்புக்கள் அமைந்துள்ளன.

உயிரைச் சேர்ந்து இன்பம் தர வருமாறு இறைவனை அழைத்தல் இந்த நூலின் உள்ளுறை. (ஜீவாத்மாவுடன் சேரப் பரமாத்மாவை அழைத்தல்).

உயிர் அந்த நிலைக்கு ஏங்கித்தவித்தல் ஆகியவற்றைத் தத்துவப் பொருளாகக் கொண்ட பேரின்ப நூல் இது.

## கற்பனை வளம்

கழுகு நகரின் வளமை - என் - நாவில் அடங்காதே மடமாதே! என்று கூறிய நம் கவிஞர்,

"வெள்ளிமலை ஒத்த பல மேடை - முடி
மீதினிலே கட்டு கொடி யாடை - அந்த
வெய்யவன் நடத்தி வரும் துய்ய இரதப் பரியும்
விலகும் படி இலகும்"

மாடத்திலிருக்கும் கொடிகள் சூரியனுடைய தேர்க் குதிரையையும் வழி விலகி ஓடச் செய்யுமாம். கொடி உராய்ந்து சூரியனும் சிவந்து போகிறானாம். குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர்,

'தேனருவித்திரை எழும்பி வானின்வழி ஒழுகும்
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்' என்றார்.
கத்து கடல் ஒத்த கடை வீதி - முன்பு
கட்டு தரளப் பந்தலின் சோதி - எங்கும்
காட்டுவதால் ஓரிரண்டு கோட்டுமத யானையினக்
களிறும் நிறம் வெளிறும்.

முத்துப் பந்தலின் சோதி ஒளியால் கரிய யானையும் வெள்ளையானை யாகும் என்பது புதிய கற்பனை. அது மட்டுமா, அடியாரின் திருப்புகழ் முழக்கம் அமரர் காதுகளைத் துளைக்குமாம்.

'அருணகிரி நாவல் பழக்கம் - தரும்
அந்தத் திருப்புகழ் முழக்கம் - பல
அடியார்கணம் மொழிபோதினில் அமராபதி இமையோர்செவி
அடைக்கும் அண்டம் உடைக்கும்

இத் திருமலை யானை கற்பக மரத்தை வளைத்து ஒடிக்கிற காட்சியும், குற்றால மலையில் யானை திங்களைக் கவளம் என்று வழி மறிக்கும் காட்சியும் இம்மலைகளின் உயரத்தைக் காட்டும் கற்பனையில் உயாவு தாம்!

'தேசு கொண்ட பாரதந்த வீரதும்பி மேவி அண்டர்
தேவ தாருவைக கரத்தால் பிடிக்குமே
மேவிய கிளையை வளைத் தொடிக்குமே!

இந்த மலைமுகட்டில் மஜழமேகம் துயில்கிறது என்பார் அண்ணாமலையார்.

'உன்னத மாகிய இஞ்சி - பொன்னாட்
டும்பர் நகருக்கு மிஞ்சி - மிக
உயர்வானது பெறலாமதில் அதிசீதன புயல் சாலவும்
உறங்கும் மின்னிக் கறங்கும்

## மேலும் சொல்லணி

சொற்றொடர்களில் அணி அமையப் பாடுவது சிலருக்குக் கைவரும். சிவப்பிரகாசர் திருவெங்கையுலாவில் பாடுவது போல

'சந்தி பொருத்தித் தரும் சீர் கெடபுத் தடுக்கிப்
புந்தி மகிழ அற்புத அணித்தாம் - முந்தையோர்
செய்யுள்' கற்போருக்குச் செவிச் சுவை நலகும்.

கோவிலில் உள்ள இறைவன் திருமேனிக்கு அழகூட்ட அணிகள் சார்த்துவது போல பாக்களின் பொருளகளுக்கு மெருகூட்டச் சொல்லணி, பொருளணி தீட்டுவது புலவர் இயல்பு. மடக்கு ஒருவகைச் சொல்லணி. 'பிரிமொழிச்சிலேடை' எனவும் சொல்வர்.

(உள்ளம் மிளகாயா) உள்ள மிளகாயா, ஒரு பேச்சுரைக்காயா (ஒருபேய்ச்சுரைக்காயா) என்பது போல வரும்.

''எழுத்தின் கூட்டம் இடை பிறிதின்றியும்
பெயர்த்தும் வேறு பொருள்தரின் மடக்கே''

என்றது — தண்டியலங்காரம்

'ஒத்த எழுத்திற் பொருள் வேறாக
வைத்து மொழி மடக்கின் அது மடக் கெனப்படுமே'

என்றது வீரசோழியம்.

இம்மடக்கு அணியைத் தம் பாக்களில் செம்பகமாக! இயல்பாகக் கையாண்ட சதுரர் நம் அண்ணாமலையார். இத்தகைய மடக்குச் செய்யுள்களில் அகரஐகாரங்கள், ணகர நகரங்கள், ரகர, றகரங்கள் வரிவடிவில் வேறுபட்டிருப்பினும் ஒலி வடிவில் அதிக வேறுபாடு இல்லாமையால் அடியெதுகை, மடக்கு நோக்கி மயங்கிப் பயின்று வருகின்றன.

சுவர்ணம் என்பது - சொர்ணம் என்றாகிச் சொன்னம் எனவரும். அன்னமே எழிற் சொன்னமே - என்று எதுகைக்காக வரும்.

இயைபு என்று கூறப்படும் அணி (இறுதி எழுத்து ஒன்று போல வருவது) பிராசம் என்று வடமொழிவாணர் கூறுவர். அதையும் காவடிச் சிந்து ஆசிரியர் அழகுறக் கையாள்கிறார்.

'சந்தவரைக் குகநாதா - பரை
அந்தரி மனோன்மணியாம் மாதா - தந்த
சண்முக சடாட்சர வினோதா - குழைக் காதா சூரர் வாதா
வன குஞ்சரி வெண் குஞ்சரி சமேதா
மேனகையோ டூர்வசி இந்த் ராணி - செல்வம்
மிக்கதிரு முக்ய கலை வாணி - இந்த
மின்னரசி தன்னுருவம் காணில் - நெஞ்சு ராணி
மலர்ப்பாணி - தலை
மீது குவித்தருவார் பேணி
புள்ளிக் கலாப மயில் வாகன் - சக்தி
'புதல்வனான கன யோகன் மலை
'போலத்தான் திரண்டு
கோலப் பண்ணிரண்டு
வாகன் - நல்விவேகன்
செந்தில் மாநகர் வாழ் கந்தநாதனிரு
செய்ய பாத கஞ்சமே - நமக்கு
உய்ய மேவு தஞ்சமே
இன்று செப்புவது கொஞ்சமே
வண்ணத் தினைமாவைத் தெள்ளியே உண்ணும்
வாழ்க்கைக் குறக்குல வள்ளியே - உயிர்
வாங்கப் பிறந்திட்ட கள்ளியே - இரு
வடமேருவை நிகராகிய
புயமீதணி பலமாமணி
மாலை படிலாதை துள்ளியே - விழ
வாள் மதி வீசும் தீ அள்ளியே

இத்தகு சொல் வளத்தைச் சில கவிஞர்களிடமே காணமுடியும். கண்ணதாசன்,

'தோட்டத்திலே தென்னையிரண்டு
பக்கம உருண்டு'

என்று இப்படி இயைபு வைத்துப் பாடினதற்கு அண்ணாமலையாரே வழி காட்டினார் என்றார் கவியரசர்.

**சந்தம்**

இன்றுபல பாடல்களில் சத்தம் மட்டும் உள்ளது. சந்த நயம் இல்லை. அண்ணாமலை பாட்டில் சந்த நயம் செழித்துள்ளது.

''மரகத விரசித ஒளிதவழ் இருசிறை
மருவிய மயில் மிசை அனுதினம் உறைதிரு
வாசன் - பவ - நாசன்

பரிபுர அணிகல கலஎன ஒலிபுரி
பரிதியு தயமதில் அவிழ்மரை மலர்நிகர்
பாதன் — குகநாதன்

குரைதிரை வரைநிரை புரைதர உலவிய
குரைவயின் நடுவுறை நிருதரை மூடுகிய
கோபன் — கமழ் — நீபன்

பரைசிவ பகவதி உதவிய சரவண
பவனறு முகன்குகன் மிசைமது ரிதகவி - பாடும் சகம் நாடும்.

**வேறு சந்தம்**

காவடிக் கென்று அமைந்த ஆட்டத்திற்கு ஏற்ற சந்தப்பாங்கு இதோ :
''மூசு வண்டு மண்டு காவில் மொண்டு தேனையுண்டு
மோகன முகாரி ராகம் பாடுமே - மையல்
ஆகவே பெடையுடனே கூடுமே - அலை
மோது வாரிதி நிரைவாரிவிண் மீதுலாவிய சீதளாகர
முகில் பெருஞ் சிகரமுற்றும் மூடுமே - கண்டு
மயிலினம் சிறகை விரித் தாடுமே !

**வேறு**

சேய சந்திரனோடு ரிஞ்சுப லாமரங்களிலே நெருங்கிய
தீங்கனி மதுரசத்தை வடிக்குமே - மந்தி
பாங்கில் நின்றதனை அள்ளிக் குடிக்குமே

**வேறு** (Marching tune)

கந்தரத் தொறும் கிடந்து கந்தரப் பயந் தொதுங்க
கர்ச்சனை புரியும் திறல் சிங்கமே - நெஞ்சில்
அச்சமுற விண்ணுறை மாதங்கமே - அந்தக்
காவிலே சில தாவிலே வளர் மாவினால் நடு வேகிராதர்கள்
கார்முகம் ஏவும் கணைகள் ஏறுமே - அதில்
வார் மதுவால் வாரி உவர் மாறுமே !

(சந்தமுடன் கற்புனைநயமும் - சேர்ந்துளது. வேடர் ஏவும் கணையால் அடை கிழிந்து பாயும் தேனால் கடல்நீர் உவர்மாறி இனிப்பாகுமாம்).

## அகப்பொருள் துறைகள்

கழுகு மலைவளம், கோவில் வளம், முருகன்துதி, வாவி வளம் என்று பாடும் சம்பிரதாயக் காவடிப் பாட்டாக மட்டுமல்லாமல் அகப் பொருள் துறையிலமைந்த சிறப்பு மிகு நூலாகவும் இது திகழ்கிறது. தலைவி, தலைவனான முருகன்மீது மையல் கொண்டு, வருந்தி நிற்றல் பாங்கி, தலைவியின் நிலைமையை எடுத்துரைத்துத் தலைவனை அழைத்தல் தலைவியும், தலைவனும் சேர்தல், சுரம்போக்கு, நற்றாய் இரங்கல் ஆகிய களவியல் துறைகள் மிகச்சிறப்புற அமைந்துள்ளன. தலைவி ஊடல், தலைவனிடம் தலைவி வருந்தல் ஆகிய கற்பியல் துறைகள் அமைந்து கற்பனை நயத்துடன் மிளிரும்.

இசைத்திறம் செறிந்த, சிறந்த காவடிச் சிந்து இது. ''என் பெண்ணை மையல் செய்து பெருநோய் செய்தானே'' என ஆழ்வார்கள் தாயார் பாசுரம் பாடியுள்ளது போல, கழுகு மலைக் காவடிச் சிந்திலும் தாயார் புலம்பல் அற்புதச் சுவையுடன் ஒளிர்கிறது.

1. பாதிராத்திரி வேளையில் வீட்டுப்
பக்கத்தில் வந்து மேவி - பஞ்ச
பாதகன் ஒரு பாவி - சிறு
பாவையை மெல்லக் கூவி - கையைப்
பற்றிக் கூட்டிக் கொண் டேகினான் பதை
பதைக்குதே என்தன் ஆவி.

2. நானிலம் புகழ் கழுகுமாமலை
நாயகன் பாண்டி நாட்டில் - நெஞ்சில்
நாணம் விட்டுத்தன் பாட்டில் - வெப்பம்
நண்ணிய பாலைக் காட்டில் - மகள்
நடக்க வேண்டிமுன் அடக்கமாய்த் தெய்வம்
லபித்ததோ மண்டை ஓட்டில்

3. மையல் கொண்டு ஒரு தையல் பின் செல்ல
வயது மீறின மாதோ - இந்த
மார்க்கம் தோன்றின தேதோ - சென்ம
வாசனைப் பலன் ஈதோ - ஐயோ
மாதம் பத்தும் சுமந்து பெற்ற என்
வயிறும் தான் எரியாதோ?

4. செய்ய பஞ்சணையும் பொருது
சிவந்து கொப்பள மாகும் - நெரிஞ்
சிப்பழம் என்று நோகும் - அவள்
சீரடிகள் ரெண்டும் வேகும் - படி
தீயும் கானலில் வேனிலாற் கொடுங்
தீயில் எப்படிப் போகும்?

கடைசியில் தாய் மனம், எப்படியாவது அவளை முருகனே காக்கட்டும் என்று பேசுகிறது.

5. காடு சேர்கையில் கரடி வேங்கைகள்
காட்டுமே ஆரவாரம் அதைக்
காதில் கேட்டு விசாரம் - வைத்துக்
கலங்குவாள் அந்த நேரம் - என்றன்
காதலி தன்னை ஆதரித்துயிர்
காப்பது குகன் பாரம

இப்படிப் பல விதமான கற்பனைகளுடன் பாடிய சிந்துப் பாடலில், முருகன் முகம் கண்டால் எல்லாக் கவலையும், எல்லா வினையும் தீரும் என்று முற்ற முடிந்த முடிபாகத் தலைவி சொல்வது போல் முத்தாய்ப்பு வைக்கிறார்.

''திவ்ய முகங்கள் ஆறுமே கண்களில் கண்டால்
துன்பங்கள் எல்லாம் காத வழி ஓடிப் போகும்!''

## சீட்டுக்கவி வரைந்து நாட்டில் புகழ் பெற்றார்

கடித வடிவில் அமைந்த கவிதை இலக்கிய வகையே சீட்டுக்கவி. சிறப்புத் தகுதி, ஆரவாரமான நடை, செய்யுள் மொழி, அன்பு, ஆன்ம நேயம் இவை கொண்டு இலங்குவது சீட்டுக்கவி என்பர். சகுந்தலை துசியந்தன் - கடிதக்கவிகளை - காளிதாசன் புலமையின விளக்கமாகப் பார்க்கிறோம்.

மாதவி முடங்கலை இளங்கோ இடம் பார்த்துப் பொருத்தமாக எழுதியுள்ளார்.

இலக்கண வரம்புக் குட்பட்ட அணியழகும் வரை கடந்த கற்பனையழகும் சேர்ந்து அண்ணாமலையாரின் சீட்டுக் கவிகளை அமரத்தன்மையடையச் செய்துள்ளன. சங்கர நாராயணர் கோவில் திரிபந்தாதி, கருவை மும்மணிக் கோவை, வீரையந்தாதி கோமதி யந்தாதி எனும் நூல்களையும் பலவிதப் பாடல்களையும் எழுதியுள்ளார். ஊற்றுமலைத் தனிப்பாடல் திரட்டில் இவரது தனிப்பாடல்களைக் கண்டு இன்புறலாம. தனக்கு மாதேவன் அனுப்பிய புதையல என்று தமிழ் மன்னன், இருதயாலய மருதப்பரைக் கவிஞர் போற்றி வந்தார். இருதயாலய மருதப்ப தேவருக்கு அனுப்பிய ஒரு சீட்டுக கவியைச் சான்றாகக் காணலாம்.

'வணத்திலக வாணுதல் வெண் தரள நகை
தனக்கும்ப வடிவக் கொங்கை
மணத்திலக நாசி மடவார் மதனா!
ஒரு விண்ணப்பம் வழுத்தக் கேள் கைக்
கணத்திலகத் தரித்தவர்க்கு யான் புகன்ற
தமிழ்க்குதவும் கைமாறாகச்
சுணத்தில் அகம் ஒன்று புரிவித்துனது
பெருங்கருணை ஆட்டுவாயே!

(வண்ணத்திலகமுடைய நெற்றியும், முத்துப்பல் வரிசையும், கனக்கும் தனமும், மணமுள்ள எட்பூ நாசியும், உடைய மடந்தையர் விரும்பும் மதனன் அனையவனே ! கையில் நத்து (சங்கு) தரித்த திருமாலை நான் போற்றிப் பாடிய தமிழ்ப் பாடலுக்கு உதவிச் சுண்ணத்தில் அகம் (வீடு) அதை தீற்றிக் கட்டுவித்து உதவுவாயே !)

**நிறைவுரை**

" சில் நாட் பல்பிணி " என்று சொல்லும் தொடர் நம் அண்ணாமலையாருக்குப் பொருந்தும். 'சேர்ந்தே பிறப்பது புலமையும் வறுமையும்' என்பதும் அவரிடத்தே பொருந்தும். 29 அகவையே வாழ்க்கை. அதற்குள் பல நூறுபாக்கள்; தண்டமிழ்த்தேன் சிந்தும் சிந்து; இப்படிப் பாடிய பிறவிக் கவிஞர் அவர். இருமல், அரையாப்பு என்னும் கட்டி (அவரே யாப்பில் பாதி வந்துள்ளது என்று சீட்டுக கவியில் குறித்தார்.) என்று 5 வருட மணவாழ்வுக்குள் ஆன நோய்கள் பல. புத்திரப் பேறுமில்லை. அவர் தந்த தமிழ்ச் சொத்தே எச்சம். அவரை ஆதரித்த சுந்தரராசுத்தேவர், இருதயாலய மருதப்ப பூபதி இவர்களும் தமிழ் பயிற்றுவித்த ஆசான்களான சுந்தர சுவாமியும், உ. வே. சா (தமிழ்த் தாத்தா) அவர்களும், மேலகரம் சுப்பிரமணிய தேசிகரும் தமிழுக்கு அளப்பரும் தொண்டு செய்தவர்கள். பாருள்ளளவும், பொருனைநீர் உள்ளளவும் இவர்தம் புகழும் நிலைபெறும் ! சென்னிகுளத்தில் அண்ணாமலை ஆரம்ப பாடசாலை ஒன்று இவர் பெயரால் நடைபெறுகிறது.

**துணை நூல்கள்**


1. அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து - மூலம்
2. கலைக் களஞ்சியம் (கட்டுரை 1. அண்ணாமலை ரெட்டியார்; 2. காவடி சிந்து)
3. சீட்டுக் கவி - க. சுப்பிரமணியன்
4. தமிழ் இலக்கியக் கொள்கை - தொகுதி 3 (கட்டுரை - நாட்டுப்புற இலக்கியம்)
5. நாடோடிப் பாடல்கள் - பி. சாம்பமூர்த்தி
6. The Standard Dictionary of Folklore.




# சங்க அகப்பாடல்களில் புறம்

— டாக்டர். ம. அருணாசலம்

சங்க இலக்கியங்களாக நாம் கூறுவன பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் தொகை நூல்களே. இத் தொகை நூல்கள் அகம் புறம் என்ற அடிப்படையில் தொகுக்கப் பெற்றுள்ளன என்றும் அகம் காதலையும் புறம் வீரத்தையும் பேசுவன என்றும் பொதுவாகக் கூறிவருகிறோம். இவ்விளக்கம் சங்கத் தொகை நூல்களை விளங்கிக் கொள்ளப் போதுமானதன்று அகம் காதலைப் பற்றிப் பேசுவது எனக் கூறினால் போதாது பேசும் பொருளோடு பேசும முறையிலும் அகப்பாடல்களுக்கு ஒருவரையறை உண்டு.

அகப்பாடல் :

1. காதலைப் பேசுவது
2. முதல். கரு. உரி - அடிப்படையில் அமைவது. முதல் - கருப் பொருள்களைப் பகைப் புலனாகக் கொண்டு உரிப் பொருளைப் பேசுவது
3. நாடகப் பாங்கில் தலைவன், தலைவி, தோழி ...... கூற்றுகளாக அமைவது.
4. தலைமக்கள் பெயர் கூறப்படாதது - எனவே பொதுநிலையில் கூறிச் செல்வது.

என்ற அளவில் இவ்வரையறையினைக் குறிப்பிடலாம்.

அகப் பாடல் தொகைகளில் சேர்க்கப் பெற்றுள்ள சில பாடல்களைப் பயிலும் போது அவை உண்மையில் காதலைத்தான் மையமாகக் கொண்டெழுந்ததா? காதல் உணர்வைப் பாடும பாங்கில் நாட்டுத் தலைவன் ஒருவன் பெருமையினைப் பேசுகின்றனவா என்னும் வினாக்கள் எழுகின்றன. அப்பாடல்களைப் பற்றிச் சிந்திப்பதே இங்கு நோக்கம். இங்கு எத்தனைப் பாடல்களில நாட்டுத் தலைவன் பெருமையினை அல்லது புறத்தின் குரலைக் கேட்கிறோம் என்பதை விடவும் எவ்வெவ்வகையான் அக் குரல் ஒலிக்கிறது என அறிய முயல்வதே தக்கதாகத் தோன்றுகிறது.

## I

நாட்டுத் தலைவன் பெருமையினைக் கூற எழுந்த புறநானூற்றுப் பாடல்களை எதிரொலிப்பனபோலக் குறுந்தொகையில் காணலாகும் இரண்டொரு பாடல்களைப் பார்ப்போம்.

மள்ளர் குழீஇய விழவினானும்
மகளிர் தழீஇய துணங்கையானும்
யாண்டும் காணேன் மாண்தக்கோனை
யானும் ஓர் ஆடுகள மகளே என்கைக்
கோடீர் இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே

குறுந்தொகை - 31

என்பது ஆதிமந்தியார் பாடல். இப்பாடற்கு நொதுமலர் வரைவுழித் தோழி அறத்தொடு

நின்றது எனத் துறை கூறுவர். இவ்வாறு துறை கூறும் போதே இப்பாடல் புலவர் தனிவாழ்க்கை பற்றியதன்று எனக் கூற முடியும். ஆயினும் ஆதிமந்தியின் தனி வாழ்க்கையோடு தொடர்புடையதே இப்பாடல் என விளக்குவர். இப்பாட்டை விளக்கும் நச்சினார்க்கினியர், 'இது காதலற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு;(இவை)தத்தம் பெயர் கூறிற் புறமாம் என்றஞ்சிவாளாது கூறினார்; 'ஆதிமந்தி தம் பெயரானும் தம் காதலனாகிய ஆட்டனத்தி பெயரானும் கூறிற் காஞ்சிப் பாற்படும். ஆதிமந்தி போல ஏதஞ் சொல்லிப்பேது பிறிதுறலே எனவும் வெள்ளி வீதியைப் போல நன்றும் செலவயர்ந்தி சினால் யானே எனவும் அகத்திணைக் கண் சார்த்து வகையான் வந்தனவன்றித் தலைமை வகையான் வந்திலவென்பது (தொல் - அகத் : 54 உரை) என எழுதுவர்.

இவ்வாறு விளக்கும் போது தனிஒருவர் காதல் வாழ்வைப் பேசுவதும் 'அகமே' என்றும் அதனைப் பாடிச் செல்லும் திறமே 'அகப்புற'ப்பாகுபாட்டிற்கு அடிப்படை என்றும் அவர் கருதுவது புலனாகிறது. இதனை ஏற்றுக்கொள்ளும் போது, நக்கண்ணையார் பாடிய,

அடுபுனை தொடு கழல் மையணற் காளைக் கென்
தொடிகழித்திடுதல் யான் யாயஞ்சுவலே
அடுதோள் முயங்கல் அவை நாணுவலே
என் போற் பெருவிதுப்புறுக என்றும்
ஒரு பாற் படாதாகி
இரு பாற்பட்ட இம்மையலூரே.

(புறநானூறு 83)

என்னும் பாடல் போன்றவற்றைப் புறநானூற்றில் சேர்ப்பானேன் என்னும் வினா எழுகிறது. 'இது பெருங்கோழி நாய்கன் மகள் ஒருத்தி ஒத்த அன்பினாற் காமுறாத வழியும் குணச்சிறப்பின்றித்தானே காமுற்றுக் கூறியது இதனின் அடக்குக எனப் புறத் திணையில் அடக்குவர் (தொல - புறத்: 28, நச்.) இதனைக் காரணமாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை. குணச்சிறப்பின்றிக் காமுறுதல் அகத்தில் இல்லையா? கைக்கிளை, பெருந்திணைகள் ஒத்த அன்பு பற்றியனவா?

முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்
ஓரேன்யானும் ஓர்பெற்றி மேலிட்டு
ஆஅ ஒல்லெனக் கூவுவேன் கொல்
அலமரல் அசைவளி அலைப்ப என்
உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே. குறுந்தொகை 28

என்னும் ஔவையார் பாடல் குணச்சிறப்புடைய ஒத்தகாமத்தைப் பேசுவதா? எனவே காதல் உணர்வைப் பாடும் போதும் தனி ஒருவர் வாழ்க்கை நிகழ்ச்சியாகக் கொண்டு அவர் பெருமையினைப் பாடுவதாக விளக்க முடிந்தால் அவ்வாறமைந்த பாடலை அக - மரபுக்கு உட்படுத்திக் கூறல் அரிதே!

மேலும் ஆதி மந்தியார் தனிவாழ்க்கை - காதல் வாழ்க்கை பாராட்டத் தக்க ஒன்றாக அறிஞர்களால் எடுத்துக்காட்டப்படுவது. அந் நிலையில் மேற்காட்டிய ஆதி மந்தியார் பாடலை, அவர் தனி வாழ்க்கையின் எதிரொலியாகக் கொண்டு அகத்தில் சேர்ப்பது அகப் பாடல் விதியிலிருந்து விலகிச் செல்வதாகாதா?

ஆதிமந்தியார பாடல் போன்று வெள்ளி வீதியார் பாடலும் சிந்திக்கத்தக்கதே.

வாடல் உழுஞ்சில் விளைநெற்று அம்துணர்
ஆடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்ப
கோடை நீடிய அகன் பெருங் குன்றத்து
நீரில் ஆராற்று நிவப்பன களிறட்டு
ஆளில் அத்தத்து உளுவை உகளும்'
காடிறந்தனரே காதலர் மாமை
அரிநுண் பசலை பாஅய், பீரத்து
எழில் மலர் புரைதல் வேண்டும், அலரே
அன்னி குறுக்கை பறந்தலை திதியன்
தொல்நிலை முழுமுதல் துமியப்பண்ணி
புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை ஆர்ப்பினும் பெரிதே, யானே
காதலற்கெடுத்த சிறுமையொடு நோய் கூர்ந்து
ஆதிமந்திபோலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லோ, பொலந்தார்
கடல் கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வானவரம்பன் அடல் முனைக் கலங்கிய
உடைமதில் ஓர் அரண் போல
அஞ்சுவ நோயொடு துஞ்சாதேனே.

அகநானூறு 45

வெள்ளி வீதியார் பாடிய இப்பாட்டிற்கு வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது எனத்துறை கூறுவர். அகநானூறு (362), குறுந்தொகை (27, 44, 58, 130, 146, 149, 169, 386,) நற்றிணை (70, 335, 348) - களில் வரும் சில பாடல்களும் வெள்ளி வீதியார் பாடியனவே.

வெள்ளி வீதியாரை ஔவையார் ஒரு பாடலில் குறிப்பிடும் போது,

ஓங்கு மலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத்தன்ன
ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க்குருளை
மூன்றுடன் ஈன்ற முடங்கர் நிழத்தத்
துறுகல் விடரளைப் பிணவுப் பசி கூர்ந்தெனப்
பொறிகிளர் உழுவை போழ்வா யேற்றை
அறுகோட்டுழை மான் ஆண் குரல் ஓர்க்கும்
நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றும்
செலவயர்ந்திசினால் யானே பல புலந்து
உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்த்
தோளும் தொல்கவின் தொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி
மருந்து பிறிதின்மையின் இருந்து வினையிலனே'

அக 147

எனப் பாடுவர். வெள்ளி வீதியைப்போல என்னும் தொடரை விளக்கும் போது இவ் வுவமையால், அவள் கணவனைப் பிரிந்து பல விடத்தும் தேடித் திரிந்தாளாதல் பெற்றாம்' எனக்குறிப்பிடுவர் (ந மு வே), இவ்வாறு கொள்ளும் போது வெள்ளி வீதியார் பாடலும் அவர் தனி வாழ்க்கை நிகழ்ச்சியினை எதிரொலிப் பனவே எனக் கூறுவதா? ஆதிமந்தியார் பாடலும், வெள்ளிவீதியார் பாடலும் தனிவாழ்க்கை நிகழ்ச்சிகளை எதிரொலிப்பனவே எனக் கொண்டால், ஔவையார் பாடியன தனிவாழ்க்கை நிகழ்ச்சி களைச் சுட்டவில்லை என எவ்வாறு கொள்வது? நெறிபடுகவலை நிரம்பாநீளிடை வெள்ளி வீதியைப் போல நன்றும் செலவயர்ந்திசினால்யானே என்னும் ஔவையார் பாடலில் (அக 147) ஔவையார் நேர் நின்று பாடுவதான ஒலி கேட்கவில்லையா? இப்பாடலுக்குச் செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறியது எனத் துறை கூறி, 'தனிவாழ்க்கை நிகழ்ச்சியாகக் கொள்ளாதது, ஆதிமந்தி போல, வெள்ளிவீதியைப் போல, என்னும் தொடர்கள் போன்று ஔவையைப் போல' எனப்பிறர் உவமை வாசகத்தில் பாடதது தான் காரணமா?

ஆதிமந்தியார், வெள்ளிவீதியார், ஔவையார் இவர்கள் பெண்பாற் புலவர்கள். இவர்கள் காதலைப் பாடும் போது உணர்ச்சி வேகத்தோடு 'தன்மையில்' பாடினால் அதனை எவ்வாறு விளங்கிக் கொள்வது? இருவர் பாடல்களைத் தனி வாழ்க்கைப் பாடல்கள் என்றும் ஒருவர் பாடலைப் பொதுவாகவும் கொளவதா? ஆதிமந்தி ஓர்விறலி; ஔவையாரும் விறலியே; வெள்ளி வீதியாரும் விறலியே எனக் கொள்ள முடியாதா? இவ்வாறு கொண்டால் இவர்கள் விறலியாக இருப்பதற்கும் இத்தகைய பாடல்கள் பாடு வதற்கும் தொடர்புண்டா? என்னும் வினாவும் எழலாம்.

இவர்கள் பாடியன அனைத்தும் இப் பாங்கிலேயே உள்ளன எனக் கொள்ள முடியாது. சிறந்த, சுவைமிக்க பாடல்கள் பலவற்றையும் இவர்கள் பாடியுள்ளமை தெளிவாக உள்ளது. எனவே 'அகப்பாடல்களில் புலவர் தனிவாழ்வும் பாடற் பொருளும்' என்பது தனியாக ஆராய்வதற்குரியதே. இப்போது கூற முடிவதெல்லாம், இப்பெண்பாற் புலவர்கள்,

1. சிறந்த காதற் பாடல்களைப் பாடினர்.

2. நாட்டுத் தலைவன் இன்பச் சிறப்பையும் கிளர்ச்சியோடு பாடினர் என்பதே. இவ்வாறு கொள்ளும் போது 'அகச் சிந்தனையில் ஓர் வளர்ச்சியினைக் காண்பதாகவே கொள்ள வேண்டும்.

II

பெண்பாற் புலவர்களைக் காதலில் திளைத்துப் பாடியதாக அவர்கள் பாடல்களைக் கொண்டு விளக்குவதொன்று. பெண்பாற் புலவர்களாயினும் ஆண்பாற் புலவர்களாயினும் அகப் பாடல்களில் நாட்டுத் தலைவர்களைச் சிறப்பித்துப் பாடும் போது, அவ்வாறு சிறப்பிப்பதை ஆராய்வது பிறிதொன்று.

அகத்திணைப் பாடல்கள் பலவற்றில், மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் போன்ற நாட்டுத் தலைவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள் ளதைக் காண்கிறோம். இவற்றை அந் நாளைய வரலாற்று நிகழ்ச்சிகளாகவும் விளக்கி வருகிறோம். இங்கு வரலாற்றுக் கூறுகள் அகப்பாடல்களில் இடம் பெறும் பொருத்தத்தைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். பாட்டில் பேச எடுத்துக் கொண்ட பொருளுக்கும் இவ்வரலாற்று நிகழ்ச்சிகளுக்கும் என்ன தொடர்பு? பாடிய புலவருக்கும் சுட்டப்படும் நாட்டுத் தலைவர்களுக்கும் தொடர்புண்டா? என்னும் வினாக்கள் எழுகின்றன.

அகத்திணைப் பாடல்களில் வரலாற்று நிகழ்ச்சிகள் பெரும்பாலும் உவமை வாசகத்திலேயே அமைந்துள்ளன ஒரு சில நிகழ்ச்சிகள் பாட்டில் கூறப்படும் காதல் நிகழ்ச்சிக்கு ஏற்ற சூழலாகவும அமையலாம். உவமைவாசகமாக அமையும் போது அந் நாளைய மக்கள் நன்கறிந்திருந்த நிகழ்ச்சிகளாக அவற்றைக் கருத வேண்டும்; அல்லாவிட்டால் அந்நிகழ்ச்சிகளில் புலவர் கொண்ட ஈடுபாடு காரணமாதல் வேண்டும். இவற்றை அறிதற்கும் புலவர் பயன்படுத்தும் சொற்றொடர்களே, பாட்டின் குரலே, உதவ முடியும். இங்கு அதியமான் நெடுமானஞ்சியைப் பாடும சில பாடல்களைப் பார்க்கலாம்.

கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி
பெரும் புனல் வந்த இருந்துறை விரும்பி
யாமஃதயர்கம் சேறும், தானஃது
அஞ்சுவதுடையராயின், வெமபோர்
நுகூம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடும் காக்க, தன் கொழுநன் மார்பே

குறுந்தொகை 80.

தலைமகட்கு பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது' என்ற துறையில் ஔவையார் பாடிய இப்பாடல், எழினி அதியமான் வெட்சிப் போர்த் திறத்தை உவமை வாசகம் படக்கூறும் போதே அவனிடம் கொண்ட ஈடுபாடு விளங்கித் தோன்றவில்லை யா? பரத்தை அவன் போர்த் திறனில் திளைப்பதாகப் பாடும் போது, அவன் போர்த்திறனும் ஒரு வகையில் பாடற் பொருளாக வில்லையா?

அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டு நீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை ஊரன் பெண்டினை ஆயின்
பலவாகுக நின்னெஞ்சிற் படரே
ஓவாது ஈயும் மாரி வண்கை
கடும்பகட்டி யானை நெடுந்தேர் அஞ்சி
கொன்முனை இரவூர் போலச்
சிலவாகுக நீ துஞ்சும் நாளே.

குறுந்தொகை 91

ஔவையார் பாடிய இப்பாட்டிற்குப் 'பரத்தையர் மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில் வேண்டிப் புக்கவழித் தன்வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன்னெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது' எனத் துறை கூறுவர். இப் பாட்டிலும் அதியமான் வீரமே உவமையாக உள்ளது. 'இவனுககஞ்சி, இவன் பகைப் புலத்தார் தூங்காது கழிந்த நாட்கள் பல' என்பதனையே உவமைவழிச் சுட்டுகிறார். இப்பாட்டை விளக்கும் போது 'இவ் அகப் பாட்டினுள பட்டுடைத் தலைவன் பெயரும் கிளவித் தலைவன் பெயரும் வந்தன' என விளக்குவர்.

இவ்வாறு விளக்கும்போது, பின்னாளைய அகப் பொருள் இலக்கியங்களில் பாகு படுத்திக் கூறப்படும் கிளவித் தலைவன், பாட்டுடைத்தலைவன் என்ற பாகுபாடு சங்க இலக்கியத்திலும் காண்பதே என்னும் கருத்தைக் காண்கிறோம்.

ஔவையார் பாடிய நற்றிணைப் பாடல் ஒன்றும் அஞ்சியின் சிறப்பை உவமை வாயிலாகக் குறிப்பிடுகிறது.

அருந்துயர் உழத்தலின் உண்மை சான்மெனப்
பெரும்பிறிதின்மையின் இலேனு மல்லேன்
கரைபொரு; திழிதரும் கான்யாற்று இகுகரை
வேர்கிளர் மராஅத்து அந்தளிர் போல
நடுங்கல் ஆனாநெஞ்சமொடு இடும்பை
யாங்கனம் தாங்குவென் மற்றே, ஓங்கு செலல்
கடுமபகட்டி யானை நெடுமானஞ்சி
ஈரநெஞ்சமொடு இசை சேண்விளங்க
தேர் வீசிருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே.

நற் 381

என்னும் பாட்டிற்கு 'பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள் பருவவரவிக்கண்சொல்லியது' எனத்துறை கூறுவர். இங்கு அதியமானஞ்சியின் வீரத்தைக் குறிப்பிடுவதோடு பெருங் கொடைத் திறத்தையும் பாராட்டுவர். அவன் கொடைத் திறமே உவமையாக வந்துள்ளது.

இம் மூன்று பாடல்களிலும் அதிகமானஞ்சியின் வாழ்க்கைக் கூறுகள் உவமையாக வந்துள்ளன. உண்மையில் இந்நிகழ்ச்சிகள் உவமைக்காகத் தேர்ந்தெடுககப்பட்டவையா? இவை அதிகமானை உவமை வாசகத்தில் பாராட்டுவது போன்றில்லையா? மூன்றாவது பாட்டில் அதிகமான் கொடைத்திறத்தை மழைக்கு உவமையாகக் கூறும் போது அவனிடம் ஔவையார் கொண்ட பேரீடுபாடு விளங்கித் தோன்றவில்லையா? ஔவையார் அதிக மானிடம் கொண்டிருந்த மதிப்பை அவர் பாடிய புறநானூற்றுப் பாடல்களாலும் அறியும் போது இங்கும் அவன் புகழ்கிளத்தலே நோக்கம் என்பது தெளிவாகிறது. பிறபுலவர் கள் இவ்வாறு உவமைவாசகம் படப் பாடிய பாடல்களுக்கும், உறுதிப்படுத்ததக்க இத்தகைய சான்றுகள் இல்லாதிருந்தாலும் புகழப்படுவோரிடம் கொண்ட மதிப்பை வெளிப்படுத்துவதாகவே கொள்ள வேண்டும்.

இவ்வாறு கூறுவதால் புலவர்கள் பாடும் நிகழ்ச்சிகளெல்லாம் தம்கால நிகழ்ச் சிகளே என்பது பொருளன்று! அது தனியே ஆராயத்தக்கது. இங்குக் கூற விரும்புவ தெல்லாம் தாம் மதிக்கும் நாட்டுத் தலைவர்களைப் புலவர்கள் அகப் பாடல்களில் குறிப்பிடச் சிறப்பிப்பதுண்டு என்பதே. அவ்வாறு சிறப்பிக்கும் போது நாட்டுத் தலைவன் புகழிலும், எடுத்துப் பேசும் காதல் உணர்வில் திளைப்பது போன்று திளைக்க வாய்ப் பேற்படுகிறது. இதன் விளைவே, பாட்டுடைத் தலைவன், கிளவித்தலைவன் என்ற பாகுபாடு

தாம் மதிக்கும் நாட்டுத் தலைவர்கள் புகழைப் புலவர்கள் அகப்பாடல்களில் குறிப்பிட்டுச் சிறப்பிப்பதுண்டு என்பது, பல தொகைகளிலும் காண்பதே. அகநானூற்றுப் பாடல் ஒன்றிலும் பாண்டியன் நெடுஞ்செழியனை நக்கீரர் பாடும் போக்கு அவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கருதி இருந்தமையை நன்கு விளக்கும்.

பகுவாய் வராஅற் பல்வரி இரும்போத்துக்
கொடுவாய் இரும்பின் கோள் இரை துற்றி
ஆம்பல் மெல்லடை கிழிய குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்து
அரில்கொடிவள்ளை ஆய்கொடி மயக்கி
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடுகதச் சேப்போல மதமிக்கு
நாட்கயம் உழக்கும் பூக்கேழ் ஊர!
வருபுனல் வையை வார் மணல் அகன்றுறை
திருமரு தோங்கிய விரிமலர்க் காவில்
நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு
வதுவை அயர்ந்தனை என்ப, அலரே
கொய் சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப
சேரல், செம்பியன், சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி
நார் அரி நறவின் எருமையூரன்
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல்தேர் பொருநன்என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரைசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெல
கொன்றுகளம் வேட்டஞான்றை
வென்றி கொள்வீரர் ஆர்ப்பினும் பெரிதே

அக. 36

நக்கீரர் பாடிய இப்பாடலுக்கு. 'தலைமகள் பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு புலந்து சொல்லியது' எனத் துறை கூறுவர். பூக்கேழ் ஊர விரிமலர்க்காவில் வதுவை அயர்ந்தனைஎன்ப; அலரே, செழியன்... கொன்று களம் வேட்டஞான்றை வென்றி கொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே என்பது பாடற்கருத்து. இது மருதத்திணைப் பாடல். தலைவன் பரத்தையர் ஒழுக்கம், பொழிலாட்டு போன்றவற்றை எதிரொலிக்கும் இப்பாடல் நேர் பகுதி செழியனின் போர் வெற்றியில் திளைத்து நின்று பாடுவது தெரியவில்லையா ?

இங்கு அகப்பாடல் பாட்டுடைத் தலைவனுக்குப் பெருமதிப்பளித்தாலும் ஓரளவுக்கு எடுத்துக் கொண்ட பொருளையும் சுவைபடப் பேசிச் செல்கிறது எனலாம். இதன் வளர்ச்சியினையே நெடுநல்வாடையிலும காண்கிறோம் எனல் வேண்டும.

நெடுநல்வாடை

இது அகப்பாடலாக விளக்கப்படினும் இதன் அடிக்குறிப்பு வேறுபட்டுள்ளது: பாண்டியன் நெடுஞ்செழியனைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் பாடியது என்றே அடிக் குறிப்புள்ளது; இத்தகைய அடிக்குறிப்பு புறநானூற்றில் காண்பது இதனை விளக்கும் நச்சினார்க்கினியர் இப்பாடல் அகப்பொருளைச் சுட்டினும், இது காமத்திடத்து வெற்றியைச் சுட்டுவதாக விளக்குவது கருதத்தக்கது. 'இது வாகை தானே பாலையது புறனே (தொல். புற. சூ. 18) எனப் பாலைக்குப் புறனாக்கூறிய வாகைத்திணையாய்.

அதனுள் கூதிர் வேனில் என்றிருபாசறை, காதலில் ஒன்றிக் கண்ணிய மரபினும் (புற. சூ. 2) எனக் கூறிய கூதிர்ப்பாசறையாயிற்று. தலைவனைப் பிரிந்திருந்து வருந்தும் தலைவிக்கு, ஒரு பொழுது ஓர் ஊழிபோல நெடிதாகிய வாடையாய்ப் பாலையாகலை உரிப்பொருள் உணர்த்திற்று. அகத் தொடுங்கிப் போகம் நுகர்வார்க்குச் சிறந்த காலமாயினும் அரசன் போகம் வேண்டிப் பொதுச் சொற் பொறானாய் அப்போகத்தில் மனமற்று வேற்றுப் புலத்துப் போந்திருக்கின்ற இருப்பாகலின் அதற்கு நல்லதாகிய வாடைஆயிற்று. எனவே காமத்திடத்து வெற்றி எய்தலின் வாகைத் திணை ஆயிற்று. இப் பாட்டு 'சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாமையின் (அகத் சூ. 54) அகப் பொருளாமேனும், வேம்புதலையாத்த நோன் காழ் எஃகம் (176) என அடையாளப்பூ கூறினமையின் அகமாகா தாயிற்று' என்பர். இதன் வழித் தலைவன் பாண்டியன் என்பதையும் கூறி விடுகிறார்.

நச்சினார்க்கினியரின் இக் கூற்று, தமிழ் இலக்கியக் கோட்பாட்டில் ஒருவளர்ச்சியினைச் சுட்டிநிற்கிறது என்பதில் ஐயமில்லை. எனவே அகப் புறப் பாகுபாட்டிற்கு எடுத்துப் பேசும் பொருளோடு பேசிச் செல்லும் திறமும் கருதவேண்டியதே என்பதை இங்கு விளக்கிவிடுகிறார். இதனை மறுத்து எழுதும் அறிஞர்களும் 'நெடுஞ்செழியனுடைய வீரச் சிறப்பை அகத்திணைப் பாடலில் வைத்து விளக்க வேண்டும் என்ற கருத்தால் இந்நெடுநல்வாடையை இயற்றியுள்ளார்; 'இதற்கு இழுக்கு நேரா வண்ணம் வேப்ப மாலையைத் தலைவனுக்குரியதாகக் கூறாது படைத் தலைவனுக்கே (உரியதாகக்) கூறி, குறிப்பினால் பாண்டியன் தலைவன் என்பது உணரவைத்துள்ள நக்கீரனார் நுண்ணறிவை உளம் கொள்ளவேண்டும் (புனையா ஓவியம், பக். 26) என்பர். இம் மறுப்பிலும் இலக்கியக் கோட்பாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி விளங்காமல் இல்லை. தலைவன் 'பாண்டியன் நெடுஞ்செழியன்' என்ற தனிமனிதன் என்னும் போதே பண்டைய-மரபில் ஓர் விதி விலக்கில்லையா? பாண்டியன் நெடுஞ்செழியனின் தனி வாழ்க்கை என்னும் போது, நச்சினார்க்கினியர், காமத்தில் வெற்றி கண்ட உணர்ச்சியே பாடற்பொருள் எனக் கொண்டு 'வாகைத்திணை' எனக் கூறுவதை எவ்வாறு மறுப்பது? சிறந்த அரசன் அளவில் சமுதாயக் கடனுக்குக் காமம் அடங்கி நிற்பதைத் தானே பாராட்ட முடியும். எனவே அகத்திணை மரபில் திரிபடைந்த அல்லது வளர்ச்சி அடைந்த அகத்திணைப் பாடலை, அல்லது புறமாக வளர்ந்து விட்ட ஒரு பாடலைக் காண்கிறோம் எனக் கூறுவதில் தவறில்லை.

இப் பாடல் பொதுவில் தலைவன் ஒருவன் காமச்சிறப்பினை, சமுதாயத்தில் வெற்றிகண்டு சமுதாயக் கடனில் திளைப்பதைப் பாடுகிறது. இவ்வாறு பாடிச் செல்லினும் பாடுவது 'அகவுணர்வே' என்பதா? பத்துப் பாட்டில் சேர்க்கப் பெற்றுள்ள பட்டினப் பாலையும் பொருள்பாகுபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சியினைச் சுட்டிநிற்பதே.

### பட்டினப்பாலை

இப்பாடலை விளக்கும் நச்சினார்க்கினியர் இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணை ஆகலின் இதற்குப் பட்டினப்பாலை எனப் பெயர் கூறினார். பாலையாவது பிரிதலும் பிரிதல் நிமித்தமும், கூறுவது. இப்பாட்டு வேற்று நாட்டகல்வயின் விழுமத்துத் தலைவன் செலவழுங்கிக் கூறியது! (தொல் - கற். சூ. 5). 'இது முதலும் கருவும் கூறாது உரிப் பொருளே சிறப்பக் கூறியது' எனக் கூறுவர். ஆயின் பாடலைப் பயிலும் போது 301 அடிகளைக் கொண்ட இப் பாட்டில்,

முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய
வாரேன் வாழிய நெஞ்சே
. ...
திருமாவளவன் தெவ்வர்க் கோங்கிய
வேலினும் வெய்ய கானம் அவன்
கோலினும் தண்ணிய தடமென்றோளே

என்னும் ஆறடிகளே அகப்பாடல் அடிகளாக உள்ளன. அகப்பாடல் மரபுக்கு ஏற்பத் தலைமகன் இயற் பெயர் சுட்டப் படவில்லை என்பதுண்மை. ஆயினும் தலைவன் காதல் உணர்ச்சியிலிருந்து நெடுந்தொலைவு விலகிச் சென்று திருமாவளவன் நாட்டைப் பலபடப் புனைந்து பாடுவது தெளிவாக வில்லையா? எடுத்துப் பேசும் பொருள் அகம் என்பதை விடவும் திருமாவளவன் நாட்டின் பெருமை என்ற எண்ணம் ஏற்படவில்லையா? 'சோழன் கரிகாற் பெருவளத்தானை உருத்திரங்கண்ணனார் பாடியது' என்ற இப்பாடலின் அடிக்குறிப்பும் இதனைத்தானே உணர்த்த வேண்டும். இத்தகைய அடிக் குறிப்புப் 'புற நானூறு' போன்ற புறப்பாடல் தொகையில் காணப்படுவதே. அகப் போர்வையில் திருமாவளவன் நாட்டைப் புகழ்ந்து பாடியதாகக் கருதியதாலேயே இவ் வடிக்குறிப்பு எழுதப் பட்டிருத்தல் வேண்டும்.

இப் பட்டினப்பாலை தானும் பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்து பாடும்போது பேச எடுத்துக் கொண்ட அகப்பொருள் உணர்வு அடங்கிநிற்பதாகக் கொண்டு, விளக்குவதற்கிடம்தரலாம்; ஆயின் நெடுநல்வாடையில் கிளவித் தலைவனையே 'பாண்டியன்' எனவும் கருதுதற்கிடமிருத்தலின் அங்கு ஏற்பட்ட அக-வளர்ச்சி, ஒரு திரிபினையே நமக்கு உணர்த்துகிறது. இத் திரிபினைக் கலித்தொகையிலும் காண்கிறோம்.

கலித்தொகையில் முல்லைத் திணைப் பாடல்கள் பலவும் ஆனேறு தழுவுவதை அடிப்படையாகக் கொண்ட காதல் வாழ்க்கையினைப் பாடுவதால், அரசன் கிளவித் தலைவன் என்ற வகையில் அமைந்த பாடலைக் காணமுடியவில்லை; அரச வாழ்க்கையே பெரிதும் காண்கிறோம் இவ்வகையில் அரசன் பாட்டுடைத் தலைவனாகவே விளங்கு கிறான்.

குரவை தழீஇயாம மரபுளி பாடி
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்
மாசில் வான் முன்னீர்ப் பரந்ததொன்னிலம்
ஆளும் கிழமையொடு புணர்ந்த
எம்கோ வாழியர் இம் மலர்தலை உலகே.

கலித்தொகை 103

இங்கு அரசன் பாண்டியன் என்பதை இப்பாடல் விதந்து சுட்டாவிடினும், பிறவிடங்களில் வரும் குறிப்பு அதனை உறுதிப் படுத்தும்.

மலிதிரை ஊர்ந்து தன் மண் கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம் பட
புலியொடு வில் நீக்கிப் பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச் சீர்த்தென்னவன்
தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய நல்லினத்தாயர்.

கலி. 104

என்பதும் தெளிவாகவே பாண்டியனைச் சுட்டுவது. கலித்தொகையில் பாண்டியனைத் தவிர பிற அரசர்கள் சுட்டப்படுவதில்லை என்பதும் கருதத்தக்கது.

பிற - திணைப் பாடல்களில் - அரசன் - கிளவித் தலைவனாக வரும் பாடல்கள், பாண்டியனை எண்ணிப் பாடியன எனக் கூற முடியாதா? குறிஞ்சிக் கலியில் தலைவனைக் குறிப்பிடும் போது, பாடல் ஒன்று,

நீயே, வளியின் இகல் மிகு தேரும் களிறும்
தளியின் சிறந்தனை வந்த புலவர்க்கு
அளியொடு கை தூவலை

கலி. 50

எனக் கூறும். இங்குத் தலைவனுக்கு ஏற்றிக் கூறும் கொடைத்திறம் சிறந்த மன்னர்களுக்கு ஏற்றிச் சொல்வதே

பாலைக் கலியில் தலைவி தலைவனைப் பிரிந்து வருந்துவதைக் கூறும் பாணன்,
பணிபு நின், காமர் கழலடி சேரா
நாமம் சால்தெவ்வரின் நடுங்கினள் பெரிதே

கலி. 30

எனத் தலைவன் அரசன் என்பதைத் தெளிவாகக் கூறுவதோடு, அவ்வரசனும் பாண்டியனே என்பதை

பானாள் யாம் படர் கூர பணை எழில் அணைமென்றோள்
மானோக் கினவ ரொடு மறந்தமைகுவான் மன்னோ
ஆனாச்சீர்க் கூடலுள் அரும்பவிழ் நறுமுல்லை
தேனார்க்கும் பொழுதெனத் தெளிக்குநர் உளராயின்
உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்
விறலிழையவரொடு விளையாடுவான் மன்னோ
பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த்துருத்தி சூழ்ந்து
அறல் வாரும் வையை என்றறையுநர் உளராயின்.

கலி. 30

என்னும் தாழிசைகளால் அவன் கூடலோடும், வையையோடும் தொடர்புடையவன் எனக் கூறுவதன் வழி விளங்க வைக்கிறார்.

மருதக் கலியிலும், ஆங்காங்கே பாண்டியனைக் கிளவித் தலைவனாகக் கொண்டு பாடுவது தெளிவாக உள்ளது.

கார்முற்றி இணர் ஊழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர் முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி இருநிலம்
தார் முற்றியதுபோல தகை பூத்த வையை தன்
நீர் முற்றி மதில் பொரும் பகையல்லால், நேராதார்
போர் முற்றொன்றறியாத புரிசை சூழ் புனலூரன்

கலி. 67

இங்கு வையையினை வெளிப்படையாகக் கூறியதன் வழி வையைக் குரிய பாண்டியனே கிளவித் தலைவன் என்பது தெளிவாக விளங்குகிறது. இதனால் பாண்டியன் என விதந்து கூறாது சென்றாலும் அரசனைக் கிளைவித் தலைவனாகக் கொண்டு பாடினால் அது பாண்டியனைப் பாடியதே எனக் கொள்ள முடியும்.

நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவையெடுத்து
அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்
திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது
குழவியைப் பார்த்துறூஉம் தாய்போல் உலகத்து
மழைகரந்தளித் தோம்பு நல்லூழியாவர்க்கும்
பிழையாது வருதல் நின்செம்மையில் தர வாய்ந்த
இழையணிக் கொடித் திண்தேர் இனமணி யானையாய்!

அறன் நிழல் எனக் கொண்டாய் ஆய் குடை அக் குடைப்
புறநிழற் கீழ்ப்பட்டாளோ இவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப் பூர பெருவிதுப்புற்றாளை

பொய்யாமை நுவலும் நின்செங்கோல் அச்செங்கோலின்
செய் தொழிற் கீழ்ப்பட்டாளோ இவள் இவட்காண்டிகா
காம நோய்க் கடைக் கூட்ட வாழுநாள் முனிந்தாளை

ஏமமென்றிரங்கு நின்எறி முரசம் அம் முரசின்
ஏமத்தி கந்தபளோ இவளிவட் காண்டிகா
வேய் நலம் இழந்த தோள கவின்வாட உழப்பாளை
ஆங்கு
நெடிது சேணிகந்தவை காணினும் தானுற்ற
வடுக் காட்டக் கண் காணாதற்றுக என் தோழி
தொடிகொட்ப நீத்த கொடுமையைக்
கடிதென உணராமை கடிந்ததோ நினக்கே

கலி. 99.

இப்பாடல் பாண்டிமன்னன் என வெளிபபடையாகக் கூறாது போயினும் அவனைத் தலைவனாகக் கொண்டு அவன் இன்பச் சிறப்பைச் சுட்டிச் செல்வது தெளிவாக வில்லையா? இஃது அரசன் தலைவனாயவன் தலைவியைநீக்கி இருந்ததறகுத் தலைவி புலவி நீட்டித்து ஆற்றாளாயவழிஅவட்கு நிகழ்ந்த காமத்து மிகு திறத்தை அவ்வரசனை நோக்கிச் சான்றோர் கூறியது. இது பெருந்திணை என அடிக்குறிப்புள்ளது. இவ்வடிக் குறிப்பும் அரசன் இன்பச் சிறப்பை மிகுத்துக் கூறுவதாகவே கொள்ள வேண்டும்.

அரசன் கிளவித் தலைவன் ஆகின்ற நிலையில், தூய காதல் உணர்வு என்பதற்கும் வேறாக தலைவன் இன்பச் சிறப்புரைத்தல் என்ற நிலையும் ஏற்பட்டுவிடுகிறது. மருதக்கலிப் பாடல்களைச் சிந்தித்தால் மதுரை நகர், வையையாறு, இவ்விடங்களில் இளவேனிற் காலத்து நிகழும் இன்பக்களியாட்டமே (இது தனியாக ஆய்வதற்குரியது). புனலாடல், பொழிலாடல் போன்றவற்றையே பொருளாகக் கொண்டு பாடக்காண்கிறோம். மருதம் என்னும் திணைக்கேற்ப பரத்தையர்சேரி, பரத்தையர் உறவு, அதற்குத் துணைநிற்கும் பாணர்கள் பற்றிய குறிப்புகளையும் காண்கிறோம். கலித்தொகையில் பாண்டினைத் தவிர பிற வேந்தர்களையோ, குறுநிலமன்னர்களையோ குறிப்பினாலும் சுட்டப்படாத நிலையில் பாண்டியன் இன்பச் சிறப்பையே முதன்மையாகக் கொண்டு பாடுகிறார் எனல் வேண்டும்.

இவ்வாறு வளர்ந்து வரும் நிலையினை, பலதொகை நூல்களிலும் காண முடிந்தாலும் கலித் தொகையிலேயே இதனைச் சிறப்பாகக் காண்கிறோம.



# தமிழ் வளர்த்த முன்னோர்

— இ. ஜே. ஆசீர்வாதம்.

சங்கம் இருந்து தமிழ் வளர்த்துத் தமிழுக்குப் பொற்காலம் கண்டவர்கள் பழந்தமிழ்ப் புலவர்கள். அன்னாரது வாய்ச்சொற்களே ஐந்து பெருங்காப்பியமும் அளப்பரிய தொகைப் பாட்டும் ஒல்காத் தொல்காப்பியமுமாக நம் முன்னர் இன்றும் உள்ளன. அவற்றின் வழி அவர்கள் தமிழ் வளாத்த வகை நிழலாட்டமாகத் தெரிகின்றது. ''புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வலவன் ஏவா வானஊர்தி எய்துப'' (புறநானூறு :27) என்று சமுதாயம் எண்ணிய அளவிற்கு உயர் நிலைக்கு உரியவராக அவர்கள் திகழ்ந்துள்ளனர். ''வள்ளியோர்ப் படர்ந்து புள்ளின் போகி நெடிய என்னாது சுரம்பல கடந்து வடியா நாவின் வல்லாங்குப் பாடி, பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி ஓம்பாது உண்டு கூம்பாது வீசி வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கையினைப் பிறர்க்குத் தீது அளியா வழியில் வாழ்ந்தனர் என்பது தெரிகிறது (புறநானூறு :47). பெறுகின்ற ஊதியத்தின் அளவை எண்ணாது தொண்டுள்ளத்தோடு வாழ்ந்துள்ளனர் அவர்கள் - ''யாதும் பெற்றது ஊதியம் பேறுயாது என்னேன்; உற்றனென் ஆதலின் உள்ளி வந்தேனே'' - (புறநானூறு : 154 : 6 - 7). இவ்வாறெல்லாம் எந்தெந்த வகையிலெல்லாம் அவர்கள் சிறந்து விளங்கினர்; எவ்வியல்புகளைக் கொண்டு விளங்கினர் அவாகள்; அவற்றை நமது தமிழ் மொழியின் வளர்ச்சிக்குச் செலுத்தி வெற்றிபெற அவர்களால் எவ்வாறு முடிந்தது? இதுபோன்ற செய்திகளை ஆராய்ந்து இக்காலத்தவரும் அச்செம்மையான வழிகளைக் கடைப்பிடித்தால் தமிழுக்குப் பெருமை சேர்க்கவும், அதனைச் சீராக வளர்க்கவும் முடியும். தமிழால் தம்மை வளர்த்துக்கொள்ள எண்ணும் தீயமுயற்சி அக்காலப்புலவர் சமுதாயத்தில் காணப்படவில்லை. தமிழ் மதிக்கப்படாத இடம் பொன் விளையும் பூமியேயாயினும் அங்குச் செல்வதைத் தவிர்த்தனர் அச் சான்றோர். தமிழால் தமிழுக்கே பெருமை சோத்தனர் அவர்கள். பொருளுக்காக அரசர் பலரை நம்பிவாழும் நிலை இருந்துங்கூட அவ்வரசர்களையே சமயங்களில் கண்டித்துப் பேசவும் பின் வாங்கவில்லை அவர்கள். 'தமிழ் காக்கும' என்ற தமிழின் மீது கொண்டிருந்த நம்பிக்கையே, அரசரையும் சாடுகின்ற துணிவினைத் தந்திருந்தது எனலாம். அத் தன்மானத் தந்தைகளே இன்றும் தமிழ் வளர்க்க விழைகின்ற மக்களுக்கு முன்னோடிகள் ஆவர். அவர் வழிச் சென்றால், இன்னுமொரு பொற் காலததினைத் தமிழ் இலககியம் காணும் நிலைக்கு அதனை வளர்க்க முடியும்.

## தமிழுக்கு உயர் தகுதி சேர்த்தமை

தமிழ் அரசவைகளில் முழங்கும் வண்ணம் செய்த பெருமை நம் சங்க கால முன்னோரையே சேரும். தமது நாவின் செம்மையால் உள்ளத்தின் திண்மையில் தமிழுக்கு இவ்வாறு உயர் தகுதியினை வழங்கினர் அவர்கள். ''வண்மையிலே உளத் திண்மையிலே மனத் - தண்மையிலே மதிநுண்மையிலே; உண்மையிலே தவறாத புலவர்; உணர்விலே உயர்நாடு'' - என்று பிற்காலத்தில் ஒரு பாரதி போற்றும்படி நாட்டுக்கும் மொழிக்கும் உயர்தகுதி வழங்கியவர்கள் அவர்கள்.

தமிழ்ச் சான்றோரில் வன்பரணர் என்பார், ஒருவரைப் புகழ்வது எவ்வாறு என்பதற்கே இலக்கணம வகுத்தவர் ஆவார. தமிழ் இருக்கிறது, தமிழ்ப்புலமை இருக்கிறது என்று எடுத்தவரையெல்லாம் புகழ்ந்து திரிவது தமிழை மலிவாக்குகின்ற

செயலேயன்றி பிறிதில்லை. இதனைக் கொள்கை எனக் கொண்டவர் வன்பரணர். தகுதியற்றவர்களைப் புகழ்வதற்குத் தமக்கு அவ்வாறு ஒரு நாவு அமையவில்லை என்றே கூறிவிடுகிறார் - 'பீடு இல் மன்னர் புகழச்சி வேண்டி, செய்யாக் கூறிக் கிளத்தல் எய்யாதாகின்று, எம் சிறு செந்நாவே' (புற : 148). இவரது இத்தகு மிகவன்மையான தொரு தன்மையின் காரணமாகவே இவர் 'வன் பரணர்' என்று அழைக்கப்பட்டிருத்தல் வேண்டும். தகுதியுடையார் என்று அறிந்தால் இயலாத நிலையிலும் நெடுந்தூரம் சென்று அவரை அணுகித் தமிழைப் பாடிப்பரவசமடைந்துள்ளனர் அவர்களில் பலர்.

ஏணிச்சேரி முடமோசியாரை இவ்வகையில் மிகவும் பாராட்டலாம். அவரது பெயரளவிலேயே முடமாகி அமைந்த உடல் ஊனம் கொண்ட ஒருவர் என்பது புலனாகிறது. ஒருவேளை மற்றவர்களைப்போல விரைந்து செல்லக் கூடாத காரணத்தாலோ என்னவோ, ஆய் என்ற பெருமை சான்ற வள்ளலை மிகவும் தாமதித்தே அடைகிறார். அதற்குள் பிறர் பலரும் ஆயைப் பாடித் திரும்பி விட்டனர். எல்லோருக்கும் முன்னரே பாடவேண்டிய ஒரு வள்ளலை காலந்தாழ்த்திக் கண்டேனே - என்று வருந்தி இயல்பாகவே முடமாகியிருந்த அவர் செவிடனாகவும், குருடனாகவும், ஊமையனாகவும் என்று முற்றுமாக ஊனமுற்றுப்போவேனாக என்று தம்மைத்தாமே சபித்துக் கொள்ளுகிறார். - "ஆழ்க என் உள்ளம் ; போழ்க என்நாவே ; பாழ் ஊர்க்கிணற்றின் தூர்க என் செவியே ; முன் உள்ளு வோனைப் பின் உள்ளினேனே" (புற : 132). மோசியின் இவ்வுரை நிச்சயம் அன்று புலவர் பலரையும் உலுக்கியிருக்க வேண்டும். வள்ளல்கள் எழுவரை அறிமுகப்படுத்துங்கால், 'கொல்லி ஆண்ட ஓரி', 'பெருங்கல் நாடன் பேகன்' என்பது போல் அவரவர் உரிமை கொண்ட இடச் சிறப்பால் வள்ளல்கள் அறிமுகப் படுத்தப்பட, வள்ளல் ஆயை அறிமுகப் படுத்துங்கால் மட்டும், 'மோசி பாடிய ஆய்' என்று புலவர் பாடிய பெருமையால் அறிமுகப்படுத்துவதை அறிகிறோம் (புற: 158). தக்காரையே பாடித் தமிழுக்குப் பெருமை சேர்த்தனர் சங்கச் சான்றோர். தமிழின் தகுதியால் தமிழைச் சார்ந்தோருக்கெல்லாம் பெருமை நிலையை உருவாக்கியிருந்தனர். அரசு விரோத செயல்களைச் செய்பவர்கள் யாராயிருந்தாலும் தண்டிக்கப்பட்ட முடியாட்சிக் காலமது. முரசுக் கட்டிலில் உறங்கிய பெருங் குற்றத்திற்காகவும் கூடப் புலவர் என்றதால ஒருவர் தண்டிக்கப்படாமல் விடப்பட்டார்- 'தமிழ் முழுதும் அறிந்திருந்த' ஒன்றே அதற்குக் 'காரணம் என்று கூறப்பட்டது' - "அறியாது ஏறிய என்னைத் தெறுவர; இருபாற்படுக்கும் நின் வாள் வாய் ஒழித்ததை அதுவும் சாலும் நல் தமிழ் முழுதறிதல்" (புற 50 : 8 - 10). அரசாணையே தமிழுக்கு வணங்கிய நிலை இது என்றே இதனைக் கொள்ளுதல் வேண்டும். தமிழ் எத்துணை உயர் தகுதியைப் பெற்றிருந்தது என்பது இதனால் புலனாகிறது. இத்தகையதொரு உயர் தகுதியினைத் தமிழருக்கு இன்றும் தர முயல்வது தமிழ்ப்புலவர்களின் கடமை அன்றோ ?

## கூட்டு முயற்சி

பண்டைத் தமிழ்ச் சான்றோர் 'சங்கம்' என்ற அமைப்பின் வழித் தமிழ் வளர்த்தனர் என்பது தமிழிலக்கிய வரலாற்றின் வழி விளங்குகிறது. 'சங்கம்' என்ற சொல்லுக்கே 'கூட்டு' அல்லது 'சேர்க்கை' என்று பொருள் உண்டு. இதனால் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் தமிழ் வளர்த்தது ஒரு கூட்டு முயற்சி என்பது தெளிவாகிறது. 'சங்கம்' என்ற அமைப்பிற்கு 'தமிழ் நிலை' என்ற பெயருமுண்டு. தமிழ் நிலை என்று பெயரமைந்ததிலிருந்தே சங்கமிருந்தோர் 'தமிழ் வளர்ச்சி' என்பது தவிர பிற நோக்கம் கொள்ளாது அங்கிருந்து செயல்பட்டனர் என்பது புலனாகிறது அரிதின் முயன்று வெளியிட்ட கண்டுபிடிப்புகளைப்போல், உயர்ந்த கற்பனைகளையும் சிறந்த சொற்றொ

டரையும் வைத்துச் செய்யுட்களைப் படைத்த புலவர்களும் தமது பெயர்களை வெளியிட்டுப் புகழ் பெற்றுத் தாம்வளர நினையாத நிலையில் இன்றும் அவர்களில் பலரின் பெயர்களை - 'செம்புலப் பெயல் நீரார் என்றும்', 'அணிலாடு முன்றிலார்', என்றும், அவர்கள் அமைத்த சொற்றொடர்களால் அறிகிறோம். தமிழ் வளர்வது ஒன்றே நோக்கமாக இருந்தது என்பது இதிலிருந்து புலனாகிறதல்லவா ? புறநானூற்றில் மட்டும் பெயர்களே காணப்படாத புலவர்களின் 14 பாடல்களைக் காணுகிறோம் - பாடல் எண்கள் 244, 256, 257, 263, 297, 307, 323, 327, 328, 333, 339, 340, 355, 361 ஆகியன. அவை ஒரு வள்ளலிடம் பரிசு பெற்றுத் திரும்பிய புலவரைப் பரிசில் பெறப் போகும் புலவர் காட்டின் நடுவழியில் காணுகையில் அவரைத் தாம் பரிசில் பெற்றுத் திரும்பும் வள்ளலிடம் ஆற்றுப்படுத்துவதாக அமைந்த ஆற்றுப்படை இலக்கியங்கள், புலவரின் கூட்டுமனப்பான்மையினை வலியுறுத்த வமைந்த சிறந்த கற்பனை நிகழ்ச்சிகளே ஆகும்.

பெண்ணின் எழில் முகத்தை முழு மதிக்கும் கூந்தலை அருவிக்கும் ஒப்பிடுவது போன்று அமைந்த உவமைகள் பொதுவாக அனைவருமே கையாளத்தக்க உவமைகளே என்று கொண்டாலும், சில அபூர்வமான உவமைகளும் சொற்றொடர்களும் கூட, ஒருவரால் முதல் முதலில் ஆராய்ந்து தேர்ந்து பயன் படுத்தப் பட்டிருக்க பிறபல புலவர்களும் சிறுமாற்றமுமின்றி அவற்றைப் பயன் படுத்தியுள்ளதை அறிகிறோம். எடுத்துககாட்டாக, நிலவொளியை வெண்ணிறமாகக் கொண்டு நெய்தலங்கானல் வெண் மணலை 'நிலவு மணல்' என்று குறிப்பது போன்றவை மிக அபூர்வமான உவமைகளே ஆகும். ஆனால் இவற்றைக் கூட இதே முறையில் பல புலவர்கள் பல இடங்களில் பயன் படுத்தியுள்ளது தெரிகிறது - 'நிலவு மணல் வியன் கானல்' என்று குறுங்கோழியூர் கிழாரும், (புற57.11) நிலவுக்குவித்தன்ன மோட்டுமணல்-என்று கண்ணம் புல்லனாரும் (நற்றிணை-159:3) வான் நிலா எக்கர் - என்று நல்லந்துவனாரும் (கலித்தொகை : 131 : 7) இன்னும் பலரும் குறிப்பதை அறிகிறோம்.

சொல்லிவைத்து எழுதியது போன்று விளங்கும் இக்குறிப்புகளை ஒருசேரக் காணும்போது பழந்தமிழ்ப் புலவாகளின் கூட்டு முயற்சியே வெளிப்படுகிறது ஒருவர் எழுதிய கருததை மற்றவர் கையாண்டால் தண்டனை விதிக்கின்ற எழுத்துரிமைப் பாதுகாப்புச் சட்டங்கள் (Copy Right Act) அக்காலத்தில் இல்லை. புதுப்பொருள் எதுவாயினும் நாளடைவில் பொதுப் பொருளாகும் நிலை இருந்தது. இதனால் ஒரு புலவரின் வாயிலிருந்து புறப்பட்ட சொல், பல புலவர் கையிலும தவழ்ந்து மிக அறிமுகமாகி மக்கள சமுதாயத்தில் ஐக்கியமாகிவிடும் நிலை விரைவில ஏற்பட்டது. புதிதாகத் தோன்றிய சொல்லுக்கு அல்லது தொடருக்கு மக்களிடையே மிகத்துரிதமான அறிமுகம் கிடைத்தது.

''யாழொடும் கொள்ளா பொழுதொடும் புணரா; பொருள் அறிவாரா ஆயினும் தந்தையர்க்கு; அருள் வந்தனவால் புதல்வர்தம் மழலை; என் வாய்ச் சொல்லும் அன்ன...''என்று வரும் அவ்வையின் பாடலில் (புற : 92 : 1 - 4) காணப்படும் யாழொலியினையும் மழலைச் சொல்லையும் பொருததியமைத்த செய்தியினைக்-''குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்; மழலைச் சொல கேளாதவர்'' (குறள் எண் 66 ) என்று வரும் வள்ளுவர் வாய்மொழியிலும் காணுகிறோம். இவ்வாறே வள்ளுவர் பெருமானை நினைத் ததும் கண்முன் வருகின்ற, பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க; நாகரிகம் வேண்டுபவர் - என்ற அவரின் கண்ணோட்டம் - ''நட்டார் கொடுப்பின் நஞ்சும் உண்பர்

நாகரிகர்'' - என்று நற்றிணையிலும் அதே கருத்தில் பயின்று வருவதை அறிகிறோம். (நற்றிணை 355 : 6 - 7). அக்காலத்தில் பேச்சுரிமை அல்லது எழுத்துரிமைப் பாதுகாப்புச் சட்டம் என்பது போல் நிலவியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான் - ''எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு'' - என்பதே. தடையின்றி எப்பொருளையும் சொல்லையும் யாரும் பயன் படுத்தலாம் என்ற உரிமை தமிழைப்பழகு மொழியாக்க வாய்ப்பளித்தது. இலக்கியத்திற்கும் சிறிது இடைவெளியற்ற நிலையில் தமிழ்மக்களிலக்கியமானது. நல்ல தமிழ்ச்சொல் அல்லது தொடரொன்று பிறந்து விட்டால் யாரும் பயன்படுத்தலாம் என்ற முன்னோரின் விட்டுக் கொடுக்கும் பரந்த மனப்பான்மை நிலையிலேயே தமிழுக்கு நன்மை இருந்தது. எல்லாம் தமிழுக்கே என்ற உயர் நோக்கம் முன்னோரின் இந்த கூட்டுச் செயல்பாட்டிற்குத் தூண்டியது. இதனால் தமிழ் வளர்ந்தது. புலவரின் இச்செயல்பாடுகளைக் கருதியே அவ்வழிச் சென்று அரசரும் தமிழ் வாழ உதவினர். தாம் செலவிட்ட பொருளுக்கு ஈடாகத் தமிழின் பெயரால் தமது புகழ் நிறுவ அவர்களும் எண்ணியிருந்தால்-மதுரைக் காஞ்சி இருந்த இடத்தில் ஒரு பாண்டியன் காஞ்சியும் பாடினப்பாலை இருந்த இடத்தில் ஒரு சேரன் பாலையும் இருந்திருக்கும். தமிழில் புறநானூறு போலவே விளங்கின வடநாட்டில் 'இராசோ' இலக்கியங்கள் எனப்பட்ட இராஜஸ்தானி இலக்கியங்கள். அரசரைச் சார்ந்து வாழ்ந்த சாரணக் கவிஞர் எனப்பட்ட புலவர்களால் புனையப்பட்டவை அவை. அவை ஒவ்வொன்றும் பிரித்வி இராஜ இராசோ, குமாண இராசோ என்று அவ்வப்புலவர்களை ஆதரித்த அரசர்களின் பெயர்களை நேரடியாகத் தாங்கி நிற்கின்றன. இராஜபுத்திர அரசர்களுக்கும் மேலாகத் தமிழுக்காகப் பொருளை வழங்கியவர்கள் முத்தமிழ் மன்னர். ஆயினும் மதுரைக் காஞ்சி என்றும், 'பட்டினப்பாலை' என்றும் தமிழ் மணத்த இடங்களின் பெயரால் இலக்கியங்கள் நின்றனவே தவிர அரசர் ஒருவர் பெயரால் இலக்கியம் காணப் படவில்லை. தமிழ்ப்புலவர்களைப் போலவே, தாமல்ல; தமிழே உயரவேண்டும் என்ற அரசர்களின் உயர்ந்த மனப்பான்மையே இதற்குக் காரணம் எனலாம். தம்மை வளர்த்துக் கொள்ள எண்ணும் குறுகிய நோக்கமின்றிப் புலவர்கள் பாடுபடுங்காலையே தமிழ் வளரும்.

## நாட்டுப் பற்று

நாட்டுப் பற்றும், மொழிப்பற்றும் இணைந்து செல்வன. இரண்டையும் இணைத்துப் பாடிப் பெரும் வெற்றி ஈட்டியவராகப் பிற்காலத்தில் பாரதியார் நம்முன் நிற்கிறார். தமிழ் வளர்த்து பொற்காலம் கண்ட முற்காலப் புலவர்கள் - கோனறம், குடிமாட்சி, பொருளாதாரம் என்று பல துறைகளில் கருத்தைச் செலுத்திப் பாடல்களைப் பாடினர். தமிழ் வளர இவற்றின் சிறப்பு அடித்தளம் என்பதை உணர்ந்திருந்தனர் அவர்கள். சமுதாயப் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் பழம் புலவர்கள் அக்கறை மிகக்காட்டினர். மும்மன்னர்கள் பூசல் கொண்டு பிரிந்திருந்தபோது, சந்தி செய்விப்பதில் முனைந்தனர். எடுத்துக் காட்டுகள் பலவற்றை இவ்வகையில் நாம் சுட்டிக் காட்டலாம். குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்த காட்சி கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் இரு பெருந் தெய்வங்களையே ஒருங்கிருக்கக் கண்டது போல மகிழ்ச்சி கொள்ளுகிறார் - அவர்களது ஒற்றுமை என்றும் நிலைக்க வேண்டும் என்று வாழ்த்துகிறார் - ''இன்றே போல்க நும் புணர்ச்சி வென்று வென்று அடுகளத்து உயர்க'' என்பது அவரது வாழ்த்தாக அமைந்தது- (புற. 58). அவ்வாறின்றி இது போன்ற மன்னரைப் பிரித்தே வைத்து ஒருவரைக் குறைத்துப் பிறரிடம் பேசிப் பொருள் பார்க்க வேண்டும் என்று புலவாகள் எண்ணி யிருந்தால் தமிழ் வளர்ந்திருக்கவும் முடியாது. பொற்காலமொன்றினைக் கண்டிருக்கவும் முடியாது.

பொதுமக்கள் நலத்தில் ஆர்வம் காட்டினர் தமிழ்ச்சான்றோர். நாட்டுவளம் நீர்வளத்தைச் சார்ந்தது என்பதை அறிந்த நிலையில், நீரினை அணைகட்டிப் பாது காக்க வேண்டிய பொதுமக்கள் நலன் நாடும் திட்டத்தைப் புலவர்குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு எடுத்துரைத்ததை இதுபோன்ற புலவர் தொண்டிற்குச் சான்றாகக் காணுகிறோம் - "தட்டோர் அம்ம இவண் தட்டோரே; தள்ளாதோர் இவண் தள்ளாதோரே" (புறம் : 18 - 29 - 30)

தீமைகள் அறியாத நல்ல சமுதாயம் அமைந்திட தனிமனிதன் சீர்பட வேண்டிய அவசியத்தை நன்குணர்ந்தோராய் அறங்கள் பலவற்றை அயராது எடுத்தோதினர். நீதி நூலாக அல்ல; பண்டைத் தமிழ் வரலாற்று விளக்கம்போல் எழுந்தது புறநானூறு. தொடர்ந்து பல செய்யுட்கள் கொண்ட ஒருபகுதி ஒரு அறநூல் போலவே அதில் விளங்குவதை நுண்ணிதின் ஆராய்ந்தால் உணரலாம் - அறநூல்களின் தலைநூலாம் குறளில் அமைந்த இறைமாட்சி, ஊக்கமுடைமை, மக்கட்பேறு, நட்பு, ஈகை, அறன் வலியுறுத்தல், பெரியோரைத் துணைக்கோடல் என்று தொடர்ந்த அதிகாரங்களை போலவே ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பாடல்கள் நிரல்பட வைக்கப்பட்டிருப்பதை புறநானூற்றில் காணலாம்.-

புறம் 186 — நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னர் உயிர்த்தே மலர்தலை உலகம். (இறைமாட்சி)

புறம் 187 — எவ்வழி ஆடவர் நல்லவர்
அவ்வழி வாழி நிலனே. (ஊக்கமுடைமை)

புறம் 188 — மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை தாம வாழும்நாளே. (மக்கட்பேறு)

புறம் 189 — "செல்வத்துப் பயனே ஈதல்" (ஈகை)

புறம் 190 — "எலி முயன்றனராகி உள்ளதம்
வளன் வலியுறுக்கும் உளம் இலாகியரோடு
இயைந்த கேண்மை இல்லாகியரோ". (நட்பு)

புறம் 191 — யாண்டு பலவாக நரையில வாதல்
யாங் காகியர்? என வினவுதிர் ஆயின்
... ... ... ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர் யான் வாழும ஊரே. (பெரியோரைத் துணைக்கோடல்)

புறம் 192 — யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தரவாரா. (அறன் வலியுறுத்தல்)

புறம் 193 — ஒருவன் ஆட்டும் புல்வாய் போல
ஓடி உய்தலும் கூடும்மன்
ஒக்கல் வாழ்க்கை தட்கும்மாகாலே. (சுற்றந்தழால்)

புறம் 194 — இன்னாது அம்ம இவ் உலகம்
இனிய காண்க இதன் இயல்பு உணர்ந்தாரே. (இனியவை கூறல்)

புறம் 195 — நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின். (இன்னா செய்யாமை)

புறம் 196 — நாண் அலது இல்லாக் கற்பின் வாணுதல்
மெல் இயல் குறுமகள் உள்ளிச்
செல்வல் அத்தை ; சிறக்க நின் நாளே. (வாழ்க்கைத் துணை நலம்)

புறம் 197 — உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளோம்
நல் அறிவு உடையோர் நல்குரவு
உள்ளுதும் ! பெரும !. ('அறிவுடைமை')

புறம் 198 — "முன்னோர் போல்க இவர்
பெருங்கண்ணோட்டம்". ('கண்ணோட்டம்')

புறம் 199 — "கடவுள் ஆலத்துத்தடவுச் சினைப் பல் பழம்;
நெருநல் உண்டனம்) என்னாது பின்னும்.
செலவு ஆனாவே புள்ளினம் ;
அனையர் வாழியோ இரவலர். (இரவச்சம்)

புறம் 200 — "பூத்தலை அறாஅப்புனை கொடி முல்லை
நாத்தழும்பு இருப்பப்பாடாது ஆயினும்
கறங்கு மணி நெடுந்தேர் கொள்க எனக் கொடுத்த" (சான்றாண்மை)

வரிசையாக மேற்சொன்ன நீதிகளைக் கடைப்பிடித்து வாழ்ந்தால் மொத்தமும் அதுவே சான்றாண்மை என்று கூறத்தகுந்தது போல் சான்றாண்மையினை இறுதியாகக் கொண்டவாறு பதினைந்து பாடல்கள் தொடர்ந்து அறங்கூறி நிற்பதைக் காணுகிறோம்.

இவ்வாறு சமுதாயம் தழுவிய பழந்தமிழர் தொண்டே அவர்களது பெருமையினை மக்களிடையேயும் அரசு வட்டாரத்திலும் மிக உயர்த்திக் காட்டியது. பழந்தமிழ்ப் புலவர்களாகிய இச் சான்றோர் பலர் இயல்பாகவே ஒவ்வொரு பிற துறைகளோடு தொடர்பு கொண்டவர்களாக விருந்தனர் என்பது அவர்கள் பலருக்கமைந்திருந்த பெயர்களிலிருந்தே புலனாகியது. கலைத்துறையில் ஈடுபட்டிருந்தோராய் 'கூத்தர்' என்ற பெயரால் மதுரைத் தமிழ்க் கூத்தனார் என்றும், தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார் என்றும், தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளார் என்றும், அமைந்த புலவர் பெயர்கள் காணக் கிடைக்கின்றன. வணிகத்துறையில் ஈடுபாடு கொண்டோராய் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், பண்ட வாணிகன் இளந்தேவனார் என்று பெயருடையோர் பலரையும் காணுகிறோம். மருத்துவத் தொடர்புடையராய் உறையூர் மருத்துவன் தாமோதரன் ; நோய் பாடியார் போன்ற பெயர்கள் காணப் படுகின்றன. தொழில் துறையில் தொடர்பு கொண்டோராய் இமமென் கீரனார், நக்கீரர், கழார்க்கீரன், அந்தி இளங் கீரனார் என்று பெயரமைந்த புலவர்கள் பெயர்களையும். பொன் வேலைத் தொழில் தொடர்புடையோராய், தங்கால் பொற்கொல்லனார் ; மதுரைப் பொன் செய் கொல்லன் வெண்ணாகனார் ; என்று புலவர் பெயர்களைக் காணுகிறோம். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ; பாண்டியன் அறிவுடை நம்பி என்று அரசர் பலரையும் புலவராகக் காணுகின்றோம். ஐயூர் முடவனார், தங்கால் முடக் கொற்றனார், ஏணிச்சேரி முடமோசியார் என்று பெயர்களில் வைத்தே உடலூனமுற்றோராய்க் காணப் படுகின்ற புலவர் பெயர்களும் உள்ளன. இவர்களும் போர் வீரர்களாகவிருந்து போரில் அவயவங்களை இழந்த நிலையில் ஓய்வு பெற்ற படைவீரர் ஆதல் வேண்டும் எனத் தெரிகிறது. அதுவே அவர்களின் நாட்டுப்பற்றும், சமுதாய உணர்வும் மிகுந்திருந் தமைக்குக் காரணம் எனலாம். பலதுறை அறிவு தமிழ்ப்புலவர்கள் சமுதாயத்தோடு

தொடர்பு கொள்ளவும், அதனால் தமிழ் வளரவும் வாய்ப்பினை நல்கியது என்று தெரிகிறது. இதனாலேயே பிற்கால நிலையில் பாரதியார் 'போன்ற புலவர்கள், ''நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்குழைத்தல் இமைப் பொழுதும் சோராதிருத்தல்'' என்று ஊக்கமுடன் முழங்கினர் என்பது தெளிவாகிறது.

## பொருளோ பெரிது?

'பொருளில்லாதார்க்கு இவ்வுலகமில்லை' என்பதை அறியாதவர் அல்லர் பழந் தமிழ்ச்சான்றோர். ஆயினும் பொருளே எல்லாம் என்று பொருளுக்கு ஏங்கியவர் அல்லர் அவர்கள். 'வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கை' என்று அவர்களது வாழ்க்கை குறிக்கப்படுகிறது (புற : 47 : 6). பரிசில் என்பது கேட்டுப் பெறுவதன்று, உவந்து ஒருவர் தருவது. உவந்து கொடுத்தனர்; முகந்து கொடுத்தனர் புரவலரும். அப் பரிசில்களையும் எவரிடமும் எல்லாக் காலத்தும் பெறுவதென்றல்லாமல், பரிசில் பெறத் தகுந்தவர் இவர் என அவர்கள் வகுத்த வள்ளல்களையே அணுகிப் பரிசில்களைப் பெற்றனர். 'இவர்களே - வள்ளியோர் - என்று இலக்கியங்களில் குறிக்கப் படுவதை அறிகிறோம் (புற :47). இத்தகு வள்ளல்களைப் பலநாள் தேடி அலைந்து காணவேண்டி யிருந்தது. அத்தகைய ஒருவர் கிடையாத வரையில் வருந்தும் பசியையும் பெரிதென் றெண்ணாமல் காத்திருந்தனர். இதனாலேயே பசி உணர்வை இன்னதென்று உணர வேண்டிய நிலை அவர்களுக்கு இருந்தது. பசியினைப் பிணி என்றும் பகை என்றும் வெகுவாக வெறுத்துப் பாடி பசியுணர்வைப் புலவர்கள் நன்கு உணர்த்தியுள்ளமையினைக் காணுகிறோம் - 'சேர்ந்தோர் பசிப்பகை கடிதலும் வல்லோன்' (புற 400 : 17) பசிப்பகைஞர் (புற 180 : 7) பசிப்பிணி மருத்துவன் (புற : 173 : 11). பெருஞ்சித்திரனார் போன்ற புலவர்கள் வறுமையில் துவண்டமைக்குப் பிடிவாதமான அவர்களின் இத்தன்மானக் கொள்கையே காரணம் எனலாம். தன்மானங் குன்றாத நிலையில் புலவர்கள் பரிசில் பெற்று மீண்ட நிகழ்ச்சிகள் பலவற்றைஇலக்கியங்களில் காண்கிறோம்.

சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக்கண்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் *பரிசில் பெறச் செல்கிறார். அவன் புலவரின் தகுதி கருதி* அப்போதுதான் போருழக்கித் திரும்பிய, கொம்பின் இரத்த வடுக்கள் மாறாத களிற்றினைப் பரிசாகத் தருகிறான். பரிசாக அளிக்கப்பட்ட களிறு வருகிறது. புலவர் சற்று நடுங்கி ஒதுங்கினார். பரிசில் நிறைவிலாமையால் புலவர் வெகுளுகிறார் என்றெண்ணிப் பிறிதொரு களிற்றினைத் தருகிறான் வளளல். இவ்வாறு பரிசில்களால் நாணச் செய்வது கொண்டு, இனி பசி வாட்டினாலும் பரிசில்பெற அவ்விடம் வருவதில்லை என்று தீர்மானித்துச் செல்லு கிறார், புலவர்:-

''கொன்று சினம் தணியாப் புலவு நாறு மருப்பின்
வெஞ்சின வேழம் நல்கினன் அஞ்சி
யான் அது பெயர்த்தனெனாக, தான் அது
சிறிது என உணர்ந்தமை நாணி, பிறிதும் ஓர்
பெருங்களிறு நல்கியோனே அதற்கொண்டு
இரும்பேர் ஒக்கல் பெரும்புலம் புறினும்
துன் அரும் பரிசில் தரும் என
என்றும் செல்லேன், அவன் குன்று கெழு நாடே''

(புற 394)

இதே வேளைத் தகுதியற்றவரை பொருட்குவைதருவேன் என்று கூறினும் பாடுவதில்லை பழந்தமிழ்ப் புலவர். உலோபி ஒருவன் அவ்வையைத் தன்னைப் பாடுமாறு கேட்டபோது அவர் கூறினாராம். ''மூன்று அரசர்களையும் அவர்களது இளவல்களையும் பாடிய

எனது இந்தப் பாமணக்கும் வாயினால் என்னையும் பாடுக என்று கேட்டு விட்டாய்; களிறுகள் உழக்குகின்ற போர்க்களத்தை நீ கண்டதாவது உண்டா? இசை உணர்வு உண்டா காதல் ஈடுபாடு உண்டா? புலவர் மாட்டு இரக்கங் கொண்டதுண்டா? உண்ணவும் மாட்டாய். உண்ணக் கொடுத்ததுமில்லை நீ. அடர்ந்த காட்டின் நடுவே உயர்ந்து வளர்ந்த மரத்தின் எட்டாக் கிளையில் உள்ள ஒரு கனிபோல ஒருவர்க்கும் பயனின்றி வாழ்ந் தாயே. உன்னை எவ்வாறு பாடுவேன்'' - இவ்வாறு கூறினாராம் அவ்வை:—

'' மூவர் கோவையும் மூவிளங் கோவையும்
பாடிய என்றன் பனுவல் வாயால்
என்னையும் பாடுக என்றனை எங்கனம்
பாடுதும் யாம்? களிறு படு செங்களம்
கண்ணின் காணீர் வெளிறு படு நல் யாழ்
விருப்பமாய்க் கேளீர்-
இலவ வாய்ச்சியர் இளமுலை புல்லீர்
புலவர் வாய்ச்சொல் புலம்பலுக்கு இறங்கிலீர்
ஊடீர் உண்ணீர் கோடீர் கொள்ளீர்
ஓவாக் கானத்து உயர் மரம் போலத்
தாவாக் கனியில் தோன்றினீரே'' (அவ்வையார் - தனிப்பாடல் திரட்டு : 67)

புலவரின் இத்தன்மானக் கொள்கையின் காரணமாகவே கோல் பிடித்து ஆணை செலுத்திய காவலர் புணவர் கைப்பிடித்துக் குலவிய நிலை நிலவியது. சேரமான் செலவக் கடுங்கோ வாழியாதன் ஒருகால கபிலர் கைப்பற்றி மெல்லியவால் நும்கை என்றானாம். (புற : 14) தன்னைப் போலவே சிறப்புடன் தன்னை அணுகி வந்த புலவரைப் பேணுதல் வேண்டும் என்று தமது மனைவிக்கே ஒரு அரசன் ஆணை யிட்டானாம் - தன்மனைப் பொன்போல் மடந்தையைக்காட்டி - இவனை என் போல் போற்றென்றானே (புற : 395). இவ்வரிசை நடந்தது மதுரை நக்கீரருக்கு, அரசனின் இந்த அன்பில் மெய் சிலிர்த்துப் போகிறார் அவா. அவனை மறப்பதில்லை; பிறரை நினைப்பதுமில்லை என்று உறுதி எடுக்கிறார். 'அவன் மறவேனே பிறர் உள்ளேனே' (புற : 395).

## நிறைவுரை

இவ்வாறு பல உயர் நெறிகளைக் கடைப்பிடித்து நமது முன்னோர் தமிழ் வளர்த்துள்ளனர். அவர்கள் ஒரு நிலையில் பொற்காலம் கண்டது, அவர்கள் தமிழ் வளர்க்கவென்று முறையாகக் கடைப்பிடித்த நெறிகளுக்குக் கிடைதத வெற்றியேயாகும். அவர்கள் வழிநின்று தமிழ் வளர்த்தால் இன்னொரு பொற்காலத்தினை இன்றும் காணலாம் தமிழ்ப்புலவர். தமிழ்ப் புலவர் முதல் நிலையில் தமது செயல்பாட்டால் தமிழுக்கு உயர் தகுதியினைச் சமுதாயத்தில் உருவாக்குதல் வேண்டும் - வெறும் வாய்ச் சொல்லில் கூடுவதன்று அது. சமுதாயத்தில் பிறபல துறைகளிலும் தமிழ்ப்புலவர் அக்கறை கொள்ளுதல் வேண்டும். மக்களின் மனத்தில் தமிழுககு நிலையான இடத்தை உருவாக்கியே அவர்கள் தமிழை விரும்பிப் போற்றச் செய்தல் கூடும. தமிழே எல்லாம் என்ற நிலையில் ஒருவருக்கு ஒருவர் விட்டுக் கொடுத்து ஓர் குலமாய் ஓர் இனமாய் அணி வகுததுச் செல்லுதல் வேண்டும் தமிழ்ப் புலவர். இவைகளே தமிழ் வளர்க்க நம் முன்னோர் கடைப்பிடித்த உயர் வழிகளாம். அவ்வழிகளின் வழியே இன்றும் புல்வர் சென்றால், தமிழினி மெல்லச் சாகும் என்ற நிலை போய், தமிழ் ஓங்கி வளர்ந்து ஒரு பொற் காலத்தைக் காணும் என்பதில் ஐயமேதுமில்லை.



# வள்ளுவர் கண்ட பெண்மை

—டாக்டர் லீ. ரூத்ஜாய்.

பெண்மை என்னும் சொல் பெண் தன்மை, நிறை, நலம், பெண் பிறப்பு, பெண் இன்பம், அமைதித்தன்மை என்னும் பல பொருள்படும்[1]. பெண்மை என்ற சொல்லுக்கு விரும்பப்படும் தன்மை என்னும் பொருளும் உண்டு. இதனடிப்படையிலேயே விருப்பம் என்னும் பொருளைத்தரும் பெட்பு, பெண்டு, பேண், முதலான சொற்களும் தோன்றியுள்ளன. விரும்பப்படும் தன்மையாவது மென்மை[2]. பெண்மை என்பது உடலளவில் நிற்பது என்பது தெ. பொ. மீ-யின் கருத்து[3]. திரு. வி. க. பெண்மையாவது அடக்கம், பொறுமை, தியாகம், இரக்கம், அழகு, தொண்டு, முதலிய அமைந்த ஒன்று என்பார்[4]. எனவே பெண்மை என்பது வடிவழகோடு குணவழகையும் புலப்படுத்துவது என்று கொள்ளலே சிறப்புடைத்தாகும். வள்ளுவர் பெண்டிர்தம் வடிவழகையும் குணவழகையும் தருகின்றார்.

குறளில் ஒரு தலைவன் தலைவியின் வடிவத்தை வடிக்கின்றான்.

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு[5].

தளிர் நிறம், முத்துப்பல், நல் நாற்றம், வேற் கண், வேய்த்தோள் என்பது தலைவியின் வடிவத்தை ஓரளவு வடித்துக் காட்டுகிறது. இங்கு அன்னத்தின் தூவியினும்[6], அனிச்ச மலரினும்[7] மென்மை வாய்ந்த பெண்களுக்கு மென்மையும் அழகும் வாய்ந்த உவமைகளைக் கையாளும் வள்ளுவர் அவர்தம் கண்களுக்கு வேலினை உவமை கூறுவது சிந்தித்தற் குரியது. கண்கள் வேல் போன்று கூர்மையினை உடையவை என்பது மட்டுமல்ல இதன் பொருள். வேல் போன்று பார்ப்போரை, குறிப்பாகக் காதலரை வருத்தும் தன்மையுடையது என்பதே இதற்குப் பொருத்தமான பொருளாகும். கண்கள் உள்ளத் துணர்வுகளைக் காட்டுகின்ற காரணத்தால் காதலர்க்கு அவை பலவகையிலும் தோன்றுதல் இயல்பு. மருண்ட பார்வையுடைய மான் போன்ற மகளிர் கண்கள் காதலர்கத் துன்பம் தருகின்ற போது கூற்றமாகவும்[8], வருத்தும் தெய்வமாகவும்[9], தோன்றுகின்றன. எனவே, அவை நோய் நோக்கமாகவும், அந்நோய் தீர்க்கும் மருந்தாகவும் காதலர்க்கு அமைகின்றன[10].

---

1. பக்கம் - 700, கழகத் தமிழ் அகராதி.
2. பக்கம் - 543, ‘பெண்மை’ - திருநாவுக்கரசு முதலியார், செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு - 9.
3. பக்கம் - 137 வள்ளுவரும் மகளிரும் - தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்.
4. பக்கம் - 20, பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை திரு. வி. கலியாண சுந்தரனார்.
5. குறள், 1113.
6. Ibid, 1120.
7. Ibid, 1120, 1111.
8. Ibid, 1083, 85.
9. Ibid, 1082.
10. Ibid, 1091.

இது போன்றே நகில்[11], நுதல்[12], தோள்[13], முகம்[14], நடை[15], அடி[16]. ஆகிய வற்றின் வருணனைகளும் காணப்படுகின்றன. பெண்களைக் குறிப்பிடும் அடைமொழி களும்[17], உறுப்புக்களின் நலன்கருதி பயன் படுத்தப்படுவதைக் காணலாம். மேலும் பெண்மை, மகளிர், பணிமொழி போன்று பெண்களைக் குறிப்பிடும் சொற்களும்[18], பெண்டிர்தம் மென்மையினையும், இனிமையினையுமே உணர்த்துகின்றன.

புறத்தால் அல்லது தோற்றத்தால் மட்டும் பெண்மை அமைவதில் பயனில்லை. வரைவின் மகளிரும் புறத்தோற்றத்தில் பெண்தன்மை உடையவர்தாம். ஆனால் பெண் மைக்குரிய பண்புகளில்லாமையால் பெண்ணியற்கை மட்டும் உடையவர்கள் என்னும் பொருளில் 'பெண்ணியலார்'[19] என்று இகழப்படுகின்றனர். மேலும் 'பயன்' தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர்[20], பொருட் பெண்டிர்[21], 'புன்னலம் பாரிப்பார்[22], போன்ற பதினொரு தொடர்கள்[23] அவர்தம் அன்பின்மையையும், பண்பின்மையையும் வெளியிடுகின்றன.

இனி வள்ளுவர் காட்டும் பெண்மையின் பண்புகள் பற்றிக் காண்போம். பெண் என்பதற்கு இலக்கணம் வகுக்கும் வள்ளுவர்,

> தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்[24].

---

11. Ibid, 1087. 12. Ibid, 1088, 1123. 13. Ibid, 1105, 1106.

14. Ibid, 1116, 1117, 1118, 1119. 15. Ibid, 1098. 16. Ibid, 1120.

17. காம்பேர்தோட் பேதை, குறள், 1272 : தோட்டார் கதுப்பினாள், Ibid, 1105.
தொடலைக் குறுந்தொடி, Ibid, 1135. : ஒண்தொடி, Ibid, 1101.
நன்னுதலாள், Ibid, 908. : பூவன்ன கண்ணார், Ibid, 1305.
மலரன்ன கண்ணாள், Ibid, 1119, 1142 : திருநுதல், Ibid, 1123.
கனங்குழை, Ibid, 1081. : அணியிழை, Ibid, 1102.
சேயிழை, Ibid, 1110. : மாணிழை, Ibid, 1114.
ஆயிழை, Ibid, 1124 : வேலுண்கண் வேய்த்தோளவள், Ibid, 1113.

18. மாதர், பெண், பெண்டிர், பெண்டகை, பெண்டகைப் பேதை, பேதை, மடவார்,மடந்தை, அரிவை, மடவரல், காரிகை, இல்லாள், இலலவள், மனை, அன்னை, செவிலி, ஒருமை மகளிர்.

19. குறள், 1311. 20. Ibid, 912.

21. Ibid, 913. 22. Ibid, 916.

23. பொருட்பொருளர், Ibid, 914; வரைவிலா மாணிழையார், Ibid 919; பொருள் விழையும் ஆய்தொடியார், Ibid, 911 ; மாய மகளிர், Ibid, 918 ; இருமனப் பெண்டிர், Ibid, 920 ; பிற நெஞ்சிற் பேணிப் புணர்பவர், Ibid, 917 ; பொது நலத்தார், Ibid, 915 ; பரத்தை Ibid, 1311.

24. குறள், 56.

என்கிறார். இதில் தற்காத்தல், தற்கொண்டானைப் பேணுதல், தகைசான்ற சொற் காத்தல், சோர்விலாமை என்று பெண்களுக்குரிய அடிப்படைப் பண்புகளில் நான்கு பற்றிக் குறிப்பிடுகின்றார்.

### தற்காத்தல்

கற்பு நெறியினின்றும் வழுவாமல் தன்னைக் காத்தல். இது பெண்களுக்குரிய இன்றியமையாப பண்புகளில் ஒன்று. ஒருவன் அடையும் பொருள்களி லெல்லாம் கற்புடைய மனைவியைக் காட்டிலும் மேலான பொருள் வேறில்லை[25]. கற்பென்னும் மாண்பு பெண்ணிற்குப் பெண்மையின் சிறப்பினை அளிக்க வல்லது. விலைமகளிருக்கும் குலமகளிருக்கு மிடையே யுள்ள அடிப்படை வேறுபாடுகளில் இதுவுமொன்று.

தன்னைக் காத்துக் கொள்ளும் பெண்டிர் கணவனைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றி வழிபடுவர், பிற தெய்வங்களை வழிபடார். சிலம்பில், தேவந்தி கண்ணகியிடம் சோமகுண்டம், சூரிய குண்டம் துறை மூழ்கிக காமவேள் கோட்டத்துச் சென்று வழி படுமாறு கூற, 'பீடன்று'[26] என்று மறுத்துரைப்பதினையும் காணலாம். இங்ஙனம் தெய்வம் தொழாது கொழுநன் தொழுதெழும் பெண்கள் இயற்கையை ஏவல்கொள்ளும் நிலையினை அடைவர்.

> தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை[27].

இதனால் கற்புடைப் பெண்டிர் இல்லிற்கு மட்டுமன்றி உலகிற்கும் இன்றியமையாதவர்கள் என்பது போதரும். மேலும் இக் கற்பே பெண்களுக்குத் தெய்வ நிலையையும், ஆற்றலை யும் கொடுக்கிறது. எனவே தங்கள் கணவரை வழிபடும் பெண்கள் புத்தேளிர் வாழுல கின்கண் அவரால் பெருஞ்சிறப்பினையும் பெறுவர்[28] . என்று கூறுகிறார் வள்ளுவர்.

### தற்கொண்டானைப் பேணுதல்

தற்கொண்டானைப் பேணுதல் வள்ளுவர் இரண்டாவதாகப் பெண்டிர்க்கு வகுக்கும் இலக்கணம். இதற்குப் பரிமேலழகர் விளக்கம் கூறுகையில் தன்னைக் கொண்டவனை உண்டி முதலியவற்றால் பேணுதல் என்று குறிப்பிடுகின்றார். இதற்கு அரியதொரு விளக்கமாக அமைகின்றது காமத்துப் பால். காமத்துப்பாலின்கண் ஒரு தலைவி, காதலர் தன் நெஞ்சினுள்ளே உறைகின்ற காரணத்தினால் அவரை வெப்பம் வருத்து மென்று கருதி மிகச் சூடாக அருந்துவதற்கும் அஞ்சுகின்றாள்.

> நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
> அஞ்சுதும் வேபாக் கறிந்து.[29]

இக்குறள் காதலன் மாட்டுள்ள அளவுகடந்த அன்பினைத் தெற்றென எடுத்துக் காட்டுகிறது. மேலும் ஓரிடத்தில்[30] இத்தகையதோர் அன்பின் நிலை சித்திரிக்கப் படுவதினைக் காணலாம்.

---

25. Ibid, 54. 26. சிலம்பு, 9 : 64. 27. குறள், 55.
28. Ibid. 58. 29. குறள், 1128. 30. Ibid, 1127.

**தகை சான்ற சொற்காத்தல்**

தன் கணவனுக்கும் தனக்கும் புகழ் நீங்காமல் காத்தல் மூன்றாவது பண்பு. இப்பண்பின் விளக்கத்தினையும் காமத்துப்பாலில் காணலாம். தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றியிருக்கவும தோள்கள் மெலிந்து தொடிகள் கழல, தன் உயிர்க்குயிரான தோழி தலைவனைக் கொடியர் என்று நோகின்றாள். இதனைப் பொறுக்க வியலாது வருந்துகின்றாள் தலைவி.

தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக் கூறல் நொந்து[31].

பிரிந்த தலைவனை ஊரிலுள்ளோர் பழித்துக் கூற தலைவி வருந்தும் இடங்களும்[32] குறளின்கண் காணப் படுகின்றன. இவை யாவும் தலைவன் புகழுக்குச் சிறிதும் இழுக்கு நேர்தல் ஆகாது என்று துடிக்கும் பெண்டிர்தம் இயல்பினையே பறைசாற்றுகின்றன. இதனாற்றான் புகழை விரும்பும் மனைவி இல்லாதவர்க்குப் பகைவர் முன் ஆண்சிங்கம் போல் திகழ இயலாது[33] என்று அறுதியிட் டுறுதியாக உரைக்கின்றார் வள்ளுவர். இது மனைவியே ஒருவர்தம் புகழின் வாயிலாகவும் அமைகின்றாள் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

தவிர, தனக்குரிய புகழினின்றும் நீங்காமல் தன்னைக் காத்துக் கொள்ளும் தலைவியையும் ஓரிடத்துக் காட்டுகிறார் வள்ளுவர்.

எள்ளின் இளிவாமென் றெண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு[34].

தன்னை மறந்து சென்றாரை வாயில் மறுத்தால் பிறர் எள்ளுவர். அதனால் நாணும் நிறையும் இழக்க வேண்டியது வரும். எனவே தான் வாயில் நேர்வதாக வாயிலாக வந்த தோழி கேட்பச் சொல்கிறாள தலைவி. இங்ஙனம் தமிழர்தம் பண்பாட்டிற் கேற்ப ஒழுகி இல்லறத்தை நல்லறமாக மாற்றி, தம் குடும்பத்தின் புகழை நிலைநிறுத்தும் மங்கையர்தம் சால்பு போற்றுதற்குரியது.

**சோர்விலாமை**

மேற்கூறிய நற்குண நற்செய்கைகளை உறுதியுடன் கடைப்பிடித்தலையே 'சோர்விலாமை' என்னும் தொடர் குறிப்பிடுகிறது மனையறத்துக்குத் தக்க நற்குண நற்செய்கைகள் இல்லாளிடத்து இல்லையென்றால் அவ்வில் வாழ்கை செல்வத்தால் எத்துணைதாம் சிறப்புடைதாயிருப்பினும் பயனில்லை[35].

நற்குண நற்செய்கைகளில் விருந்தோம்பலும் ஒன்று. இல்வாழ்வான் ஆற்ற வேண்டிய ஐந்து அறங்களில்[36] விருந்தோம்பலும் ஒன்று. இது இல்லாளால் மேற்கொள்ளப் படுவது விருந்தினரைப் போற்றி வாழாமை ஒருவனுக்கு வறுமையுள் வறுமையாகக் கருதப்படும்[37]. இல்லின்கண்ணிருந்து பொருளீட்டி வாழ்வதெல்லாம் விருந்தினரைப் பேணி அவர்க்கு உதவிசெய்தற் பொருட்டாகும்[38]. இல்லாள் இதுபோன்ற நற்குண நற்செய்

31. Ibid, 1236. 32. Ibid. 1220, 1130, 1219, 1129.
33. Ibid, 59. 34. Ibid, 1298. 35. Ibid, 52.
36. Ibid, 43. 37. Ibid, 153. 38. Ibid, 81.

கைகளில் சிறந்து விளங்கினால் அவ்வில்லின்கண் இல்லாதது எதுவுமில்லை. அவள் அவ்வாறு இல்லாதபோது உள்ளதுவும் ஒன்றுமில்லை[39]. எனவே இல்லறக் கடமைகள் ஆற்றுதற்குச் சோர்வின்மை தேவை.

## அச்சமும் நாணும்

தமிழ் இலக்கண நூற்கள் பெண்களுக்குரிய பண்புகளாக அச்சம், நாண், மடன், பயிர்ப்பு என்னும் நான்கு பண்புகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. நாண் என்னும் பண்பினைத் தொல்காப்பியர் உயிரினும் சிறந்ததாகவும், கற்பிற்கு அடுத்ததாகவும் வைத்துப் போற்றுவார்[40]. ஆம்! கற்பென்னும் பொற்பினை நிலை நிறுத்துவதில் அச்சம், நாண் போன்ற பண்புகள் பெரும்பங்கு வகிக்கின்றன. வள்ளுவரும் இதனை மறந்தாரில்லை.

பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்
கணியெவனோ ஏதில தந்து[41].

என்று தலைவன் கூற்றாகப் புகழ்கின்றார். பிணை போன்ற மருண்ட பார்வையும் அதாவது அச்சமும், நாணும் உடைய மகளிர்க்குப் பிற அணிகலன்கள் தேவையில்லை என்கிறார். இது பெண்மைக்குப் பெருமை சேர்ப்பது பண்புகளே என்பதனை வலியுறுத்துகின்றது.

இப் பண்புகளுக்கு மாறாக அமைவது காமம். காதலால் வருந்திய தலைவி,

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனா உடம்பின் அகத்து[42].

என்கிறாள். இதனால் ஒன்றில் காமத்தை விடு. அல்லது நாணினை விடு. நான் இவ்விரண்டையும் பொறேன்[43] என்கிறாள். இவ்வாறு நாணிற்கும் காமத்திற்குமிடையே மகளிர் படும் துன்பத்தினை குறளில் பல இடங்களில்[44] காணலாம்.

## நாணுத்தாழ் வீழ்த்த கதவம்

'நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை'[45]. மகளிரைச் சிறையாற் காத்தலினும் நிறையாற் காத்தலே சிறப்பு[46]. இந்நிறையையும் பாதுகாப்பது நாணென்னும் பண்பு. நாணென்னும் தாழால் கோத்த நிறையென்னும் கதவினைக் காம வேட்கையாகிய கணிச்சி உடைத்து விட்டது. இனிமேல் ஆற்றவியலாது என்கிறாள் தலைவி,

காமக்கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு[47].

நாண் உள்ளவரைக்கும் நிறையழியாதாகலின் அதனைத் தாழாக்கியும், அகத்துக் கிடக்கும் மறையைப் பிறரறியாமல் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், அவ்விரண்டையும் ஒருங்கே நீக்கியமையின் காமவேட்கையைக் கணிச்சியாக்கியும் கூறியுள்ளார் போன்று

---

39. Ibid, 53.
40. தொல்: பொருள், 111.
41. குறள், 1089.
42. Ibid, 1163.
43. குறள், 1247.
44. Ibid, 1094, 1095, 1161, 1162, 1183, 1253, 1279, 1297.
45. கலி, 133 : 12.
46. குறள், 57.
47. Ibid, 1251.

காமமும் நிறையும் மாறுபட்டு நிற்கும் தன்மையினை மேலும் சில இடங்களில்[48] பார்க்க இயலும்.

ஆயின் எத்துணைதான் காமம் தன்னை வருத்திய போதும் பெண்கள் மடலேறுதல் இல்லை[49], காதலால் எத்துணை துன்பமுற்றாலும் அடக்கம், பொறுமை முதலிய பண்புகள் பெண்களுக்கு வேண்டுமென்று எதிர்பார்க்கப் படுகிறது என்பது இதினின்றும் புலனாகும்.

## பிரிவின்கண் வெளிப்படும் வேறு சில பண்புகள்

தலைவன் மீதுள்ள அன்பின் மிகுதியால் தலைவனைப் பிரியுங் காலத்துத் தலைவியர்க்குக் கண்[50], நுதல்[51], தோள்[52], முதலியவை சோர்ந்து, மேனி பசலையுற்று[53], வளைநெகிழ்ந்து[54] விடுதல் இயல்பு. பிரிந்த தலைவியர்க்கு ஒருநாள் ஏழுநாட்கள் போல் தோன்றும்[55], வரும் வழி பார்த்து விழிகள் ஒளிகுன்ற, தலைவர் பிரிந்து போன நாட்களைச் சுவரின்கண் தொட்டு எண்ணிலமையால் விரல்களும் தேய்ந்து விடுகின்றன[56].

## மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்

மாலை நேரத்தில் இத்துன்பம் மேலும் இரட்டிக்கிறது. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் தன்மை வாய்ந்தது பிரிவுத் துன்பம்[57]. எனவே பிரிந்த மகளிருக்கு மாலை கொலைக்களத்தில் ஏதிலர் போன்றும்[58], உயிருண்ணும் இறுதிக்காலம் போன்றும்[59], ஆயனின் குழல் அழல் போலும் மாலைக்குத் தூதாகவும், கொல்லும் படையாகவும்[60] காணப்படுகிறது. எனவே பிரிவு என்பதைக் கேட்கவே தலைவி பொறுப்பதில்லை.

> செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
> வல்வரவு வாழ்வார்க் குரை[61].

என்று தலைவன் பிரிந்தால் உயிர்போவது திண்ணம் என்பதைக் குறிப்பால் புலப்படுத்துகிறாள் தலைவி.

## நெஞ்சொடு கிளத்தல்

'உறுப்புடையது போல் உணர்வுடையது போல் மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு[62] கூறுதல் காதலரிடம் காணப்படும் ஓரியல்பு. திருவள்ளுவரும் காதல் கைமிக நெஞ்சொடுகிளக்கும் தலைவியர் பலரை நமக்கு அறிமுகப் படுத்துகின்றார்.

தலைவன் உடனுள்ள காலத்துத் தனக்குத் துன்பம் செய்யாது தன்னுடனிருந்த நெஞ்சம், தலைவன் பிரிந்த காலத்துத் தன்னுடனிருந்து துன்பத்தைப் போக்காது தலைவன் பின்சென்று துன்பத்தைக் கொடுக்கிறது. இது ஒருவர் கெட்டபோது நட்டார்

48. குறள், 1254, 1258.
49. Ibid, 1137.
50. Ibid, 1231, 1239.
51. Ibid, 1238.
52. Ibid, 1233.
53. Ibid, 1265, 1278.
54. Ibid, 1157, 1279.
55. Ibid, 1269.
56. Ibid, 1261.
57. Ibid, 1227.
58. Ibid, 1228.
59. Ibid, 1221
60. Ibid, 1228.
61. Ibid, 1151.
62. தொல் : பொருள், 194 : 4, 5.

கைவிட்டு விடுவர் என்னும் கூற்றிற் கிணங்க சென்று விட்டதா?. அல்லது நெஞ்சத்தின் இயல்பே இதுதானா?. என்று வினவுகிறாள்.

கெட்டாரிற்கு நட்டாரில் என்பதோ நெஞ்சே நீ
பெட்டாங் கவர்பின் செலல்.[63]

நெஞ்சொடு புலத்தலாக வரும் இக்குறள் தலைவன் மீதுள்ள அன்பின் மிகுதியையே புலப்படுத்துகின்றது. இவ்வாறு நெஞ்சொடு கிளக்கும் பாடல்கள் பலவற்றை[64] நாம் திருக்குறளில் கண்டின்புற இயலும்.

நெஞ்சொடன்றி மதியைப் பார்த்துக் கூறும் இடனும்[65] குறளில் உண்டு.

## தூதனுப்புதல்

தலைவன் வரவை எதிர்பார்த்துப் பொறுமையிழந்த தலைவி தூதனுப்புதலும் உண்டு. ஈண்டு, தூது விடாத தன் தோழியிடம் புலத்தலைக் காணலாம். இன்பஞ் செய்தற்குரிய நட்பின் கண்ணே துன்பத்தினைச் செய்ய வல்லவர்கள் துன்பஞ் செய்தற்குரிய பகைமையின்கண் என்ன செய்ய மாட்டார் ?.[66] என்று கூறுகின்றாள். மேலும் தன்னைப் பிரிந்துறைகின்றமையால் தலைவனைக் கொடியவர் என்று இயற்பழித்தல் கண்ட தலைவி, நெஞ்சிடம், அங்ஙனம் தலைவனைப் பழிப்பவர்பால் தன் மெலிகின்ற தோளினால் விளையும் ஆரவாரத்தைக் கூறும் பொருட்டுத் தூது செல்லப் பணிக்கின்றாள்[67].

## கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்

தன்னை அவமதித்துத் தன் விருப்பங்களை நிறைவேற்றாது தலைவன் தான் வேண்டியபடியே நடந்தாலும் அவனையும் பேதையர் கண்கள் பார்க்கத் துடிக்கின்றன.

பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணா தமையல கண்[68].

இங்ஙனம் கணவர் தங்கள்பால் அன்பிலராயினும் அவரை எண்ணி ஏங்கும் உள்ளங்கள் பல[69].

## எழுதுங்கால் கோல் காணாக் கண்

தலைவனைப் பிரிந்துறையும் காலத்து அவனிடம் கண்ட குற்றங்களெல்லாம் அவனை நேரில் பார்க்கும்போது ஆதவனைக் கண்ட பனிபோல் மாய்ந்து விடுகின்றன. இதனை வள்ளுவர் சிறந்த ஒரு உவமையின் வாயிலாக விளக்குகின்றார். முன்னால் கண்டிருந்தும் அஞ்சனம் தீட்டும் போது கோலைக்காணாத கண் போல தலைவனைக் காணாதபோது கண்ட தவறுக ளெல்லாம் அவனைக் கண்ட விடத்து மறைந்து விட்டன[70]

63. குறள், 1293.
64. குறள், 1200, 1237, 1241, 1246, 1249, 1291, 1292, 1294.
65. Ibid, 1210.
66. Ibid, 1165.
67. Ibid, 1237.
68. Ibid, 1283.
69. Ibid, 1199, 1213.
70. Ibid, 1285.

என்கிறாள், மேலும் இரு பாடல்கள்[71] இக்கருத்தினை வலியுறுத்துகின்றன.

ஆயின் புலத்தலிற் புத்தேள் நாடுண்டோ[72] என்பதற்கேற்ப உப்பமைந்தற்றால் புலக்கும் இடங்களும்[73] உண்டு. இவை தலைவர் தலைவியரிடையேயுள்ள அன்பின் பெருக்கினையே பறைசாற்றுகின்றன.

## நாணயத்தின் இருபுறங்கள்

ஒரு நாணயத்தின் இருபுறங்கள் போல ஒரு பெண் மனைவி தாய் என்னும் இருநிலைகளினின்று தனக்குரிய கடமைகளை ஆற்றுகின்றாள். காமத்துப் பாலில் பெரும்பாலும் ஒரு தலைவிக்குரிய பண்புகளை விளக்கும் வள்ளுவர் தாய்க்குரிய பண்பினை அறத்துப்பாலின் ஓரிடத்தில் குறிப்பிடுகின்றார். மக்களை ஈன்று உலகிற் களித்தால் மட்டும் போதாது. அம்மகன் சமுதாயத்தில் நல் அங்கமாகத் திகழ்தல் வேண்டும். சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனென்னும்[74] கூற்று நிலவினும், தாய்க்கும் இதில் பெரும் பணி உண்டென்பதை மறுக்க இயலாது. குழந்தைக்கு அமு தூட்டும் போதெல்லாம் நல்லொழுக்கங்களையும், பண்புகளையும் சேர்த்தே ஊட்டு கின்றாள், அன்னை. இதனை நிறைவேற்றுவதில் தான் தாயின் முழுப்பங்கும் தேவைப் படுகின்றது. இது நிறைவேறும் போது ஒரு தாய் தன் மகனைப் பெற்ற அன்று அடை கின்ற மகிழ்ச்சியைக் காட்டிலும் பன்மடங்கு மகிழ்ச்சி அடைகிறாள்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்[75].

இக்குறள் ஒரு தாய்க்குரிய கடமையினையும் அக்கடமையின் நிறைவினால் ஏற்பட்ட பூரிப்பினையும் தெற்றெனக் காட்டுகிறது தவிர மேலும் மூன்றிடங்களில் தாய்பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. அறத்துடன் பொருந்தாத வறுமை[76], கள்ளுண்ணுதல்[77], பழிசெயல்கள்[78] ஆகியவற்றின் இழிவினைப் புலப்படுத்தத் தாயினைக் குறிப்பிடுகின்றார். இவை அன்பிற் குறைவிடம் தாய் என்பதை வலியுறுத்துவதாக அமைகின்றன.

## பெண்மையின் விழுமிய நோக்கம்

இத்துணை சிறப்பு வாய்ந்த பெண்மை பிறருக்குப் பயன்பட வேண்டும். பொரு ளில்லாதவர்க் கொன்றீயாமல் செல்வத்தினைப் பயனின்றிக் கழித்தலுக்கு மிக அழகு வாய்ந்த பெண்ணொருத்தி கொழுநனின்றி மூத்த தன்மை போன்றது[79] என்று உவமை கூறுகிறார். எனவே பெண்பிறவியின் விழுமிய நோக்கம் அன்பால் ஒருவனை மணந்து இல்வாழ்க்கை நடத்துவதில் நிறைவேறும் என்பதே வள்ளுவர் கருத்தெனலாம். இல் வாழ்வில் ஈடுபட்டு தன்மக்களை நல் அங்கங்களாக சமுதாயத்திற்கு ஆக்கி அளிப்பதில் தான் பெண்களின் பெரும்பணியே, பெண்மையின் பெருமையே அடங்கியுள்ளது. எனவே தான்,

---

71. Ibid, 1246, 1286.
72. Ibid, 1323.
73. Ibid, 1311 - 1320.
74. புறம், 312 : 2.
75. குறள், 69.
76. Ibid, 1047.
77. Ibid, 923.
78. Ibid, 656.
79. Ibid, 1007.

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு[80].

என்று கூறுகிறார்.

இங்ஙனம் எப்பாலவர்க்கும் அரிய உண்மைகளைப் புகட்டி அறநெறிப்படுத்தும் முப்பால் தமிழ்ப்பெண்டிர்தம் பண்புகளை, பெண்மையின் இயல்புகளை ஆயுந்தொறும் இன்புறும் வகையில் விளக்கி நிற்பது கண்கூடு. எனவே, பெண் மகளாகத் தோன்றி, மனைவியாக வாழ்ந்து, தாயாகத் தொண்டு செய்து தெய்வமாகக் காட்சியளிக்கின்றாள் என்னும் திரு. வி. க. கூற்றின்[81] உண்மைதனை வள்ளுவர்தம் குறளில் கண்டின்புற முடியும் என்பது தெளிவு.

பயன்பட்ட நூற்கள்.

1. திருக்குறள்.- பரிமேலழகருரை, கழக வெளியீடு.
2. பெண்ணின் பெருமை அல்லது வாழ்கைத் துணை.
திரு. வி. கலியாணசுந்தரனார்.
3. வள்ளுவரும் மகளிரும். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்.
4 செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு - 9.
5. தொல்காப்பியம்.
6. சிலப்பதிகாரம்.
7. புறநானூறு.
8. கலித்தொகை.
9. கழகத் தமிழகராதி.

80. Ibid, 60.

81. பக்கம் - 308. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை. திரு. வி. கலியாண சுந்தரனார்.

*●*

# அரும்பத உரையாசிரியர் பெருமை

—டாக்டர். ஜா. வே. வீராசாமி

தமிழ் முதல் காப்பியமாம் சிலப்பதிகாரம் தோன்றி மக்களிடையே தன் செல்வாக்கை நிலைநாட்டிநின்றது. அதன் இலக்கிய வளம் இசைத்தமிழிலும் கூத்துத் தமிழிலும் எல்லையற்றுப் பரந்து விரிந்திருந்தது. ஆயினும் காலம் முன்னேற முன்னேற அதன் பின்னர் வந்த மக்களுக்கு அதனைப் புரிந்து கொள்ளும் நிலை அரிதாக இருந்தது. எனவே, முழுமணிக்குச் சாணை தீட்டி அதற்கு ஒளிவிளக்கம் செய்வது போன்று பிற்காலத்தில் வந்த அறிஞர் பெருமக்கள் தாம் சிலம்பில் கண்ட உண்மைகளை வெளியிட முயன்று உரை எழுதி வைத்தனர். அதன் வாயிலாக நாம் பெறும் பயன் அளவிடற்கரியது. இலக்கியங்களும் இலக்கணங்களும் இத்தகைய உரைகள் பெறவில்லை எனில் அவற்றின் பொருளையும், ஆட்சியையும் காண்பது மிக மிக அரிது. அம்முயற்சியில் சிலம்புக்கு உரை கண்ட அரும்பத உரையாசிரியர் முதலில் ஒளிவீசி நிற்கிறார். அச்சான்றோரின் பெயரைக் கூட நாம் அறிய முடியவில்லை. மாமன்னன் இராசராசன் காலத்தில் இவர் வாழ்ந்திருத்தல் கூடும் எனத் தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர் உரைப்பர். பேரும் ஊரும் பெற்ற பெருஞ்சிறப்பும் ஏதும் அறிய முடியாத நிலையில் இருப்பினும் இவரைப் பற்றி இவர்க்குப் பின்னர்த் தோன்றிச் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் வாயிலாக அறிய முடிகிறது.

இந்திரவிழவூரெடுத்த காதையில் 'ஐம்பெருங் குழுவும் எண் பேராயமும்' (5.157) என்ற வரிக்குப் பொருள் எழுதும் போது அடியார்க்கு நல்லார் ஐம்பெருங்குழு என்பதை அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தவரத்தொழிற்றூதுவர், சாரணர் என்றிவர் பார்த்தியர்க் கைம்பெருங்குழு வெனப்படுமே' என்பர். எண்பேராயம் என்பதை 'கரணத்தியலவர், கருமகாரர், கனகசுற்றங், கடைகாப்பாளர், நகரமாந்தர், நளிப்படைத் தலைவர், யானை வீரர் இவுளி மறவர், இனைய ரெண்பே ராயமென்ப' என்பர். இக்கருத்து அடியார்க்கு நல்லார் காலத்தில் வளர்ந்திருந்த கருத்து ஆனால் அவர்க்கு முன்னிருந்த அரும்பத உரையாசிரியர் கருத்தோ வேறுபட்டது, அரும்பத உரையாசிரியர் கூறும் முறை பின்வருமாறு :

'ஐம்பெருங் குழுவுமெண்பேராயமும் - சாந்து பூக்கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெய் ஆய்ந்தவிவ ரெண்ம ராயத்தார் வேந்தர்க்கு மாசனம் பார்ப்பார், மருத்தர் வாழ் நிமித்தரோடமைச்சர் ஆசிலவைக் களத்தாரைந்து'.

இக் கருத்தை அடியார்க்கு நல்லார் எவ்வித வேறு குறிப்புமின்றி எடுத்துக் கூறி எனக்காட்டுவர் அரும்பதவுரையாசிரியர் என்பர். இதனால் முன்னுரை காரருக்குப் பின்னவர் காட்டும் மதிப்பு வெள்ளிடை மலையென விளங்குகிறது. அத்துடன் பெயரறியாது இருந்த பெரியோரின் சிறப்புப் பெயர் வெளிப்படுகிறது.

சிலப்பதிகாரத்தைப் பதிப்பித்த டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் அரும்பத உரையாசிரியர் வரலாறு குறிக்கும்போது 'இவ்வரும் பதவுரையையே பெருங் கருவியாகக் கொண்டு இந்நூலுக்கு அடியார்க்கு நல்லார் உரை செய்தார்......அடியார்க்கு

நல்லார் உரையில் காணப்படாத பல மேற்கோள்களும் சில நூற் பெயர்களும் இவ் வுறையிற் காணப்படுகின்றன ..... அடியார்க்கு நல்லார் உரையாற் புலப்படாத சில விஷயங்கள் இவ்வரும் பதவுரையால் விளங்குகின்றன. .... இவ்வுரையிலுள்ள முடிவுகளும் பொருளும் இல்லையாயின் அடியார்க்கு நல்லாருடைய உரைகிடையாத பாகங்களுக்குப் பொருள் காண்பது அரிது. (சிலம்பு. உ. வே. சா. பதிப்பு 1978 பக்××) என்று தம் கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். இதுவே அரும்பத உரையாசிரியர் பெருமையை நன்கு புலப்படுத்தும்.

சிலப்பதிகாரம் முழுமைக்கும் முதல் முதலாகக் கிடைக்கும் உரை இதுவே. இது இல்லை எனில் சிலம்பை அறிவது கடினம் எனவே இளங்கோ அடிகளின் படைப்பை நன்குணர வழி செய்யும் முதல் துணைவன் என்ற பெருமை இவரைச் சாரும்.

களவியல் உரை போன்று இவர்உரை விரிந்து பரந்த நிலையில் செல்லவில்லை, சுருங்கிய அளவில், வேண்டும் பொருளை விளங்கிக் கொள்ளும் வகையில், எளிய நிலையில் பொருள் கூறிச் செல்கிறது.

'நாமநீர்' என்ற தொடர்க்குப் பொருள் கூறும் போது அச்சத்தைத் தருகின்ற கடல் (சிலம்பு 1. 8) என்பர். கடினமான சொல் 'நா(ம)ம்' என்பது, அதனைப்புரிந்து கொண்ட பின் நீர் என்பது இடத்ற்கேற்பக் ,கடல்' எனப் பொருள் கொள்ளப் பெறுகிறது. பொதுவாகப் படிக்கும் போது, இப்பொருளை அறிந்த பின்னர்தான் தொடர்ப் பொருள் காப்பியத்தில் நன்கு விளங்கும்.

சில- இடங்களில் சொற்களுக்கு வேண்டும் பொருளை மட்டும் சுருங்கிய நிலையில் உரைப்பர். சான்றாக, கறை - கடமை (சிலம்பு 4. 9) மைந்து - அழகு (சிலம்பு 8 வெண்பா 1) உச்சிக்கிழான் - சூரியன் (சிலம்பு 9. 11) எனும் சொற்களைக் காணும் போது கறை என்பதன் எளிய பொருளைக் காப்பியம் கருதாததால் காப்பியச் சூழலுக்கும் இவ்விடத்திற்கும் ஏற்ப மக்கள்தரும் 'கடமை' யைக் குறிப்பிட்டுள்ளார், ஆயின் இன்றுள்ள மக்களுக்கு இச்சொல்லும் உடன் அறிந்து கொள்வதற்கு அருமைப்பாடுடையது (எனவே இன்று பொருள் காணும் போது 'வலி' எனக்குறித்தல் நலம் பயக்கும்.) மைந்து என்பதற்கு யாவரும் அறிந்த பொருள் 'வலிமை'. ஆயின் இங்கு இச் சொல்லின் ஆட்சியை அறிந்து 'அழகு' எனப் பொருள் தருகிறார். 'உச்சிக் கிழான்' என்ற தொடரினைக் காப்பிய அழகு பொருந்தக் கவிஞர் கையாண்டுள்ளார். அதனைப் படிக்கும் மாந்தர் உடனே புரிந்து கொள்ளும் வகையில் 'சூரியன்' என்ற வழக்குச் சொல்லைப் பயன் படுத்தி எளிமையில் பொருள் அறிய அரும்பத உரையாசிரியர் உதவுகின்றார். சொல்லாயினும், தொடராயினும் எளியமுறையில் பொருளுனரும் வகையில் எளியசொற்களைக் கொண்டு விளக்கம்தருகிறார் மக்கள் அன்றாட வழக்கில் வழங்கும் சொல், பிறமொழிச் சொல்லாயினும், எளிதில் விளங்கிக் கொள்ளும் வகையில் சொற்களைப் பயன்படுத்தி உரைஎழுதிச் செல்வது இவர் பெருமைக்கு மேலும் அழகு சேர்க்கிறது.

நூல் உரைக்கு முகப்பாக இவர் எழுதியது என்று கூறப்படும் வெண்பா இவர் தம் இலக்கிய ஆற்றலையும் வெளிப்படுத்துகிறது.

கரும்பு மிளநீருங் கட்டிக் கனியும்
விரும்பும் விநாயகனை வேண்டி - அரும்பவிழ்தார்ச்
சேரமான் செய்த சிலப்பதிகா ரக்கதையைச்
சாரமாய் நாவே தரி

எளிய இனிய இவ்வெண்பா உரையாசிரியரின் பக்தி நிலையைப் புலப்படுத்துவதுடன் தாம் உரையெழுத மேற்கொண்ட நூலின் மீது அவர் கொண்ட பற்றையும் மதிப்பையும் தெள்ளத் தெளிவாக விளக்குகிறது.

உரை எழுதிச் செல்லும் போது காப்பியக்கதைப் பின்னணி புலனாகும் வகையில் சுருக்கமாகவும் தெளிவாகவும் உரைத்துச் செல்வது இவர்தம தனிச்சிறப்பாகும. 'குடக்கோச் சேரவிளங்கோவடிகட்கு' எனப்பதிகத்தில் காணும் இரண்டாம் அடிக்கு அரும்பொருள் கூறும் போது,

சேரல் என்றது செங்குட்டுவனை. சேரற்கு இளங்கோவாகிய அடிகட்கு என்க என்று அடிப்பொருள் கூறியதுடன் நிற்காமல் 'இளங்கோவடிகள் தாம் துறந்திருந்து இக்காவியம் செய்தார' எனக் காப்பியத்தோற்றப் பின்னணியைச் சுட்டுகிறார்.

கொலைக் களக் காதையின் இறுதியிலமைந்த வெண்பாவிற்கு அரும்பத உரை காணும் போது 'நண்ணும் கண்ணகி கேள்வன் காரணமாக வளைந்தது இதுபண்டை வினை; இருவினையும் நண்ணும்; ஆதலால் உலகத்தீர், அறஞ் செய்மினென்று இளங்கோ வடிகள் அருளிச் செய்தது' எனக் குறித்துள்ளார். இதனால் இளங்கோவின் நிலை அவர் கொண்ட கருத்து ஆகியவற்றையும் ஆங்காங்கே உணர்த்திச் செல்வது அரும் பத உரையாசிரியர் உள்ளம் கொண்ட விருப்பம் என அறிகிறோம். அதனால் காப்பிய ஆசிரியர் பற்றிய குறிப்புக்களைப் படிப்போர் அறியும் வகையில் துணை செய்கிறார். இது காப்பியக் கல்வி வளம் பெறுதற்கு உரமாகிறது என்பதில் ஐயமில்லை.

நூலின் கருத்துக்கள் விளக்கம் பெறுதற்கும், சொற் பொருள் தெளிவடைதற்கும், பண்டை நூல்களில் காணும் சொல்லாட்சி முறை துணை செய்யும். இதனை உணர்ந்த அரும்பத உரையாசிரியர் எண்ணற்ற நூற்களைக் கற்ற கல்வி அடிப்படையில் வேண்டு மிடங்களில் தக்க வகையில் மேற் கோள்களை எடுத்தாண்டுள்ளார்.

நாடுகாண் காதையில் 'பெருஞ் செய்நெல்லின் முகவைப் பாட்டும்' (சிலம்பு 10. 137) என்ற வரிக்குப் பொருள் கூறும் போது 'முகவை பாடுதல் - பொலிபாடுதல். என்று பொருள் கூறினார். பின்னர் முகவை என்ற சொல்லுக்குப் பொருள் கூறும் நோக்கில் முகவை என்றார், நெல்லு முகந்து கொடுக்கப் படுதலாலே' என்ற செயலடிப் படையில் சொல் விளக்கம் கூறினார். ஆயினும் தாம் கூறிய பொருளுக்கு முன்னோர் ஆட்சி உள்ளது என்று நிறுவும் வகையில் 'புகர்முகமுகவை' என்ற தொடரைப் புறநானூற்றி லிருந்து எடுத்துக்காட்டி (புறம் 371 . 20) அது போல இதுவும் வந்துள்ளது என நிறுவுகிறார். இவ்வாறு சங்கச் செய்யுளைக் காட்டியது போன்றே 'பொய்தல் அழித்து' (சிலம்பு 7. (43) என்ற தொடர்க்கு விளையாட்டை மறப்பித்து என்ற உரை எழுதிப் பின் அதற்குச் சான்றாக நற்றிணையில் வரும்

''சேர்ப்பே ரீரளை யலவற் பார்க்கும்
சிறுவிளை யாடலு மழுங்கி,
நினைக்குறு பெருந்துயர மாகிய நோயே (நற் : 123)

என்ற அடிகளை எடுத்துக்காட்டி அவை போலக் கானல்வரியில் வரும் சாயல் வரிப் பாடலுக்கு ஒப்பாகக் காட்டுவார்.

இவ்வாறே திருமுருகாற்றுப்படையிலிருந்தும் (சிலம்பு 24 (18); திருமுருகு 224; சிலம்பு 24 (20) திருமுருகு 289 - 90) சில சான்றுகள் மக்களின் நம்பிக்கையிலும் வளர்ந்து வருவதைப் பண்பாட்டுணர்வோடு கலந்துரைப்பார். முருக வணக்கம் பற்றிய மரபுகளும் நம்பிக்கைகளும் வெளிப்படத் தெரியும் வகையில் இககருத்துக்களை எடுத்துக் காட்டுவது இவர் தம் மரபறிவையும் பண்டை இலக்கியக் கல்வி அறிவையும் காட்டும்.

அரங்கேற்று காதையில் அரும்பதவுரை வெறும் உரையாக மட்டும் தென்படவில்லை. கலைகள் பற்றி அறிதற்கமைந்த மிகப் பெரும் கலைக் களஞ்சியப் பகுதியாக உள்ளது.

'இருவகைக் கூத்தினிலக்கணமறிந்து' என அரங்கேற்று காதை ஆடலாசிரியனமைதி கூறத் தொடங்குகிறது (சிலம்பு 3. 12). முதலில் பொழிப்புரை கூறிப் பொருளின் பொதுத்தன்மையைப் பதித்து விடுகிறார். பின்னர் ஒவ்வொரு பகுதியாக எடுத்து விளக்குகிறார்.

'இருவகைக் கூத்தாவன - தேசி, மார்க்கம் என இவை, மார்க்கம் என்பது வடுகின்பெயரே'. இவற்றது இலக்கணமாவது, 'அறுவகை நிலையுமைவகைப் பாதமும் ஈரெண்வகைய வங்கக்கிரியையும் வருத்தனை நான்கு நிருத்தக்கை முப்பதும் அத்தகு தொழில் வாகுமென்ப'.

இவை ஈங்குரைப்பிற் பெருகும்; விரிந்த நூலிற் கண்டு கொள்க என்றுரைக்கிறார். இதன் விரிவை டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் அடிக்குறிப்பைப் (சிலப்பதிகாரம் ஐயர் பதிப்பு 1978 பக். 81) பார்க்கும் போது நன்கு புலப்படுகிறது. இத்தகைய நுண்மாண் நுழை புலத்தோடு உரை எழுதிச் செல்லும் பாங்கு இக்காதை முழுதும் காண முடிகிறது,

இருவகைக் கூத்தை அடியார்க்கு நல்லார் விரித்துக் கூறும் போது. வசைக் கூத்து, புகழ்க் கூத்து, வேத்தியல், பொதுவியல், வரிக் கூத்து, வரிச் சாந்திக் கூத்து; சாந்திக் கூத்து, விநோதக் கூத்து; ஆரியம், தமிழ், இயல்புக் கூத்து, தேசிக் கூத்து எனப் பல வகையன என்பர். இவ்விருவுரைகளை ஒரு முறை பார்த்தாற் கூட அரும்பதவுரையாசிரியர் கருத்தின் போக்கு தெளிவாகப் புலப்படும். அதிலிருந்து பல புதிய போக்கு தெளிவாகப் புலப்படும். அதிலிருந்து பல புதிய போக்குகள் எழுந்துள்ளதை அடியார்க்கு நல்லாருரை நன்குணர்த்தும், அத்தகைய புதிய போக்குகள் எழுதற்குக் காரணமாக அமைந்தது அரும்பதவுரை அளித்த முதலொளி என்பதில் ஐயமில்லை, இவ்விரு போக்குகளை ஆராய்ந்தால் பத்தாம் நூற்றாண்டையும் அதன் பின்னர் ஓரிரு நூற்றாண்டுகளையும் கலை வளர்த்த காலம் எனப் பன்முகநோக்கில் காண வாய்ப்புக் கிட்டும்.

தொடர்ப் பொருள் காணும் போது உரை எழுதுவோர்க்குப் பல சிக்கல்கள் எழும். 'வழங்கு விற்றடக்கை' (சிலம்பு 12, 6) என்ற தொடர்க்குப் பொருள் காணும் போது முதலில் சொல் மாற்றம் செய்தே பொருளைக் காட்டுகிறார், அரும்பதவுரையாசிரியர். முதல் நிலையில் 'வில் வழங்கு தடக்கை, என முன்பின்னாகச் சொல்லை

மாற்றி எது எழுவாய் எது பயனிலை எனக் காட்டுவது போன்று பொருளை உணர்த்தி விடுகிறார். ஆயின் அத்துடன் நில்லாமல் வழங்கு என்ற சொல் வேறு பொருளுக்குரிய வினையாகக் கொண்டு 'அம்பை வழங்குவில் என்று மாம்' என இரண்டாம் நிலையில் பொருள் உரைப்பார். இவ்வாறு சொல்லை மாற்றிப் பொருளுரைக்கும் பாங்கிலிருந்து புதிய எழுவாயை வருவித்துப் பொருள் காணும் முறையையும் காணலாம். இவ்விரு போக்கிலும் பொருள் காணும் வலிமை பெருகிறது.

சொல் மாற்ற நிலையை இவர் மேலும் பயன்படுத்தி 'நடுவூர் மன்றம்' என்பதை 'ஊர் நடு மன்றம்' எனப் பொருள் புலப்படுமாறு செய்வார் (சிலம்பு 12,11).

இவ்வாறு இரு பொருள் காணுதற்கு இயலுமிடங்களில் இரு பொருள் கூறிச் செல்வார், மேலும் மூன்று பொருள்கள் காணுமிடங்களும் உள்ளன. புறஞ்சேரியிறுத்த காதையில் 'கண்ணிறை நெடுநீரடக்கி' (173) என்ற தொடர்க்குப் பொருள் காணும் போது விரித்துப் பொருள் காண்பார். கூதாளம் என்ற சொற் பொருள் உணர்த்தும் போது கூதாளி, தாளி, நறுந்தாளி என அதற்குரிய மற்ற மூன்று பெயர்களையும் அறிவுறுத்துகிறார் (சிலம்பு 13.156).

இக் காப்பியம் பயில்வோர்க்கு பொருள் மயக்கம் வருதல் கூடாது எனச் சில ஊர்ப் பெயர்களை விளக்கமாகக் காட்டுகிறார். கொடும்பை — கொடும்பானார் (சிலம்பு 11. 71) தங்கால் — திருத்தங்காலூர் (சிலம்பு 23. 75) வயலூர் — ஓர் ஊரின் பெயர் (சிலம்பு 23. 119) இது போன்றே பொருள் விளங்குதற் பொருட்டு நூலில் அந்தந்த இடத்திற்கேற்பத் தொடர்க்குப் பொது நீக்கிச் சிறப்புப் பொருள் உணர்த்துவார்.

| பொதுப் பெயர் | | சிறப்புப்பெயர் |
|---|---|---|
| முனிவன் | — | அகத்தியன் (சிலம்பு 15.14) |
| முதுமகள் | — | மாதரி (சிலம்பு 17.10) |
| சாயலாள் | — | ஐயை (சிலம்பு 18.2) |

இத் தொடர்களுக்கும் சொற்களும் இவை வருகின்ற இந்த இடங்களில் மட்டும் இப் பொருள உரியது எனக் காட்டும் பொருளார்வம் அரும்பதவுரையாசிரியரிடம் தெரிகிறது.

இங்ஙனம் பல வகையாக அரும்பதவுரையாசிரியரின் பெருமையை அறிய இயலும் தமிழ் முதல் காப்பியத்திற்கு முதற்பெரும உரை இது. எளிமையும் இனிமையும் இதன் அடிப்படை தம் காலத்தில் வழங்கிய மரபையும் பண்பாட்டையும் உணர்த்துவதில் தவறாமல் வெற்றி பெறுகிறார். வேண்டுமிடத்துப் பல பொருள் விளக்கம் தருகிறார், இவையெல்லாம் அரும்பத உரையாசிரியர் பெருமையை உணர்த்தி எதிர்காலப் பொருளாளிகளுக்கு வழிகாட்டும்.



# மரபுக் கவிதையும் புதுக் கவிதையும்

— முனைவர் மூ. தமிழ்க்குடிமகன்.

இக்கால இலக்கிய ( MODERN LITERATURE ) வகைகளாகச் சிறுகதை, புதினம், நாடகம், உரைநடை, கவிதை ஆகிய ஐந்தும் குறிப்பிடப்படுகின்றன. முன்னைய நான்கு வகைகளிலும் இல்லாத ஒரு பரபரப்பும் மோதல்நிலையும், காட்டமான தாக்குதல்களும் கவிதை உலகில் காணப்படுகின்றன. இதற்கான காரணத்தையும், உண்மை நிலையினையும் உணர்த்துவதே இக்கட்டுரையின் நோக்கம். புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய செய்திகளைத் தவிர்த்துப் புதுக்கவிதையினை மரபுக் கவிதையோடு ஒப்பிட்டு உண்மை காணும் ஒரு நோககில் மட்டுமே இக்கட்டுரை மலர்கின்றது.

"இயல்பான மொழியின் உயர்தரமானதோர் வடிவமே கவிதை"[1] எனலாம். மரபுக் கவிதை என்பதுதான் முன்னர், கவிதையாகக் கொள்ளப்பட்டது. புதுக்கவிஞர்களுக்கும் இது தெரிந்திருந்தது. நா. காமராசனின் 'கறுப்பு மலர்கள்' நூலின் தலைப்புக்குக் கீழே கவிதைகளும் சிலவசன கவிதைகளும்' என வரும் தொடர் இதனை உணர்த்தும்.

"தன்னைத் தானே அழித்துக் கொண்டு இலையும் தளிருமாய்ப் பரிணாமம் கொள்ளும் விதையைப் போலவும் உருக்கி வார்த்து உபயோகித்துக் கொள்ள வாய்த்த ஆயுதக் கூடம் போலவும் அனுபவங்கள் பழுத்த தோழனைப் போலவும் மரபு நம்மோடு உறவாடுகின்றது"[2] என்று சிற்பி குறிப்பிடுகிறார்.

காலங்காலமாகப் பேணி வளர்க்கப்பட்ட யாப்பு வடிவத்துக்குள் கற்பனை, உணர்ச்சி, கருத்து ஆகிய மூன்றையும் பொதிந்து வைத்து நெஞ்சைக் கவரும் கவிதையாக மிளிர்வதே மரபுக் கவிதை. இஃது ஒரு கட்டத்தோடு தேங்கி விடவில்லை. ஆசிரியப் பாவில் தொடங்கிய கவிதை சிலம்புக் காலத்தில் வரிப் பாடல்களை மிடைந்து சுவை படைத்தது. திருத்தக்க தேவர், கம்பர் காலத்தில் விருத்தங்கள் பெரும்புகழ் பெற்றன. சிற்றிலக்கிய வளர்ச்சி மிகுந்த காலத்தில் தாழிசைகள் பரபரப்புடன் நடைபோட்டன. பாரதியார் காலத்தின் பின் சிந்தும், பண்ணத்தியும் பெருவழக்காகும் அளவிற்கு மரபுக் கவிதை நெகிழ்ந்து கொடுத்திருக்கிறதே தவிர நெடுஞ்சாண்கிடையாக விழுந்து படுத்து விடவில்லை.

பொதுவாகப் புதுக் கவிஞர்கள் பெரிதும் தாக்குவது யாப்பிலக்கண மரபினைத் தான். அதன் இறுகிய கட்டுப்பாடும், காலத்தின் கட்டளையை மறுதலிக்கும் பிற்போக்கும், பழமையை விடாப்பிடியாக வலியுறுத்தும் வல்லாண்மையும் இவர்களுக்குப் பிடிக்கவில்லை. மேலும், மரபுக் கவிதை உள்ளடக்கத்தால் (Content) வலிவிழந்து நிற்பதாகவும் கருதுகிறார்

---

1. We may describe it as a heightened form of ordinary speech, without committing ourselves to this as an adequate of poetry - Christopher Caldwell in 'Illusion and Reality'

2. சிற்பி, மரபுக் கவிதை, 'வானம்பாடி' இதழ்; 20 சனவரி 1981.

கள். வள்ளுவர், இளங்கோ, கம்பர், வள்ளலார், 'மாயூரம்' வேதநாயகர், பாரதி, பாரதி தாசன் போன்றவர்கள் மரபுக்கவிதை வழங்குவதில் சிறப்புப்பெற்றுக் காலங்கடந்து நிற்கும் தரம் வாய்ந்தவர்கள் என்பதனை எவரும் மறுக்க முடியாது. 'சர்வ சமய சமரசம்' தரும் வள்ளலாரும், 'பெண்ணடிமை'தனைச் சாடும் வேதநாயகரும். 'சுதந்திர தாகம்' கொண்டலைந்த பாரதியும் 'ஓடப்பர்' 'உயரப்பர்' ஆகிய இருவரையும 'ஒப்பப்பர்' ஆக்க நினைத்த பாரதிதாசனும் காலத்தினை எதிரொலிக்காதவர்களா?

புதுக் கவிஞர்களும் மரபுக் கவிதைகளை ஒழிக்க நினைத்துப் புதுக்கவிதைத் துறைக்கு வரவில்லை. ஆங்கிலத்தில் 'பிளாங்கு வெர்சு (Blank Verse) என்றும் பிரெஞ்சு உலகில் வெர்சுலிபர் (Verse Libre) என்றும் பெயர் பெற்ற கவிதையை வசனகவிதையாகக் காணும் தாக்குறவே தொடக்கமாகும். தமிழுக்குப் புதியதொரு வடிவம் வரட்டுமே என ஆசைப்பட்டவர்களின் முயற்சியே புதுக் கவிதை. இதனையே 'கவிதை போலில்லாக் கவிதை'[3] என்றும் 'உரைவீச்சு'[4] என்றும் பலபெயரிட்டு அழைக்கின்றனர்.

மரபும் புதுமையும் பற்றி ஒப்பிடும்போது முழுமையான கணக்கினையும் பார்க்க வேண்டும். மரபுக் கவிதைகள் என்ற முறையில் அச்சில் வெளிவந்த நூல்களை மட்டும் கணக்கில் எடுத்துக்கொண்டு பேசுவதால் இவ்வளவுதான் தமிழில் உண்டு என்பது தவறாகும். இன்று நாட்டின் பல பகுதிகளில் நடைபெறும் பாட்டரங்குகளில் பங்குபெறும் மிகச் சிறந்த கவிஞர்களின் பல படைப்புகள் அச்சாகவில்லை. கு. மா. பாலசுப்பிரமணியம், இளங்குமரன், தமிழண்ணல், ஆ. பழநி, ம. முத்தரசு, புத்தூரான், அ. செகதீசன், சொ. சொ. மீ. சுந்தரம் போன்றோரின் நயம் வாய்ந்த கவிதைகள் அச்சாகாத காரணத்தாலேயே நமக்குத் தெரியவில்லை மரபுக் கவிதையின் வலிமையை ஆய்கின்ற வேளை இதனையும் கணக்கில் கொள்ளவேண்டும். மரபுக் கவிதைகளை மனத்தில் நிறுத்துபவை சந்தங்கள் ஆகும்.

"மொட்டுமடல் மேனியது விட்டுவில காதபடி
    தொட்டழகு பார்த்திருக்கும் நெஞ்சம் - பட்டுக்
கட்டுடல்கள் ஒன்றையொன்று கட்டிவிளை யாடுவதைக்
    கண்டு பெரு மூச்சுவிடும மஞ்சம்"[5]

என்பது போன்ற கவிதைகள் சந்தங்களை வாழ்விககின்றன. மரபுக் கவிஞரான கண்ணதாசனின் கருத்துக்கள் மரபுக கவிதை பற்றிய தெளிவை ஊட்டுவன.

"கவிதையின் தனிச் சிறப்பு, தாளமும் சந்தமும் நிறைந்திருப்பதுதான்.

தமிழ் இலக்கணம் தாளங்களை வைத்தே வரையறுக்கப்பட்டுள்ளது.

ஓசையை அடியாகக் கொண்டே எதுகையும். மோனையும் தோன்றின.

---

3. வான்முகில், வரவேற்புரை, கடற்கரைக் கவிதைகள், ப. 7.
4. சாலை இளந்திரையன், உரைவீச்சு.
5. இரா. வைரமுத்து, வைகறை மேகங்கள், ப. 32.

யாரும் எழுதக் கூடிய வகையில் தமிழ் இலக்கணம் எளிமையாகப் பின்னப்பட்டு இருக்கிறது.

இருந்தும் கூட இலக்கண வரம்பே இல்லாத கவிதைகள் 'புதுக்கவிதைகள்' என்ற பெயரில் இன்று வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இயற்கையாகவே தாளம் வந்து விழுந்தாலும் செயற்கையாக அதை ஒதுக்கி எழுதுகிறார்கள் புதுக் கவிதைவாசிகள்.

அவர்களுக்கிடையிலும் மரபுக்கவிதை எழுதுவோர் நிறையத் தோன்றிக்கொண்டேயிருப்பது தமிழுக்கு இன்னும் நல்ல காலம் இருப்பதைக் காட்டுகிறது.''[6]

ஆனால் புதுக் கவிதையாளர்கள் சந்தங்கள் பற்றியும் மரபு பற்றியும் என்ன கருதுகிறார்கள் என்று பார்க்கவேண்டும்.

''சுலபமாக இருக்க வேண்டும் என்பதற்காக நமக்குத் தென்பட்டவைகளை மரபாக மாற்றிவிடவேண்டும் என்று பார்க்கிறோம். இதனால் ஒருவன் தான் ஸ்தாபித்த மரபுக்குள்ளேயே சிக்கிக் கொண்டு விடுகிறான்.

முதலில் அது (கவிதை) சந்தத்தை அறவே உதறியாக வேண்டும். வெகுகாலமாகச் சந்தத்தைத்தான் கவிதை என்று நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோம்.

இப்படி நம்மைப் பழக்கப் படுத்துகிற ஒன்றை நாம் தாண்டியாக வேண்டும். அதைக் கடக்காத வரையில் அதிசயங்கள் நமக்குப் புலப்படப் போவதில்லை''.[7]

ஆக, தங்களை முற்றிலும் அவிழ்த்துவிட்டுவிடவேண்டும் என்று புதுக்கவிஞர்கள் விரும்புகின்றனர். அதுமட்டுமன்றி, இருக்கும் எல்லாவற்றையும் உதறிவிடவேண்டும் என்றும் துணிகின்றார்கள்.

மரபுக் கவிதைகளில் குறைகளே இல்லை என்பது என் கருத்தன்று. சிலர் காலத்தின் தேவையுணராமல் இன்றும் பழைய கதையினையே புதிய வடிவில் தந்து கொண்டிருக்கின்றனர். கண்ணன், முருகன் பற்றியும் வெளிவரும் புதுநூல்களில் கருத்துப் புதுமையும் காலத்தின் தேவையும் இன்றைய குமுகாய உணர்வுகளின் எதிரொலியும் இல்லை. மேலும் சிலர் இருக்கும் நிலையினை எடுத்துச் சொல்வதோடு நாம் அதற்கு மேல் போகவிடாமல் தடுத்து விடுகின்றனர்.

''கன்றின் குரலைப் பசுகேட்கும் - மண்ணில்
    கற்றின் குரலை உயிர்கேட்கும் - வாழ்வில்
என்றன் குரலைச் செவிகேட்க வாழ்வில்
    எவரோ வருவார் அறியேனே!''[8]

இந்தக் கவிதையில் எதுவும் கிடைக்கவில்லை எனும் ஏமாற்றம் உள்ளது.

---

6. கண்ணதாசன், அணிந்துரை, இரா. வைரமுத்து, முந்துநூல், ப. 3.
7. ந. முத்துசாமி, முன்னுரை, நாற்றங்கால், பக். 3-4.
8. கோ. மோகனரங்கன், சித்திரப்பந்தல். ப. 45.

மரபுக் கவிதைகள் சில நேரம் வெறும் குப்பைமேடுகளாகக் காட்சியளிக்கின்றன.

''எங்கும் எங்கும் இன்பம்
எதிலும் எதிலும் இன்பம்
இன்பம் இன்பம் இன்பம்
இன்பமின்றி யெதுவுமில்லை
இங்கும் அங்கும் எங்கும்
இன்பம் இன்பம் இன்பம்''[9]

168 பக்கங்களைக் கொண்ட 'வெற்றி வளன் கவிதைகள்', அதிரை மு தாகாவின் 'கவிதைத் தாய்' போன்றவற்றைப் படிக்கும் போதுதான் புதுக் கவிஞர்களின் சினத்திற் கான காரணம் தெரிகின்றது. அறுசீர் விருத்தம் பாடிவிட்டு ஒரு பாட்டில் ஐந்து அடிகளைப் போடுவதும், ஒடித்துப் போட்டு அச்சிட்டுவிட்டால் சரியாகிவிடும் எனும் மெத்தனமும் மரபுக் கவிதையில் உண்டு. இதனைக் குறையாக ஒப்புக்கொள்வதே முறையாகும். அதே நேரத்தில் புதுக் கவிஞர்கள் மரபுக் கவிதைகளைத் தாக்குவதும், ஒரேயடியாகப் பாய் வதும் பொருத்தமா என்பதனையும், அவர்கள் மரபுக் கவிதை பூற்றித் தெரிவிக்கும் கருத்து உண்மைதானா என்பதனையும் காணல் வேண்டும். இவர்களது போக்கு தவறா னது என்று தமிழகப் புலவர் குழு கருதுகிறது.

''புதுக் கவிஞர்கள் சிலர் கூடி இலக்கணக் கட்டுக் கோப்பை உடைத்தெறிவோம் என்கிறார்கள். இந்தப் போக்கு வாய்த்தால் மரபுகள் கெட்டு ஒரு தாறுமாறான நிலை ஏற்படும். இதைத் தடுப்பது புலவர் குழுவின் பொறுப்பு''[10]. என்றவாறு தீர்மானமே நிறைவேற்றியிருக்கிறது.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் நடத்திய கவிதைக் கருத்தரங்கில் 'மரபுக் கவிதை செத்து விட்டது; மரபுக் கவிதைக்கு இனி வாழ்வே இல்லை; மரபுக் கவிதை அளவிலும் தரத்திலும் குன்றிவிட்டது'[11] என்று ஒருவர் குறிப்பிட்டார். இக் கருத்து மிகவும் தவறானதாகும். புதுக் கவிஞர்களே தங்களுக்குள் அடித்து மோதிக்கொண் டிருக்கும் நிலையில் புதுக் கவிதையே பல குறைகளைத் தாங்கி நிற்கும் வேளையில் இஃது ஒரு பக்கப் பார்வையேயாகும்.

''வாழை இலை
தண்டு மலர்
காய்கனிகள்
ஆனவுடன்
வாழையடி வாழை ஒன்று ஜனனம் - அது
வந்தவுடன் தாய்விழுந்து மரணம் !

---

9. வெற்றிவளன் கவிதைகள், ப. 155.

10. திருச்சியில் நடைபெற்ற தொல்காப்பியர் மாநாடு - 23 - 10 - 1977.

11. பூரணசந்திரன், கவிதைக் கருத்தரங்கு, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம், 15,16-9-1982.

ஆடுகட
லோடுசிப்பி
யூடுபள்ளி
கொண்டிருந்து

பாடுமணி முத்தமொன்று ஜனனம் - அதை
நாடுபெறச் சிப்பிபெறும் மரணம் !''[12]
என்று கண்ணதாசனும்,

'' களிப்பாளென் றெதிர்பார்த்தேன்; காணேன் ! இன்பக்
காதலெனும் உணாவுவெள்ளத் தவளும் வந்து
குளிப்பாளென் றெதிர்பார்த்தேன்; குறியுங் காணேன் !
கூடலுக்கு முன்னூடல் காட்டி முத்தம்
அளிப்பாளென் றெதிர்பார்த்தேன்; அதுவுங் காணேன் !
அருகுநுனி விளக்கொளிக்கும் உடலைக் காட்டா(து)
ஒளிப்பாளென் றெதிர்பார்த்தேன்; ஒன்றும காணேன்!
ஒடிந்துவிட்ட மலர்க்கொடியாய்க் கால்வீழ்ந் தாளே !''[13]

என்று பெருஞ்சித்திரனும் பாடிச் சிறப்புப்பெறும் பாங்கினைப் பார்த்தபிறகும் மரபுக் கவிதைக்கு வாழ்வே இல்லை என்று கூறுவது எப்படிப் பொருந்தும் ?

புதுக்கவிதைகள் பல இதழ்களில் இடம் பெறுவதாலும், புதுக்கவிதை நூல்கள் ஏராளமாக வெளிவருவதாலும் இவர்கள் இந்த முடிவுக்கு வருகிறார்கள் என்றாலும் 'பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள் (1967-1976)' என்ற தலைப்பில் ஆய்வாளனாகி இருக்கும் என்னால் இந்தக் கூற்றின் பொய்ம்மையை உணர்த்த முடியும்.

இந்தப் பத்தாண்டுகளில் வெளியான 614 நூல்களில் 65 மட்டுமே புதுக்கவிதை நூல்களாகும். காப்பியம், குறுங்காப்பியம், நாடகம், சிற்றிலக்கிய வகைகள், ஒருவர் பாடிய உதிரித் தொகுப்புகள், பலர் பாடிய கவிதைத் தொகுப்புகள், குழந்தைப் பாடல்கள் என வகை வகையாக விரிந்து கிடக்கும் மரபுக் கவிதையினை இவர்கள் பார்க்கத் தவறிவிடுகிறார்கள். அதிலும் 'நீ இருந்தால்', 'கண்ணாடியுள்ளிருந்து' எனும் இரண்டு தான் புதுக்கவிதையில் காப்பியமாகச் செய்யப்பட்டவை; செய்யப்பட்டதாகச் சொல்லிக் கொள்பவை. எனினும் இவை காப்பியத்திற்குரிய தன்மைகளைக் கொண்டிராமல் நெடும்பாட்டாக நீண்டவை என்று மட்டுமே கொள்ளலாம்.

'செத்துக் கொண்டு வரும் மரபு வழிக்
கவிதைக்கு மட்டும் பண்டிதக்
கூட்டம் ஜே போடுவதும் துளிர்க்க
முடியாமல் திக்கித் திணறித் துவண்டு
விடும் புதுக் கவிதைக்கு மட்டும்
புதுமைக் கூட்டம் ஜே போடுவதும்
ஏறக் குறைய ஒரே காரியம் தான்'

என்று கிருட்டிணன் நம்பியும்,

---

12. கண்ணதாசன், கண்ணதாசன் - கவிதைகள் நான்காவது தொகுதி, ப 32.
13. பெருஞ்சித்திரன், பாவியக்கொத்து, ப. 17

புதுக் கவிதை 'ஒரு மோசமான சொல்லடுக்கு' என்று செயகாந்தனும், புதுக் கவிதையில்

'அற்புதமாக எதையோ சொல்ல
வருவதுபோன்ற பசப்பும் பம்மாத்தும்
தான் அதிகம்'[14]

என்று இரகுநாதனும் குறிப்பிடுகின்றனர்.

அதே நேரத்தில், புதுக் கவிதையின் சிறப்புகளை நாம் மறுக்கவில்லை. குறியீடு (Symbolism), படிமம் (Imagism), உள்ளடக்கம், கூர்மை, தெளிவு, சுருக்கம் முதலியன புதுக் கவிதைப் பண்புகளாகும். புதுக்கவிதையில் பல குறைகள் உண்டு என்பதனையும் மறத்தல் கூடாது.

எதையும் பச்சையாகச் சொல்லிவிடுவது என்பது இவர்கள் உத்தி. இதனைப் பிரமை உடைப்பு என்றும் போலிமைத் தோலுரிப்பு என்றும் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் இந்தப் போக்கு அவர்களுக்கே பிடிக்கவில்லையே! அதற்கென்ன செய்வது?

தருமு ஔரூப் சிவராம் 'விடிவு' பற்றிப்,
"பூமித் தோலில்
அழகுத் தேமல்
பரிதி புணர்ந்து
படரும் விந்து"[15]

என்று பாடுகிறார். இக் கவிதை படிமச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாகப் பலரால் கையாளப்பட்டதாக வல்லிக் கண்ணன் குறிப்பிடுகிறார். ஆனால் இதே பாடலை 'உலகம் முழுமைக்கும் உரிய ஓர் அழகான காலைப் பொழுதை இப்படித் தன் சின்னக் கவிதை வரியால் சிறுமைப்படுத்தி விடுகிறார் சிவராம்,[16] என மு மேத்தா சாடுகின்றார்.

அடுத்த குறை, இருண்மை (Obscurity) தோன்றப் பாடுவதாகும். படிமங்களையும் குறியீடுகளையும் அளவுக்கு மீறிக் கையாண்டு படிப்பவர்க்கு ஒரு புரியாத் தன்மையை உண்டாக்குவது இவர்கள் போக்கு. தமிழன்பனின் புதுக்கவிதை பற்றிக் குறிப்பிடும் போது அவர் படிமங்களை ஆள்வதற்குப் பதிலாக, படிமங்கள் அவரை ஆள்கின்றன எனக் க. கைலாசபதி குறிப்பிடுவார்.[17]

சொல்லுடைப்பு புதுக் கவிதையில் மிகுதி.

"பண்டிதன் கணக்குப்படி ஆ
க மொத்தம்"[18]

அருவருப்பான படிமங்களைக் கையாள்வது இவர்களுக்கு வழக்கம். பலர் பாலியல் தொடர்பான செய்திகளைத் தரும்போது அருவருப்பான நிலைக்கு இறங்கிவிடுகின்றனர்.

---

14. மீரா (தொ. ஆ) அன்னம், ப. 4
15. தருமு ஔரூப் சிவராம், கைப்பிடியளவு கடல், ப. 23.
16. மு. மேத்தா, கருத்தோட்டம், அன்னம், ப. 21.
17. க. கைலாசபதி, முன்னுரை, தமிழன்பன், தோணிவருகிறது. ப. X.
18. சி. மணி, ஒளிச்சேர்க்கை.

தமிழ் நாடனின் 'காமரூபம்', மா. தட்சிணாமூர்த்தியின் 'திவ்ய தரிசனம்' போன்றவை புதுக்கவிதைக்குப் பெருமை தருவனவா என்பதனைச் சிந்திக்க வேண்டும்.

*சில பாட்டுகள் என்ன சொல்ல வருகின்றன என்பதே விளங்கவில்லை.*[19]

சிலர் நல்ல உரைநடையை ஒடித்துப் போட்டு இதுதான் புதுக்கவிதை என்று விடாப்பிடியாக நிற்கிறனர்.[20]

புதுக்கவிதை, வளமான தமிழ் நடைக்கு வழிவிட்டு வாழ்விழந்து போய் நிற்கும் 'மணிப்பிரவாள நடை'யின் மறுபிறவியோ எனும் எண்ணத்தைத் தருகின்றது.

''புதுக்கவிதைகள் பிரசவம் ஆகின்றன !''
'ஓ! வசந்த புத்ரியே!' இது ஒரு கவிதையின் தொடக்கம்;
'ஓ! சர்வ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினிகளே!' இதுவும் புதுக்கவிதை வரிதான்.

'சொப்பனம், ஆனந்தம், கனவு ரதங்கள், பிரளயக் கொடுமைகள்' இவை நடையில் மிளிரும் வடசொற்கள்!

மற்றொரு புதுவளர்ச்சி, ஆங்கிலச் சொற்களை அப்படியே வழங்குவது;

''ரேஷன் கடை வாசலில்
கெரோஸின் டிப்போவில்
லைன்கள் குறையா!''[21]

புதுக் கவிஞர் பலர்க்குப் போதிய தமிழறிவு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. சி. சு. செல்லப்பா குழுவின்ரைப் பற்றியே க. கைலாசபதி குறிப்பிடும்போது 'நடை முறையில் தேவைக்கு ஏற்ப வேறுபடும் ஓசைநயத்தை உண்டாக்கிக் கொள்ளக்கூடிய தமிழ்மொழிப் பயிற்சியும் பரிச்சயமும் செல்லப்பா குழுவினருக்கு என்றுமே இருந்ததில்லை! எனவே தான் 'ஸர்ரியலிஸம்' 'இமேஜிஸம்' முதலிய ஆங்கிலச் சொற்களை அடிக்கடி உச்சரித்த வண்ணமிருந்தனர். மொத்தத்தில் வார்த்தைகளைப் பிளந்து முறித்துப் போட்டு எழுதும் சுயதிருப்தி முயற்சியாகவே அவர்களது புதுக்கவிதை அமைந்தது''[22] என்கிறார். அண்மையில் புற்றீசல் போல் முளைக்கும் புதுக் கவிஞர்கள் தமிழை ஒழித்தே விடுவது என்று முடிவுகட்டிக்கொண்டு செயலாற்றுவதுபோல் தோன்றுகிறது.

எழுத்தை எண்ணி அகரமுதலிகளின் சொற்களை எடுத்துப் போட்டுக் கவிதையாக அடுக்குகின்றார்கள் என்று மரபாளர்களைத் தாக்கும் புதுக்கவிஞர்கள் எழுதும் சில கவிதைகளுக்குக் கட்டாயம் உரைவேண்டும்.[23] அதுவும் கவிதை எழுதியவர்களே அதற்கான உரையும் எழுத வேண்டிய நிலை.

---

19. நாற்றங்கால், ப. 7.
20. மேலது, ப. 8.
21. தீபப்ரகாசன், நாற்றங்கால், ப. 23.
22. க. கைலாசபதி, முன்னுரை, தமிழன்பன், முந்துநூல், ப. XVII.
23. ஹேமந்த், நாற்றங்கால், ப. 47.

மற்றொரு பெருங்குறை புதுக்கவிதைகள் காலங்கடந்து நிற்கும் தன்மைகளைப் பெறாமையாகும். சி மணி 'வரும்போகும்' 'ஒளிச்சேர்க்கை' எனும் இரு நூல்களைத் தந்தவர். புதுக் கவிதை முன்னோடிகளில் ஒருவர். அவரது கவிதை பற்றி வானம்பாடி இதழ் தரும் மதிப்புரை இது

''எழுத்து கால கட்டத்திலும் நடை யுகத்திலும் கொடி கட்டிக் கொண்டிருந்த சி. மணி அந்தக் காலக் கவிதைகளையே பெரும்பாலும் இந்தத் தொகுப்பில் தந்திருக்கிறார். ஆனால் என்ன வித்தியாசம்; காலப்பாம்பு பல கவிதை முட்டைகளைக் குடித்து வெறும் ஓடாக உதறிவிட்டது'' [24]

மரபுக் கவிதைகளையே பழையவை, கொஞ்சம் கூடப் புதுமையைச் சிந்திக்காதவை என்று சாடுகிற புதுக்கவிஞர்கள் சொல்லுகிற உவமை உருவகங்கள் எல்லாம் புராண, இதிகாசங்களிலிருந்துதான் வரும். பௌராணிகர்கட்கும் இவர்கட்கும் வேறுபாடு இல்லை எனும்படி அவர்களது போக்குகள் அமைந்துள்ளன.

''இந்திரக் கண்களை எடுத்துப் பதிந்த ஆடைகள்''
''வட்டி வாமனன் மகாபலி கொள்வான்''
''ஆதிசேசன் ஒப்பனையில் வாழும் பரமபதப் பாம்புகள்''
''தன் வாமன வடிவத்துக்குள் திரி விக்கிரம விசுவ
ரூபங்களை உறைய வைத்திருப்பது சொல்லில் மகத்துவம்''

புதுக் கவிஞர்கள் ஏழைகளைப் பற்றியே சிந்திப்பதாகவும், ஏழைகளையே எண்ணி உருகுவதாகவும் கூறுகின்றனர். இதில் எனக்குக் கருத்து வேறுபாடில்லை. ஆனால் அவர்கள் வெளியிடும நூல்கள் ஏழைகள் வாங்கும் படியாக இல்லை புதுக் கவிதை நூல்களை வாங்குவோர்க்குக் கவிதை கால்பங்கும், வெறுந்தாள் முக்கால் பங்குமே கிடைக்கும். கங்கைகொண்டானின் 'கூட்டுப் புழுக்கள்' போன்றவை இத்தன்மையவை. உள்ளடக்கத்தால் வலுவுள்ள புதுக்கவிதை, நூல் வடிவமாகும்போது 'பிர்லா'த்தனமாகப் பிறப்பது எப்படிப் பொருத்தமாகும்?

குறைகள் பல இருப்பினும் புதுக்கவிதை தமிழ்க் கவிதை உலகில் சிறப்பிடம் பெறுகிறது மீரா, நா. காமராசன், மு. மேத்தா, அப்துல்ரகுமான், தமிழன்பன், சிற்பி போன்றவர்கள் இத்துறையில் மிகுந்த சிறப்பினைப் பெறுகிறார்கள் என்பது தமிழுக்குப் பெருமையே. எனினும் மரபுணர்ந்து மரபுமீறியவர்கள் மட்டுமே புதுக்கவிதையிலும் சிறப்படைகிறார்கள் என்ற உண்மையினை மறந்து விடக்கூடாது. மரபுணராமல் வருபவர்கள் செய்கிற தவறுகள் தாம் புதுக்கவிதையினை வெறுக்கும்படியான சூழலைத் தோற்றுவிக்கின்றன.

''கத்தரித்துப் போட்ட வறட்டுத் துணுக்குகளை எல்லாம் புதுக்கவிதை என்று போய் மேளம் கொட்டும், தலைவிரி கோலத் தாண்டவம்! இதனாலும் தமிழ்க்கவிதை பயன்பெறவில்லை, தமிழ் மண்ணின் மணமோ, நினைவில் நிற்கும் சொற்சிற்பமோ, அலையாடும் வாழ்க்கைப் பரப்பைக் கலையாக்கிக் காட்டும் ஆற்றலோ அவற்றில் இல்லை. எழுதியவனுக்கு மட்டுமே புரிகின்ற படிமங்களும் குறியீடுகளும் புதுக்கவிதை கொண்டிருந்தால் அதைஅவனே வைத்துக்கொள்ளட்டும். மனித நெஞ்சின் உயிர்த் துடிப்பை, ஆசைப்புயலை, வெற்றி தோல்விகளை, தேம்பலை. திமிரின் உணர்ச்சியை,

---

24. 'வானம்பாடி' இதழ்: 14.

ஏற்றத்தை, எழுச்சியை எந்தக் கவிதையால் ஓசை நயத்துடனும் உருவச் சிறப்புடனும் சொல்ல முடியுமோ அந்தக் கவிதைதான் தமிழுக்கு வாழ்வு தரும் கவிதை''[25] என்று சிற்பி ஒரு காலத்தில் கூறியிருந்தாலும். புதுக்கவிதைக்கு வரும்போது சிறப்பாகவே செய்கிறார்.

''வெறும் மரபு மாற்றமோ, யாப்பிலிருந்து விடுதலையோ புதுக் கவிதையை உண்டாக்கி விடாது. பழைய மரபுக் கவிதைகள் சாதிக்க முடியாதவற்றைச் சாதித்துக் காட்டாவிட்டால் புதுக் கவிதையின் இருப்புக்கு நியாயம் கிடைக்காது'' என்று மனந் திறந்து கூறுகிறார் அப்துல் இரகுமான.[26]

எதுகை மோனையைக் களைந்தெறிந்துவிட்டாலும் உணர்ச்சிகேற்ற ஒலிநயத்தை (Rhythm) விட்டுவிட முடியாது என்கிறார் மீரா,[27]

புதுக்கவிதைப் படைப்பாளிக்கும் மரபுக் கவிதைப் படைப்பாளிக்கும் உள்ள குறிப்பிடத்தக்க வேறுபாடு கருத்துக்குக் கொடுக்கும் முதன்மையில்தான் உள்ளது. ''மரபுக் கவிஞன்யாப்பை முதன்மைப் படுத்துகிறான். புதுக்கவிஞன் கருத்தை முதன்மைப் படுத்துகிறான்'', என்கிறார் மேத்தா.[28]

மரபும் புதுமையும் உணர்ந்தவர்கள்தான் தமிழ்க்கவிதை உலகைச் சிறப்பிக்க முடியும் என்பதனை நாம் உணரமுடியும்.

''மரபுக் கவிதையில் தொடக்கம் செய்து புதுக்கவிதைக்கு யாத்திரை போய் விட்ட ஒரு சிந்தனைப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள்தான் இன்று கவிதைத் துறையில் சாதனைக்காரர்கள் ஆகக்கூடும் என்று தோன்றுகின்றது. இவர்களின் சுருக்கமான பட்டியலிலிருந்து நாளைய சூரியன் வருவான் என்று காத்திருக்கிறேன்,[29] எனும் சிற்பியின் கூற்றும் இதனையே ஒப்புக்கொள்கிறது.

மரபுக் கவிதை என்ற ஒன்று மாறப்போவதோ, அழியப் போவதே இல்லை, அது 'வதவத' வென்று வளராமல் செறிவும், திட்பமும் உடையதாகி, யாப்பு ஆணவத் தோடு தக்க சொல்லாட்சிகளுடன், குமுகாயச் சிந்தனையாகிய உள்ளடக்கதோடு திகழுமானால் அதுவே சரியான வளர்ச்சியாக இருக்கும்.

வடிவங்களைப் பற்றிக் கவலைப் படமால் கருத்தை முன்னிறுத்திக் குமுகாயச் சீர்திருத்தம் செய்ய வேகமாக வெளிவரும் புதுக்கவிதை வெகுவாக வரவேற்கத்தக்கதே, இந்தப் போக்கினை நழுவவிட்டால் புதுக்கவிதையும் புதிர்க்விதையாகிப், புரியாக் கவிதையாகி நாளடவில் வந்த சுவடு தெரியாமல் மறைந்து விடக்கூடும் என்பதனை யாரும் மறக்கக் கூடாது. கடந்த நான்கைந்து ஆண்டுகளாகவே புதுக்கவிதையிலும் ஒரு தேக்கம் ஏற்பட்டு மந்தநிலை நிலவுகிறது என்பார் கூற்றும் இவண் கருதத்தக்கது[30]

---

25. சிற்பி, முன்னுரை, சிரித்த முத்துக்கள்' ப. VI
26. அப்துல் ரகுமான், முன்னுரை, அன்னம். ப. 6.
27. மீரா, உருவம், அன்னம். ப. 9
28. மு. மேத்தா, கருத்தோட்டம், அன்னம், ப. 20.
29. சிற்பி, மரபுக் கவிதை, வானம்பாடி இதழ்; 20
30. ஞானி, இன்றைய தமிழ்க் கவிதையில் ஒரு தேக்கம், கலை இலக்கியம் ஒரு தத்துவப் பார்வை, 1975.

—o—o—

# நாவல் இலக்கிய வளர்ச்சியில் வடுவூரார்

—டாக்டர் கிரேஸ் செல்வராஜ்

தமிழ் இலக்கிய வரலாற்றில் புது வருகைகளைக் காலந் தோறும் காண்கின்றோம். அவ்வாறு வருகை தந்த புதிய வகைகளுள் ஒன்று, உரைநடையின் சுவையான பகுதியான நாவல் வகை. நாவல் இலக்கிய வளர்ச்சியில் முன்னோடியாகத் திகழ்ந்தவர் வடுவூர் கி. துரைசாமி ஐயங்கார். 'இருண்ட காலம்' என்று வரலாற்று அறிஞர்களால் குறிப்பிடப்பட்ட காலகட்டத்தில், (1900-1920) தமது எழுத்து ஆற்றலால், விரிந்த வாசக வட்டாரத்தை உருவாக்கி, ஏறத்தாழ 1935 ஆம் ஆண்டுவரை, சிறந்த படைப்பாளராக மக்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்கினார். அக்காலச் சமுதாய, அரசியல், சிறப்புக்களையும், சீரழிவுக்ளையும், தமது சுவைமிக்க கதைகளில், செவ்வனே படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

துரைசாமி ஐயங்கார், தஞ்சைக்கு அருகிலுள்ள வடுவூரில், செல்வந்தரான மிராசுதார் கிருஷ்ணசாமி ஐயங்காரின் மகனாகப் பிறந்தார். தமிழ்ப் பட்டப்படிப்பு முடித்ததுடன், ஆங்கிலக் கல்வியும் விருப்பத்துடன் பயின்றார் - குறிப்பாக ஆங்கில அறிஞர்கள், ஷேக்ஸ்பியர் (Shakespeare), விக்டர் ஹியூகோ (Victor Hugo), சர் ஆர்தர் கானண்டாயில் (Sir Arthur Conan Doyle) ஆகியோர்களின் நாடகங்களையும் நாவல்களையும் மிகவும் விரும்பிப் படித்தார். சேலம் மாவட்டம் ஊத்தங்கரை, ராசிபுரம், தர்மபுரி ஆகிய இடங்களில் வரிவருவாய்க் கண்காணிப்பாளர் (Revenue Inspector) ஆகப் பணிபுரியச் சென்றவர், அம்மாவட்டத்தில் அச்சமயம் பல திடுக்கிடும் நிகழ்ச்சிகளை உருவாக்கி, மக்களின் அச்சத்தையும் ஆர்வத்தையும் தட்டி எழுப்பிக் கொண்டிருந்த 'கானன் - கூனன்' என்ற சேர்வராயன்மலைக் கள்வர்களின் வீரச் செயல்களையும், அவர்களைப் பிடிக்கச் செல்லும் காவல்துறையினரின் அச்சமிக்க அனுபவங்களையும் பார்த்து, அவற்றால் உந்தப்பட்டு உணர்ச்சி வயப்பட்ட நாவலாசிரியராக மாறினார், சேர்வராயன் மலைக்கள்வர்களையும் அங்கு நடைபெற்ற உண்மை நிகழ்ச்சிகளையும் கருவாகக் கொண்டு, தம் கற்பனைவளத்தால் அவற்றிற்கு மெருகூட்டித் தமது முதல் நாவலான பாலாமணியைப் படைத்தார்.

பல்துறை ஆற்றல் பெற்ற வராயப் படைப்பிலக்கணப் பணியில் சீராரந்து விளங்கினார் என்பதை இவரது நாவல்கள் மட்டுமல்ல, நாடகங்களும், உரைநடை நூல்களும், எடுத்துக் காட்டுகின்றன. இவர் எழுதிய முதல் நாடகநூல் சுந்தராங்கி, 1914 ஆம் ஆண்டு வெளிவந்தது. ஆங்கிலமேதை ஷேக்ஸ்பியர் எழுதிய ''சிம்பலின்'' (Cymbeline) நாடகத்தின் தழுவலாக அமைந்திருந்த இந்நூல் அக்கால அரசினர் பாராட்டைப் பெற்று பள்ளி இறுதி ஆண்டுத் தேர்வுக்குப் பாடநூலாகப் பயன்படுத்தப்பட்டது. ஷேக்ஸ்பியரின்''லியர் அரசன்'' (King Lear) என்பதைத் தழுவி, ''மங்கையர் பகட்டு'' என்ற நாடகத்தையும்; வடமொழி நாடகம் 'மிருச்சகடிகம்' என்பதன் தழுவலாக ''வசந்த கோகிலம்'' என்னும் நாடகத்தையும் எழுதினார். மேலும் சைவப் பெரியார் மாணிக்க வாசகரின்வரலாறறை ''மாணிக்க வாசகர்'' என்ற நாடகமாகவும், ''திலோத்தமை''. 'இராஜேந்திரமோகனா' - என்றவேறு சில நாடகநூல்களையும எழுதி வெளியிட்டார், ''மங்கையர் பகட்டு'' சேகஸ்பியரின் லியர் அரச்ன் என்பதன் தழுவல் என்றாலும், தமிழக முறைக் கேற்றவாறு முடிவை இன்பியலாக இவர் மாற்றி எழுதியிருப்பது நினைவில் கொள்ளத் தக்கதாகும்.

சிறுகதைகளும், தொடர் கதைகளும், நகைச் சுவைத் துணுக்குகளும் நிறைந்த மாத இதழ் ''மனோரஞ்சனி'' யின் ஆசிரியராகவும் 1919 முதல் 1927 வரை மக்கள் நெஞ்சில் நிறைந்திருந்தார் துரைசாமி ஐயங்கார். மக்கள் விரும்பிப் படித்த சிறந்த பொழுதுபோக்கு இதழாக 'மனோரஞ்சனி' விளங்கியது. தமது எழுத்துக்குத் துணையாக இருக்கும் வகையில் 'கேசரி அச்சகம்' என்பதனையும் நிறுவியிருந்தார். கும்பகோணம் வக்கீல், மேனகா, மதனகல்யாணி, போன்ற இவரது நாவல்கள் ''மனோரஞ்சனியில்'' தொடர் நாவலாக வெளியிடப்பட்டுப் பின் நாவல்களாக வெளிவந்தன. தமிழ்ப் பல் கலைக் கழகம் நிறுவப்பட வேண்டும் என்ற விருப்புடன், தமிழ் மொழியிலேயே எல்லாப் பாடங்களும் கற்றுக் கொடுக்கப் பள்ளி தொடங்கிப் பாட நூல்களும், பூகோளம், சரித்திரம் போன்றவையும் எழுதினார். ஆனால் ஆங்கில அரசினரின் ஒத்துழைப்புக் கிட்டவில்லை. ஆயினும் ''அரசியல் தத்துவம்'', ''இங்கிலாந்து தேச சரித்திரம்'' ''தேக ஆரோக்கியம்'', ''சமய விளக்கம்'' ''விஞ்ஞான வினா விடை'' - போன்ற நூல்களையும் எழுதிப் பயன் படுத்தும் வகையும் செய்தார். இவரது ஆங்கில நூலான ''லாங் மிஸ்ஸிங் லிங்ஸ்'' - ''Long Missing Links'' - என்ற சமயத் திறனாய்வு, ஆங்கில அரசால் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. வைணவ சமயத்திலிருந்தே ஏனைய சமயங்கள் பிரிந்தன என்ற கருத்தை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட இவரது சமய ஆராய்ச்சி நூல் ''லாங் மிஸ்ஸிங் லிங்ஸ்''. அச்சான பின்னர் வெளியிடப்படக் கூடாது என ஆங்கில அரசு தடை உத்தரவிட்டது. இந்த அதிர்ச்சியே இவரது முன்னேற்றத்தைத் தடுத்து இவரது செல்வாக்கையும் மங்கச் செய்தது.

ஆங்கில அரசு சிறப்பாக உயர்வு பெற்றிருந்த காலத்தில் தன் படிப்பை முடித்தவர் வடுவூர் துரைசாமி ஐயங்கார். எனவே படைப்பிலக்கிய ஆசிரியராக மாறியதும், தான் அனுபவித்துப் படித்து மகிழ்ந்த, ஸர் ஆர்தர் கானண்டாயிலின் துப்பறியும் நாவல்களைத் தழுவி விறுவிறுப்பான தமிழ் நாவல்கள் எழுதி வாசகர் உள்ளங்களில் நீங்காத இடம் பிடித்தார். சர் ஆர்தர் கானண்டாயில் எவ்வாறு ஷெர்லாக்கோம்ஸ் (Sherlockomes) என்னும் துப்பறியும் நிபுணரை உலவ விட்டாரோ, அவ்வாறே, துரைசாமி ஐயங்கார் 'திகம்பரசாமியார்' என்னும் துப்பறியும் திறமையாளரைப் படைத்து மக்கள் நினைவில் என்றும் பசுமையாக வாழச் செய்தார். திகம்பரசாமியார் பாலிய்லீலை, கும்பகோணம் வக்கீல் அல்லது திகம்பரசாமியார் மாயா வினோதப் பரதேசி, புஷ்பாங்கி, ஆகிய நான்கு நாவல்களும், சிலம்பையும் மணிமேகலையையும் போல் தொடர் கதைகளாக, திகம்பரசாமியாரின் வீரத்தையும், திறமையையும் புலப் படுத்துவனவாக எழுதப்பட்டுள்ளன. ஸர் ஆர்தர் கானண்டாயில் எவ்வாறு துப்பறியும் ஷெர்லாக்கோம்ஸின் உற்ற நண்பராக வாட்சன் என்பவரை எல்லா நாவல்களிலும், உடன் உழைப்பவராகக் காட்டுகிறாரோ, அவ்வாறே திகம்பரசாமியாரின் உற்ற நண்பராக மீனாட்சி சுந்தரம் என்பவரைப் படைத்து உடன் உலவவிட்டிருப்பது நினைவில் கொள்ளத் தக்கதாகும். மேலும் துப்பறியும் நாவல் வகையில் புதுமையைப் புகுத்தி, கதை மாந்தரில் ஒருவரையே துப்பறிபவராக மாற்றி, மாறு வேடம் புனைய வைத்து, நிகழ்ச்சிகளைப் பின்னியிருக்கும் பாங்கு உய்த்துணர்ந்து மகிழத் தக்கதாகும் சௌந்தர கோகிலம், துரை ராஜா, பாவாடைச்சாமியார் போன்றவை இவ்வகையில் அமைந்த துப்பறியும் நாவல்களாகும்.

'வடுவூரார்' என்று மக்களால் விரும்பி அழைக்கப்பட்ட நாவலாசிரியர் துரைசாமி ஐயங்கார், துப்பறியும் நாவல்களும், தழுவல்களும், மொழிபெயர்ப்புகளும், எழுதிக் குவித்தார் என்பது முற்றிலும் தவறான செய்தியாகும். வடுவூராரின் மேனகா, காங்கிரஸ் கமலம், பூர்ண சந்திரோதயம், மதனகல்யாணி, காட்டு ராஜன், வசந்த மல்லிகா,

வித்தியா சாகரம், இருமனமோகினிகள் நவநீதம்-போன்றவை வடுவூராரின் கற்பனையில் மலர்ந்த சிறந்த சமூக நாவல்களுக்கு எடுத்துக்காட்டுக்களாகும். தழுவல் நாவல்களில் கூட, கதைப்பின்னல், கதைமாந்தர் பெயர்கள். பின்னணிவர்னணை, மக்கள் நடைமுறைகலைக் கூறுகள் ஆகியவற்றைத் தமிழகச் சூழலுக்கேற்ப மாற்றிப் பொருத்தமாக அமைத்து எழுதியிருக்கும் நயம் பாராட்டிற்குரியதாகும். சர் ஆர்தர் கானண்டாயிலின், ''தி ஹௌண்ட் ஆப் தி பாஸ்கர்வில்ஸ்''-(''The Hound of the Basker Villes) என்பது ''மருங்காபுரி மாயக் கொலை' என்று வார்த்தைக்கு வார்த்தை மொழி மாற்றம் செய்யப்பட்டிருப்பது போல் தோன்றிய போதிலும், நிகழ்ச்சி அமைப்பில்முற்றிலும் தமிழகத்துச் சூழ்நிலையையே பின்னணியாகக் கொண்டிருக்கிறது. எச். ஜி. வெல்ஸ் (H. G. Wells) என்பவரின் ''தி இன்விசிபில்மேன்'' (The Invisible Man) என்பதைத் ''தில்லை நாயகி'' என்ற நாவலாக வடித்துள்ளார், வெல்ஸ் என்பவர் கதை நாயகன் மறைந்து வாழ்ந்து அச்சுறுத்துவதாக எழுதியுள்ளார். வடுவூராரோ, துப்பறியும் திகம்பர சாமியார் '' அந்தர்த்தான உறை'' என்பதைப் போர்த்திக் கண்ணுக்குப் புலப்படாமல் வாழ்ந்து, சதிகாரர்களைக் கண்டுபிடித்தார் என்பது சுவையுடன் பின்னப்பட்டிருக்கிறது. இவ்வாறு தழுவல் முறையிலும் சிறப்பான முறைகளைக் கையாண்டு புகழ் பெற்றார் வடுவூரார். மேனகா, திகம்பரசாமியார், என்ற நாவல்கள் அதேபெயரிலும், ''இருமன மோகினிகள்'' சின்னதுரை என்ற பெயரிலும் அக்காலத்திலேயே திரைப்படங்களாக் வெளியிடப் பட்டு, மக்களால் மிகுதியும் விரும்பி வரவேற்கப் பட்டன.

நகைச் சுவைமிக்க பழகுதமிழ் மொழிநடை, உயிர்ததுடிப்புள்ள புனைவுரைகள், கருத்து வெளியீட்டிற்குப் பயன்படும் வளமான சொல்தொடர் அமைப்புகள், கதைப் பின்னணியையும் மாந்தர் மனப்போக்கையும் புரிந்துகொள்ள உதவும் வர்ணனைகள், ஐம்புல உணர்வுகளுக்கும் விருந்தளிக்கும் சொற்கள் ஆகிய உத்திகளால் வடுவூரார் படிப்போரைக் கதைகளுடன் ஒன்றச் செய்து விடுகிறார். கதை மாந்தர் குணநலனைப் புலப்படுத்துவதற்கும், கதை நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பதற்கும் வடுவூரார் கையாளும் உவமைகள், உருவகங்கள், சிலேடைகள் ஆகியவைகளும், ஆங்காங்கே அவர் பொருத்தமாக இணைத்திருக்கும் பழமொழிகள், திருக்குறள். கம்பராமயணம், தாயுமானவர் பாடல்கள் ஆகிய மேற்கோள்கள் போன்றவை நாவல்களுக்குச் சுவை சேர்க்கின்றன. அனைத்திற்கும் மேலாக அவரது நடையில் இழையோடும் நகைச்சுவை வாசகர் உள்ளங்களைக கவர்ந்து ஈர்க்கும் சக்தியாக அமைந்திருக்கின்றது.

கதையைப் படிக்கும் விருப்பத்தையும் கற்போரது ஆர்வத்தையும் தூண்டுவதற்குத் துணை செய்யும் உத்திகளுள் ஒன்று கதைத் தலைப்பாகும். வடுவூராரின் நாவல்களில் பெரும்பாலானவற்றிற்கு இரு தலைப்புகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. ஒன்று கதைபடிப் போரின் ஆர்வத்தை மிகுவிப்பதாக அமைந்திருக்கிறது. சான்றாக, 'இருமனமோகினிகள்' அலலது ''ஏமாளியை எற்றிய கோமாளி'', ''நீலலோசனி'' அல்லது ''கனவில் மணந்த கட்டழகி'' 'காங்கிரஸ் கமலம்' அல்லது ''ஆணொன்று அணையப்பட்ட பெண் புதையல்'' ''கும்பகோணம் வக்கீல் அல்லது திகம்பரசாமியார்''; பாலாமணி அல்லது பக்காத் திருடன்; ''புஷ்பாங்கி அல்லது திடும்பிரவேச மகாஜாலப் பரதேசியார்''; மிஸ்டர் பூச்சாண்டி எம். ஏ; அல்லது ''நீக்கு பெப்பே - நீ தாத்தக்கு பெப்பே'' - ஆகியவற்றைக் குறிப்பிடலாம். உணர்ச்சியைத் தூண்டி விட்டுக் கற்பனையை வளர்த்து ஆழ்ந்த உட்பொருளைப் புலப் படுத்தும் அத்தியாயத் தலைப்புகள் கதைக்கு விறுவிறுப் பூட்டிச் சுவை சேர்க்கின்றன. ''அன்பிற்கு முண்டோ அடைக்கும் தாழ்''; திருட்டுக் கல்யாணம் முரட்டு மாமியார்''; ''வேம்போ கரும்போ''; ''அணங்கோ ஆய்மயிலோ'' விளக்கெண்ணெய் சேர்ந்த

வெண்டைக்காய்ப் பச்சடி''; ''மதிகாணா இரவோ மழை காணா இளம் பயிரோ''; ''அட்டகாசக் கோனாருக்குக் கட்டை விரல் சன்மானம்''; ''அகட விகட அற்புத நாடகம்'' போன்ற அத்தியாயத் தலைப்புகள் இதற்குச் சான்றுகளாகும்.

''இரட்சணிய யாத்திரிகம்'' என்னும் பெருங்காப்பியத்தில், கவியரசர் கிருஷ்ண பிள்ளை, குணநலனைச் சித்திரிக்கும் உருவகங்களாகவே கதைமாந்தர் பெயரை அமைத்திருப்பது போல், வடுவூராரும் நகைச் சுவை ததும்பும் உருவகங்களாகவே கதைமாந்தருக்குப் பெயர் சூட்டி நம் நினைவில் பதித்து விடுகிறார். வக்கீல் பணம்பிடுங்கியர், இன்ஸ்பெக்டர் வெண்ணை வெட்டிராயர், இன்ஸ்பெக்டர் அடுக்கிளை வெட்டிக் கோனார் ஆகியோரை அவரது துப்பறியும் நாவலில் காண்கிறோம். 'சிங்கார சூர்யோதயம்' என்னும் நாவலில் ஜெயக்கொடி ஆபீஸ் ஆசிரியர் சூதாடி, உதவி ஆசிரியர் வாயாடி, கருவூலர் கையாடி, பணியாள் 'காலாடி' என்ற பெயர் கொண்டவர்களாய் அமைத்திருப்பது வாசகர் சிந்தனையைத் தூண்டிவிட்டு, நிகழ்ச்சிகளையும் ஓரளவு யூகிக்க இடமளிக்கிறது. ''மேனகா''வில், வெட்டி வம்பு பேசிப் பொழுதை வீணடிக்கும் கூட்டத்தினரை அறிமுகப் படுத்தும் பொழுது தலைவர்! 'அன்னக்காவடியாபிள்ளை' என்றும், காரியதரிசி திகம்பரமையர் என்றும், பொக்கிஷதார் சவுண்டியப்ப முதலியார் என்றும், அங்கத்தினர் சாப்பாட்டுராமையங்கார் என்றும், பெயரிட்டிருப்பது நகைச்சுவையுடன் குணநலன்களையும் புலப்படுத்துகிற தன்றோ?

பின்புலத்திரை தொங்கவிடப்பட்ட நாடக மேடைக் காட்சி, உயிர்த்துடிப்புடன் காணப்படுவதைப் போல, பொருத்தமான பின்னணி வர்ணனைகள், நிகழ்ச்சிகளை நம் மனக் கண் முன் பசுமையாக 'நிறுத்துகின்றன. ''சௌந்தர கோகிலத்தில்'' கோகிலாவின் மாளிகை, பாரமங்கலம், மருங்காபுரி, கிருஷ்ணாபுரம் ஜமீன் மாளிகைகளின் இயற்கை செயற்கை வர்ணனைகள் இவற்றிற்குச் சான்றுகளாகும். வாழ்வியல் கருத்துகளையும் மனித இயல்புகளையும் இணைத்து நகைச்சுவைமிகு வர்ணனைகளாகப் படைத்துச் செய்திகளை யூகிக்க வைககும் திறம நயமிக்கதாகும். மேனகாவில் பெருந்தேவியின் கோபத்தை வர்ணித்தபோது, ''பெருந்தேவியின் அபிநயங்களுக்கிணங்க பாத்திரங்கள் யாவும் பக்க வாத்தியங்களாய் முழங்கின. அம்மிக் குழவி 'திமி, திமிதை, தா என்று நாட்டியமாடியது. செம்புகள் உருண்டு போய்த் தவலைகளிடம் முறையிட்டன. தவலைகள் தக்காளிப் பழமாய் நசுங்கிப்போய், சுவரில் முட்டி அதைத் தட்டி எழுப்பின. அடுப்புகள் இடிந்தன; துடுப்புகள் ஒடிந்தன, அறைகள், ஜன்னல்கள் முதலியவை அவள் நடந்த அதிர்ச்சியால் நடுக்கு ஜுரங்கொண்டு நடுங்கின, அரிசியும் பருப்பும் சிதறியோடின''- என்று கூறுகிறார். தாசில்தார் தான்தோனிராயரின் இயல்பைச் சித்திரிக்கும்.

''தான்தோனிராயர் வீட்டில் அறந்தாங்கித் தாசில்தார் முறந்தாங்கிப்புடைத்தார். திருவையாற்றுப் போலீஸ்காரர் திரிகை தாங்கிப் பிடித்தார், பட்டுக்கோட்டைத் தாசில்தார் கட்டைகளைப் பிளந்தார்''. மன்னார்குடி தாசில்தார் வென்னீர் தயாரித்தார். கும்பகோணம் தாசில்தார் செம்பு தவலை கழுவினார். வலங்கிமான் போலீஸ்தார் ஜலங் கொண்டு போனார். மாயவரம் போலீஸ்தார் பாயைப் பிரித்தார், அந்த ஜில்லாவிலுள்ள எல்லா உத்தியோகஸ்தர் குடுமியும் அவர் கையிலிருந்தன'' என்ற வர்ணனையும்; இன்னும் இவைபோன்ற எண்ணற்ற பல உவமைத் தொகுப்புகளும் இவரது நாவல்கள் அனைத்திலும் நிறைந்து இருக்கின்றன.

பக்கத்திற்குப் பக்கம் பொருத்தமாக இணைக்கப்பட்டிருக்கும் பழமொழிகளும்; உவமைகளும் வடுவூராரின் தனிப்பாணி என்று சொல்லுகிற அளவு மிகுதியாகக் காணப் படுகின்றன அவர் வாழ்ந்த காலத்துச் சென்னை மாநகரை அப்படியே தம் நாவலில் படம் பிடித்துக் காட்டியுள்ளார் சென்னை, கும்பகோணம், தஞ்சை, மன்னார்குடி, திருவையாறு போன்ற இடங்கள் மீண்டும் மீண்டும் கதை நிகழிடங்களாக இருக்கின்றன. ஆங்கில அரசால் விளைந்த நலன்கள், ஜமீன்தார்களின் செல்வாக்கும் வீழ்ச்சியும், தேவதாசிகள் ஜமீன் ஆதரவால் திரண்ட செல்வாக்குப் பெற்று விளங்கிய நிலையும், பெண்கல்வியின் ஏற்றம், தீண்டாமை, சமுதாயத்தை ஏமாற்றிப் பிழைத்தோர் வாழ்க்கை, இந்து, முகமதிய கிறிஸ்தவ சமுதாயங்களில் காணப்பட்ட பழக்க வழக்கங்கள் - ஆகிய இவை போன்ற அரசியல சமுதாய நிலை முழுவதையும் இவரது நாவல்கள் தெளிவாக உணர்த்துகின்றன. குறிப்பாக நாடகக் கலையும், கர்நாடக இசைக் கலையும் வளர்ச்சி பெற்றிருந்ததாக எல்லா நாவல்களிலும் போற்றப்படுகின்றன.

அக்கால வழக்கிற்கேற்ப, வடமொழிச் சொற்களும், ஆங்கிலச் சொற்களும் மிகுதியும் விரவப்பட்டிருக்கும மொழி நடையினை வடுவூராரின் நாவல்களில் காண்கிறோம் பொறுமையைச் சோதிக்கிற அளவு நீண்ட வர்ணனைகளும் சுவையைக் குறைப்பனவாய்த் தோன்றுகின்றன. மூன்று பாகங்கள் (மதனகல்யாணி), நான்கு பாகங்கள் (பூர்ணச் சந்திரோதயம்) என எழுதப் பட்டிருக்கும் மிக நீண்ட நாவல்களின் நிகழ்ச்சிகள் சில சமயங்களில் களைப்பை யூட்டுவனவாகவும் இருக்கின்றன. விறுவிறுப்பையும் ஓரளவு குறைப்பது போல் தோன்றுகின்றன. ஆயினும் வடுவூராரின் படைப்புக்களில் குறைகளைக் காட்டிலும் நிறைகள் மிகுதி என்று கூற முடியும். வடுவூரார் கலையை மக்களுக்காகப் படைத்தார். தனக்கென ஒரு தனிப்பாணியை அமைத்துச் சுவையான பொழுது போக்கு நாவல்களைப் படைத்தார். கல்கி வடுவூராரின் நாவல்களை விரும்பிப் ப்டித்தவர் என்பதை அவரது வாழ்க்கை வரலாற்றில் காணமுடிகிறது. கையில் எடுத்தால் புத்தகத்தை கீழே வைக்காமல் தொடர்ந்து படிக்கும் சுவை மிக்க நாவல்களை எழுதி, ஆயிரக் கணக்கான வாசகர்களைத் தோற்றுவித்த முன்னோடியாக வடுவூரார் திகழ்ந்தார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.



# கொல்லிமலை - பழங்குடியினர் பாடல்கள்

—நசீர் அலி

தோற்றத்திலும், பேசும்மொழியிலும், பழக்க வழக்கங்களிலும் தொன்மையைப் பிரதிபலிக்கும் மக்களே பழங்குடியினராவர். நாகரிகத்தாக்கம் பெறாதவர்களாய்ப் பெரும்பான்மை மக்கள் இன்றும் வாழுகின்றனர். தற்காலத்தில் ஒருசிலர் நகர்வாழ்வில் உள்ளவர்களும் இருக்கின்றனர், இவர்களின் வாழுமிடம் மலைப் பகுதிகளாகும். பழங் குடியினர் எழுத்தறிவற்றவர்களாக விளங்குகின்றனர். திருச்சி மாவட்டத்தில் உள்ள புளியஞ்சோலை கொல்லிமலை அடிவாரத்தில் உள்ளது. இங்கு வாரத்திற்கு ஒருமுறை 'சந்தை' பழங்குடிமக்களுக்கென்றே கூடுகிறது. கொல்லிமலையில் வாழுகின்ற மக்கள் 'மலையாளிகள்' என்றழைக்கப்படுகின்றனர் இவர்கள் மலையில் விளையும் பொருட் களான நார்த்தங்காய், வாழைப்பழம், ஆரஞ்சுப்பழம், பலாப்பழம் போன்றவைகளைப் பொதியாக்கி அடிவாரத்தில் கொண்டு வந்து விற்கின்றனர். விற்ற பணத்தில் ஒரு வாரத்திற்குத் தேவையான பொருட்களைப் பெற்றுச் செல்கின்றனர். பன்றி இறைச்சியை விரும்பி உண்பவர்களாகக் காணப்படுகின்றனர். பன்றிகளை வாங்கிச் செல்கின்ற நிலை இருந்து வருகிறது. இவர்களின் பாடல்களாகக் குறவன் குறத்திப் பாடல்கள், கோமாளிப் பாடல்கள், கேளிக்கைப் பாடல்கள், விழாக்காலங்களில் நடைபெறும் தெருக்கூத்து நாடகங்கள் முதலியன காணப்படுகின்றன.

## குறவன் குறத்திப் பாடல்கள்

குறவன் குறத்தியர் பாடல்கள் தொல்காப்பியர் காலத்திலிருந்தே இருந்து வருவன. 'கட்டினும கழங்கினும் வெறியென' எனும் தொல்காப்பிய நூற்பாவும், 'அகவன் மகளே' எனும் குறுந்தொகைப் பாடலும் குறத்திப் பாடலுக்குத் தொன்மைச் சான்று களாவன.

குறவர்கள் பாடல்களில் வியாபாரப்பொருட்களின் பெயர்கள் குறிக்கப்படுவதைக் காணலாம. காடை, கவுதாரி, ஊசி போன்ற பொருட்களை விற்றுச் செல்வர்.

காட கவுதாரி மைனா வாங்கலியோ அம்மாலோ
கட்டி வச்சி தீனிபோட்டா மிடடபோடும் அம்மாலோ
சித்தூசி சோடி ரெண்டு வாங்கலியோ அம்மாலோ
சீலைதச்சு போட்டா நெல்லா இருக்கும் அம்மாலோ

எனும் பாடல் குறவர் பாடலின் தன்மையை வெளிப்படுத்துகிறது. பறவைகளை வேட்டை யாடும் பழக்கம் இதன்வழி புலப்படுகிறது ஆடைகளைத் தைப்பதற்கு மிகச் சிறிய ஊசிகளை இவர்கள் தொலைபழங்காலததில் உருவாக்கியிருக்க வேண்டும் எனும் எண்ணத்தை 'ஊசி' விற்பனை செய்வதால எணண இடங் தருகிறது. இயந்திர உற்பத்திக்குமுன் பழங் குடியினர் ஆயுதங்களை அவர்களாகவே உருவாக்கி இருந்தமை வரலாற்றுச் சான்று களால் அறியலாம்.

குறவனும் குறத்தியும் பாடுகிற காதல் பாடல்களும் காணப்படுகின்றன. காதல் மனித ஆன்மாவின் சுகமான உச்சரிப்பாகும். காலத்தையே கரைக்கின்ற அற்புதமான அமிலமாகும். கனவுக்குச் சிறகளித்து நினைவைச் சிறைப்படுத்தும் வித்தியாச வாழ்வு முறையாகும். குறவன் தன் காதலை மென்மையாக வெளிப்படுத்தும்போது

பச்சைமலை ஓரத்திலே - குறத்தி
பஞ்சிப் பூயிரு வறுக்கையிலே - நானும்
பம்பசத்தம கேட்டவுடன்
பக்கம் வந்து வாடிடுவேன்

என்று கூறுகிறான். இதற்கு மறுமொழியாகத் தன் உணர்வைக் குறத்தி உணர்த்தும் போது

கொல்லிமலை பக்கத்திலே
குறும்பாடு மேய்க்கயிலே
கொம்புசத்தம் கேட்டவுடன்
கூடவந்து வாடிடுவேன்

என்று குறிப்பிடுகிறாள். காதலர் பிரிவைக் குறிப்பால் உணர்த்தும் பாங்கு காணப் படுகிறது.

## கோமாளிப் பாடல்கள்

'கோமாளிப் பாடல்கள்' எனும் ஒருவகைப் பாடலைப் பாடுகிற பாங்கு காணப்படுகிறது. இப்பாடல்கள் நிகழ்ச்சியையோ, ஒரு கருவையோ கொண்டவை யல்ல. பிறர் மனம் மகிழப் பாடும் பாடல்களாக விளங்குகின்றன. கொச்சைச்சொற்கள் பயன்படுத்தப் படுகின்றன. பொழுது போக்குப் பாடலாக அமைந்துள்ளது.

என் குடும்பத்துக் கதையைக் கேளுங்க
சபையோரே -
என் குடும்பத்துக் கதையைக் கேளுங்க
என் மாமனாரும் மொண்டி
என் மாமியாரும் சண்டி
என்னை மாலையிட்ட பொண்டாட்டி
மானங் கெட்ட லண்டி
பாக்கு வெத்தலைய மறக்கமாட்டா
பாய்விரிச்சு படுக்கமாட்டா
எது சொன்னாலும் கேக்கமாட்டா
ஏழுரு சண்டைக்கு
எட்டி எட்டிப் பாக்குவா

எனும் பாடல் தன் மாமன், மாமி, மனைவியைக் கேலி செய்யும் பாடலாக விளங்குகிறது. இப்பாடலை மக்கள் கூடியிருக்கும் இடத்தில் பாடுவர் என்பதைச் 'சபையோரே' என்ற விளியால் அறியலாம்.

மானத்துல மஞ்சு மாதுளங்கா பிஞ்சு
கொல்லு போட்ட கஞ்சி குடிக்கவாடி லெஞ்சி
லெஞ்சி வீட்டுப்புள்ள கஞ்சிக் கழுவுது
காக்கா கருவுது கருகாவி கூவுது
தண்டக்கார முத்தம்மாள கொண்டுகிட்டுப் போவுது

எனும் பாடல் ஓர் இறப்பைக் குறித்துப் பாடுவதாக அமைந்துள்ளது. இப்பாடலும் வேடிக்கைக்காகப் பாடப்படும் பாடலாகவே உள்ளது. இத்தகைய பாடல்களை நிறையப் பாடி மகிழ்கின்றனர்.

## தெருக்கூத்து நாடகங்கள்

பழங்குடி மக்கள் விரும்பிப் போற்றுவது தெருக்கூத்து வகையினைச் சார்ந்த நாடகங்களாகும். விழாக் காலங்களில் மக்கள் முன்னிலையில் நடித்து மகிழ்விக்கின்றனர். இந் நாடகங்களில் பாட்டும் உரைநடையும் விரவி வருகின்றன. பாட்டாலேயே பாத்திரங்கள் அறிமுகம் செய்து கொண்டு, பாட்டாலேயே கதையைக் கொண்டு செல்லும் பாங்கு காணப்படுகிறது. இந் நாடகங்கள் புராணங்களின் கதைகளைக் கொண்டே அமைக்கப் படுகின்றன. மகாபாரதத்தில் காணப்பெறும் சிறு நிகழ்ச்சிகளைத் தங்கள் வார்த்தைகளால் நாடகமாக்கி விடுகின்றனர். இந்நாடகங்கள் எழுதி வைகக்கப்படுவதில்லை. குருவிடம் கேட்டு மனப்பாடம் செய்து கொள்வர். இந்நாடகங்களில் கதையின் கரு மாறாதிருப்பினும் கதையின் நிகழ்ச்சிகளில் மாற்றம் காணப்படுகின்றன. வாய்வழியாகவே இந்நாடகங்கள் வாழ்வு பெறுவதால் காலப் போக்கில் மாற்றம் பெறுவது தவிர்க்க இயலாததாகிறது. இவர்களின் நாடகங்களாக சயந்தவன் சண்டை நாடகம், சராசந்திரன் நாடகம், ஆரவல்லி நாடகம், அரக்கு மாளிகை நாடகம், அபிமன்ன சுந்தரி மாலை நாடகம் முதலியன காணப்படுகின்றன.

## நாடகங்கள் புலப்படுத்தும் குறிப்புக்கள்

1. கதாபாத்திரங்கள் தங்களைத் தாங்களே அறிமுகப்படுத்துவது
2. ஒரு காரியம் செய்வதற்கு முன்னால் மனைவியிடம் தாம்பூலம் பெறுவது.
3. தன்னிலும் உயர்ந்தவர்களிடம் பாதம் பணிந்தேன் என்று கூறுவது.
4. தன்னோடு ஒரு துணைப்பாத்திரத்தை எப்பொழுதும் வைத்துக் கொள்வது.
5. 'ஆனால்', 'சீக்கிரம்' என்ற வார்த்தைகளை எல்லா நேரத்திலும் பயன்படுத்துவது.
6. நாடகத்தைச் சுகமாக முடிப்பது.
7. மூலக்கதையிலிருந்து மாறுபடுவது.
8. வசனமும் பாடலுமாக அமைவது.
9. பின் பாட்டுப் பாடும் ஒருவன் இருப்பது.
10. அரங்கம் இல்லாது வெளிப்படையாகவே அனைத்துச் செயல்களையும் காட்டுவது (நாடகம் அமைப்பு முதற் கொண்டு நடிப்பு வரை).

பழங்குடியினர் தெருக்கூத்து நாடகங்களை இன்று வரை மறவாது போற்றி வருகின்ற பண்பு போற்றுதற்குரியதாகும். இயற்கையோடு இணைந்து வாழுகின்ற மக்களாக இருப்பதால் பழம் பண்பாட்டின் சின்னங்களாக விளங்குகின்றனர். நாகரிகத்தால் தொன்மையை இழக்காத மக்களாக வாழ்ந்து வருகின்றனர். இவர்களின் பாடல்கள், நாடகங்கள் மகிழ்ச்சியான வாழ்வின் வெளிப்பாடாக விளங்குகின்றன.

—o●o—

# திறனாய்வின் புதிய களங்கள்

—தி. இராசா.

இலக்கியத்திற்கென்று சில கொள்கைகள் உள்ளன. அக் கொள்கைகளைத் தொல்காப்பியம் அறிமுகப்படுத்தியது. அறிமுகப்படுத்தியதோடு மட்டுமன்றி, அக் கொள்கைகளைத் திறனாய்வு செய்வதற்கும் சில களங்களைத் தொல்காப்பியம் படைத்தது. தொல்காப்பிய உரையாசிரியர்கள், அக்களங்களைக் கண்டு விளக்கிச் சொன்னதன் வாயிலாகத் திறனாய்வு தொடங்கியது. அவர்கள் தொடங்கிவைத்தத் திறனாய்வு நெறி, மாற்றம் அதிகமின்றி ஒரே நீர்மைத்தாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை தொடர்ந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்டச் சமுதாய மாற்றம், இலக்கியத்தை மட்டுமல்லாது, இலக்கியத் திறனாய்வின் போக்கையும் திசை திருப்பியது. எறும்பின் வரிசை போல சென்று கொண்டிருந்த திறனாய்வு, புதிய களங்களையும் திரும்பிப் பார்க்கத் தொடங்கியது. இம்மாற்றத்தின் முதல் கட்டமாக ஆய்வுக்கு வித்திடும் திறனாய்வுப் போக்கு மலர்ந்தது. தனித்தமிழ்த்தந்தை மறைமலையடிகளின் பட்டினப் பாலை ஆராய்ச்சி, முல்லைப் பாட்டாராய்ச்சி எனும் நூல்களும், ஒவ்வொரு பதிப்பிற்கும் முன்னுரையாக டாக்டர் உ. வே. சா வழங்கியிருக்கும் ஆய்வுரையும் இதில் குறிப்பிடத் தக்கனவாகும். இவ்வகைத் திறனாய்வில் வையாபுரிப் பிள்ளையின் கால ஆராய்ச்சிக் கட்டுரைகளும், டாக்டர் தெ. பொ. மீயின் 'கானல்வரி' நூலும் அடங்குவனவாகும்.

திறனாய்வு வளர்ச்சியின் இரண்டாம் கட்டமாக நயம்காணும் போக்கினைக் குறிப்பிடலாம். இதன் முன்னோடிகளாக பண்டிதமணியும், ரசிகமணியும் விளங்கினர்.

இதனையடுத்து, ரிச்சர்ட்ஸ், பிராட்லி, வின்செஸ்டர், ஆபர்குரோம்பி, நார்த்ரோப்ஃபிரே போன்ற மேலைநாட்டுத் திறனாய்வாளரின் கொள்கைகள் தமிழுக்கு அறிமுகப்படுத்தப்பட்டன. இக்கொள்கைகளின் துணை கொண்டு டாக்டர் மு. வரதராசன் டாக்டர் அ. ச. ஞானசம்பந்தம், அ. மு. பரமசிவானந்தம் ஆகியோர் புதிய திறனாய்வுக் களங்களைப் படைத்தனர்.

அடுத்த நிலையில், திறனாய்வு நெறி முறைகளை அறிமுகப்படுத்தும் நூல்கள் வெளிவரத் தொடங்கின. டாக்டர் மு. வரதராசனின் இலக்கியத் திறன், இலக்கிய ஆராய்ச்சி, இலக்கிய மரபு என்ற நூல்களும், டாக்டர் முத்துச் சிவனின் அசோக வனம், அசலும் நகலும் என்ற நூல்களும், டாக்டர் அ. ச. ஞானசம்பந்தனின் இலக்கியக் கலை என்ற நூலும் இவற்றுள் குறிப்பிடத் தக்கனவாகும்

இதே கால கட்டத்தில், இலக்கியங்களில் - குறிப்பாகத் தற்கால இலக்கியத்தில் பொருள், வடிவம், உத்தி என்பனவற்றைத் திறனாயும் பிரிவொன்று உருவானது. இப் பிரிவினுள் க. நா. சுப்பிரமணியம், சிதம்பர ரகுநாதன், சி. சு. செல்லப்பா ஆகியோர் அடங்குவர்.

இந் நிலையில் பிற துறைகளின் வளர்ச்சி, தமிழையும் தாக்கத் தொடங்கியது. அதன் இன்றியமையாமை கருதி, தமிழோடும் தமிழ் இலக்கியத்தோடும் தொடர்புடைய பிற துறைகள் தமிழிலக்கியத்தோடு உறவு கொள்ளத் தொடங்கின. இதன் விளைவாகச்

சமுதாயவியல் பார்வை, உளவியல் நோக்கு, மானிடவியல் கூறுகள், பண்பாட்டு மரபுகள் என்று இலக்கியத் திறனாய்வு பல்கிளை பரப்பி வளரலாயிற்று.

தொல்காப்பியர் கூறும் 'கூற்று வகை'களும், பாரதியின் 'அக்கினிக் குஞ்சு'ப் பாடலும் ஜெயகாந்தனின் 'ரிஷிமூலம்' என்ற நாவலும் உளவியல் திறனாய்வுக்கு உளப்படும் சிறந்த படைப்புக்களாகும். இதே போன்று பத்துப் பாட்டில் உள்ள 'கூத்தராற்றுப்படை'ப் பாடலும், பிற்கால நாடக இலக்கியமான முக்கூடற் பள்ளுவும், இக்கால நாவலாசிரியை ராஜம் கிருஷ்ணனின் அலைவாய்க் கரையில், கரிப்பு மணிகள், குறிஞ்சித்தேன் போன்ற நாவல்களும் சமுதாயவியல் திறனாய்வுக்கு ஆட்படும் படைப்புக்களாகும்.

சமீப காலத்தில் ஒப்பிலக்கியத் திறனாய்வு பெரிதும் வரவேற்கப் படுகிறது. 'மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசுவதிலோர் மகிமையில்லை' என்ற பாரதியின் கூற்றுக்கு விளக்கமாக இவ் வகைத் திறனாய்வு அமைந்துள்ளது 'இதனுள் உள்ளன எதன் பாலும் இல' என்று திருக்குறளுக்கு நாம் தரும் மதிப்புரை ஏற்புடைத்தன்று மாறாக, 'தம்மபதம், கன்பூசியஸ், மார்க்ஸ், ஒரேசியஸ், டௌடில்ய்ம் ஆகிய சிந்தனைகள் திருந்திய வடிவத்திலும் மேலோங்கிய பண்பிலும் திருக்குறளில் காணப்படுகிறது' என்று ஒப்பு நோக்கி, உண்மை கண்டு சொல்லும் திறனாய்வு, உலகத்தின் பிற அற நூல்களுடன் போட்டியிட்டு முன்னணியில் நிற்கும் பெருமையைத் திருக்குறளுக்குத் தருவதாகும். இலக்கிய உலகில் இன்று பெரிதும் வற்புறுத்தப் படுகின்ற 'இலக்கிய ஒருமை' இவ் வகைத் திறனாய்வினால் நிலை பெறுகிறது. இதனால் 'உலக இலக்கியங்கள் அனைத்தும் ஒன்றே' எனும் கொள்கை வலுப் பெறுகின்றது.

ஒப்பிலக்கியத் திறனாய்வைத் 'தமிழ் கூறு நல்லுலக'த்திற்கு முதலில் அறிமுகப் படுத்தியவர் டாக்டர் தனிநாயக அடிகளாவர். 'பண்டைத் தமிழ் இலக்கியத்தில் நிலவியற் புனைவுகள்' (Landscape in clasical Tamil Poetry) என்ற அவர்தம் ஆங்கிலநூல் கிரேக்க, இலதீன், ஆங்கில இலக்கியங்களோடு போட்டியிடக் கூடிய தமிழ் ஒப்பீட்டுக் களங்களைச் சுட்டிக் காட்டியது. இத் துறையை டாக்டர் க. கைலாசபதி மேலும் போற்றி வளர்த்தார் இத் துறையில் இவர்கள் கண்ட வெற்றி, பலரையும் ஒப்பிலக்கியத் திறனாய்வின் பககம் திசை திருப்பியது. இன்று தமிழகத்தில் அறிஞர் பலர் ஒப்பிலக்கியத் திறனாய்வின் வாயிலாக தமிழ் இலககியங்களின் பெற்றியை உலகோர்க்கு எடுத்து நிறுவிய வண்ணம் உளளனர்.

இங்குக் குறிப்பிடப்பட்ட ஒப்பீட்டுத் திறனாய்வில், பரிணாமத் திறனாய்வு, சூழல் திறனாய்வு, செல்வாக்குத் திறனாய்வு என்பன ஒருசிலவாகும். பரிணாமத் திறனாய்வு, டார்வினின் இரு உயிரியல் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டதாகும். அக் கொள்கைகளாவன:

1. உயிர்களின் வாழ்க்கை, போராட்டத்தையே அடிப்படையாகக் கொண்டது.
2. அப் போராட்டத்தில் வலிய உயிர்களே நிலைத்து வாழ்கின்றன.

டார்வின் கண்டு சொன்ன இவ்விரு உயிரியல் கொள்கைகளைக் காலப் போக்கில் திறனாய்வாளர்கள் இலக்கியத்திற்கும் ஒப்பிட்டுப் பார்க்கத் தலைப்பட்டனர் சிலவகை இலக்கியங்கள் காலப் போக்கில் அழிந்து விடுகின்றன; சில நிலைத்து வாழ்கின்றன. என்று புரூன்டியா (Brunettire) எனும பிரெஞ்சுஇலக்கியத்திறனாய்வாளர் நிறுவினார். இதனுடைய வளர்ச்சியாக ஜான் அடிங்டன் சைமன்ட்ஸ் (John Addington Symonds) எனும் ஒப்பியல் அறிஞர் ஒவ்வொரு இலக்கிய வகையும தோன்றி வளர்ந்து மலர்ந்து பூத்துக் குலுங்கி அழிகிறது என்ற கொள்கையை வெளியிட்டார். இதற்கான காரணங்களை அறிவியல் அடிப்படையில திறனாய்வு செய்யத் தலைப்பட்டனா. இதனைப் பின்வரும் சான்று கொண்டு விளக்க இயலும்.

கலிங்கத்துப் பரணியைத் திறனாய்வு செய்யும் ஒருவர் அதைப் பிறபரணி, நூல்களுடன் ஒப்பிட்டுக் காண்பார். போர்க் களத்தைப் பாடுகின்ற 'மறக்களவழி' என்ற துறைக்கருத்து தொல்காப்பியத்தில் ஊன்றப் பட்டுள்ளது. அது, புறநானூற்றுப் பாடல்களில் நாற்றுப்போல நடப்பெற்றுள்ளது. பின்னர் அது பரணியாக உருவெடுக்கிறது. காலம் செல்லச் செல்லப்பரணிவகை போர்க்களத்தைப் பாடுவதற்குபதிலாக கடவுளையும், ஆன்மாவையும், குருவையும் பாடுகிறது. இதை மரபுமாற்றம் என்பதா? மரபு விலகல் என்பதா? மரபு அழிவு என்பதா? மரபு வளர்ச்சி என்பதா? பரிணாமத் திறனாய்வு இங்கு கைகொடுக்கிறது. அரசியல், சமுதாயக் காரணங்களால் பரணி நூல்களுக்கு இடையேயுள்ள மாறுதல்/விலகல்/அழிவு/ வளர்ச்சி நிலைகளை இத் திறனாய்வின் மூலம் கண்டறிய முடிகிறது.

ஒரு நூலாசிரியரின் உள்ளத்தில் பதிந்திருக்கும் ஒருசில கருத்துக்கள் அவரை அறிந்தோ அறியாமலோ அவர்தம் படைப்புகளில் அதிக ஆட்சி பெறுவதுண்டு. அக் கருத்துக்கள், பிற கருத்துக்களை வென்று, மேலோங்கி நிற்கும். இவை அவரது நூல்களில் இடம் பெறுமானால் அதனைக்கருத்துச் செல்வாக்கு என்பர். நாகலாபுரம் மன்னனின் அவைக்களப் புலவராகவிளங்கியவர் உமறுப்புலவராவர். அடிக்கடி இப்புலவரை இராமயணம் படிக்கச் சொல்லி,மன்னன் அதைக் கேட்பதுண்டு, எனவே இராமயணத்தின் பாடுபொருள், வடிவம், உத்தி, சந்த அமைப்பு என்பன போன்ற கூறுகள் உமறுப்புலவர் உள்ளத்தில் படிந்தன. கம்ப இராமயணத்தின் இத்தாக்கத்தை உமறுப் புலவர் இயற்றிய சீறாப் புராணத் தில் காணலாம். இதே போன்று மு. வ'வின் நாவல்களில் அறவாழி என்ற பாத்திரத்தின் செல்வாககிணைக் காணலாம். இதனால் மு.வ' அவர்களை 'அறிஞர் அறவாழி' என்றே க த. திருநாவுக்கரசு குறிப்பிடுகிறார் கண்ணதாசன் இலக்கியங்களில் 'கண்ண'னின் செல்வாக்கு மிகுதியுண்டு. சங்க இலக்கியங்களில் சில புலவர்கள் அவர்தம் 'ஒருதுறைச் செல்வாக்கு' காரணமாக வெறி பாடிய தாமக்கண்ணியார், மடல் பாடிய மாதங்கீரனார், பாலை பாடிய பெருங்கருங்கோ என்ற பெயர்களைப் பெற்றனர் இவ்வகைத் திறனாயவைச் செலவாக்குத் திறனாய்வு என்பர்.

சில படைப்புகள் சூழல் காரணமாகத் தோன்றுகின்றன. தமிழ், மலையாளம், தெலுங்கு ஆகிய மொழிகளில் தோன்றிய முதல் நாவல்களில் சூழல் அடிப்படையிலானத் திறனாய்வுக்கு அதிக வாய்ப்புண்டு. தமிழில் வேதநாயகம் பிள்ளையின் 'பிரதாப முதலியார் சரித்திரம்', மலையாளத்தில் அப்பு நெடுங்காடியின் 'குந்தலா', தெலுங்கில் நரஹரி கோபால கிருஷ்ணம செட்டியின் 'ஸ்ரீ ரெங்க ராஜீலு சரித்திரடு' என்பன அவ்வம் மொழிகளால் தோன்றிய முதல் நாவல்களாகும. ஆங்கில முறைக் கல்வியாலும், அரசுப பணிகளாலும் உழவர்களுக்கும் ஜமீன்தார்களுக்கும் இடையில் மத்தியதனுக் கூட்டம் ஒன்று வருவானது. இச் சூழலின் பின்னணியில் நாவல் வகைகள் தோன்றின. எனவே சூழலை அடிப்படையாகக் கொண்டு இவை ஒப்பீட்டுத் திறனாய்வு செய்யப் படுகின்றன. இம் முறையினைச் சூழல திறனாய்வு என்பர்.

இங்கு கோடிட்டுக் காட்டிய 'திறனாய்வின் புதிய களங்கள்' பிற துறைகளின் தாக்கத்தினால் தமிழில் காணப்படும் புதிய போக்குகளாகும். ஒரு மொழியின் வளர்ச்சிக்கு அறிவியல் சார்ந்த பிற துறைகளின் செல்வாக்கும் பெரிதும் தேவை. இத் தேவைக் கேற்பத் தமிழிலக்கியத்தின் தற்காலத் திறனாய்வில் அறிவியல் அலை பரவி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.



# ஊர்ப் பெயர்க் களஞ்சியம்

டாக்டர் கு. பகவதி

பெருகியும், சிறந்தும், வளர்ந்து வருமொருத் துறையாகத் தமிழில் ஆய்வுத் துறை அமைகிறது. இருப்பினும் தமிழ் இலக்கிய ஆய்வுகள் நடைபெறும் அளவிற்கு, தமிழரின் பண்டைய வரலாறு, பழம்பெரும் பண்பாட்டு நிலை உளவியல் நிலை போன்றன ஆராயப்படவில்லையென்றே கூறலாம். பண்டைத் தமிழரின் வாழ்வு மிகச் சிறக்க இருந்துள்ளது என்பதை நாம் வரலாற்று மூலங்கள் பலவற்றின் வழியாகவும் புரிந்து கொள்கின்றோம். எனினும் அவற்றை முழுவதுமாக வெளிக் கொணர்ந்து அவற்றை நம் அனுபவமாகக் கருதி கிடைத்த அறிவிற்கு மேற்பட்ட வளர்ச்சியை எண்ணும் மனநிலையைத் தமிழர் இன்னமும் முழுமையாகப் பெறவில்லை. எண்ணித் துணிக கருமம் என்பது வள்ளுவம் காட்டும் சிறந்த வாழ்க்கைப் பாதை. ஆயின் இதனை அறியாமல் ஒவ்வொருவரும் தாமேயுணர்ந்து, பின்னர் எண்ணுவது வளர்ச்சிக்கு வழி கோலுமா? ஒன்று, இரண்டு; மூன்று என எண்ணும் நிலை முன்னாளில் இருந்தே தமிழரிடம் அமைந்தது. இதனைப் போன்றே பல அளவை முறைகளும் இருந்திருக்கின்றன. நாம் அத்தகைய அவர்களின் அளவை முறைகளை அடிப்படையாகக் கொண்டே மேலான வளர்ச்சியை உருவாக்குகின்றோம். அவர்கள் முறையை விட்டு விட்டு, இன்று திரும்பியும் ஆரம்பத்தில் இருந்து தொடங்குவதில்லை. இதனைப் போன்றதே நம் முன்னோரின் வாழ்வியல் முறைகளையும் சிந்தனைகளையும் அறியாது இன்றைய வாழ்க்கை முறையை நாம் நடத்திச் செல்லும் தன்மை எனல் பொருந்தும். எனவே இன்றைய வாழ்வியலுக்கு, பண்டைத் தமிழரின் எண்ணங்கள் அனைத்தையும் தெரிந்து கொள்வது அடிப்படைத் தேவையானதாகும். இதுவே நம் வளர்ச்சிக்கும், வாழ்வியல் முறைகளைக் காலம் கருதி அமைத்துக் கொள்வதற்கும் சிறப்பாக உதவவல்லது.

தமிழரின் வாழ்வுச் சிறப்பினைப் புரிந்து கொள்வதற்கு, நாம் இன்று புதியதாகத் தொடங்கியிருக்கும் ஊர்ப்பெயராய்வு சிறப்பாக உதவுகிறது. ஊர்ப்பெயர்களைப் பற்றிய வரலாற்றுடன், காலங் காலமாகத் தொடரும் பலவித அரசியல், சமயம், சமுதாயம், உளவியல் மாற்றங்களையும் அறிந்து கொளள வாய்ப்பளிககின்றது இவ்வாய்வு.

உலக நிலையிலே அண்மையில் தொடங்கப்பட்ட இந்த ஊர்ப்பெயராய்வு, தமிழகத்திலும் ஓரளவுக்கு இன்று பரவலாக ஆராயப்படத் தொடங்கியுள்ளதை வெளிவரும் நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள் வெளிப்படுத்துகின்றன. தமிழகத்தின் இன்றைய ஊர்ப்பெயர்கள் பெரும்பான்மை ஆய்விற்கு இலக்காகின்றன. மாவட்ட ஊர்ப் பெயர்கள், வட்டஊர்ப்பெயர்கள் என இவை அணுகப் படுகின்றன. கல்வெட்டுகளில் காணப்படும் ஊர்ப்பெயர்களும் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இலக்கியத்தினின்றும் தெரியவரும் ஊர்ப்பெயர்கள் ஆய்வு செய்யப்பட்டு, இரண்டு தொகுதிகளாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ளன. தனிப்பட்ட ஒரே ஊரின் பெயர் குறித்த ஆய்வும் இன்று அமைகிறது. கி. நாச்சிமுத்துவின் தமிழ் இடப்பெயராய்வு என்ற நூல் இவ்வாய்வு குறித்து பல அணுகு முறைகளையும் உள்ளடக்கியுள்ளது. இவ்வூர்ப் பெயராய்வுகள் அனைத்தும் ஊர்களின் பெயர்த் தோற்றத்தைக் காண்பதில் முன்னிற்பதோடு, தொடர்பான பிற கருத்துகளையும் வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றனவாகத் திகழ்கின்றன. மேலும் தமிழர் வரலாற்றைக் காணும்போது ஊர்கள் பற்றிய உணாவு தமிழரிடம் எவ்வாறு பொருந்திக் காணப்பட்டது என்பதை நாம் அறிய இயலு

கிறது. ஊர்ப்பெயர்கள், இலக்கியங்களில் இடம் பெற்ற தன்மை, தொகுப்பு நிலையில் இடம் பெற்ற தன்மை என இரண்டாகப் பிரித்து இவற்றைக் காணலாம்.

## இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் இடம் பெற்றதன்மை

தொல்காப்பியத்தில், ஊர், தேயம், பதி ஆகிய சொற்களின் வழக்கையும்,

'ஊரும் பெயரும் உடைத்தொழில் கருவியும்
யாருஞ்சார்த்தி அவையவை பெறுமே,

போன்ற சில எண்ணங்களே ஊர்த்தொடர்பாக அமைகின்றன. சங்க இலக்கியம் மக்கள் வாழ்வியலைச் சிறப்புறக் காட்டும் நிலையில் மக்கள் வாழ்ந்த இடங்களையும் அவற்றின் பெயர்களையும், இயல்புகளையும் சிறக்கத் தருகின்றன. மதுரை, காஞ்சி போன்ற நகரங்களின் நகரமைப்புகளையும் நாம் காண்கிறோம். சிலப்பதிகாரக்காப்பியம், தமிழகத்தின் மூன்று நாட்டுப் பிரிவின் கீழும் அடங்கியிருந்த பல ஊர்களின் சிறப்பு களைத் தருகின்றது. வரலாற்றுச் சிறப்பு, பக்திச் சிறப்பு போன்ற பல சிறப்புகளால் புகழ் பெற்ற ஊர்களின் நிலையை இவண் காண்கிறோம். பக்தியியக்க காலத்தில் ஊர்கள் பதிகம்பாடப்பெறும் சிறப்பும் பெறுகின்றன. இறைச் சிறப்பும் இயற்கைச் சிறப்பும் இவற்றுள் முதன்மை பெறுகின்றன. காப்பியங்களில் நாடு, நகர் வருணனை போன்றே. சிற்றிலக்கியங்களிலும் ஊர்கள் விவரிக்கப்படுகின்றன. தனித்த ஊர்கள் மேல் எழுந்துள்ள சிற்றிலக்கியங்களும் இங்கே குறிப்பிடற்குரியன. தலபுராணங்களில் தீர்த்தம், மூர்த்தியுடன் தலச்சிறப்பும் விளம்பப் படுகின்றது. தற்காலத்தில் சிறப்பிடம் பெற்று வரும் பயண இலக்கியத் துறையிலும் ஊர்ப்பெயர்கள் தனியிடம் பெறுகின்றன. எனினும் இவற்றுள் பல பக்தி அடிப்படை பயணம் என்ற நிலையில் புராணக் கதைகளையே முக்கியமாகச் சுட்டுகின்றன. கேரள விஜயம், திருத்தலப் பெருமை, தேவிதரிசனம், சேக்கிழார் வழியில் சிவத்தலங்கள், தொண்டை நாட்டுத் தலங்கள, குமரி முதல் வேங்கடம் வரை போன்ற பல பயண நூல்களை இவண் சுட்டலாம். வரலாற்றுச் செய்திகள் எல்லா நூல்களிலும் மிகுதியாக இடம் பெறவில்லை எனினும் பொது நிலையில் பயனுடைதாக பல எண்ணங்களை இந்நூல்கள் தருகின்றன கோவா, கொற்கை, மதுரை போன்ற சில ஊர்கள் வரலாற்று முறையில் ஆராயப்பட்டிருப்பது சிறப்பிற்குரியது. மயிலை போன்ற ஊர்கள் இன்று ஆய்வு பட்டத்திற்காக அணுகப்பட்டிருப்பதும் இங்கே எடுத்தியமபுவதற்குரிய தொன்று

## தொகுப்பு நிலையில் ஊர்கள் இடம்பெறல்

குழப்பமே சட்டதிட்டங்கட்கு அடிப்படை. சிக்கல் இல்லை யெனில் அங்கே எந்த விதத்தடையும் எழத்தேவையில்லை. இந்நிலையில் மொழியின் சீரான அமைப்பும், மொழியிலக்கியங்கள் மரபாக அமையும் தன்மையும் மாறுபடத் துவங்கும் போது அங்கே இலக்கணத் தடைஎழுகிறது. மேலும் மொழி வளர்ச்சியில் பல்வேறு சொற்களின் பெருக்கமும் பல்வேறு பட்ட சிந்தனைகளின் புதுமையும், மரபும் பழமையும் காக்கும் நிலைமை கருதிய சட்ட திட்டங்கட்கு அடிப்படையாகின்றன. இந்நிலையில் தொல்காப்பியத்தையும் எண்ணலாம்.

'தமிழ் அகராதிக் கலை' நூலாசிரியர் சுந்தர சண்முகனார் தொல்காப்பியத்தில் அமையும் உரியியலைக் கொண்டு முதல் அகராதி இது எனக் கூறுகின்றார். இடையியலிலும் மரபியலிலும் இக்கூறு பொருந்தியுள்ளமையையும் இயம்புகின்றார் (பக் - 6). எனினும் இச் சொற்களுக்கு மட்டும் ஏன் பொருள் கூறுகின்றார் என்று நோக்கும்போது,

பொருள், வினைச் சொற்கள் பொருள் விளக்கத்துடனும், உரிச் சொற்கள் அன்று பொருள் விளக்கமின்றியும் இருந்திருக்கும் என்பது அறிஞர் கருத்து. ஆயின் உலக வழக்கில் மிகுந்த பயிற்சியில்லாமை, செய்யுள் வழக்கில் தேவைப்படும் நிலைமை இவ்வ கருதியும், பல பொருள் கருதிய நிலையில் ஏற்படும் குழப்பம் தவிர்க்கவும், இச் சொற் களுக்குத் தொல்காப்பியர் பொருள் உரைத்திருக்கலாமோ எனவும் எண்ணத் தோன்று கிறது. அவன், அவள் பெயர்ச் சொற்கள். இவற்றுள் பொருள் குழப்பம் இல்லை. ஆயின், உகப்பே உயர்தல்; உவப்பே உவகை (உரி - 8) என்பதனுள் இரண்டும் ஓரெழுத்து மாற்றம் காரணமாகப் பொருளில் மாற்றம் பெறும் நிலையைக் காண்லாம். இதனைப் போன்றே ஒரு பொருளைக் குறிக்க, நான்கு சொற்களைச் சுட்டுதலும் அமைகிறது.

'ஒய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்' (உரி - 32)

எனவே பொருள் குழப்பம், பொருள் விளக்கமின்மை காரணமாகச் சிக்கல் ஏற்பட்டு இருக்கலாமோ எனத் தோன்றுகிறது, மரபியலில் கூறப்படும் பொருட்களும் இத்தன்மை யனவே. மரபுமாறக் கூடாது;மாறின் தமிழ் மொழியின் தனித்தன்மை அழியக் கூடும் என்ற எண்ணம் எழ, நுணுக்கமாகத் தமிழர் இட்ட பெயர் அனைத்தையும் கூறிச் செல்கின்றார் தொல்காப்பியர். இந்நிலையில் மொழி வளர வளர, மொழியில் புதுப்புது சொற்கள் புகப் புக, மேலும் சிக்கல் பொருள் நிலையில் தோன்றியிருக்கக் கூடும் என்பதையும் எண்ணலாம். எனவேதான் தமிழ்வல்லோர் இவ்வாறு பொருள் கூறும் துறையினை மேன் மேலும் வளர்த்து வந்துள்ளனர். மேலும் கருதிய பொருளையுணர்த்த எழுந்ததே மொழி. எனவே மொழியில் உள்ள சொற்களின் பொருளை யாவரும் தெளிவாக உணர்ந்திருத்தல் தேவை. எனவே அனைத்தையும் நினைவில வைத்துக்கொள்ள இயலாத நிலையில், பொருள் புரிகின்ற அளவிற்கு வழிவகைகள் செய்கின்ற நிலையை இத்தகைய தொகுப்புகள் தருகின்றன.

தொல்காப்பியத்தை அடுத்து எழுந்த திவாகரம், பிங்கலம், சூடாமணி, கயாகரம், உரிச்சொல் நிகண்டுகள் பற்றியும், வினைச் சொற்கள், பெயர்ச் சொற்கள் போன்ற சொற்கள் இவற்றுள் சேருதல் பற்றியும், உரிச் சொல், நிகண்டு போன்ற பெயர்களின் தன்மை போன்ற அனைத்தையும் தம் நூலுள் விளக்கும் தமிழ் அகராதிக் கலை ஆசிரியர் இவற்றின் வளர்ச்சி நிலையில் பிற்காலத்தில் அகரவரிசை அகராதியாக, முதலில் தோன்றிய அகராதியாக கி பி 1954-இல் எழுந்த இரேவண சித்தரின் நூலைத் தருகின்றார் (பக் - 22). முதல் எழுத்து அகர வரிசை மட்டுமே இதனுள் அமைய, பிற நாட்டாரின் நுழைவு மேலும் பல வளர்ச்சிகளை அமைத்ததுடன் எளிமை நிலையில் பொருளைப் புரிந்து கொள்வதற்கு வழி செய்ததையும் காண்கின்றோம். செய்யுள் நடை உரைநடையாகியதையும், முழுவதும் அகரவரிசைப் படுத்தப்பட்டதையும், அருஞ்சொற் களே அன்றி, எளியசொற்களும் இவண் இடம் பெற்றதையும் இங்கே குறிப்பிடலாம். இத்தகைய நிலையின் வளர்ச்சி, மேலும் காலவளர்ச்சியில் விரிவு பெறுகிறது. ஒரு சொல் பொருள் மட்டுமன்றி, விளக்கமும் அமைகிறது. அபிதான சிந்தாமணி, சிறப்புப் பெயர் அகராதி போன்றவற்றைச் சுட்டலாம். தொகுப்பில் முழுமையான வளர்ச்சி நிலையாகக் கலைக் களஞ்சியத்தைக் காட்டலாம். உலகச் செய்திகள், கிடைத்தவரையிலும் அனைத்தும் தொகுக்கப் பட்டு, அகரவரிசையில், வரலாற்று நோக்கில் தரும் நிலையில் இத்தகு முயற்சி போற்றத் தக்க முயற்சியாக அமைந்துள்ளதைக் காண்கின்றோம்.

அகர வரிசையுள் இடம் பெற்ற பல செய்திகளுள் இடப் பெயர்களும், ஊர்ப் பெயர்களும் சிறப்பிடம் பெறுகின்றன. பிங்கல நிகண்டு அவனி வகை என்ற தலைப்பில் இவற்றைத் தருகிறது. மண்ணுலகின் மறுபெயர்களைத் தருகிறது. காவிரிப்பூம்பட்டினம் என்பதற்கு.

'காகந்தி புகார், காவிரிப் பட்டினம்' என உரைக்கும் தன்மையில், இந்நூல் எழுதப்பட்ட காலதித்லும் அதற்கு முன்னும் இவ்வூர் என்னென்ன பெயர்களைக் கொண்டு திகழ்ந்தது என்பதை அறிய இந்நிலை துணைபுரியக் காணலாம். பிற நிகண்டுகள் இடப்பெயர்த் தொகுதி என்ற தலைப்பில் இத்தகைய செய்திகளைத் தருகின்றன, இவற்றுள் இடத்திற்குரிய பிறசொற்களும், ஊர்களின் பிற பெயர்களும் தெளிவுபடுகின்றன. சொல் நிலையில் இவை அமைய, சிறிது வளர்ச்சியை அபிதான சிந்தாமணி, சிறப்புப் பெயர் அகராதிகளில் காண்கின்றோம். எனினும் இவற்றுள் ஊர்ப்பெயர்கள் அனைத்தும் இடம் பெற்று விட்டதாகக் கூறுதல் இயலாது. சான்றாக 'மயிலாப்பூர்' என்ற ஊர்ப் பெயரை, அபிதான சிந்தாமணியில் காணயியலவில்லை. ஆயின், "மயிலைமான்-வாமநாகபுரம்; நேமிநாத தீர்த்தங்கரர் சொற்படி கடல் கொண்ட போது, அதற்கு மேற்கில் தன்பேரால் மயிலையென்னும் பட்டணம் கட்டிய சைன அரசன். இதுவே மயிலாப்பூர்" (பக். - 1260) எனத் தரும் நிலையில் மயிலாப்பூர் பற்றிய எண்ணம் பார்க்கின்றோம். ஆயின் இது புராணக்கதை போன்றதொரு சிந்தனையாக அமைகிறதே யொழிய, வரலாற்றுப் பார்வைபட்ட குறிப்பாக தோன்றவில்லை. சிறப்புப் பெயர் அகராதியும் மயிலை பற்றிய விளக்கம் அளிக்கிறது. எனினும் சுட்டப்படும் கருத்து, மேம்போக்காக, கதைகளின் விளக்கமாகவே அமைவதைக் காண்கிறோம். (பக் - 345). எனவே புராணக் கதைகளைப் பற்றிய நம்பிக்கை அடிப்படையிலேயே, இவர்களின் விளக்கமும் அமைகிறது எனல் பொருந்தும். கலைக் களஞ்சியம் இவ்வெண்ணங்களுடன் வரலாற்றுச் செய்திகளையும் தெளிவாக்கும் நிலையில் சிறப்பாக அமைகிறது.

இவ்வாறு, ஊர்ப்பெயர்த் தொடர்பான மூன்று கோணப் பார்வைகளைத் தமிழரிடம் காண்கின்றோம். ஆய்வு நிலை ஒன்று; வருணித்தலும், விளக்கலும் இன்னொன்று; தொகுப்பு நிலை மூன்றாவதாக அமைகிறது. இம்முப்பார்வைகளையும் தன்னுள் அடக்கிய நிலையில், மேலும் சில சிந்தனைகளைப் பெறுதல் இயலுமா? என்ற நோக்கில் எழுந்ததே ஊர்ப் பெயர்க் களஞ்சியம் என்ற இந்தப் புதிய எண்ணம்.

## ஊர்ப்பெயர்கள் களஞ்சியம் — நோக்கமும் அமைப்பும்.

களஞ்சியம் என்ற சொல்லுக்குப் பண்டக சாலை பொக்கிஷ சாலை என்ற இரண்டு பொருட்களையும் தமிழ் அகராதி தருகிறது. இவையிரண்டும் மனித வாழ்விற்கு மிகத் தேவையானது. நம் சான்றோர் இவற்றை மதித்தனர்; தேவையெனக் கருதினர். இருப்பினும் அவர்களிடமே கல்வியின் பெருமை கருதிய பல சிந்தனைகளைக் காண்கின்றோம். கற்றிலனாயினும் கேட்க; செவிக்குணவில்லாத போது சிறிது வயிற்றுக்கும் ஈயப் படும் போன்ற உயர்ந்த எண்ணங்களும் காணப்பட்டன. எனவே தான் பொருளைக்குவித்து வைக்கும் இடங்களைக் களஞ்சியம் என்று சுட்டிய சொல்லால் அறிவு வயிப்பட்ட செய்தி களைக் குவித்துத்தரும் நூலினையும் களஞ்சியம் எனக் குறித்தனரோ எனத் தோன்றுகிறது. இந்நிலையில் செய்திகளைக் குவித்துத் தருகின்ற கலைக களஞ்சியம் போன்றதொரு நிலை யில், தோற்றம் பெறத்துவங்கியுள்ளது ஊர்ப்பெயர்க் களஞ்சியம். பல்வேறு பட்ட செய்தி களைத் தொகுத்துத் தரும் நிலையில் கலைக் களஞ்சியம் அமைகிறது. ஊர்ப்பெயர்க் களஞ்சியத்தில் ஊர்ப்பெயர்த் தொடர்பான, ஊர்தொடர்பான செய்திகள் அனைத்தும் இடம்பெறும்.

ஊர்ப்பெயராய்வுத் துறையில் பெயர் மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, சிந்தனைக் குட்படுகிறது. ஊர்ப்பெயர் எவ்வாறு தோன்றிற்று? மரூஉப்பெயரா? இயல்பாக எழுந்த பெயரா? பொதுக் கூறு சிறப்புக்கூறு உணர்த்தும் எண்ணச் சிதறல்கள் என்னென்ன? வட்ட நிலை, மாவட்ட நிலையிலான இப்பார்வைகள் தரும் அவ்வட்ட மாவட்டத்தின் நில அமைப்பு, மக்கள் நிலை என்ன என்பவை இங்கு நினைக்கப் படுகின்றன. ஆயின் ஊர்ப்பெயர்க் களஞ்சியத்தில் ஊர்கள் பற்றிய அனைத்துச் செய்திகளும் தொகுக்கப்பட்டு, பெயருக் குரிய முக்கியத்துவம், ஊரின் பல்வேறு பட்ட இயல்புகட்கும், அங்குள்ள மக்கள் வாழ்க்கை முறைகட்டும், காலந் தோறும் அவ்வூர் பல சூழல் காரணமாக மாறி வந்துள்ளமைக்கு உரிய காரணங்கள் போன்ற அனைத்திற்கும் அளிக்கப் படுகிறது. எனினும் தொகுப்பாக மட்டும் இச் செய்திகள அமையாது, தொகுத்தும், பகுத்தும், ஆய்வு செய்யப்பட்டு, புதிய எண்ணங்களை புலப்படுத்தும் முயற்சி மேற்கொள்ளப்பட விருக்கிறது. எனவே வரலாற்றுப் பார்வையுடன் கூடிய ஆய்வாக, ஊரின் தோற்றக்காலம் தொட்டு, சிறந்து விளங்கிய காலம் வரையிலும் அல்லது மறைந்து போன காலம் வரையிலும் அல்லது இன்று வரை காணப்படும் நிலை வரைக்கும், பலவும் நோக்கப்படும் நிலை ஊர்ப் பெயர்க் களஞ்சியத்தில் அமைகிறது. அமைப்பு என்ற முறையில்,

1. தமிழகத்தின் ஊர்ப் பெயர்கள் அனைத்தையும் தொகுத்தல்.

களப்பணி மூலமாகவும், நூல்கள் மூலமாகவும் இன்று வழங்கப்படும் ஊர்ப் பெயர்கள் தொகுக்கப்படல்.

அன்று தொட்டு இன்று வரையிலான, இலக்கியங்கள், கல்வெட்டுகள், நிகண்டுகள், அகராதிகள் போன்ற வற்றினின்றும் கிடைக்கக் கூடிய ஊர்ப் பெயர்களைத் தொகுத்தல்

2. தொடர்பான அனைத்துச் செய்திகளையும் வரலாற்று மூலங்கள் மூலமாகவும் களப்பணி மூலமாகவும் திரட்டுதல்.

3. ஊர்களை அகரவரிசைப்படுத்துதல்.

4. ஒவ்வொரு ஊர்ப்பெயர் வரலாற்றினையும், தொடர்பான அனைத்துச் செய்திகளையும் அடிப்படையாகக் கொண்டு வரலாற்றடிப்படையில் நோக்குதல்; வகைப்படுத்துதல், ஆராய்ச்சி நோக்கில் எழுதுதல்; ஊர்ப்பெயர் தோற்றக் காரணத்தையும் தெளிவு படுத்துதல்; புராணக் கதைகளை ஆராயாது, அவ்வாறே சுட்டாது, அவற்றுள் உண்மை காண விழைதல்.

5. தொகுதியின் முடிவில் தமிழகத்தின் நில அமைப்பு; தமிழரின் ஊர்ப் பெயரிடு முறைகள்; ஊர்ப்பெயர் காலத்தால் பாதிக்கப் பட்டு வரும் தன்மைகள்; இவை புலப்படுத்தும் தமிழர் வாழ்வியல் முறைகள்; தமிழகத்தின் இலக்கிய, மொழி வரலாறு; பிற புதிய கண்டு பிடிப்புகள் இவை இணைக்கப் படல்.

இந் நிலையில் ஒரு துறையில் ஆழ்ந்த பார்வை செலுத்தி, பல துறைகளின் இருண்ட பகுதிகளையும் வெளிச்சத்திற்குக் கொணரலாம் என்ற நம்பிக்கைஅடிப்படையில், ஆய்வுக் களஞ்சியமாக, வரலாற்றுப் பெட்டகமாக இவ்வூர்ப் பெயர்க் களஞ்சியம் செயல் படத் துவங்குகிறது. எடுத்துக் காட்டாக இவண் மயிலாப்பூர் என்ற ஓர் ஊர் பற்றிக் காணலாம்.

**மயிலாப்பூர்**

(Mylapore; Ūr - suffix; Mayil-Peacock - Prefix; The Place named after abundance of Peacock.)

கோபுரத்தில் இருந்து குப்பைமேடாகத் தாழ்வதும், குப்பைமேட்டில் இருந்து கோபுரமாக உயர்வதும் 'ஊர்களின் வரலாற்றில் நாம்காணும் இயல்பான நிகழ்ச்சி. இவ்விரு உயர்வு தாழ்வுக்கு மிடையேயும் புலனாகும் ஊர் வரலாறும் பரந்த தொன்றாக அமைகிறது. எனினும் சில ஊர்கள் பெரும்புனலில் கற்சிறைபோல், பல்வித சூழலிலும் தன் சிறப்பு குன்றாது அமைவதையும் வரலாறு காட்டுகிறது. சான்றாக அமையும் ஊர்களுள் ஒன்று மயிலாப்பூர்.

'வார் வளர் மலை மென் கொங்கை வளைகடல் உடுக்கைச் செல்லப்
பார் மகண் முகமேயாகும் பரவு முத்தமிழ் சேர்நாடு
சோர்வது நுதலேயாகும் துலங்கிய தொண்டைநாடு
சீர் வளர் திலகமேயாஞ் சென்னை மாநகரமாதோ.'

என வருணிக்கப்படும் சென்னை மாநகரின் (பார்க்கவபுராணமென்னும் விநாயக புராணம் - திருநகரப் - 6) சிறப்புமிக்க பகுதியாக இன்று விளங்குகிறது மயிலாப்பூர்.

நமது பண்டைய ஊர்கள் பற்றிய ஆய்வைத் தொடங்க, நமக்குத் துணைபுரிவன சங்ககால இலக்கியங்களும் தொல்காப்பிய மென்னும் இலக்கண நூலுமேயாம். பண்டைத் தமிழரின் வாழ்வியல் உண்மைகள் பலவற்றையும் தெரிந்து கொள்ளத் துணைபுரியும் தொல்காப்பியம் ஊர்ப்பெயர் ஆய்வுக்குரிய பல எண்ணங்களைத் தரவில்லை. ஆயின் சங்கப்பாக்கள், தமிழகத்தின் பல ஊர்கள் பற்றியும், அவற்றின் வணிகச்சிறப்பு, வரலாற்றுச் சிறப்பு பற்றியும் சிறப்பாக தருகின்றன. எனினும் அவற்றுள் மயிலாப்பூா பற்றிய எந்த ஒரு எண்ணத்தையும் காணயியலவில்லை. மட்டுமன்றி, தொடர்ந்து எழுந்த இலக்கியங்களாகிய சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், பதிகம்பாடி, பக்தியிலக்கியத்தைத் துவக்கி வைத்த காரைக்கால் அம்மையாரின் பதிகங்கள் போன்றவைகளிலும் கூட மயிலாப்பூர் பற்றிய எந்த எண்ணமும் இல்லை. எனினும் பாடல் பெறவில்லை; இலக்கியக் குறிப்புகள் இல்லை என்பதால், ஒரு ஊரே இல்லை என்று எளிதில் சொல்லி விடுதல் இயலாது என்ற எண்ணத்தைத் தரும் படியாக அமைகிறது மயிலாப்பூர் பற்றிய பிறநாட்டார்ச் சான்றுகள்.

கி. பி 191 முதல் கி. பி 161 வரை வாழ்ந்து வந்ததாகத் தெரியவரும் தாலமியின் குறிப்புகள் மயிலாப்பூர் பற்றிய எண்ணத்தைப் பெறச் செய்கின்றன.

''மனார்பா - மலியர்பா வணிகச் சந்தை நகரம்'' - மலியார்பா என்பது மயிலாப்பூர் என்ற ஊரைக் குறிப்பிடும். மயிலையில் அக் காலத்தில் வணிகச் சந்தை கூடிற்று அதற்கு மலியார்பா எம்போரியம் என்று பெயர். (பக் - 83,88)''

''முசிறி மலையாளக் கடற்கரையின் மிகப் பண்டைய வாணிகத் தலம். இங்கு இயேசுநாதரின் சீடராகிய செயின்ட் தாமஸ் மேலை நாட்டிலிருந்து வந்து இறங்கியதாக வரலாறு கூறுகிறது. அவர் மலையாள நாட்டில் ஏழுயேசுக் கோயில்களைக் கட்டிய பிறகு அங்கிருந்து புறப்பட்டு, கிழக்குக் கடற்கரையில் உள்ள சென்னையின் ஒருபகுதியான சாந்தோம என்ற பகுதிக்கு வந்தார். சென்னைசாந்தோமில் அவர் இறந்து விட்டதாகவும், அங்குள்ள வேதக் கோயிலில அவருடைய எலும்பு சின்னங்கள் அடக்கம் செய்யப்பட்டதாகவும் வரலாறு கூறுகிறது. (பக், 47)

மார்க்கோபோலோவும் புனிதர் தாமஸைப் பற்றி விளக்கமாக எழுதியுள்ளார் என இந்நூல் குறிப்பிடுகிறது (பக் - 46).

கி. பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த பெரிப்புளூஸ் குறிப்பும் மயிலாப்பூர் துறை முகமாக இருந்திருக்கக் கூடிய எண்ணத்தைத் தருகின்றது. இவரின் 'சோபட்ணா' என்ற பெயர் சுட்டலில் இத்துறை முகம்பற்றிய எண்ணத்தைக் காண்கின்றோம்.

'இந்தப் பிரதேசத்தின் வணிகச் சந்தை கூடும் நகரங்களில் டிமிரிகாவிலிருந்தும், வடக்கிலிருந்தும் உள்ள துறைமுகங்களிலிருந்து வரும் கப்பல்கள் தங்குவதற்கு வசதியான இடங்களில் முதன்மைத்தானம் வகிப்பது காமரா என்பதாகும். அதற்கடுத்தது பொதுகா என்பது. அதற்கடுத்தது சோபட்ணா' என்ற எண்ணத்திற்கு விளக்கவுரையாக, இது பட்டணம் என வழங்கப்படும் சென்னைப்பட்டினத்தைக் குறிப்பிடும். மயிலையைத் திரு வல்லிக்கேணியுடன் தான் குறிப்பிட்டு வந்தனர். சோ. பட்ணா என்பது அழகு பொருந்திய பட்டணம் என்று பொருள்படும். இது சோ பத்மா என்று இருந்திருக்கிறது. ஆகையால் சோ. பத்மா என்பது அழகிய தாமரைமலர் (அல்லிமலர்) உள்ள இடம் என்று பொருள் படுகிறது. ஆகையால் கி. பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் சென்னையின் பெயர் திருவல்லிக்கேணி என்றும் இருந்தது என்பது இதனால் பெறப் படுகிறது (பெரிப்புளூஸ், பக் - 264, 267)

இக் குறிப்புகள் மயிலாப்பூர் ஒரு சிறந்த வணிக நகரமாகத் திகழ்ந்திருக்கிறது; சிறந்த துறை முகமாக இருந்திருக்கிறது; மக்கள் இங்கே செழிப்புடன் வாழ்ந்திருக்கிறார் கள் என்ற எண்ணம் தரவல்லவையாக அமைகின்றன. இந்நிலையில் மயிலாப்பூர் பற்றிய குறிப்புகள் பண்டைய இலக்கியச் சான்றுகளில் இல்லை எனக் காணினும், பிற சான்றுகள் எதுவும் உளவா என ஆராய்தல் இன்றியமையாததாகிறது. ஆராயும் போது தொடர்ந்த கால இலக்கியங்கள் இப்பிற நாட்டார் எண்ணங்களில் உண்மை பொதிந்து கிடக்கின்றது என்பதை யுணர்த்தும் நிலையில் அமையக் காணலாம்.

தமிழரின் வரலாற்றைப் பொறுத்த வரையிலும் மயிலை பற்றி முதற் குறிப்பாக அமைவன திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களேயாம். எனினும் இவர் தனித்த பதிக மாக இக் கோயில் பற்றியியம்பாது வைப்புத் தலமாகவே சுட்டிச் செல்கின்றார்.

மங்குல் மதி தவழும் மாட வீதி மயிலாப்பில் உள்ளார் - புக் - திருத் - 1.
மயிலாப்பின் மன்னினார் - காப்புத் திருத் - 12.
மயிலாப்புள்ளே செடிபடு வெண்டலையொன்றேந்து வந்து - திருவொற்றியூர்த் - 6

இப் பாடல்களினின்றும், பல செய்திகள் இவ்வூர்த் தொடர்பாகத் தெரிய வரவில்லை எனினும், மாடவீதி மயிலாப்பூர் என்னும் எண்ணம் நோக்குதற்குரியது.

இவரைத் தொடர்ந்து இவர் காலத்தவரான சம்பந்தர், இப்பதியின் சிறப்பைப் பதிகமாகப்பாடும் தன்மை சிறந்த வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கிறது.

மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சர மமர்ந்தான் - 183 - 1

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச்சுரத்தான் தொல் கார்த்திகை நாள்
தளந்தேந்திய முலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய் - 183 - 3.

ஊர்திரை வேலையுலாவு முயர் மயிலைக்
கூர் தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார் தரு சோலைக் கபாலீச் சுரமமர்ந்தான்
ஆதிரை நாள் காணாதேபோதியோ பூம்பாவாய் - 183 - 4.

நெய்ப்பூசு மொண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய் - 183 - 5.

மடலார்ந்த தெங்கின் மயிலையார்மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச்சுர மமர்ந்தான் - 183 - 6

மலிவிழா வீதிமட நல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச்சரமமர்ந்தான்
பலிவிழாப்பாடல் செய் பங்குனி யுத்திர நாள்
ஒலி விழாக் காணாதே போதியோ பூம்பாவாய் - 183 - 7.

இவருடைய பாடல்கள் மிகத் தெளிவாக இவ்வூர் கடற்கரையில் அமைந்த நிலையைத் தருகின்றன. கடலாட்டு, புன்னையங்கானல், ஊர்திரை வேலையுலாவும் உயர் மயிலை போன்ற குறிப்புகள் கடற்கரையைச் சார்ந்தமையை வெளிப்படுத்துகின்றன. கடற்கரை நகரமாகத் திகழ்ந்த இது மிகச்சிறந்த மக்கள் குடியிருப்புப் பகுதியாகவும் திகழ்ந்துள்ளது என்பதையும் இப்பதிகக் கருத்துகள் தருகின்றன. வருடம் முழுவதும் விழாக் கொண்டாடியிருக்கின்றனர். இவ்வாறு விழாக் கொண்டாடும் அளவிற்குச் செல்வச் செழிப்பும் தென்பட்டுள்ளது. செல்வச் சிறப்புக்கு அடிப்படை வாணிபமாக இருந்திருக்கலாம். பூம்பாவை பற்றிய செய்தியும், அவள் சிவநேசர் என்ற வணிகரின் மகள் என்ற குறிப்பும், இங்குச் செல்வர்கள், வணிகர்கள் நிறைந்து இருந்திருக்கின்றனர் என்ற எண்ணத்தைப் பெறும் வாய்ப்பு அமைக்கின்றன. கடற்கரைப் பட்டின வணிகம் என்னும் போதே அது துறைமுகம் என்ற எண்ணமும் அமைகிறது.

இந் நிலையில் அப்பர், சம்பந்தர் பாடல்கள் இறைச்சிறப்புடன், ஊர்ச்சிறப்பையும் சுட்டும் நிலையில் இவர்கள் காலத்துக்கு முன்னரேயே இவ்வூர் வாணிபத்தில் மிகச்சிறப்பாகத் திகழ்ந்திருக்க வேண்டும். பின்னர் இங்குள்ள கோயிலும் சிறப்புப் பெற்றுத்திகழ, தலச்சிறப்பும் பெறும் நிலையை மயிலை அடையத் தொடங்கிற்று எனக் கருதுதல் இயலுகிறது.

தொடர்ந்த கால இலக்கியங்களிலும் இவ்வூர்ச் சிறப்பு நவிலப்படுகிறது.
திருமங்கையாழ்வார், ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும மாடமயிலைத்
திருவல்லிக்கேணி கண்டேனே - நாலா - 1069

என்றும், திருமழிசையாழ்வார்,

நீளோதம் வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்
ஐந்தலைவாய் நாகத் தணை - நாலா - 3518

என்றும் சுட்டும் தன்மைகள் இக்கடற்கரைப் பட்டினத்தின் சிறப்பினைத் தருகின்றன. பெரிய புராணத்தில் வாயிலார் நாயனாரின் பிறப்புப் பற்றிக் கூறும் தன்மையும் இவ்வூர்ப் பெருமையை வெளிக் கொணரவல்லது.

சொல்விளங்கு சீர்த் தொண்டை நன்னாட்டிடை
மல்லல் நீடிய வாய்மை வளம்பதி
பல்பெருங்குடி நீடு பரம்பரைச்
செல்வம் மல்கு திருமயிலாபுரி - வாயிலார் - 1

நீடு வேலை தன்பால் நிதி வைத்திடத்
தேடும் அப்பெருஞ் சேம வைப்பாமென
ஆடு பூங்கொடி மாளிகை அப்பதி
மாடு தள்ளு மரக்கலச் செப்பினால் - ,, 2

கலஞ் சொரிந்த கரிக் கருங்கன்று முத்(து)
அலம்பு முந்நீர் படிந்தணைமேகமும்
நலங்கொள் மேதி நன்னாகுந் தெரிக்கொணா
சிலம்பு தெண்டிரைக் கானலின் சேணெலாம் - ,, 3

என இதன் இருப்பிடத்தைக் கூறி மேலும், ஊரின் சிறப்பினை, சேக்கிழார்,

வீதி எங்கும் விழா அணிக் காளையர்
தூதியங்கும் சுரும் பணி தோகையர்
ஓதி எங்கும் ஒழியா அணி நிதி
பூதி எங்கும் புனைமணி மாடங்கள் - ,, 5

எனச்சுட்டுகின்றார். கலிங்கத்துப் பரணி இதனைப்பண்டை மயிலை எனச் சுட்டும் தன்மையும் (534) அமைகிறது.

இவ்வூரை, மயிலாப்பு என்றும் குறிக்கும் வழக்கு பின்னரும் இருந்த நிலையை, நச்சினார்க்கினியரின் தொல்காப்பியக் குற்றியலுகரப் புணரியல் (12) உரைக் குறிப்பு தருகிறது. சாசனங்களும் மயிலாப்பு எனச் சுட்டுவதை மு. இராகவையங்கார் தம் இலக்கிய சாசனவழக்காறுகள் நூலுள் குறிப்பிடுகின்றார் (பக்-60). 'புலியூர்க் கோட்டத்து மயிலாப்பில் வியாபாரி' என்பது சாசனத் தொடர் என்கின்றார். அருணகிரிநாதர் திருப் புகழிலும் முருகன் சிறப்பில் இவ்வூர்பற்றிய எண்ணம் அமைகிறது (திருமயிலை - 306).

இத்தகைய மயிலாப்பூர் தொடர்பான அனைத்துச் சான்றுகளும், இவ்வூர் பற்றியதொரு சித்திரத்தை நம்மனத்துள் பதியுமாறு தருகின்றன. சிறந்த கடற்கரை ஊர், வாணிபநகரம், துறைமுகம், மாடமாளிகைகள் கொண்ட தெருக்கள், விழாமலிநகர், சிவன், முருகன் தெய்வச் சிறப்பு முதலியவை இவ்வூர் பற்றிய மேன்மையைத் தரும் வண்ணம் அமைகின்றன. இவ்வூர் பேரூராக இருந்ததா? எந்த பெயரால் சுட்டப் பட்டது என்பதையும் இலக்கியக் குறிப்புகளுடன், மயிலாப்பூர் தொடர்பான கல்வெட்டு களும் தருகின்றன.

பழங்காலத்தில் தமிழகத்தின் வடபகுதி தொண்டை மண்டலம் எனச் சுட்டப் பட்ட தன்மையை வரலாறு தருகிறது. இந்நிலையில் மயிலாப்பூரும் தொண்டைமண்டலத்தின் நடுப்பகுதியாக இருந்திருக்கின்றமையை நாம் உணரக் கூடுகின்றது. தொடர்ந்த காலத்

திலும் இவ்வூர்ப் பகுதிகள் தொண்டை மண்டலப் பகுதியாகவே சுட்டப்பட்டிருக்கின்றன என்பதை நாலாயிர திவ்விய பிரபந்தம் சுட்டும்,

'மன்னு தண்பொழிலும் வாவியும் மதிளும்
மாடமாளிகையும் மண்டபமும்
தென்னன் தொண்டையர் கோன் செய்த நன்மயிலைத்
திருவல்லிக் கேணி நின்றானை'
நாலா - 1077

என்ற பாடல் காட்டுகிறது மேலும்

'ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலைத்
திருவல்லிக் கேணி கண்டேனே' நாலா - 1069

'தேனமர் சோலை மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி கண்டேனே'
நாலா - 1076

என்ற பாடலடிகளும் திருவல்லிக்கேணி மயிலாப்பூரின் ஒரு பகுதியாக இருந்து பின்னர் இறைச் சிறப்பும், மக்கட் தொகை பெருக்கமும் காரணமாகத் தனி ஊராக அமைந்தது என்ற குறிப்பைத் தரும்படியாக அமைகின்றன.

இடைக்காலத்தில் தமிழ்நாட்டை மிகச் சிறப்புடன் ஆண்டவர்கள் சோழ மன்னர்கள் இவர்கள் காலத்தில் இவ்வூர் பற்றிய எண்ணங்களை நோக்கவும் சில செய்திகள் புலனாகின்றன. ஐயங் கொண்ட சோழ மண்ட...... புலியூர்க் கோட்டமான குலோத் துங்க சோழ ...திருமயிலாப்பூர் போன்ற கல்வெட்டுச் சான்றுகளும் (சென்னைமாவட்டக் கல்வெட்டுகள் 1967 / 181) கிடைக்கின்றன.

இதனை நோக்க, சோழர்காலத்தில் சோழ மண்டலத்தில் புலியூர்க் கோட்டத்தின் கீழ் இவ்வூர் இருந்தமை புலப்படுகிறது. இவர்கள் காலத்திலேயே திரு வல்லிக்கேணியும் தனிப்பகுதியாகத் திகழ்ந்திருக்கும் எனத் தோன்றுகிறது மேலும் மயிலாப்பூரில் ஒரு பகுதியாகத் திகழும் இன்றைய சாந்தோம் பகுதி அன்று மயிலாப்பூர் எனச் சுட்டப்பட்டநிலையும், "செயின்ட் தாமஸ்" வந்த பின்னரே இப்பெயர் பெற்றி ருக்கிறது என்பதையும் எண்ணக் கூடுகின்றது எனினும் 'சாந்தோம்' என்ற பெயர் பெற்று இப்பகுதி மயிலாப்பூரினின்று எப்போது பிரிந்தது என்பது தெளிவுறவில்லை.

எனினும் சென்னைமாநகர் நூலுள் மா. சு சம்பந்தன் மயிலாப்பூரைச் சார்ந்திருந்த பழைய சிற்றூர்கள் என இன்றைய பல்லாவரம், நன்மங்கலம், ஆலந்தூர், நந்தம்பாக்கம், மாம்பலம் போன்றவற்றைச் சுட்டுகின்றார். பல்லாவரம் போன்ற பெயர்கள் பல்லவ அரசர் தொடர்பாக அமையும் நிலையில், திருவல்லிக்கேணி, சாந்தோம் இரண்டும் வைணவச் சிறப்பு, கிறித்துவ மதச் சிறப்பு காரணமாகத் தனிப்பகுதியாகப் பிரிந்தமை போன்று, இவ்வூர்கள் பிற சிறப்புகள் இல்லாத நிலையில், பிற்காலம் வரையிலும் சிற்றூர்களாக அமைந்து, மயிலாப்பூரின் ஒரு பகுதியாகத் திகழ்ந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

இத்தகைய பெருஞ் சிறப்புடைய நகரத்தின் கோயில், கடற்கரையைச் சார்ந்திருந்தது என்பது தேவாரப்பாக்களிலேயே புலனாகும் எண்ணமாகும். ஆயின் இன்றுள்ள மயிலாப்பூர் கோயில் கடற்கரையினின்றும் சிறிது தள்ளி அமைந்துள்ளது. மேலும் இக் கோயில் பண்டைய கோயில் அன்று என வரலாற்றாய்வாளர் உணர்ந்து சுட்டுகின்றனர். அவர்களது கூற்றுகள் இங்கே காணத்தக்கன. தன்னுடைய திருமயிலை யுலாப்பதிப்பில், திரு. மு. கோ. இராமன் இப்போதுள்ள மயிலை ஆலயம் அண்மையில் சுமார் 300 ஆண்டுகட்கு முன்பு கட்டப்பெற்றது என்ற கருத்தினை அழுத்தமாகக் கூறுவதற்குரியதொரு காரணத்தை அவ்வுலாவினின்றும் எடுத்துத் தருகின்றார்.

'... ... ... ... அழகாகப்
பொற்கோவிலும் மதிலும் புண்டரிகப் பூந்தடமும்
... ... ... ...
நற்கோபுர நிலையும் நானிலத் தோர்க்கு - அற்புதமாம்
... ... ... ...
வாசமலர் நந்தா வனங்களும் மற்றுளவும்
நேசமுடனேயமைத்து நித்தம் நித்தம் பேசுமன்பிற்
போற்றி செய்யும் முத்தியப்பன்' கண்ணி 115 - 20.

எனக் கூறுவதால், திருக் கோயிலை, உயர்ந்த கோபுரம் மாட வீதிகளுடன் பலவகைச் சிறப்புற அமைத்தவன் இந்த முத்தியப்பனோ எனத் தோன்றுகிறது; இத் திருமயிலை யுலாவை எழுதிய புலவரை ஆதரித்த வள்ளல் முத்தியப்பன் என இவ்வுலாவில் இருந்து அறிய முடிகிறது; இந்த முத்தியப்பன் நயினப்பன் புதல்வர் (கண்ணி 205) என்பன போன்ற எண்ணங்களை இவர் தருகின்றார் (பக் 8, 9).

இந்நிலையில் துறைமுகம் அன்று இருந்த நிலையும், இன்று இல்லாத நிலையும் கூட எண்ணப்பட வேண்டியதாக அமைகிறது. தமிழக வரலாற்றை நோக்க, கடற் கோள்களும், பல கடலரிப்புகளும் நிகழ்ந்துள்ளமை தெரிகிறது. குமரியின் தெற்கில் நிகழ்ந்த கடற் கோள்பெரிய பகுதியைக் கொள்ள, பின்னர் எழுந்த கடலரிப்புகள் காவிரிப்பூம்பட்டினம் மாமல்லை போன்றபல துறைமுகங்களைக் கொண்ட நிலையைக் காண்கின்றோம். சில ஆண்டுகட்கு முன்னர் நிகழ்ந்த தனுக்கோடி அழிவும் இவண் எண்ணத் தோன்றுகிறது. இல்வாறே மயிலாப்பூர் துறைமுகமும், பழைய கோயிலும், அழிவுபட்டிருக்கலாமோ என நோக்கலாம். சமயச் சார்பு எண்ணங்களும், பிற வரலாற்று நிலை ஆய்வுகளும் கூட இது தொடர்பாக அமைகின்றன.

''இப்போது மயிலாப்பூரில் உள்ள சிவபெருமான் கோயில் பழைய கோயில் அன்று எனவும் கடற்கறை ஓரத்தில் இருந்த பழைய கோயிலைப போர்த்துக்கீசியர் அழித்து விட்டனர் என்றும் வரலாற்றாராய்ச்சியாளர் எண்ணுகின்றனர். பழைய கோயில் இக்காலத்திய சாந்தோம் மாதா கோயில் உள்ள இடத்திலோ அதற்கு அருகில் உள்ள இடத்திலோ இருந்திருக்க வேண்டும் என்று கருதுன்றனர். சுமார் அறுபதாண்டுகட்கு முன் மயிலாப்பூர் கடற்கரை சிறிது உள்நோக்கி கரைந்தபோது அங்குப்பல கற்றூண்கள் கண்டு எடுககப் பட்டன என்றும் அவை சிவன் கோயில் தூண்களாக இருக்கலாம் என்றும் சிலர் கருதுகின்றனர் திருவொற்றியூர், திருவான்மியூர் கோயில்களைப் போல் இக் கோயிலில் கல்வெட்டு இல்லாமையும் இது பழைய கோயிலன்று என்பதற்குச் சான்றாம்'' என கலைக் களஞ்சியம இயம்புகிறது (பக-108; பகுதி-8). ''பண்டை மயிலைத்

திருக்கோயில் கடற்கரையிலிருந்தது எனவும், கடலரிப்பாலும், கிறித்தவர் ஆதிக்கத்தாலும் சிதைந்து பட இப்போது உளள இடத்தில 300 ஆண்டுகட்கு முன்னர் கட்டப்பெற்ற தாகக் கூறுவதையும் காணலாம். (திருமயிலையுலா. முன்னுரை. பக்-6).

மேலும், என். எஸ். இராமசாமி தனது மயிலாப்பூர், மயிலாப்பூர் கோயில் பற்றிய ஆய்வுகளில், இவ்வூர் பற்றிய எண்ணத்தையும், கோயில பற்றிய சிந்தனைகளையும் மிகச் சிறப்பாக ஆய்வு செய்து தருகின்றமை பாராட்டற்குரியது பழைய கோயில் பற்றிய இறுதிக் குறிப்பு அருணகிரி நாதரின் திருப்புகழில் அமைய, தற்போதுள்ள கோயிலைப் பற்றிய முதற் குறிப்பினை, போர்த்துக்கீசியர்களின் வரலாறு வழி தருகின்றார். வரலாற்று வயப்பட்ட இவரது ஆய்வு, மயிலாப்பூரின் தற்போதுள்ள கோயிலைப்பற்றியும், ஊர் பற்றியும் விளக்கம் பெற வழி வகுக்கின்றது. சென்னை மாநகர் ஆய்வு, மேலும் மயிலாப்பூர் எவ்வாறு சென்னைப் பட்டணம் சிறக்க, அதன் நடுப்பகுதியாக அமைந் திருக்கிறது என்பது போன்ற எண்ணங்களைப்பெறச் செய்கிறது.

கி. பி. 1552 - இல் சென்னைக்குத் தெற்கே போர்த்துக்கீசியர்கள் வாணிகம் செய்யத் தொடங்கி, கி. பி 1601 - இல் டச்சுக்காரர்கள் வாணிபத்தைத் தொடங்கினர். பின்னர் 1640 - இல் ஆங்கிலேயர் தாமல்வேங்கடபதி என்னும் (நாயக்கன், பூவிருந்த மல்லியிலிருந்து சென்னையை உள்ளடக்கிய பகுதிகளை ஆண்டவன்) சிற்றரசன் கொடுத்த இடத்தில், செயின்ட் ஜார்ஜ் கோட்டையைக் கட்டிக் கொண்டு நிரந்தரமாக இருக்கத் தொடங்கினர் போன்ற எண்ணங்கள் சுட்டத்தக்கன. (சென்னைமாநகர் - பக் 32) பின்னரே சென்னை தனிப்பட்ட முறையில் சிறப்புற வளர, மயிலாப்பூர் அதன் ஒரு பகுதியாக அமைந்த நிலையைக் காண்கிறோம்.

மயிலாப்பூர் பற்றிய வரலாற்றுப் பார்வை, அதன் பழமையான இருப்பிடம், சிறப்பு, வணிக நிலை, கோயிற் சிறப்புடன், பிறமதச் சிறப்பு, பண்பாட்டுச் சிறப்பு, போன்றவற்றையும் எண்ணச் செய்கிறது பிற்காலத்தில் ஏற்பட்ட பல வித மாற்றங் களையும் அறியச் செய்கிறது.

இன்று மயிலாப்பூர் சென்னைமாநகரின் ஒரு பகுதியாக, தெற்கே மந்தை வெளியையும், மேற்கே ஆழ்வார்பேட்டை அபிராமபுரத்தையும், வடக்கே ராதா கிருஷ்ணன் சாலையையும், கிழக்கே கடலையும் எல்லைகளாகக் கொண்டு அமைந்துள்ளது.

சைவ சமயம் சிறப்புடன் திகழ்ந்த இவ்வூரில், கிறித்தவ சமயத் தொடர்பு செயின்ட் தாமஸ் வழியே ஏற்பட, சமணர்களும் இங்கே வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை மயிலை சீனிவேங்கடசாமி தம், சமணமும் தமிழும நூலுள் சுட்டுகின்றார். சென்னையச் சார்ந்த மயிலாப்பூரில் பண்டைக் காலததில் சமணக் கோயில் ஒன்று இருந்தது. இந்த நேமிநாதர் கோயில் மயிலாப்பூர்க் கடற்கரையில் இப்போது செந்தோம் சர்ச்சு என்று கூறப்படுகின்ற கிறித்தவரின் தோமையர் கோயில் இருக்கும் இடத்தில் இருந்தது. பிறகு ஒரு காலத்தில் கடல்நீர் இககோயிலை அழித்து விடுமோ என்று அஞ்சி, இக்கோயிலில் இருந்த அருகக் கடவுளின் திருமேனிகளைச் சித்தாமூர் என்னும் ஊரில் கொண்டு போய் வைத்திருக்கிறாாகள ... சமணக் கடவுள் உருவங்கள் மயிலாப்பூர் பிஷப் வீட்டிலும் உள்ளன. இவை தோமையர் கோவில் தோட்டத்தில் பூமியிலிருந்து கிடைத்தவை. மயிலாப்பூரில இருந்த வேறு இரண்டு சமண உருவங்கள் இந்நூலாசிரியரின் நண்பர் ஒருவரிடம் இருக்கின்றன (பக் 98, 99) என்பது இவரது எண்ணமாக அமைகின்றது. மேலும் நன்னூலுக்கு உரை எழுதிய மயிலை நாதா மயிலையில் கி. பி. 14 ஆம்

நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பர் (கலைக் களஞ்சியம் - பகுதி 8 - பக் - 1064; அபிதான சிந்தாமணி - பக் - 1260). எனவே பல்வேறு மதத்தினரும் இங்கு வாழ்ந்துள்ளனர் என்பது தெளிவாகிறது.

மயிலையின் சிறப்பு குறித்து எழுந்ததா? அல்லது உண்மையிலேயே இந்த ஊரில் பிறந்தாரா? என்ற எண்ணங்கள், திருவள்ளுவர் இங்குப் பிறந்தவர் என்பதற்குரிய கருத்துகளாக அமைகின்றன. அழுத்தமான சான்று இன்மையாயினும், பலர் இக்கருத்துக்கு விளக்கம் தருகின்றனர். இன்று இங்கு ஒரு திருவள்ளுவர் கோயிலும், கிணறும் இருப்பதைக் காட்டியும் இதனைச் சுட்டுகின்றனர்.

நால்வர் சொல் சைவர் வேதம் நளிர் குருகூரான்
சொல்லைப் போல்வலார் சிலர் தாம் சொல்லும் பொருவில் பாகவதர் வேதம்
வால்வளை யுலவும் வீதி மயிலை வள்ளுவர் சொல்யார்க்கும்
கீழ்மையை அகற்றி மேன்மை அருளும் நல்வேதமாமே — தனிப்பாடல்

கள்ளமில்லா உள்ளத்துக் கற்புருவாம் வாசுகியார்
வள்ளுவரோடும் வாழ்மயிலையை — திருமயிலைவெண்பா-2

மயிலை வள்ளுவன் என்றே இவரைக் கூறுவர். திருவள்ளுவர்க்கு மயிலையில் ஒரு பழைய கோயில் உண்டு. ஏலேலசிங்கன் என்ற திரை கடல் வாணிகன் வள்ளுவரின் நண்பராகத் திகழ்ந்தார் எனக் கூறப் பெறுவதால் மயிலை சிறந்த துறைமுகப் பட்டின மாக விளங்கியிருத்தல் கூடும். - திருமயிலையுலா - முன்னுரை.

இந்த தலத்தில் தான் இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன் திருவள்ளுவர் வழிபட்டு அன்னையின் அருள் பெற்றார் என்று ஓலைச் சுவடி குறிப்புகளில் இருந்து கண்டறிந்து இருப்பதாகத் திருவேற்காடு கருமாரி ராமதாசர் சுவாமி குறிபபிடுகின்றார் (தேவிதரிசனம்பக் - 10) போன்ற பல எண்ணங்கள் சுட்டப்படினும், இக் கருத்தை மறுத்து எழுந்துளள விளககங்களும் உள.

திருவள்ளுவர் மயிலாப்பூரில் வாழ்ந்தா என்பது ஒரு கதை. இதற்குக் கபிலர் அகவல் என்ற புது நூல் தான் ஆதரவு என்பாா வளளுவா வாழ்ந்த தமிழகம ஆசிரியா (பக் - 26). திருக்குறளினின்றும் அகச் சான்றுகள் சிலவற்றைக கொடுத்தும், நாயனார் குறிச்சி போன்ற சில ஊாப் பெயாகளைக் கொண்டும் திரு. பத்மநாபன், வளளுவர் குமரிமாவட்டத்தைச் சார்ந்தவர் என்பதை வற்புறுத்துகின்றார். எனினும் தெளிவுகள் இன்மையால், இவர் எங்கு பிறந்தார் என்பதற்குரிய முடிவை பெறவியலவிலலை. எனினும் மயிலைக்கும வள்ளுவருக்கும் ஏதோ ஒருவகையில தொடாபுள்ளது என்னும் எண்ணத்தை இங்குள்ள திருவள்ளுவா கோயிலும, அங்கு உளள வளளுவா சிலை வீரசைவ முறைப்படி அமைந்திருத்தலையும கொண்டு விளக்குவா. எனவே இக கோயில் அவர் சமாதியடைந்த இடம் என்பதும் அறிஞர்களால சுட்டப்படுகிறது (திரு. சிவலிங்கனார் அவர்கள் கூறிய செய்தி இது).

இவ்வாறு மயிலையின் சிறப்பு மக்களால் போற்றப் பட்டிருப்பதற்குப் பிற்காலத்தில் இவண் எழுந்த பலதரப்பட்ட இலககியங்களும் கூட, சான்றாக அமைகின்றன. எனவே கோயில் புதியதாகக் கட்டப் பெற்றாலும, துறைமுகம அழிந்துபட்டாலும், ஊர் தன்

நில அமைப்பில் குறைந்து பட்டாலும், தன் பழம் பெருமையில் குறைவைப் பெறவில்லை என்பதற்கு அரணாகவே இவ்விலக்கியங்கள் அமைகின்றன எனக் கூறல் பொருந்தும்.

## மயிலாப்பூர் தொடர்பான இலக்கியங்கள்

1. அந்தாதி.

| | | |
|---|---|---|
| திருநூற்றந்தாதி | — | அவிரோதியாழ்வார் |
| திருமயிலைக் கற்பகவல்லி அந்தாதி | — | பிச்சையிபுறாகிம் புலவர் |
| ,, | — | மனோன்மணி அம்மையார் |
| திருமயிலை ஸ்ரீ கபாலீஸ்வரர் பதிற்றுப் பத்தந்தாதி | — | கங்காதர நாவலர் |
| திருமயிலைப் பதிற்றுப் பத்தந்தாதி | — | கனகசபை நாயகர். |
| திருமயிலை யமக அந்தாதி | — | தாண்டவராயக் கவிராயர். |
| மயிலை யந்தாதி | — | சுப்பிரமணியக் கவியராயர். |
| மயிலைக் கபாலீஸ்வரர் அந்தாதி | — | — |
| மயிலைத் திரிபந்தாதி | — | — |
| மயிலை பாதி வான்மியூர் பாதி கலித்துறை அந்தாதி | — | ஆறுமுக நாயகர் |

2. உலா

| | | |
|---|---|---|
| திருமயிலையுலா | — | மு. கோ. இராமன் (பதிப்பு) |

3. உவமை வெண்பா

| | | |
|---|---|---|
| திருமயிலையுவமை வெண்பா | — | திருநெல்வேலி நடலிங்கக் கவிராசர். |

4. கலம்பகம்

| | | |
|---|---|---|
| திருக்கலம்பகம், திருமயிலைக் கலம்பகம | — | தண்டபாணி சுவாமிகள். |

5. குறவஞ்சி

| | | |
|---|---|---|
| மயிலைக் குறவஞ்சி | — | — |

6. கோவை

| | | |
|---|---|---|
| திருமயிலைக் கோவை | — | அம்பல வாணக் கவியராயர். |
| வியாசைக் கோவை | — | ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை |

7. தூது

| | | |
|---|---|---|
| அன்பு விடுதூது | — | வே. முத்துசாமி ஐயர். |

8. பத்து

| | | |
|---|---|---|
| மயிலாப்பூர் பத்து | — | பல ஜினதாசர்களால் பாடல் பெற்ற திரு நடுங் குன்றம் அப்பாண்டை நாதர் தோத்திரத் திரட்டு. |

9. பதிகம்

| | | |
|---|---|---|
| திருமயிலாப்பூர் ஸ்ரீ நேமி நாத சுவாமி பேரில் பதிகம் | — | ,, |
| திருமயிலைப் பதிகம் | — | — |

10. பிள்ளைத் தமிழ்
திருமயிலைச் சிங்காரவேலர் பிள்ளைத் தமிழ் — தாண்டவராயப் புலவர்

11. புராணம்
மயிலைப்புராணம் — அமுதலிங்கத் தம்பிரான்

12. மாலை
கற்பகவல்லி மாலை — —
சித்திர சத்திர புகழ்ச்சி மாலை — ஸ்ரீ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

13. விலாசம்
பூம்பாவையார் விலாசம் (நாடகநூல்) — —

14. வெண்பா
சிங்கார வேலர் வெண்பா — தாண்டவராயர்
திருமயிலை வெண்பா — —

15. வெண்பா மாலை
திருமயிலை வெண்பா மாலை — —

தவிர கபாலீசர் பஞ்சரத்தினம், திருவள்ளுவர் ஒருதுறைக் கோவை, திருவெம்பாவை போன்ற நூல்களும் இருப்பதாகக் குறிப்புகள் உள. பண்பாட்டு நிலையிலும் மயிலாப்பூரின் இன்றைய அன்றைய வரலாறு காண வரலாறு வாய்ப்பு அளிக்கிறது. வருடந்தோறும் பத்துமாதங்களில் திருவிழாக்கள் நடைபெற்ற நிலையை ஞானசாம்பந்தரின் பாடல்கள் தந்தன. இன்று பங்குனி மாதம் நடைபெறும் அறுபத்து மூவர் திருவிழா மிகச் சிறப்பான ஒன்று. மேலும் இதுவும் பத்து நாட்களாக நடை பெறுவதைக் காண, பத்து மாதங்களாக நடத்தப்பட்டதையே கருத்தில் கொண்டு பத்து நாட்களாகக் கொண்டாடுகின்றார்களோ என்ற எண்ணம் இருக்கிறது. தவிர பிற விழாக்கள் இங்கே இன்று நடைபெறுகின்றன. பௌர்ணமியன்றும் சிறப்பான பூசை நடைபெறுவதாக அறிகின்றோம்.

மேற்கண்ட கருத்துகள் முழுமையும் தொகுத்து ஆராயும்போது, மயிலாப்பூர் தமிழகத்தின் வடபாகத்தில் இருந்த சிறந்ததொரு நகரம் என்பது தெளிவாகிறது. வணிகச் சிறப்பு காரணமாகச் செல்வச் செழிப்பு பெற்று திகழ்ந்ததன் காரணமாக வருடத்தின் பல மாதங்கள் திருவிழாக் கோலம் பூண்ட நிலையும் மக்கள் பெருக்கம் காரணமாகவும், ஊரின் சிறப்பு காரணமாகவும் பிற சமயத்தாரும் இவ்வூரில் கால் கொண்டு தம் மதத்தைப் பரப்பியமையையும் தெளிவாக அறிய இயலுகிறது. இன்று வரையிலும், அதன் பெருமை மங்காத நிலையும், இவ்வூர் மக்கள் வாழ்க்கைக்குச் சிறந்த இடமாக இருந்து வந்துள்ளது என்பதைக் காட்டுகிறது.

இந்நிலையில் மயிலாப்பூர் என்ற ஊர்ப்பெயர்க் குறித்த எண்ணங்களும் பரவலாகக் காணக் கிடைக்கின்றன இறைவி மயில் வடிவில இறைவனைப் பூசித்த தலம் என்பது புராணக்கதை. ஆயின் மயிலாப்பூர் என்ற ஊர் வரலாற்றைக் காணும் போது, இதன் பெயராக காரணம் இயற்கை சார்ந்தே அமையும் வாய்ப்பு பெறுகிறது.

தாலமி கூற்றுப்படி இதற்கு 'மலியர்பா' என்ற பெயரைக் காண்கின்றோம். எனவே அப்பர் 'மயிலாப்பு' என்று சுட்டும வழக்கு பண்டு தொட்டே இவ்வூருக்கு வழங்கியிருக்கக் கூடும் என்ற உணர்வு எழுகிறது. மயில்கள் மிகுதியாக இருந்த பகுதியாக இது இருந்திருக்கலாம் பின்னர் மயில்கள் மிகுதியாக இருந்து அகவும் ஓசையை ஆர்ப்பரித்தல் என்ற பொருளில், மயில்கள ஆர்ப்பரிக்கும் இடம் என்ற குறிப்பினைச் சுட்டி, இடத்தைச் சுட்ட 'மயிலாப்பூர்' என வழங்கப்பட்டு. பின்னர் 'மயிலாப்பு' என மருவி வழங்கியிருக்கக் கூடும என்பது பொருத்தமாக அமைகிறது. ஏனெனில் கடற்கரை, புன்னைவனங்களில் மயில்கள் வாழ வாயப்புண்டு. மேலும் இயற்கையை அடிப்படையாகக் கொண்டு பெயா வைத்தலையே தமிழர் மிகுதியாக முதலில் கொண்டிருந்தனர் என்பதைத் தமிழரின் பண்டைய ஊர்ப்பெயர் வரலாறும் நமக்குக் காட்டுகிறது. பின்னர் மயிலாப்பு, மயிலை என்றும், மயிலாப்புரி என்றும், மயிலாப்பூர் எனவும் வழங்கத் தொடங்கியிருக்கின்ற நிலையைக் காண்கின்றோம். 'மயிலை' என்பதற்கு இருவாட்சி என்ற பொருளும் உண்டு. எனினும் இது காரணமாக அமையின், மயில் ஆப்பு என்ற பிரிவில் ஆப்பு என்பதற்குப் பொருள் காணாகையில பொருத்தம் அமையவில்லை 'மயில்' தொடர்பாகப் பிற பெயர்கள் அதாவது மயிலாடுதுறை போன்ற பிற பெயர்கள் (தமிழகத்தில் இருத்தலும்) இவண் அரணாகத் தககன.

இன்றும் சென்னைக்குப் பெருமை சேர்க்கும் நிலையில், கபாலீச்சுரம் கோயிலை நடுவணதாகப் பெற்று சிறப்புற்று விளங்குகிறது மயிலாப்பூர்.

—o●o—

# உரிச் சொல்

ஆ. சிவலிங்கனார்

**உரிச் சொல்லின் பொது விலக்கணம்:**

உரிச் சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒரு சொற் பல பொருட் குரிமை தோன்றினும்
பல சொல் ஒரு பொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்று நிலை மருங்கின்
எச் சொல்லாஇனும் பொருள் வேறு கிளத்தல்.

என்பது உரிச் சொல் இயல்பு கூறும் தொல்காப்பிய உரியியற் சூத்திரம். இதன் கருத்து வருமாறு :-

''உரிச் சொற்கள் என்பன இசை பண்பு குறிப்பு எனும் மூன்றனுள் ஒன்றன் அடிப்படையில் தோன்றும் பெயாச் சொல்லிலோ வினைச் சொல்லிலோ அல்லது இரண்டிலுமோ தம்வடிவம் திரிந்துவரும்; அல்லது திரியாமல் பெயரையோ வினையையோ அடைமொழியாகச் சார்ந்து வரும். ஒரு சொல் ஒரு பொருளுக்கோ பல பொருளுக்கோ உரிமையாக வரும்; பல சொற்கள் ஒரு பொருளுக்கு உரிமை யாக வருவதும் உண்டு. வெளிப்படையிற் பொருள் விளக்காமல் ஒரு சொல்லுடன் - பழகிய சொல்லுடன் சார்த்தப் பட்டே பொருளுணர வரும்'' என்பதாம். இச் சூத்திரப் பொருளைக் கொண்டு உரிச் சொல் இலக்கணம் பற்றி உரையாளர்களும் ஆய்வாளர்களும் தத்தம் கருத்துக்கேற்றவாறு மாறுபடுகின்றனர் அவர் தம் மாறுபாடு களுள் உரிச்சொற் பெயாககாரணம் பற்றியும, உரிச்சொல் குறைச் சொல் எனக் குறிக்கப்படுவது பற்றியும் உரிச்சொல் சொற்பிறப்புக்குரிய வேர்ச் சொல்லாகுமா என்பது பற்றியும ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கமாம.

**பெயர்க்காரணம்**

பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் ஆகியவற்றுக்கு வழங்கற்பாடு பற்றி இடப்பட்ட பெயர் 'பெயர்ச் சொல்' எனப்பட்டது.

பொருளின் புடைபெயர்ச்சியைக் கூறும சொல் 'வினைச் சொல' எனப்பட்டது

பெயர்ச்சொல் வினைச் சொற்களின் இடமாக வரும் சொல் 'இடைச்சொல்' எனப்பட்டது.

இவ்வாறு மூன்று சொற்களுக்குக் காரணம் கூறுவது போல, 'உரிச்சொல்' என்பதற்குக் காரணம் எளிதில் கூற இயலவில்லை. உரையாசிரியர்களும் ஆராய்ச்சி யாளர்களும் அவரவர்க்குத் தோன்றிய காரணங்களைக் கூறினர். அவை வருமாறு:-

1. உரிச் சொல்லாவது பொருட்கு உரிமைப்பட்டு நிற்பது இளம் - பூரணர்.

2. இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருட்குத் தாமேயுரியவாய் வருதலின் உரிச் சொல் - சேனாவரையர், நச்சினார்க்கினியர்.

3. ஒரு வாய்பாட்டாற் சொல்லப்படும் பொருட்டுத் தானும் உரித்தாய் வருவது தெய்வச் சிலையார்.

4. செய்யுட்கேயுரித்தாய் வருதலின் உரிச்சொல் - நன்னூல் உரைகாரர்கள்.

5 பெயர் வினைகளுக்கு உரித்தாய் வருதலின் உரிச்சொல் - சடகோபராமானுசாசார்யர்.

6 பண்புக்கு உரிமை பூண்ட சொல் உரிச்சொல் - வீரமாமுனிவர், சிவஞானமுனிவர்.

7. உலகவழக்குப் பொருள் ஒன்றாக இருக்க இலக்கியக்கருத்தாக்கள் தனியுரிமையுடன் தரும் தனிப் பொருள் கொண்ட சொல் உரிச்சொல் - ஆதித்தர்.

8. சொல் பிறப்பதற்குரிய சொல் உரிச்சொல் - இலக்குவனார் முதலியோர்.

9. பொருட்கு உரிமைப்படுத்தப்பட்ட சொல் உரிச் சொல் - சிவலிங்கனார்.

எது நன்று

1. மேற் காட்டிய கருத்துகளுள் முதல் மூன்று கருத்துகளையும் பொருளுக்கு உரிமைபூண்டு வருவது உரிச் சொல் என்னும் கருத்தில் ஒன்றாகக் கொள்ளலாம். பொருள் என்பது ஒருசொல் உணர்த்தும் பொருளைக் குறிக்கும் எனக் கொண்டனர் இளம் பூரணர் தெய்வச் சிலையார் ஆகியோர். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் ஒரு பொருளைக் குறிக்கும் ஒரு சொல் இசை பண்பு குறிப்பு என்பவற்றுள் ஒன்றன் அடிப்படையில் அமைதலின் பொருள் என்பது இசை பண்பு குறிப்பு என்பனவற்றுள் ஒன்றைக் குறிக்கும் எனக் கொண்டனர். மிகுதி என்னும் பொருளை 'உறு' என்பது குறிக்கும் உரிமையுடைமையின் அவ்வுறு உரிச்சொல் என்பது இளம்பூரணர் கருத்து. 'உறுகால்' என்புழிக் காற்றின் மிகுதியை உறு என்பது குறிப்பால் உணர்த்துதலின் அது மிகுதிக் குறிப்புக்கு உரிமைபூண்டு உரிச்சொல் ஆயிற்று என்பது சேனாவரையர் போல் வார் கருத்து.

மிகுதி என்பது ஒரு சொல். அச்சொல் உணர்த்தும் பொருளை நாம் எளிதில் உணர்வோம். அம்மிகுதி என்னும் வாய்பாட்டால் (சொல்லால்) உணர்த்தப்படும் பொருளுக்கு 'உறு' என்பதும் உரிமை பூண்டு நிற்றலின் அது உரிச் சொல் ஆயிற்று என்பது தெய்வச் சிலையார் கருத்து.

இளம்பூரணர் சேனாவரையர் தெய்வச்சிலையார் ஆகியோர் பொருள் என்பதை எவ்வாறு கருதினாலும் முடிவில் சொலலால் உணர்த்தப்படும் பொருளையே சார்தலின் 'பொருட்கு உரிமை பூண்டு நிற்றலின் உரிச்சொல்லாயிற்று' என்னும் கருத்தில் மாறுபடவில்லை எனலாம். இக் கருத்து ஏற்புடையதே. ஆதித்தர் கருத்தும் இதுவே.

''பொருளுக்கு உரிமைபூண்டது என்ற கருத்தில் உரிச்சொல் என்ற பெயர் வந்துளது என்னலாம்'' என்று தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் கூறி, இலக்கணப் பொருளல்லாத பொதுப் பொருளை உடைத்தாகும் உரிமையே இங்குளது; எனவே இந்த நோக்கில் சொல்லின் கருவாக அமையும் அடிச் சொல்லையே உரிச் சொல் குறிக்கின்றது என்றும் கூறினார். அவர் பொருள் என்றது வேர்ச் சொற் பொருளையாம் (இலக்கண ஆய்வுக் கட்டுரைகள், பக் 122, 123).

2. செய்யுட் குரித்தாய் வருதலின் உரிச் சொல் எனப்பட்டது என்னும் காரணம் ஏற்புடையதாகுமா என்பதைப் பார்ப்போம்

செய்யுட்குரிய சொற்களாகத் தமிழ் இயற்சொல், தமிழ்த் திரிசொல், திசைச் சொல், வடசொல் என நான்கு கூறினார் தொல்காப்பியர். அவற்றுள் தமிழ் இயற் சொற்கள் வழக்கிலும் செய்யுளிலும் வருவன. மற்றையன வழக்கில் இல்லாதன; அல்லது அரிதாக வருவன. தமிழ்த் திரிசொற்கள் புலவரால் திரித்துக் கொள்ளப்படுவன. இயற்சொல்லையே திரித்துக் கொள்வர். திரித்துக் கொள்வது செய்யுளில் ஆள வேண்டியாதலின் திரிசொற்கள் செய்யுளுக்கேயுரிமையுடையனவாம். அதனால் அத்திரி சொற்களையும் உரிச் சொற்கள் என்னல் வேண்டும்; என்னாமையின் செய்யுட்கு உரிமை பூணும் காரணம் காட்டி உரிச் சொல் என ஒரு பிரிவைக் கூறவேண்டுவ தில்லை. அன்றியும் உரிச் சொற்களும் உலகவ்ழக்கில் வட்டார வழக்காக ஆங்காங்கே காணப்படுதலும் உண்டு. கடி என்னும் உரிச்சொல், விரைவுப் பொருளில், 'கடிய வா' என்பது போலும் தொடர்களில் செங்கல்பட்டு, வடார்க்காடு, தென்னார்க் காடு, சென்னை மாவட்டங்களில் ஆளப்படுகின்றது காணலாம்.

நன்னூலார், 'செய்யுட்குரியன வுரிச் சொல்' (நன் 442) என்றார். அதற்குச் சங்கர நமச்சிவாயர், ' செய்யுட்குரியவாய்ப் பொருட்கு உரிமை பூண்டு வருவன உரிச் சொல்லாம்'' என்று உரையெழுதினார். இவ்வுரையால் இவர் தடுமாற்றம் புரிகின்றது. ஆனால் இவரே பின்னர் ''செய்யுட்குரியனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல் எனக் காரணக்குறி போந்தது என்பதூஉம் ...உணர்த்தியவாறு'' என எழுதினார். இதனால் பொருட்கு உரிமை என்பதினும் செய்யுட்குரிமை என்பதே சங்கர நமச்சிவாயர் கொண்டனரோ எனக் கருத வேண்டியுளது.

பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல் (நன் 442)

என்னும் நன்னூற் சூத்திரத்தில் 'செய்யுட் குரியன வுரிச்சொல்' என்பதை மட்டும் கொண்டு யாவரும் உரிச் சொற் காரணம் கூறினர். பல்வகைப் பண்பும் பகர்பெயராகி உரியன வுரிச்சொல்; ஒரு குணம் பல குணம் தழுவியுரியன வுரிச்சொல்; பெயர்வினை யொருவா வுரியன வுரிச்சொல்; செய்யுட்குரியன வுரிச்சொல் எனத்தனித் தனிக்கூட்டி உரிச் சொல் இலக்கணம் காண்போமாயின், கூறப்பட்ட யாவற்றுக்கும் உரிமை பூண்டன வுரிச் சொல் எனக்கொள்ளலாம். அதனால், செய்யுட்கேயுரிமை பூண்ட காரணம் மட்டும் கூறுவது பொருந்தாது. நன்னூலார் கருத்தும் 'செய்யுட்குரிமை பூண்ட காரணத்தால் உரிச் சொல்லாயிற்று' என்பதன்று என்னலாம்.

3. 'பெயர் வினைகளுக்கு உரித்தாய் வருதலின் உரிச்சொல் ஆயிற்று' என்னும் கொள்கையும் ஏற்புடைத்தன்று.

இடைச் சொற்களும் பெயர் வினைகளுக்குரியனவே. ''பெயர் வினைகளின் பண்பையுணர்த்தி அவற்றுக்கு உரிமை பூண்டு நிற்பதால் உரிச் சொல் எனக் காரணப் பெயர் பெற்றது'' (முதற் சூத்திர விருத்தி) எனச் சிவஞான முனிவர் கூறுவது ஓரளவுக்கே பொருத்தம். செய்யுளுக்கும் பொருளுக்கும் உரிமை பூண்டிருப்பதைத் தள்ள இயலாது. நன்னூலார் 'பல வகைப் பண்பும் பகர் பெயராகி' என்றமையாலும், 'பெயர்வினை யொருவா' என்றமையாலும் அவர்க்கு, உரிச் சொல் பெயரேயாம் என்பதும், அது பெயரிலும் வினையிலும் வரும் என்பதும் கருத்தாதலின், உரிமை பெயர்க்கா பெயர் வினைகளுக்கா என்பதில் தடுமாற்றம் ஏற்படுகின்றது தொல்காப்பியர் உரிச் சொல் பெயராகும் எனக் கூறவில்லை. பெயரிலும வினையிலும் தடுமாறும் எனக் கூறினார் (உரி.1). அவர் இரண்டில் ஒன்றற்கோ இரண்டுக்குமோ உரிமைப்படுத்திக் கூறவில்லை.

4. பண்புக்கு உரிமை பூண்ட சொல் உரிச் சொல் இக்கருத்தும் ஏற்பதற் கில்லை. பண்புக்கு உரிமை பூண்ட சொல் பெயர்ச்சொல். பண்பு என்பது பொருட் பண்பும் தொழிற்பண்பும் குறிக்கும். அதனால், 'பல்வகைப் பண்பும்' என்றார் நன்னூலார். அப் பண்புகளைக் குறிக்கும் சொற்கள பெயர்ச்சொறகள் எனவே படும் அதனால் நன்னூ லார் பல்வகைப் பண்பும் பகர்பெயராகி வரும் உரிச்சொல் என்றார். பண்பையுணர்த்தும் சொல் பண்புப் பெயர்ச் சொல் எனப்படுமேயன்றி உரிச்சொல் எனப்படாது.

5 ''உலக வழக்குப் பொருள் ஒன்றாயிருக்க இலக்கியக் கருத்தாக்கள் தனி யுரிமையுடன் தரும் தனிப்பொருள் கொண்ட சொல் உரிச்சொல்'' என ஆதித்தர் கூறுவதும் (தொல். சொல், உரி,1 ஆதித்யம்) ஏற்க இயலாது. அவர்தரும் உதாரணம் 'உரு' என்பது உலக வழக்கில் 'உருவம' எனப் பொருள்பட. அதனைப் புலவர் உட்கு (அச்சம்) என்ற பொருளில் தம் தனியுரிமையால் ஆண்டனர் என்பது தொல்காப்பிய உரியியற் சூத்திரங்களில் வந்துள்ள உரிச்சொற்களுக்கு அவ்வாறு உலக வழக்குப் பொருளும் புலவரின் தனியுரிமைப் பொருளும் உதாரணங்களாகக் காட்டிய அவர், சில சொற்களுக்கு உலக வழக்குப் பொருள்கள வலிந்து காட்டுவதும் சில சொற்களுக்குக் காட்டாமலே போவதும் காணலாம். உறு' எனும் சொல் 'உற்றான்' என்னும் போது வினைச் சொல் முதல் நிலையாகும். 'உறுகால' என்னும் போது உரிச்சொல் ஆகும். எழுத்து வடிவில் 'உறு' என இருந்தாலும் பொருளளவில் வினைச் சொல்லாகவும் உரிச் சொல்லாகவும் வேறுபடுதலின் தனித்தனிச் சொற்களாகவே கொள்ளல் வேண்டும்.

6. சொல்பிறப்பதற்குரிய சொல் உரிச் சொல் என்னும் கருத்துக்கேற்ப ''உரிச் சொல் என்பன வினையும் வினைக் குறிப்புமாகிய சொற்களுக்கெலலாம் பகுதியாகிய வேர்ச் சொற்கள்'' என்பர் வெள்ளை வாரணனார் (தொல்காப்பியம் - பக். 66).

உரிச் சொல்லின் தோற்றம் இசை குறிப்பு பண்பு என்னும் மூன்றளவில்தான் அமையும் என்பதைத் தொல்காப்பியர், ''இசையினும் பண்பினும் குறிப்பினும் தோன்றி'' என்பதால் தெளிவு படுத்தி விட்டார். அன்றியும் பெயரினும வினையினும் மெய் தடு மாறும் என்றும் கூறினார். எனவே இசை பண்பு குறிப்பை விட்டு வெளிப்படையில் பொருள் தருவன பெயரும் வினையும் என அறியலாம். அதனால் பெயர் வினைவேறு உரிச்சொல் வேறு என்பதும் புலப்படும். உரிச்சொல் என்பது தனிச் சொல் என்பதால் தான் பெயரினும வினையினும் சார்ததல் வேண்டிற்று.

'பொன்னன்' என்பது பொன்னையுடையன் என்னும் பொருளில் வரும்போது குறிப்பு வினையாகும். அதன் பகுதி பொன் என்பது. பொன் என்பதிலிருந்து பொன்னன்

என்பது உருப்பெற்றது. அதனால் பொன் உரிச் சொல் ஆகுமா? அது பொருட் பெயர்ச் சொல் அன்றோ ? அது இசை பண்பு குறிப்பு என்னும் மூன்றனுள் எதில் அடங்கும்?

7. பொருட்கு உரிமைப்படுத்தப்பட்ட சொல் உரிச் சொல்லாம் என்பதே நன்று என்னும் கொள்கைக்கு யான் தரும் விளக்கம் வருமாறு :-

யாப்பிலக்கணத்தில் மாச்சீர் விளச்சீர்கள் ஆசிரியப் பாவிற்கும் காய்ச்சீர்கள் வஞ்சிப் பாவிற்கும் உரிமைப் படுத்தப்பட்டு முறையே ஆசிரியவுரிச்சீர், வெண்பாவுரிச்சீர், வஞ்சியுரிச்சீர எனப்பட்டன. உரிமைப் படுத்தப்பட்டசீர் உரிச்சீர் ஆயிற்று.

அகப் பாடல்களில் திணையுணர்தற்கு முதற் பொருள், கருப் பொருள், உரிப் பொருள் என மூன்றுளளன. முதலிரண்டும் திணை மயங்கியும வருவன. ஆனால் உரிப் பொருள் திணைமயங்குதல் இல்லை அதனால் திணையுணர்தற்குப் பாடலின் கருத்துப் பொருளே உரிமைப்படுத்தப்பட்டது. அதனால் கருத்துப் பொருள் உரிப் பொருள் எனப்பட்டது.

உரிச்சீர், உரிப் பொருள் போலவே உரிச் சொல் என்பதற்கும் காரணம் காணுதல் வேண்டும். பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் தெளிவாகப் பொருள் தருவன. உரிச் சொல் தெளிவாகப் பொருள் தருவதில்லை. அதனால், அதனைப் பொருளுக்கு உரியதாக்கு தல் வேண்டும் அதனைப் பெயரிலோ வினையிலோ சார்த்தி - அல்லது பெயர் போலவோ வினைபோலவோ திரித்துப் பொருளுக்கு உரிமைப் படுத்தல் வேண்டும். அப்படி உரிமைப் படுத்தப் படும் சொற்களே உரிச் சொற்களாம். எனவே, ''உரிச் சொல்லாவது பெயர்ப் பொருளுக்கு அல்லது வினைப் பொருளுக்கு உரிமைப்படுத்தப்படுஞ் சொல்'' என்பதாம்

உரிச் சொல் குறைச்சொல் - **காரணம்**

தொல்காப்பியர் 'குறைச் சொல்' எனும் தொடரை இரண்டிடங்களில் ஆள்கிறார். ஓரிடத்தில் 'குறைந்த சொல்' எனத் தன்வினைப் பொருளிலும் (செய்வினையிலும) (எழுத்து. குற்றிய 77), பிறிதோரிடத்துக் 'குறைக்கும் சொல்' எனப் பிறவினைப் பொருளி லும (செயப்பாட்டு வினையிலும்) (தொல், சொல், எச்ச. 57) ஆண்டுள்ளார்.

தன் வினை - செய்வினைப பொருளில் ஆளப்பட்ட 'குறைச் சொல்' என்பது உரிச் சொல்லைத்தான் குறிக்கும் என்பதை, ''குறிப்பினும பண்பினும் இசையினும் தோன்றி நெறிப்படவாராக் குறைச்சொல'' (குற்றிய.77) எனக் கூறியவாறே, உரியியல் முதற சூத்திரத்திலும ''உரிச் சொற்கிளவி விரிக்குங் காலை, இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றி'' வரும் என்றமையால் அறியலாம்.

இனி, உரிச்சொல்லைக் 'குறைச்சொல்' என்றது ஏன் எனக் காண்போம்.

'நெறிப்பட வாராக் குறைச் சொல்' என்றதனால், 'நெறிப் பட வாராமையே குறை' என்னலாம் நெறிப்பட வாராமையாவது உயிரீற்றுச் சொல்லா மெய்யீற்றுச் சொல்லா என அறிய முடியாதபடி வருவது என நச்சினார்க்கினியர் கருதினார். குறைச் சொல் என்பதற்குச் சொல் தன்மை குறைந்த சொல் என்றார். அவர்கூற்று :-

''கண் விண்ண விணைத்தது, விண் விணைத்தது - இவை குறிப்புரிச் சொல்;
ஆடை வெள்ள விளர்த்தது, வெள் விளர்த்தது இவை பண்புரிச் சொல்;

கடல் ஒல்லவொலித்து, ஒல், லொலித்தது - இவை இசையுரிச் சொல். இவை உயிரீறாயும், புள்ளியீறாயும் நிற்றலான் ஒன்றன்கண் அடங்காமையின் நெறிப்பட வாரா என்றார். விண்ண விணைத்தது - தெறிப்புத் தோன்றத் தெறித்தது என்றும், விண் விண்ணத்தது - தெறிப்புத் தெறித்தது என்றும் ஆம். இங்ஙனம் நிற்றலின் தன்மை குறைந்த சொல்லாயிற்று''

(உரியியல்;1. உரை).

இக் கூற்றிலிருந்து தெறிப்பை யுணர்த்துஞ் சொல் 'விண்ண' எனும் உயிரீற்றுச் சொல்லா 'விண்' எனும் மெய்யீற்றுச் சொல்லா என அறிய முடியா நிலைமையில் சொல் தன்மை குறைந்த காரணத்தால் குறைச் சொல் என உரிச் சொற்குப் பெயராயிற்று என்பது புலப்படும். உரு, உறு, தவ முதலிய உயிரீற்றுச் சொற்களும், பேண், வியல், கமம், வாள் முதலிய மெய்யீற்றுச் சொற்களும் ஈற்றுத் தெளிவுடையன வாதலின் அவை குறைச் சொல் எனப்படா. அதனால் நச்சினார்க்கினியர் கருத்து சிறவாது.

இனிக் குறைச் சொற் காரணம் பின் வருமாறு காணலாம். இருதிணை ஐம்பாற் பெயர்களை அவற்றின் ன், ள், ர், து, அ் முதலிய இறுதி எழுத்துகளால் உணரமுடியும். பொருளிடம் காலம் சினை குணம் தொழிற் பெயர்களை இறுதி எழுத்துகளாலன்றி வெளிப்படைப் பொருள்களால் உணரமுடியும். ஆனால், உரு, கலி, ஒற்கம் முதலிய சொற்கள் பெயர்ப் பொருள்களைத் தந்தாலும் ஈற்றெழுத்துகளாலோ வெளிப் படைப் பொருள்களாலோ பெயர்ச் சொல் என அறிய முடியவில்லை. அதனால் அவற்றைப் பெயர்ச் சொல் என்பதற்கில்லை. நம்பு, படர், புலம்பு போலும் சொற்கள் வினைப் பொருள் தருவன ஆனால் இருதிணை ஐம்பால் உணர்த்தும் வினையிறுதி எழுத்துகள் (ன், ள், ர், து, அ) இன்மையாலும் வெளிப் படையாகவும் வினைப் பொருள் உணர்த் தாமையாலும் அவற்றை வினைச் சொற்கள் என்பதற்கில்லை. எனவே பெயரிலும வினையிலும் சேராக்குறை அவற்றுக்குண்டு. எனவேதான் உரிச்சொல் குறைச் சொல் எனப் பட்டது.

## உரிச்சொல் வேர்ச்சொல்லா ?

பெயர் வினைகளின் வேர்ச்சொற்களே உரிச்சொற்கள் என்பர் தெ. பொ. மீ. போல்வார். (இலக்கண ஆய்வுக்கட்டுரை. பக். 123). ''உரிச் சொற்களை யெல்லாம் வேர்ச்சொற்கள் என்றோ வினைவேர்கள் என்றோ கூறுதல் பொருந்தாது'' என்பர் மோ. இசரயேல் (இடையும் உரியும். பக், 123). தெய்வச் சிலையார் உரிச் சொற்களைத் தாது எனக் கூறியது முதலாமவர்க்கு உறுதுணை.

ஆசிரியர் தொல்காப்பியர்க்கு வேர்ச்சொற்களே உரிச்சொற்கள் என்னும் கருத் தில்லை என்பதை அவர் உரிச் சொற்களைக் கூறிய வகைகளால் அறியலாம்.

பெயர்ப் படுத்தியோ வினைப்படுத்தியோ அறிய முடியாத தவ, நனி, ஏ, மழ, குழ போலும் சொற்களையும் ; பகுதி விகுதிகளாகப் பிரித்துக் காணக் கூடிய கூர்ப்பு, கழிவு, வார்தல் போலும் சொற்களையும் ; 'நிழத்த யானை' எனப் பெயரெச்சமாகத் திரித்தற் கேற்றதாயினும் பெயரெச்ச உருபாகிய 'அ்' என்பதை நீக்கின் பகுதியை இன்னதென வரையறுக்க இயலாத 'நிழத்தல்' என்னும் சொல்லையும் ; தொழிற் பெயராகப் படர்தல் எனவும், வினைமுற்றாகப் படர்ந்தான் எனவும், எச்சங்களாகப்

படர்ந்த படர்ந்து எனவும் சொற்களை ஆக்கிக் கோடற்குரிய பகுதியாக வரும் படர் போலும் சொற்களையும்; உடன்பாட்டுச் சொல் இல்லாத 'எய்யாமை' எனும்எதிர்மறைச் சொல்லையும்; மறுதலைச்சொல் இல்லா 'நன்று' எனும் சொல்லையும் ஆசிரியர் வேர்ச் சொல் நிலையில் கூறாமல் பலவாய்பாடுகளில் கூறியிருத்தலால் அவர் கருத்து வேர்ச் சொல் ஆகாது என்பதை அறியலாம். இலம்பாடு என்பது உரிச் சொல் (உரி. 62) என்ற ஆசிரியர் அதனை 'இலமென் கிளவிக்குப் படுவருகாலை' (புள்ளிமயங்கியல், 21) எனப் புணர்ச்சி விதிகூறியதாலும் நாம் நன்கு அறியலாம்.

## தொகுப்புரை

இதுகாறும் கூறிவந்தவற்றிலிருந்து தெரிய வருவன :- 1. உரிச்சொல் என்பதன் பெயர்க் காரணம் பலவாறாகக் கூறப் படினும் பொருளுக்கு உரிமைப் படுத்தப் படுதலின் உரிச்சொல் என்பதே சிறக்கும். 2. பெயரினும் வினையினும் சேராக் குறைபாடு காரணமாக உரிச்சொல் குறைச்சொல் எனப்படும். 3. உரிச்சொல் என்பது பெயர்ச் சொல் வினைச் சொற்களின் வேர்ச்சொல் அன்று.

### துணைபுரிந்த நூல்கள்

1. இடையும் உரியும். Dr. மோ. இசரயேல், சர்வோதய இலக்கியப் பண்ணை, 32/1 மேல வெளிவீதி, மதுரை. 1977.
2 காப்பியர் நெறி - சொல்லியல். Dr. தே. ஆண்டியப்பன், முத்துப் பதிப்பகம், மதுரை. 1977.
3 இலக்கண ஆய்வுக் கட்டுரைகள். அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணா மலைநகர். 1974.
4. தொல்காப்பியம். க. வெள்ளை வாரணன் அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர். 1970.
5. தொல்காப்பியம். சொல்லதிகாரம் - பலர் உரைகள்.



# அடி - சொற் பொருள் வரலாறு

டாக்டர் கு இராசேந்திரன்

'கால்' என்னும் சொல்லும் 'தாள்' என்னும் சொல்லும் பொதுப் பொருளாகச் சுட்டும் பாதம் என்ற உடலுறுப்பை 'அடி' என்னும் பிறிதொரு சொல்லும் பொதுப் பொருளில் சுட்டவல்லதாகும்.

காலுதல் 'கால்' எனவும் தாழ்வாக இருப்பது 'தாள்' எனவும் பிறந்தவாறே அடியில் இருப்பது 'அடி' எனலாயிற்று 'தாள' என்பதும் கீழேயிருப்பது என்னும் பொருளுடையதாயினும் அடி சுட்டும் பொருளை அது சுட்டவில்லை.

'தாள்' என்பது முழங்காலை ஒட்டிய பகுதியைச் சுட்டும். 'அடி' என்பது காலின் வெளிறிய சிவந்த கீழ்ப் பகுதியை அதாவது நிலத்தில் பதியும் பகுதியைச் சுட்டும.

தாள் வேறு அடி வேறு என்பதைப்
''பொருந்து மயி ரொழுகிய திருந்து தாட் கொப்ப
வருந்துநாய் நாவிற பெருந்தகு சீறடி''[1]

எனவரும் விறலி வருணனையால் அறியலாம.

பருப்பொருள ஒன்றன் நீள அகலங்களை அளக்கக் 'கால்' பயன்படுகின்றது. அப்பொழுது நிலத்தில் படிந்த 'அடி' யையே அளவு கருவியாகக் கொண்டு அளவு செய்வர். அடி, அளக்கப் பயன்படுவதென்பதை ''அடியளந்தான''[2] என்ற குறளால் அறியலாம் இதனாலும் நிலந்தோயும் காலின் கீழ்ப்பகுதியே அடியெனப்படும் என்று உணரலாம்

''கல்லுறச் சிவந்தநின் மெல்லடி''[3]

என்னுமிடத்து நடத்தலால் சிவந்த பகுதி காலின் அடிப்பகுதியேயாகும்.

''ஞமலி நாவி னன்ன சீறடி''[4]
''கத நாய் நன்னாப் புரையுஞ் சீறடி''[5]

என்ற அடிகளில் நாயின் நாக்கு, வடிவாலும் நிறத்தாலும் மகளிர் காலுக்கு உவமையாகின்றது. இங்கும் நிலந்தோயும் பகுதியே 'அடி' எனப்படுகின்றது.

''முறிகண் டன்ன மெல்லெலன் சீறடி''[6]
''ஒளளிதழ் அவிழகங் கடுக்குஞ் சீறடி''[7]
''மெல்லியல் சேவடி''[8]

என்பனவாக வரும இடங்களாலும் நிலந்தோயும் சிவந்த உறுப்பே அடி என்று அழைக்கப்பட்ட உண்மை தெரிகின்றது.

---

1) பொருந 40 - 42 ; 2) திருக்குறள் 610 ; 3) நற் 76, 9 ; 4) பட்டி 42 - 43 ; 5) நற் 252, 10 - 12 ; 6) குறுந் 278, 2 ; 7) பதிற் 52, 19 ; 8) கலித் 13, 10 ;

"வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்"[9] என்ற கண்ணகி பற்றிய சிலம்புவரியில் மண்மகள் அறிவது அடியே என்ற உணமை தெரிகின்றது.

## மகளிரது அடி

சங்கவிலக்கியத்தில் மகளிரது 'அடி' அகப்பொருட் பாடல்களில் அதிகமாகப் பேசப் பெற்றுள்ளது.

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்"[10]

என்று வள்ளுவர் குறிப்பது போல் மகளிரது அடிமென்மையையே பலரும் புகழ்ந்துள்ளனர்.

உடன் போக்குச் சென்ற தலைவியின் நிலைக்காக வருந்தும் தாய் தன்மகளின் அடி, பாலை வெம்மையால் துயரப்படும் என்பதற்காகவே அதிகம் வருந்துகின்றாள்.

"பஞ்சி மெல்லடி"[11]

என்பது ஒருதாய், தன்மகளின் அடி பற்றிச் சொல்வதாகும்.

பாலைநிலத்தில் நின்மகள் சென்றாள் என்று வழியிடைச் செல்வோர் கூறிய சொற் கேட்டுப்

பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றி ரைய
ஒன்றின வோவவ ளஞ்சிலம் படியே"[12]

என்று பிறிதொரு தாய் கவல்கின்றாள்.

"வெஞ்சுரம் நின்னடிக் கெளியவோ"[13]
என்று மறுகுவது மற்றொரு தாயின் நிலையாகும்.

இவ்வாறாக, மேலும் பல் பாடல்கள் மகளிரது நிலந்தோயும் அடிக்காக இரங்கு கின்றன. இவை அனைத்தாலும் நிலத்தில் பொருந்தும் உறுப்பே அடியென்று அழைகக்ப் பெற்றுள்ளது "அடிதாங்கும் அளவினறி அழலன்ன வெமமை"[14] யுடையதாக இருக்கும் சுரத்தில் அல்லற் படுவது மகளிரது அடியாகக காட்டப்படுவதன் வழி அவர்களது அடி மென்மை உணாத்தப்படுகின்றது.

## பாதம் என்னும அடி

நிலந்தோயும் உறுப்பே 'அடி' என்று அழைக்கப்பட்டதாயினும் பொதுப்பொருளாக பாதம், கால், தாள் என்றவை சுட்டும் பொருளையும இச்சொல் குறிக்க வந்துளளது.

"அடியோ டமைத்தியாத்த கிண்கிணி"[15]

என்று கலித்தொகையில் வந்த 'அடி' பொதுவாகப் பாதம் என்னும் பொருளினதே. சதங்கை அணிவது நிலந்தோயும் அடியில் அன்று. மாறாக அது மேற்பகுதியாகிய கணுக்கால் பகுதியே.

---

9) சிலப், அடைக், 138 10) திருக்குறள் 1120 11) நற் 324. 9; 12) ஐங் 389; 13) கலித் 20, 6 - 7; 14) கலித் 11, 6; 15) கலித் 96, 16 - 17.

''நுதல்அடி நுசுப்பு எனமூ வழிச்சிறுகி''[16]

என்றவிடத்தும் 'அடி' என்பது பாதம் என்னும் பொதுப் பொருளதே

''தலையுற முன்அடி பணிவான்''[17]

என்கின்றபொழுது கால் என்பதே அடியெனப் படுகின்றது.

## நிலந்தோயும் ஆடவர் அடி

ஆடவரது அடியும் நிலந்தோய்கின்ற உறுப்பே எனினும் அதனைச் சிறப்பித்து அதிகம் பேசுவதில்லை. மகளிரது மெல்லடிக்கே நிலந்தோய்வதால் வருத்தம் உண்டாகும் என்பதால், சிறப்பு கருதி மகளிர் அடியோடு இதனை நிறுத்தி விட்டனர்.

ஆடவர் அடியை நிலந்தோய்ந்து வருந்தும் நிலைநீக்கிப் பொதுவாக நிலம்பதியும் வகையில் சிலவிடங்களில் சொல்லியும் உள்ளனர்.

''கல்வரை அயலது தொல்வழங்கு சிறுநெறி
நல்லடி பொறிப்பத் தாஅய்ச்
சென்றெனக் கேட்டனம்''[18]

என்ற குறுந்தொகைப் பாடலில், ஆடவர் அடி நிலத்தில் சுவடு உண்டாக்கிச் செல்வது சுட்டப்படுகின்றது.

## ஆடவரின் அளவடி

ஆடவர் அடி மகளிர் அடியினும் வலியது; பெரியது. ஆதலால் அதற்கேற்றவாறு பேசப் பெறுகின்றது.

அளக்கப் பயன்படுவது மிகுதியும் ஆடவரடியே யாகும் அளத்தல் போன்ற வினைகளைச் செய்வார் ஆடவராதல் பற்றியும் அவரது அடியே மகளிரடியினும் பெரியதாயிருத்தல் பற்றியும் அளவிற்குரியதாயிற்று. எனவே அடிக்கணக்கை மதிப்பிடுகையில் ஆடவர் அடி அளவையே கொள்ளல் மரபாகும்.

கரிகால் வளவன் தன்னைக் காணவரும் கலைஞர்களை மதிக்கும் முகமாகக்

''காலின் ஏழடிப் பின் சென்று''[19]

அனுப்பிவைப்பதாகப் பொருநராற்றுப்படை கூறும். இவ்விடத்து அடி, அளவிற்குரிய சிறப்பைப் பெறுகிறது. திருமால் உலகையே அடியால் அளந்தவன் என்பதை,

''ஞாலமூன் றடித்தாய முதல்வன்''[20]

என்று கலி பேசும்.

## பிறழா ஆடவர் அடி

மனித வரலாறு போராட்ட வரலாறாகும். விலங்கு நிலை மனிதனாகப் பிறந்தவன் அன்றிலிருந்து இன்றுவரை ஒருவனையொருவன் அடுதலும் தொலைதலும் ஆகிய இரண்டிற்குமிடையே வாழ்க்கையென்ற ஒன்றை ஓட்டிவந்திருக்கின்றான்.

---

16) கலித் 108, 3; 17) கலித் 128, 17; 18) குறுந் 207, 5-7;
19) பொருந 166; 20) கலித 124, 1;

ஒருவன் ஒருவனை எதிர்த்துப் போராடும் போர்க்களத்தில் பகையை வீழ்த்த ஒவ்வொருவரும் முன்னேறிச் செல்வர். முன்னேறுபவன் வெற்றிபெறும் தகுதியன் என்பதும் பின்னிறங்குபவன் தோல்வியடையப் போகிறான் என்பதும் பொருளாகும். அன்றியும் எதிரில் உள்ளவனை வீழ்த்த நினைப்பவன் உறுதியுடன் தன் காலை, ஊன்றி நின்று பகைவனைச் சாய்க்க வேண்டும் உறுதியாகக் காலை ஊன்ற முடியாதவன் வெற்றி பெறத் தகுதியற்ற வீரனாகக் கருதப்படுவான். இதனால் வீரர் எனப்படுவோர் தாம் வைத்த அடியைப் பிறழ்க்காமல் (பெயர்க்காமல்) நிலத்துடன் ஊன்றி நிற்பர்.

''பிறக்கடி யொதுங்காப் பூட்கை ஒள்வாள்
ஒடிவில் தெவ்வர் ... ... ...''[21]

என்ற பதிற்றுப்பத்தில் அடிபிறக்கிடாத வீரர்நிலை சொல்லப் பெற்றுள்ளது.

''அடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர் ... ... ...''[22]

என்று மதுரைக்காஞ்சியும் அடியைப் பின்னுக்குப் பெயர்க்காத வீரர் செயலைக் குறிக்கின்றது.

இவ்வாறு அடி பிறக்கிடாத வீரர்களே பெருமைக்குரியவர்கள். இவ்வீரர்களைப் புறநானூறு பீடுடையாளர் என்கின்றது.

''கால மாரியி னம்பு தைப்பினும்
வயத் கெண்டையின் வேல்பிறழினும்
பொலம்புனை யோடை அண்ணல் யானை
இலங்குவான் மருப்பின் நுதிமடுத் தூன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடையாளர்''[23]

எனவரும் இப்பாடலில், அம்புகட்கும் வாள்கட்கும் யானையின் வலிய மருப்பிற்கும் கூட அஞ்சிடாத மறவர் திறம் பாராட்டப் படுகின்றது

போர்க்களத்தில் வெற்றி பெறுகின்ற செயலே வீரச்செயலாக அன்றைய சமுதாயம் கருதி வந்தது. அதன் பழக்கமாகவே இன்றும் முன் ஏறுதல், முன் ஏற்றம் என்ற வழக்குகள் பொதுநிலை வாழ்க்கைச் சிறப்புக்கும் உரியதாகின. ஒரு செயலைத் திறம்படச் செய்பவனை இன்றும், முன் வைத்த காலைப் பின்வைக்காதவன் என்று மக்கள் குறிப்பிடுகின்றனர். இவ் வழக்கும் அடிபெயர்த்திடாத வீரனது சிறப்பினின்று வழங்கி வருவதே யாகும்.

## அடைக்கலமாகிய அடி

நிலம்பதியும் அடியிலுள்ள உறுப்பாகிய அடி, அளக்கப் பயன்படுவதும் போர்க்களத்தில் வெற்றி கொள்ள மூலமாயிருப்பதும் ஆகிய வகைகளில் பேசப் படுவதுடன் எளியோர்க்கு அடைக்கல உறுப்பாகவும் சான்றோர்களால் குறிக்கப்படுகின்றது.

மன்னர் செல்வர் ஆகியோரிடம் உதவி வேண்டும் ஏழை எளியர் அவர்தம் காலில் வீழ்ந்து வணங்குவர். அவ்வாறு வாழ்வோர் தாம் வீழ்ந்து வணங்கிய செயலே தமது வாழ்வுக்கு அடிப்படை என்றெண்ணுவர். வறுமை வெய்யலிலிருந்து ஒதுங்கி வாழும் எளியோர், மன்னர் செல்வர் ஆகியோரின் அடியை ''அடிநிழல்'' என்றே குறிப்பர்.

---

21) பதிற் 80, 8-9; 22) மதுரைக் 37-38; 23) புறம் 287, 3-7;

வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் என்னும் புலவர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் பாடுகையில் ''வானம் பாடி என்னும் பறவை மழை நீரை விரும்புதலைப் போல யானும் நின் வள்ளன்மை நசைக்கு இரங்கி நின் அடிநிழலில் வாழ்வேன்'' என்றார்

''துளிநசைப் புள்ளினின் னளிநசைக் கிரங்கிநின்
அடிநிழற் பழகிய அடியுறை''[24]

எனபது பாடலடியாகும்

## தொகுப்புரை

இது காறும் கண்டவற்றால் அடி என்பது நிலந்தோயும் உறுப்பே என்பதும் இந் நிலந்தோயும் உறுப்பாகிய அடி பெண்டிா இயல்பிற்கேற்பவும் ஆடவர் இயல்பிற்கேற்பவும் பேசப் பெறுகின்ற இயற்கையொழுங்கில் பாடப் பட்டுள்ளன என்பதும் ஆடவர் அடி வெற்றிக்கும் பாதுகாப்பதற்கும் உரிய தகுதியைப் பெறுகின்றன என்பதும் ஆகும்

## இறைவனது அடி

மகளிர், ஆடவர் ஆகியோரின் கால் உறுப்பு 'அடி' எனப்பட்டவாறே இறைவனது பாதமும் அடி என வழங்கப் படுகின்றது. இறைவனை நினைப்பது, வணங்குவது என்பது மனித மனத்தின் ஒரு கையற்ற செயலே

''அடியற்ற மரமென்ன அடியிலே வீழ்ந்து வீழ்ந்து''[25] என்று தாயுமானவடிகள் இறைவனைத் தொழுவர். வாழ்க்கைப் புயலில் ஆலாய்ப் பறக்கும் மனிதன் ஒரு பற்றுக் கோட்டினை நோக்கி ஓலமிடுகின்றான். தான் வணங்கும் மன்னர்கட்கும் மன்னராகச் செல்வர்கட்கும் செல்வராக இறைவனை எண்ணிய மனிதன் தன்னையொத்த மனிதரை வணங்கியதினும் ஆர்வத்துடன் அவ்விறைவன் முன் கீழே விழுந்து வணங்கி நிறைகின்றான். தம் வாழ்க்கை வெம்மைக்கு உரிய நிழல் வாய்த்ததென்று ஆறுதல் பெறுகின்றான்.

ஒருவனது உள்ளத்தைக் கரைவிக்க அவனது காலடியில் வீழ்ந்தால் போதும் என்று மக்கள் நினைக்கின்றனர். இறைவன் காலடியில் வீழ்கின்றபோது உறுதியாக அவன் அருள புரிவான் என்று நம்புகின்றனர்.

''இருந்தையூ ரமர்ந்த செல்வநின்
திருந்தடி தலையுறப் பரவுதும்''[26]

என்பது பரிபாடல்திரட்டு இம் மனநிலையிலேயே இறைவனை வணங்குவதை அவனது அடியை வணங்குவதாகக் கொளகின்றனா

''மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும வீங்கிள வேனிலும
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை இணையடி நீழலே''[27]

என்று அப்பர் ஈசனடிப் பெருமை பேசுவர் இறைவனது அடியையே இறையன்பர்கள்

---

24) புறம் 198, 25 - 26 ;
25) தாயுமானவடிகள் திருப்பாடல், தேசோமயானந்தம் பா. 10, 5.
26) பரிபாடல்திரட்டு 1, 5 - 6 ;
27) அப்பர் தேவாரம், தனித்திருக் குறுந்தொகை. பா. 1.

நினைப்பர் ; வணங்குவர், அதனாலேயே அவர்கட்கு ''மெய்யன்பின் அடியார்கள்''[28] என்று பெயராயிற்று

### முருகனடி

திருமுருகாற்றுப்படை நக்கீரர் முருகனை வணங்கும்போது

''நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி உள்ளி வந்தனென்''[29]

என்கிறார். பரிபாடல் ஆசிரியரும் முருகனை வணங்குமாறு வையகமக்களை அழைக்கும் பொழுது,

''அடி சேர்ந்து சாற்றுமின்''[30] என்பார்.

### திருமாலடி

பரிபாடலில் இடம்பெற்ற மால் பாடல்கள் மிகச் சிறப்பானவை. இப் பாடல்களிலும் திருமாலின் அடியே சிறப்பித்துப் பாடப் பெறுகின்றது.

''நல்லடி யேத்திப் பரவுதும்[31]'' என்பது பரிதிரட்டுப் பாடலாகும்.

''மறுபிறப் பறுக்கும் மாசில் சேவடி''[32] என்று பரிபாடல் மாலடிப் பெருமை பேசும்.

''அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம்''[33] என்பது புலவரின் நெகிழுரையாகும்.

### தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் மேலும் பல பாடல்களில் இறைவனது அடி சிறப்பிக்கப் பெறுகின்றது. பின் வந்த பத்திமைப் பாடல்களிலும் இதே மரபில் 90 விழுக்காட்டளவு அடியும் 10 விழுக்காட்டளவு தாளும் புகழப் பெறுகின்றன.

### பறவை, விலங்குகளின் அடி

கால், தாள் என்னும் சொற்கள் எவ்வாறு உயிரினங்களின் பாத உறுப்புகட்குப் பொதுப் பெயராயினவோ, அவ்வாறே 'அடி' என்னும் சொல்லும் அனைத்து உயிரினங் களின் பாத உறுப்பினைச் சுட்டவலல பொதுச் சொல்லாயிற்று.

### பறவை - மயிலடி

தோகை விரித்தாடும் மயிலின் அடி, நொச்சியென்னும் ஒருவகை நிலைத் திணையின் இலைக்கு உவமையாகச் சொலலப்படுகிறது. இதிலிருந்து நொச்சியிலை போல் மயிலின் அடி இருக்கும் என்பதை அறியலாம்

''மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி''[34]

''மயிலடி யனன மாக்குரல் நொச்சி''[35]

என்பன நற்றிணை அடிகளாகும.

---

28) திருவாசகம், திருச்சதகம், 17, 3, 29) திருமுருகாற் 278 - 79 ;
30) பரிபாடல் 8, 79 ; 31) பரிதிரட்டு 1, 81 ; 32) பரிபாடல் 3, 2 ;
33) பரிபாடல் 13, 61 ; 34) நற் 115, 5 ; 35) [illegible] ;

நாரையடி

நாரை, மீனுண்ணும் பறவையாகும். இந்நாரை வாளை மீனைப் பிடித்துண்ண மெல்ல அடியெடுத்து வைக்கும் திறனை, ''காவல் நிறைந்த வீட்டினுள் மெல்லமெல்ல அடியெடுத்து நுழையும் கள்வனைப்போல் தன் அடியை எடுத்து வைக்கின்றது'' என்று அகநானூறு கூறும். ஓசையெழாமல் செல்வதற்கு அடியினை மெல்லப் பெயர்த்து வைக்கும் செயல் இங்கு அறியப் படுகின்றது.

''நீளிரும் பொய்கை இரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போல''[36]

என்பது பாடலடியாகும்.

பறவைகளின் அடிச் சுவடு

நீரில் வாழும் மீன் முதலியவற்றைப் பிடித்துண்ணத் தண்ணீர் வற்றிய குளங்களில் பறவைகள் திரிந்தவாறே இருக்கும். கோடைக் காலங்களில் நீர் வற்றிக் கொண்டே வரும் குளங்களில் இரை தேடித் திரியும் பறவைகளின் சுவடுகள் நிறையப் பதிந்திருக்கும். இதனைக்

''... ........ . . கொடுஞ்சிறை
உள்ளடி பொறித்த வரியுடைத் தலைய
நீரழி மருங்கு . ...... ...''[37]

என்று நற்றிணை கூறும். இங்குச் சுவடு பதிப்பது. நிலத்தில் தோயும் உறுப்பாகிய அடியே என்பதனை ''உள்ளடி பொறித்த'' என்ற தொடர்கொண்டறியலாம்.

விலங்குகளின் அடி – மானடி

மானின் அடி இரண்டு கூறாகப் பிளவுபட்டிருக்கும். இதன் அடி அடும்பின் இலைகட்கு உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது.

''மானடி யன்ன கவட்டிலை அடும்பு''[38] என்பது குறுந்தொகை.

காட்டுவிலங்காகிய மான், மக்கள் நடமாட்டம் இல்லாத வழிகளில் மேய்ந்து வளரும். அதன் அடிச்சுவடு அத்தகைய வழிகளில் பதிந்து கிடக்கும்.

''மானடி பொறித்த மயங்கதர்''[39]

என்று இதனைப் பெரும்பாண் கூறும்.

மானின் பதிந்த அடிச்சுவடு கண்டு வேட்டையாட வருபவர்கள் மானைத் தேடிச் செல்வர். இதனை,

''வயமான் அடித் தேர்வான் போல''[40] என்று கலித்தொகையும்

காட்டு மான் அடி வழி ஒற்றி
வேட்டஞ் செல்லும்''[41]

என்று அகநானூறும் குறிப்பிடும்.

---

36) அகம் 276, 1 - 4; 37) நற் 241, 1 - 3; 38) குறுந் 243, 1;
39) பெரும்பாண் 106; 40) கலித் 37, 2; 41) அகம் 388, 25 - 26;

மேற்குறித்த இரண்டிடங்களிலும் 'அடி' என்னும் சொல் நிலத்தில் பதிந்த சுவட்டினையே குறிக்கின்றது என்பதும் இங்கு மானின் காலடியை அன்று என்பதும் எண்ணத்தக்கனவாகும்

## குதிரையின் அடி

'அடி' என்பது சுவடு என்னும் பொருளில் தனித்து வழங்கத் தலைப்பட்டது கவனிக்கத் தக்கதாகும். போர்க் களத்தில் வீரர்கள், தம் வாடகள் சிதையப் பகைவர்களைக் கொன்று குவிக்கின்றார்கள். அவர்களின் உடற்குருதி குதிரைகளின் அடி வைத்த குழிகள் தோறும் நிரம்பியிருக்கிறது. இந் நிலையில் போர்க்களம் வானத்து மீன்கள் ஒளிவிடுவது போல காட்சியளிக்கின்றது என்று ஓர் அகப் பாடல் வருணிக்கும்.

''போர்வேட் டெழுந்த மன்னர் கையதை
கூர்வாட் குவிமுகம் சிதைய நூறி
மானடி மருங்கில் பெயர்த்த குருதி
வான மீனின் வயின் வயி னிமைப்ப''[42]

இப் பாடலில் 'மானடி' என்பது குதிரையின் குளம்புப் பகுதி உறுப்பைக் குறிக்காமல் குளம்பு பதிந்த சுவட்டினையே குறித்து நிற்கின்றது.

## புலியின் அடி

உருவில் பெரிய யானையையும் அஞ்ச வைக்கும் புலி தன் கூரிய நகங்களைப் பாதத்தில் கொண்டிருக்கும். புலியின் அடி, அதன் பரந்த, கிளைத்த தன்மைக்கேற்ப வாழைக் குலையின் வடிவுபோல் இருக்கும் என்று அகப்பாடல் கூறுகின்றது.

''கடுங்கண் உழுவை அடிபோல் வாழைக்
கொடுங்காய் குலை''[43] என்பது பாடலடியாகும்.

## கரடியின் அடி

கரடியின் அடி ''குடா அடி''[44] எனப்பெறுகின்றது. 'குடா' என்பது ஓர் இசைக் கருவியாகும்.

## பூனையின் அடி

வெருகு என்பது காட்டுப்பூனையாகும். இதன் அடி குவிந்திருக்கும். இதனைக் ''குவியடி வெருகு''[45] என்று அகம் உரைக்கும். பிறிதோர் அகப்பாடல், காட்டுப் பூனையின் அடிபோல் இருப்பை மொட்டு குவிந்திருக்கும் என்று நுட்பமாய் உரைக்கின்றது.

''வெருக்கடி யன்ன குவிமுகிழ் இருப்பை''[46] என்பது பாடலடியாகும்.

## யானையின் அடி

நிலம் வாழ் உயிரினங்களில் பெரிதான யானை அதன் உருவிற் கேற்ப அடியையும் பெரிதாகக் கொண்டிருக்கும். சங்க விலக்கியத்தில் விலங்குகளின் அடியைப் பற்றிய விளக்கங்களில் யானையின் அடியே அதிக இடங்களில் பேசப் பெற்றுள்ளன.

யானை பெரிய அடிகள் உடையது என்பதனைப் பலவகைகளில் சான்றோர் சொல்லியுள்ளனர்.

---

42) அகம் 144, 14 - 17; 43) அகம் 43, 24 - 25. 44) திருமுருகாற் 313;
45) அகம் 367, 8; 46) அகம் 267, 6;

''குவவடி... ...யானை''[47]
''பாவடி பணைத் தாள்''[48]
''பாவடி''[49] எனவும்
''பாவடி உரல''[50]
''உரல்புரை பாவடி''[51]
''கறையடி''[52] (கறை - உரல்)

எனவும் யானையடி சிறப்பிக்கப் பெறும்.

யானையின் அடிககுச சிறப்பாக ஓர் உவமையைச் சங்க விலக்கியம் பேசும் கரும்பினை நடுவதற்குத் தனித தனியாகப் பாத்தி செய்வர். இப்பாத்தியைப போல் பெரிதாக யானையடி உளளதென்பர்.

''..... கரும்பு நடு பாத்தியன்ன
பெருங்களிற றடிவழி......''[53] என்பது குறுந்தொகை

## தொகுப்புரை

நிலத்தில படிகின்ற அடியில் உள்ள உறுப்பு, அடியெனவே அழைக்கப் பெறுகின்ற தாயினும ஒவ்வோர் உயிரினங்கட்கும் ஏற்ப, அடியானது அளவில, வடிவில் வேறுபாடுடையதாகின்றது. அடி என்பது உறுப்பு ஒன்றனுககுப் பெயராகின்ற நிலைக்குமேல் அது பதிந்த சுவட்டிற்கும அடி என்ற அதே பெயரை ஏற்ற நிலையை மேற் காட்டிய பாடல்கள் சிலவற்றில் காண முடிந்தது

சிற்றூர்ப் புற மக்கள் இன்றும் தம் வீட்டிலும் விளைபுலங்களிலும் களவு நடந்து விடுமாயின், அக் களவு நடந்த இடத்திற்கு வந்து சென்றவரின் அடிச்சுவடு கண்டு அதனைப பின் தொடாந்து அக் களவினைச் செய்தார் எங்கிருந்து வந்தார், அவர் யாவர் என்று கண்டு பிடித்து விடுவர். அத்துடன் சுவட்டின் தன்மையறிந்து இச்சுவடு இவருடையதே எனறும முடிவுரைப்பர். இதனை ''அடிகண்டு பிடித்தல்'' என்று இன்றும் வழஙகுவர்.

## பல்வேறு பொருளகளின் கீழ்ப்பகுதியை அடி யெனல்

உடல்படைத்த உயிரினங்களின் நிலந்தோயும் கீழ்ப் பகுதி அடியெனப் பட்டவாறே பிற உயிரல் பொருள்களின கீழ்ப் பகுதியும் அடியென அழைககப் பெறுகின்றன.

## உடுக்கையின் அடி

இரண்டு பக்கமும் இசையெழுப்பும் தோற்கருவி உடுக்கையாகும் இது 'துடி' எனவும் அழைக்கப் பெறும் இக் கருவியை இசைக்காத பொழுது இரண்டு பக்கத்தில் ஏதாவதொரு பக்கத்தையே தரையில் படும்படி வைத்திருப்பர். அந் நிலையில் அடியிருக்கின்ற அப் பக்கமே அடி என அழைக்கப்பெறும்

உரலடியை யானையின் அடிக்கு உவமை சொல்லும் சான்றோர் யானையினும் சிறிதாகிய யானைக் கன்றின் அடிக்கு இத் துடியடியை உவமை செய்வர்.

''துடியடி யன்ன தூங்கு நடைக் குழவி''[54]

என்ற பொருநராற்றுப் படையில் இவ்வுவமையைக் காணலாம்.

---

47) அகம் 347, 11 - 12 ; 48) புறம் 72, 3 ; 49) புறம் 233, 2 ; 22, 4 ; 15, 8 ; 211, 3 ; நற் 51, 8 ; 50) குறுங் 89, 1 ; 51) கலித் 21, 1 ; 52) பெரும்பாண் 351 ; புறம் 39, 1 ; 135, 12 ; 53) குறுங் 262, 7 - 8. 54) பொருந 125 ;

## யாழின் அடிப்பகுதி

நரம்பிசைக் கருவிகளுள் யாழ் ஒன்றாகும். இசை யெழுப்பும் நரம்பினை மரத்தாலான யாழிடத்தே வரிந்து கட்டுவர். அவ்வாறு யாழித்தே நரம்பினைக் கட்டிய செயலைச் சொல்லுகையில் யாழின் அடியிடத்தே கட்டிய நரம்பு என்பர் புறநானூற்றுப் புலவர்.

"............அடிபுணர்
வாங்கிரு மருப்பின் தீந்தொடைச் சீறியாழ்"[55]

இது பாடலடியாகும். இப்பாடலில் தரையிடத்தே பொருந்தும் யாழின் பகுதியே அடியெனப்பட்டுள்ளது.

## பகழியின் அடி

வேடரும் ஆறலை கள்வரும் வில்லில் தொடுத் தெய்யும் கூர்ங்கருவி பகழி யாகும். இப் பகழியின் வில்நாணில் பொருந்தும் பகுதியும அடியெனப்படுகின்றது.

"அடியமை பகழி"[56] என்பது அகநானூறு.

## கட்டிற்கால் அடியாதல்

கட்டில் போன்ற இருக்கையின் கால்கள் அடியில் நின்று, உயிரினங்களின் உடலைத் தாங்குவது போல், கட்டிலைத் தாங்குவதால் அவையும் அடியெனப்படு கின்றன.

நெடுநல் வாடையில் கோப்பெருந்தேவியின் கட்டிலைத் தச்சர் செயகையில், குடமாகிய உறுப்பில் கால்களைப் பொருந்துமாறு அமைக்கின்றனர். இதனைப்,

"புடைதிரண் டிருந்த குடத்த இடைதிரண்டு
உள்ளி நோன்முதல் பொருத்தி அடியமைத்து"[57]

என்று பாடல் சொல்லும். இங்கு அடி என்பது கட்டிலின் அடியில் உள்ள காலேயாகும்.

## குன்றத்தின் அடி

ஓங்கியும் பரந்தும் அமைந்த மலைக்குன்றம் போன்றவற்றின் கீழ்ப்பகுதியும் அடியெனவே அழைக்கப் பெறுகின்றது. அடிவாரம், மலையடிவாரம் என்ற வழக்கு இன்றும் உண்டு.

பரிபாடலில் திருப்பரங்குன்றத்தைப் பாடும் பொழுது
"தண்பரங் குன்றத்து அடி"[58]
"குன்றத்து அடி"[59]

என அக் குன்றின் கீழ்ப்பகுதியை அடியெனக் குறிப்பர் புலவர். 'குன்றத்து அடி' என்று சொல்லாமல் 'மாலை வேளை வந்தால் மக்கள் அடியில் கூடுவர்' என்று திருப்பரங் குன்றத்தைச் சிறப்பித்து பிறிதொரு பாடல் குறிப்பிடும்.

"மாலை மாலை அடியுறை யியைநர்"[60] என்பது அப்பாவடியாகும்.

## கீழ்ப் படுத்துதல் என்னும் அடிப்படுத்துதல்

போர்க் களத்தில் ஒருவன் ஒருவனை எதிர்த்துப் பொருகையில் வென்றோன்

---

55) புறம் 285. 2 - 3; 56) அகம் 161, 3; 57) நெடுநல் 121 - 22;
58) பரிபாடல் 8, 62; 59) பரிபாடல் 21, 16; 60) பரிபாடல் 17, 7;

தோற்றோனைக் கீழே தள்ளி வாகை சூடுவான். இவ்வாறு சூடும் வெற்றிக்கு அடிப்படுத்தல் என்று பெயராகும்.

வென்ற வீரன் காலடியில் தோற்றவன் வீழ்தலுண்டு. ஆதலால் வீரச் செயல் அடிப்படுத்தல் என்று வழங்கப் பட்டிருக்கலாம். அல்லாமல் தோற்றவனுடைய நாடு வென்றவனின் காலடிக்கு அடக்கம் ஆதலாலும் வெற்றி 'அடிப்படுத்தல்' எனப்பட்டிருக்கலாம்.

பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துப் போரில் தம்மை எதிர்த்த ஏழு மன்னர்களையும் வென்றான் என்பதை,

''எழுவுறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்
நேரா எழுவர் அடிப்படக் கடந்த
ஆலங் கானத்து ஆர்ப்பு''[61] என்று அகம் பேசும்.

பகைவர் நாட்டைப் பல்வகையிலும் தாக்கி வெற்றி கொண்ட வீரர் செயலைப் பதிற்றுப்பத்தும் ''நாடடிப் படுத்தல்''[62] என்று உரைக்கும்.

பாண்டிய மன்னர்கள் நெடுங்காலமாய் வையத்தைக் காத்து வருகின்றனர் என்பதைச் சொல்லும் மதுரைக் காஞ்சியும்

''புகழ் நிறைந்த நன்மாந்தரொடு
நல்லூழி அடிப்படர
பல்வெள்ளம் மீக்கூர
உலகம் ஆண்ட உயர்ந்தோர்''[63] என்று உரைக்கும்.

## நல்வழி அடிவழியாதல்

உலகின் நீண்ட நெடிய கால ஏடுகளில் ஒவ்வொரு மனிதனது வாழ்வும் புள்ளியனைய சிறுசிறு கோடுகளாகவே இருந்து மறைகின்றன. ஆயினும் தொடர்ந்து மக்களினத் தொகுதி மட்டும் இருந்தே வருகின்றது ஒரு கனி உதிரும் பொழுது ஒரு காய் கனியாகி விடுகின்றது. அவ்வாறே காயின் இடத்தைப் பிஞ்சும் பிஞ்சின் இடத்தைப் பூவும் பூவின் இடத்தை மொட்டும் அரும்பும பிடித்துக் கொள்கின்றன.

ஒருவர் வாழ்வின் மறைவில் ஒருவர் பிறக்கின்றார். குலையீன்ற வாழை, தனது அடியில் கன்றை முளைக்க வைத்து விட்டு தலைமாறி மறைந்து விடுதலை மிகவொக்கும். இதனைத் தான் ''வாழையடி வாழை'' என்றனர் வள்ளலார். மக்கள் சமுதாயம் மரமனையதாக இருப்பது கருதியே, கால, கால்வழி, கால்முளை என்ற வழக்குகள் அதன் தொடர் ஓட்டத்திற்கு ஏற்றுச் சொல்லப் பெற்றன.

மக்கள் வாழ்க்கையில் தோன்றும் அறங்களும் பண்புகளும் நம்பிக்கைகளும் அவரவர்கள் வாழ்க்கையில் கண்டு உணர்ந்த எச்சங்களாகவே பிந்தைய தலைமுறைக்கு வந்து சேர்கின்றன.

பெரியோர் பின்பற்றிய ஒழுகலாறுகள் நடத்தை எனவே அழைக்கப்படும். ஒருவனுடைய காலால் நடக்கும் நடை பிறிதொருவனதினின்று வேறானது போல ஒருவனது ஒழுக்கமும் பிறிதொருவனதினின்று வேறானதாம்.

---

61) அகம் 209, 4 - 6 ; 62) பதிற் 81, 15 ; 63) மதுரைக்காஞ் 20 - 23 ;

கால்நடை போன்றே உள்ளத்தால் ஒழுகிய மனவொழுக்கமும் நடை எனப்பட்டது. ''நன்னடை நல்கல்''[64] என்று புறம் இதனைக் கூறும். 'நடவடிக்கை' என்று மக்கள் வழக்கில் கூறுவர்.

ஒரு பையன் தீய ஒன்றினுக்காகத் திட்டமிட்டுத் திரிகையில் ''என்ன பையன் ஒரு மாதிரி அடிப் போடுகிறான்'' என்று இன்றும் வழக்கில் புழங்குவர். இங்கு ''அடிப் போடுகின்றான்'' என்பது தீய செயல் செய்யத் திடடமிடுகின்றான் என்ற பொருளைத் தருகின்றது. 'மதுரைக் காஞ்சி' என்னும் உயர்ந்த அற நூலின் ஆசிரியர் மாங்குடி மருதனார் ஆவர். இவர்

''ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன்''[65] என்று புறநானூற்றில் பாராட்டப்பெறும் தலைமைச் சான்றோர் ஆவார். இப்புலவர்பெருமான், பாண்டியன் நெடுஞ்செழியனிடம் பெரியோர் சென்ற வழியே ஒழுக வேண்டும் என்று அறமுரைக்கும் பொழுது,

''அரசியற் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது''[66]

ஆட்சி செய்யச் சொல்லுகின்றார்.

மாசில்லா அறிவு நிரம்பிய சான்றோர் சென்ற செந்நெறிகளையே அறிவுடையார் பின்பற்ற வேண்டும் என்று சொல்லவந்த மாங்குடிமருதனார் ''பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது'' என்று சொல்லுவார். அடி என்னும் சொல் எத்துணை நெடுங்கால வரலாற்றைப் பெற்றிருந்தால் அது மனிதனது பாதம் என்னும் உறுப்பை மட்டும் தொடக்கத்தில் சுட்டி, அதனைத் தொடர்ந்து வெற்றிக்கும் புகழுக்கும் அருளுக்கும் உடையதாக வளர்ந்து இறுதியில் ஒழுக்கம், உயர்ந்த நெறி ஆகிய பொருள்களை எட்டிப் பிடித்திருக்க வேண்டும் என்று நினைக்கும் பொழுது, இச் சொல் தமிழரது தனித்த வாழ்க்கை வரலாறாகவே அமைந்து சிறக்கின்றதென்று அறிகின்றோம்.

---

64) புறம் 312, 4. 65) புறம் 72, 13 - 14. 66) மதுரைக்காஞ் 191, 92;



# "விழித்தெழு தமிழா!"

— கவிஞர். கழனியூரன்.

உலகத்துத் தமிழர்களே ஒன்று கூடுங்கள் — நம்
உயர்தனிச் செம்மொழியை உயர்த்தப் பாருங்கள்.

பூமியெங்கும் தமிழ்த்தாய் கால்பரப்பி நடக்கட்டும்
புதுமைகளைக் கைநீட்டி பறித்தே சூடட்டும்
நாமினியும் தூங்கினாலோ நல்லோரே நமதுமொழி
நலிவுற்று தாழ்வுற்று போகுமதில் ஐயமில்லை...!

வள்ளுவனை கம்பனை வாழ்த்தி வாழ்த்தி
வீட்டுக்குள் விலங்குகளால் பூட்டி வைத்தோம்
வள்ளுவனை கம்பனை வையத்தோர் அனுபவிக்க
வாய்ப்பினை நாம்தர வேண்டாமா சொல்வீர்...?

உலகிலுள்ள ஒவ்வொரு உயர்மிகு மொழிகளிலும்
அழகுறவே தமிழ்நூல்கள் அச்சிட்டு வெளியிடணும்
பழகுதமிழ் மொழியின் பாட்டுக்கள் யாவையும்
பாரிலுள்ள மக்களுக்கு பக்கமாய் ஆக்கிடணும் ...!

அகிலத்தைக் கையடக்கப் பதிப்பாகப் பார்க்கின்ற
அறிவியல் விந்தைகள் வளர்ந்த பின்னும்
தமிழினத்தின் பெருமைகளை தரணி யெங்கும்
தெரிவிக்க வேண்டாமா...? சிந்திப்பீர் தமிழர்களே...!

சாம்போதும் தமிழ்சொல்லி செத்ததமிழ் மறவர்கள்
வாழ்ந்திட்ட மண்ணில் வந்துபிறந் திட்டநாம்
வாழ்கின்ற போதிலே வண்ணமுறத் தமிழின்
தாழ்வில்லா புகழை வளர்க்கவும் வேண்டாமா...?

பரண்களிலே படுத்துறங்கும் பழந்தமிழ் சுவடிகளை
பாங்குறவே தொகுத்துத்தான் அச்சிட்டு வெளியிடணும்
அரண்கண்ட தமிழ்மொழி அகிலத்தில் உயர்ந்தேதான்
திறமுடனே வளர்ந்தேதான் திசைஎட்டும் செல்லட்டும்..!

யோசிக்க நேரமிலலை எவர்தயவும் தேவையில்லை
காசினிலே தமிழர் கூட்டத்தில் குறைவில்லை
பேசிக் கிழித்திட்ட பொழுதுகள் போதும்
காசுக்கா பஞ்சம் ? தமிழனே ஒன்றுபடு...!

தமிழின் புகழை தாரணியே பேச வேண்டும்
தமிழ்மொழி தனுக்கிங்கே தக்கஉயர் பதவியினை
இனியேனும் இவ்வையம் அளித்திட வேண்டும்
எனில் நாம் இன்றுமுதல் உழைத்திட் வேண்டும்...!

அணுவணுவாய் அழிந்து கொண்டே இருக்கின்ற
அருந்தமிழ் சுவடிகளை மீட்க வேண்டும்.
துணிவோடு முன்வந்து தூயதமிழ் தொண்டினை
துடிப்போடு செய்திடவே துள்ளிஎழு தமிழனே...!

உலகத் தமிழர்களே ஒன்று கூடுங்கள் — நம்
உயர்தனிச் செம்மொழியை உயர்த்தப் பாருங்கள்.

# புதுக்கிளைகள் தமிழ்த்தருவில் பூத்தல் வேண்டும்

— ரெ. பாலகிருஷ்ணன்

மேற்றிசையில் மலையாள மின்னல் கீற்று
    மேதினியில் ஒளிவீச, வளைகு டாசேர்
கீழ்க் கரையில் வங்கமணிச் சுடரின் ஊற்று
    வற்றாத ஜீவநதிப் பாகாய் ஓட
நாற்றிசையும் சங்கமணிக் குறள்ஒ லித்த
    நற்றமிழின் குரலொடுங்கிச் சவலை வாய்ந்து
காற்றொழிந்த கந்துகமாய் மேனி சோர்ந்து
    கவினிழந்து போனதுஏன் புரிய வில்லை!

மடங்கியதோ தமிழ்ச்சேனை மாய மானின்
    மருள்விழியின் நோக்கத்தில்; நோக்கம் கெட்டு
முடங்கியதோ தமிழ்ப்பாட்டு முந்தா னைக்குள்;
    முத்தமிழின் முனைமழுங்கிப் பான்மை செத்து
அடங்கியதோ அடலேறின் அடங்கா ஆற்றல்
    அனும்தியோம் அனுமதியோம் என்றே இங்கு
தொடங்கியது தமிழியக்கம் தமிழ்க்கி ணற்றில்
    தூரெடுத்து நல்லமுது ஊற வைக்க.

தெருக்கூத்தும் நாடகமும் திண்ணைப் பாட்டும்
    தேர்வதுதான் தமிழ்க்கல்வி என்ற மாயைக்
கருத்திங்கே பெருத்ததனால் தமிழைக் கற்க
    காளையர்க்கும் கன்னியர்க்கும் ஆர்வம் போச்சு
மருத்துவமும் பொறியியலும் சட்ட நூலும்
    மணித்தமிழில் வரவேண்டும்; எத்து றைக்கும்
பொருத்தமிது தமிழென்று போற்றல் வேண்டும்
    புதுக்கிளைகள் தமிழ்த்தருவில் பூததல் வேண்டும்.

தமிழ்ப் பார்வை தரணியெலாம் தழுவ வேண்டி
    தமிழ்க்காதில் அறிவியலை ஓத வேண்டி
தமிழ்த்தறியில் புதுச்சேலை நெய்ய வேண்டி
    தமிழ்ப்பூவால் புதுமாலை செய்ய வேண்டி
தமிழ்கற்றார் தலைநிமிரும் வண்ணம் இங்கே
    தமிழ்க்கல்வித் திட்டங்கள் தழைக்க வேண்டி
தமிழியக்கம் காண்கின்றார் தகைமை சான்ற
    தமிழறிஞர் அவைகூடி வாழ்க நன்றே.

—0—0—0—

# தமிழ் இலக்கியங்களைப் பாதுகாத்தல்

— டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

தமிழ், அமிழ்தினும் இனிய மொழி. ஆழமுடையது அழியாதது. அழிவற்ற அளவற்ற உண்மைகளைக் கூறுவது. நீங்கா இளமையும் மங்காப் பொலிவும் கொண்டு, காலங்காலமாகச் செழித்து வளர்வது. வளம் சேர்ப்பது. நாடும் இனமும் மக்களும் வளர வழிகாட்டுவது. பழமையையும் பண்பாட்டையும் அறியக் களன் வழங்குவது. பல் உருக்கொண்டு, வடிவ மாற்றங்கள் பெற்றுப் பரப்புப் பெற்ற போதும் தனித்து நிற்பது. தனித்தன்மை இழக்காதது. மொழிப் பெயராக மட்டும் நின்று விடாது, நாட்டையும், மக்களையும் சுட்டுவது. அத்துடன் மட்டும் அமையாது, இனிமை, தெளிவு முதலிய பண்புகளையும், இயலிசை நாடகங்களையும் குறிப்பாக இலக்கியத்தையும், அதிலும் தமிழிலக்கியத்திற்குரிய சிறப்புக் கூறான 'அக'த்தையும் உணர்த்தும் பாங்குடையது.

இலக்கியம் வாழ்விலிருந்து எழுவது. வாழ்வைப் பற்றியது. இன்ப துன்ப அனுபவங்களை மட்டுமன்றி எதிர்பார்ப்புகளை, ஏக்கங்களை, கற்பனைகளை, குறிக்கோள்களை வடிப்பது. இருப்பதையும், இயல்வதையும் தரும் குறிப்பேடாக அமைவது. விழைவுகளையும் விருப்பங்களையும் புனையும் காலச் சுவடியாகக் காணப்படுவது. எழுந்த காலத்தின் சான்றிதழாக அமையும் பாங்கால், பிற்காலத்தாராலும், எக்காலத்தாராலும் வேண்டப் படுவது, போற்றப்படுவது. இட, மொழி எல்லைகட்கு அப்பாற்பட்ட செல்வாக்கும் நிலை பேறும் உடையது. தானே கனியாகச் சுவை தந்து அமையினும், இன்னும் பல சுவைக் கனிகள் தோன்ற விதையூன்றுவது.

தமிழிலக்கியப் பெருக்கும் வளமும், கடல்போன்ற அளவின்மையும் நிலம் போன்ற பரப்புடைமையும் காட்டுகின்றன. பல நூற்றாண்டுப் பழமையுடைய தமிழ் மொழியின் படைப்புகள் மூவாயிரம் ஆண்டேனும் தொன்மையுடையனவாகின்றன. மக்களின் வாழ்வில் பேச்சாக மலர்ந்த மொழி, இலக்கியமாகவும் உருப்பெற்று, வாய்மொழியாகவும், எழுத்திலக்கியமாகவும் வழக்குப்பெறுகின்றது; பின்பு அவை காலங்காலமாகத் தமிழருடைமையாகி, சுவைஞர் உடைமையாகிப் பரபபுதலும் பாதுகாப்பும் பெற்றுப் பின் சந்ததிக்கு வைத்துச் செல்லப்படுகின்றன. அனைவர்கும் உரிமையுடைய இப் பொதுப்பொருள் தமிழர் வாழ்வின் மிகப் பலவான பரிமாணங்களையும் காட்ட வல்லது.

இலக்கியம், காலக் கண்ணாடியாகவும், நிகழ்வுக் குறிப்பேடாகவும் அமைவதால் இப் பல்லாண்டுக் கால வரலாற்றை, வாழ்வியலை அறிவிக்க வல்லது; அறிய உதவுவது. இலக்கியம், மொழியில் இயல்வதால், ஒவ்வொரு இலக்கியமும் அதனதன் கால மொழி நிலையை விளக்க வல்லது. பேச்சு மொழியும், நினைவில் இருக்கின்ற வாய்மொழி இலக்கிய மொழியும் தருகின்ற மொழிச் செய்திகளை விட மிகப் பரப்புடைய மொழியியல் எண்ண ஓட்டங்களை அறிய, செல்வங்களை உணர, தாக்கங்களை, தோய்வுகளைத் தெரிய இலக்கியத்தின் ஊடுபொருளான மொழி உதவுகின்றது.

சமுதாய வரலாறும், அரசியல் வரலாறும், சமய வரலாறும் கலைச் சின்னங்கள் வாயிலாகவும், சாசனங்கள் - கல்வெட்டுகள் வழியாகவும், இறை வழிபாட்டுத் தலங்கள்- எச்சங்கள் மூலமாகவும் உணரப்படுதல் ஒருபாலாக, இலக்கியம் வாயிலாகவும் பல் நிலையில் ஆழமாகவும், தெளிவாகவும் அறியப்பட முடியும். சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள்,

நம்பிக்கைகள், நாகரிக முதிர்ச்சி, பண்பாட்டுப் பாங்கு, மாந்தரின் நடையுடை பாவனை, எண்ணங்கள், எழுச்சிகள், நோக்கங்கள், செயல்கள், திட்டங்கள், அறிவு நிலை எனப் பலவும் புலப்படக் களன் அமைகின்றது.

குறிக்கோளும், நோக்கமும் கொண்டு இலக்கியங்கள் எழுவதுடன் பல்வகைப் பயன் கருதியும் தோற்றம் கொள்வதன்னால் அவை படிக்கப்படுதலும் பாதுகாக்கப் படுதலும் தேவையாகின்றது. அச்சு இயந்திரங்கள் வந்ததால் பல ஓலைச் சுவடிகளில் பாது காக்கப்பட்டுவந்த நூல்கள் அச்சேறிப் பரப்புதல் பெற்ற பின்பும், இன்னும் அச்சேறா நூல்கள் ஏராளமாக அமைகின்றன. பல நூலகங்களிலும், தனிமனிதரிடமும் தொகுத்து அமைக்கப்பட்டுள்ள இவை, நீண்டகால பாதுகாப்புக் கேற்ற வகையில் அமைய வேண்டியது இன்றியமையாததாகும். ஓலைகளின் ஆயுளை விட தாளில் அச்சு இயற்றிய நூல்களின் ஆயுள் நீண்டதாகவும், பிரதிகள் பல ஆதலின் பாதுகாத்தல் வாய்ப்பாகவும், நூலகங் களில் வைத்துப் போற்றல் எளிதாகவும் அமைகின்றது.

பல்லாயிர மாண்டுக் காலமாகத் தோன்றிச் செழித்த தமிழ் இலக்கியங்கள் எண்ணுக் கடங்காதனவாக அமைகின்றன. அவற்றில் மிகப் பேரளவின அச்சேறாததாலும், இழக்கப்பட்டதாலும் தமிழர் கையில் இன்று நின்று தவழும் வாய்ப்பை இழந்தன. இப்போது இருப்பனவற்றிலும் பல கிடைத்தற்கரியனவாயின. பதிப்பு, மறுஅச்சு போன்றவற்றால் இவை பாதுகாக்கப் படாவிடின் தமிழரின் வாழ்வியலை, வரலாற்றை முழுமையாக அறியமுடியாத தடை ஏற்படும்; தமிழர் பற்றிய பல்துறை, பலகோணக் கல்வியில் பல விடுபாடுகள் காணப்படும்; பல தமிழ்ப் படைப்புகள் இழக்கப்படும்; தமிழரின் இலக்கிய ஆக்கம் பல இல்லாததாகும். எனவே, எவ்வாறேனும் முயன்று தமிழ் இலக் கியங்களைப் பாதுகாத்தல் இன்றியமையாத தேவையாகும்.

அடியார்க்கு நல்லார், சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதும்போது தமிழரின் இசை, நாடகக் கலை தொடர்பான நூல்கள் பலவற்றைச் சுட்டியும், மேற்கோளெடுத் தாண்டும் செல்கின்றார்; முத்தமிழ்த்துறை வித்தக நூல்கள் பல அவர் காலத்திலேயே இழக்கப்பட்ட, முழுதும் அழிவுற்ற நிலை புலப்படுகின்றது. இவ் இழப்பு, தமிழரின் பல்துறையறிவுத் திறனைக் கணிக்க, காணக் களன்வழங்கா தமைகிறது. இக்காலத்தும் அதே நிலை தொடர்ந்தால், இழப்புப் பெருக்கு ஏற்படுமேயொழிய, முன்னேற்றம் காண முடியாது.

தமிழ் இலக்கியப் பெருக்குப் பற்றிய அறியாமை தமிழ் மாணவரிடமும், தமிழ் ஆசிரியரிடமும், தமிழ் வல்லுநரிடமும் கூட அமைகின்றது. நமது சொத்து - பொக்கிஷ மான தமிழிலக்கியத்தைப் பற்றித் தெரியாமை, முழு அறிவின்மை குறைபாடே. இலக்கிய வரலாறு குறித்து எழுந்த எண்ணிறந்த நூல்களும் இவற்றை முழுமையாகத் தர இயலாதே அமைகின்றன. குறிப்பிடத் தகுந்ததும், சிறந்ததும், தனித்தன்மையுடையதும், பரவலாக அறியப்பட்டதும், பாராட்டுப் பெற்றதுமான ஒரு சில நூல்களே இவ்வரலாறுகளில் இடம்பெற்று, தமிழ் இலக்கிய வளத்தின் மிகக் குறைந்த விழுக்காட்டுப் பகுதியையே தந்தன. இந்நிலை மாறி, தமிழிலக்கியம் பற்றிய செவ்வையான பட்டியலும் வரலாறும் உருவாகத் தமிழிலக்கியச் சுவடிகள் அச்சேற வேண்டும்.

இலக்கியக் களஞ்சியங்கள் இவ் அடிப்படைத் தேவையை நிறைவேற்றும் ஒருவழி யாகும். பிரபந்தங்கள் எனப்படும் சிற்றிலக்கியங்கள் பல இவ்வாறு களஞ்சியங்களாகத் தொகுக்கப்பட வேண்டும். பிரபந்தம் தொண்ணூற்றாறு என்பது மர பெண்ணமாக அமையினும், காலந்தோறும் இது வளர்ந்து மாற்றம் பெற்று எண்ணுக் கடங்காது

விரிந்து வருகின்றது பொருளாலும் அமைப்பாலும் வகைகளில் பன்மை காட்டி முந்நூறுக்கும் மேற்பட்டுச் செல்கின்றது இவற்றில் ஒரு சில வகைகள் அருகியனவாகவும் ஒரு சில நூல்களும் கொண்டு அமையலாம்; இன்னும் பல, நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களுடையனவாக அமையலாம் இவற்றில் எல்லா நூல்களும் கற்போர்க்குக் கிடைக்காது, பல பெயர் நிலையில் அறியப்பட்டு, சில அறியப் படாது, ஒரு சிலவே காணப்பட்டு அமைகின்றன. சான்றாக, தூது என்பதை எடுத்துக் கொண்டால் பெயரளவில் நூறு கிடைக்க, அச்சு நூலாக 45 மட்டுமே பெறப்படுகின்றன; அவ்வாறே குறவஞ்சி, பிள்ளைத்தமிழ், கலம்பகம் ..... போன்ற பலவும் அமையும். இவை, ஒவ்வொரு சிற்றிலக்கியமும் தேடி, தேர்ந்து, தொகுக்கப்படுவதன் தேவையை உணர்த்தும். அருகிய வகைகளான குறம், பவனிக் குறம், சின்னப்பூ, தேவபாணி, வாகனக்கவி...... போன்றன விரைந்து பாதுகாக்கப் படாவிடின் அத்தகு வகை யொன்று இருந்தமையே அறியாது ஒழிந்துவிடக் கூடும். பிற்கால சந்ததியினர்க்கு, முற்கால இலக்கியச் சொத்து என்ன என்பதைத் தெரிவிப்பதற்கு இக் களஞ்சியங்கள் மிகத் தேவையாகும்.

இலக்கியம் ஆகாயத் தமாரை யல்ல. கற்பனை ஓவிய வண்ணங்களால் அழ கூட்டப்படினும் உண்மைகள் பலவற்றை இயம்பியே செல்கிறது. வாழ்க்கையின் பல் வகையான பிரதிபலிப்புகளைத் தாங்கி, அழியாத கல்லெழுத்துகளில் பொறிப்பதாக அமைவது. உயர் மட்ட மக்களும், மன்னரும், மந்திரிகளும் வாழ்ந்த வாழ்வை மட்டுமன்றி ஏழையும் எளியவரும் நடத்திய வாழ்வியல் ஏடாகவும் காணப்படுவது. உழவுத் தொழிலினரைக் காட்டும் பள்ளு இலக்கியங்கள், வேட்டையாடியும் குறி சொல்லியும் வாழ்பவரைக் காட்டும் குறவஞ்சி - குறம் - குளுவ நாடக இலக்கியங்கள் என்பன இந் நிலையில் சுட்டத்தக்கன. பல்வகையான மக்களின் சமுதாய வாழ்வினைத் தமிழகச் சூழலில் காட்டும் இவை சமுதாயவியல் கல்விக்கு மிகுந்த உதவி புரியும் களனாக அமைகின்றன.

மக்களின் நாகரிகம் காலத்தின் தேவைக்கேற்பவும், இடத்தின் நோக்குக்கு ஏற்பவும், பல்வகைக் காரணங்களால தொடர்பு கொள்ளும் பிற இன மக்களின் சார்புக கேற்பவும் மாற்றமும் வளர்ச்சியும் பெறுகின்றது நாகரிகம் போன்றே மனிதப்பண் பாட்டிலும் பல்வகையான படிநிலை வளர்ச்சிகள்; செப்பம் - சீராக்கங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவை பற்றிய குறிப்புகளை அறியப பல வாயில்கள் அமையலாம் எனினும் இலக்கியமும் இது தொடர்பான மிகச் சிறந்த பதிவேடாக, கையேடாக உருப் பெற்றுள்ளமையால், மனித நாகரிக பண்பாட்டுக் கலைக்களஞ்சியமாக அவை அமைந்து அத்துறைக் கல்விக்கு உற்ற துணையாகின்றன. கல்வி மேம்பாடு பற்றிய பல செய்திகள் அறியலாகுவதும குறிப்பிடத்தக்கது.

மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆடை, அணி முதலிய பயன்படு பொருட்கள், இசைப்பெயர், இசைக்கருவிகள், கலை வகைகள் போன்றவற்றைத் தமக் கேற்ற நிலையில் தமிழிலக்கியங்கள் உணர்த்துகின்றன. பொருட் பட்டியலைத் தரும் இலக்கிய நிலை, காணப்படுவதும் பயனுடையது. பள்ளு இலக்கியம் நெல்வகை, மாட்டு வகை, மீன் வகைகளைத் தருவதும், குறவஞ்சி பறவை வகைகளைத் தருவதும் இங்குச் சுட்டத் தக்கன. தூது இலக்கிய வகையின் பணவிடு தூது நூல்கள் பல்வகையான நாணய வகை களைத் தருவது, அத்துறை (Numismatics) பற்றிய கல்விக்கு இன்றியமையாச் சான்று நல்குவது தெளிவு. பணம் தொடர்பான இத்தகைய பல இலக்கியக் குறிப்புகளும், வாழ்க்கைத் தரம, வணிகம், விலை, உற்பத்திப் பொருள, அளவைக்கருவிகள், தொழில்கள் பற்றிய மிகப்பலவான செய்திகளும் தமிழரின் பொருளாதார நிலையையும் கண்ணோட்டத்தையும் காலந்தோறும் கணிக்க உதவுகின்றன.

அன்றுமுதல் இன்றுவரையிலான தமிழிலக்கியங்களைப் பார்க்கும்போது படைப்பாளியின் உள இயல்பும், அவை காட்டும் பாத்திரங்களின் மனப்பாங்கும், பின்புலமான மக்கள் கூட்டத்தின் இதயநிலையும் வெளிப்படுவது, உளவியல் துறையிலும் இலக்கியத்திற்குத் தனியிடம் இருப்பதைத் தெரிவிக்கின்றது.

ஒவ்வொரு காலத்தும் மனித மனம் எத்தகைய நாட்டங்களைக் கொண்டுள்ளது, எத்தகைய சிந்தனைகட்கு முதலிடம், முக்கிய இடம் கொடுத்துள்ளது, எத்தகைய எண்ணங்களை வரவேற்றுள்ளது என்பதனை அறிய இலக்கியங்களும் இன்றியமையா மூலமாக அமைகின்றன. தமிழிலக்கியம், தொடக்க முதலே 'தெய்வம்' பற்றி நினைப்பூக் கொண்டதைத் தொல்காப்பியம் சுட்டினும், அதன் வளர்ச்சி நிலையை, அதாவது தமிழரின் சமய வரலாற்றை முழுமையாக அறியத் தமிழ் இலக்கியங்கள் அடிப்படையாகின்றன. விதையாக இருந்து, அறுகாக வேரூன்றி, இயக்கமாகப் பரந்து, ஆலாகத் தழைத்தமை: முருகாற்றுப்படை, பரிபாடல், பக்தி இலக்கியமான ஆழ்வார், நாயன்மார் பாடல்கள், சித்தர் பாடல், சைவசித்தாந்தங்கள் எனக் கோயிலாக கோபுரமாக இவை உயரும். இலக்கியச் சான்றாலறியலாகும் சமய வரலாறு, கற்றளிகள், கல்வெட்டுக்கள், குடைவரைகள், வழிபடு மூர்த்தங்கள் போன்ற பிற பல மூலங்களாலும் உறுதிப்படுத்தத் தக்கன. இறையிலிச் சமயமும், வெளிநாட்டாரால் வந்த புறச் சமயங்களும் இலக்கியப் பதிவு பெற்றமை சுட்டத்தக்கது.

மக்களின் வாழ்வைப் போலவே அவரை ஆண்ட மன்னரின், அரச குடும்பங்களின், அரசாங்கங்களின் செயல்களும் பல இலக்கிய முதற் பொருளாகவும், உவமை மேற்கோளாகவும், பிற பாங்குடனும் அமைந்து, தமிழர் வரலாற்றை அறியவும் இலக்கியம் உற்றுழி உதவுமாறு செய்கின்றன. கலிங்கத்துப் பரணி, மூவருலா, நந்திக் கலம்பகம் முதலிய சிற்றிலக்கியங்கட்கு முன்னும், சங்கப் புறப்பாடல்கள், முத்தொள்ளாயிரம், அரசக்காப்பியங்கள் போன்றவற்றில் அரசு முதன்மைப்படுத்தப் படுகின்றது. அகப்பாடலும் வரலாற்றை உவமையாக உட்படுத்துவதைப் பழந்தமிழ் இலக்கியம் காட்டும். மன்னர் புரிந்த போர்கள், நாட்டில் ஏற்பட்ட பஞ்சங்கள், வரி - தீர்வை-முதலிய அரசு வருவாய், ஆட்சி முறை, தேர்தல் போன்ற பல செய்திகள் பற்றிய உண்மைகளை இலக்கியங்கள் வழங்க வல்லன. மெய்க்கீர்த்திகள், கல்வெட்டாகவும் இலக்கியமாகவும் அமைந்து, மன்னர் பரம்பரையினரின் பல்வகைச் செயற்பாடுகளை, ஆட்சித் திறத்தை, வெற்றிகளை, ஆண்ட இடங்களை, செங்கோல் செலுத்திய நாடுகளை, அளித்த கொடைகளைத் தருவதும் எண்ணற்குரியது.

இடப்பெயர்கள், ஊர்ப்பெயர்கள் நில அமைப்புகள், மலை, ஆறு போன்றவற்றின் இருப்பு, போக்கு என்பன, துறைமுகங்கள, வணிகத் தலங்கள், பெருநகரங்கள், மக்கள் குடியிருப்புகள், போக்கு வரத்துச் சாதனங்களும் வழிகளும் முதலியன தொடர்பான பல செய்திகளும் கூட இலக்கியம வழி அறியலாகும் இவற்றைத் தருவதனையே முதன்மை நோக்கமாகக் கொண்டு இலக்கியம் எழுதல் ஒருவேளை இல்லெனினும் இத்தகைய ஏராளமான கருத்துகள தமிழிலக்கியக் கடலெங்கும அலையாகப் படிந்துள்ளன. தமிழரின் பல்துறையறிவும் பல்வகை நடைமுறைகளும், வாழ்வியல் கோட்பாடுகளும், இயற்கையைப் பயன்படுத்தும் விதமும், இயற்கையை அண்டி, சாதகமாகக் கொண்டு வாழும் திறமும் இவற்றில் வெளிப்பட்டு நிற்பது தமிழர்களின் முழுமையான பரிமாணத்தை அறிவிக்கும்.

அறிவியல் மிகவும் வளர்ந்து விட்ட இக்காலத்தில், பிற நாடுகளையே - வெளி நாடுகளையே முன்மாதிரியாக, முன்னோடிகளாகக் கொண்டு வளரும் நிலை அமைகின்றது.

அறிவியல் அறிவும் வளர்ச்சியும் நமக்கு இல்லையோ எனும் மயக்கம் ஏற்படுகின்றது. இதனையும் தகர்க்க, தவிர்க்க வல்லன தமிழிலக்கியங்கள். வானியல், புவியியல், தாவரவியல், உயிரியல், உலோகவியல், கனிமம், மருத்துவம், நகரமைப்பு, கட்டிடக் கலை, அணை கட்டி நீர் தேக்குதல் - நீர்ப்பாசனம் போன்ற பல துறைகள் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன.

அகழ்வாராய்ச்சிச் சான்றுகளுடன், இலக்கியக் குறிப்புகளையும் இணைத்து நோக்குவதால் சிந்துவெளிபோன்ற ஒரு சிறந்த நாகரிகத் தேக்கமாகத் தென்னகம் அமைந்தது வெளிப்பட்டுத் தமிழரின் மானிடவியல் வரலாற்றையும் கணிக்க உதவும். மக்கட் பெயர், இனப்பெயர்கள், இனக்குழுக் குறியீடுகள், தொன்மம் தொடர்பான மிகப் பல சான்றுகளை வழங்கத் தமிழகத்தைப் பொறுத்தவரைப் பழந்தமிழிலக்கியங்களே முன்னிற்பது, முனைந்து நிற்பது போற்றுதலுடன் சுட்டத் தக்கது.

மொழிவளன், அதை வழங்கும் மக்களின் அறிவு வளனை அளக்கும் கணிப் பொறியாகும். காலந்தோறும் ஏற்படும் மொழிமாற்றங்கள் இலக்கியத்திலும் பதிவு செய்யப்படுகின்றன. மொழி பல்வகைக் காரணங்களால், பல்வகை நிலையிலான மாற்றங்கட்குட்படுகின்றது. புதுச் சொல் தோன்றல், கலைச் சொல் ஆக்கம், பிற மொழிச் சொற் கலப்பு, பழைய சொற்கள் மறைதல் - வழக்கொழிதல், பழைய சொற் களுக்குப் புதுப்பொருள் ஏற்படுதல் என இது விரியும். சமயத் தாக்கம், அரசியல் பாதிப்பு, பிற இனத்தினர் வருகையும் கலப்பும், பிற நாட்டினரோடுள்ள போர் - வணிகத் தொடர்பு எனப் பல சூழலும் இதற்குக் காரணமும் களனுமாக அமையலாம். இவை ஒவ்வொன்றையும் அறிந்து, மாற்றம், வளர்ச்சிகளைக் கணித்து, மொழி வரலாற்றை விளக்கமாகத் தெரிவதற்கு இலக்கியங்கள் மிக இன்றியமையாதன. எனவே இப் பயன் கருதியும் இலக்கியங்களைப் பாதுகாக்க வேண்டும். பல அகராதிகளும், நிகண்டுகளும், மொழியாய்வுகளும், இலக்கணக் கல்வியும், மொழியியல் பார்வைகளும் இவற்றைக் களனாக வேண்டுகின்றன. சங்க இலக்கியச் சொற்கள் தற்போது தமிழில், தமிழகத்தில் இழக்கப்பட்டு, மலையாளத்திலும், ஈழத்திலும் வழங்குதல், மொழித் தொடர்பு வழி மக்கட் தொடர்பை அறிய உதவுவதும் சுட்டத்தக்கது. 'யாணர்' போன்ற சங்கச் சொற்பயிற்சி இன்று இன்மை ஆய்வுக்குரியது.

வெறும் இன்பம் வழங்கும் பொழுது போக்குக்கருவியாக வன்றிப் பன்முகம் கொண்டு கருத்தாழமும் செய்தி அகலமும் வெளிப்படுத்தும் இலக்கிய நிலை ஆய்வறிஞரால் இன்னும் சிறப்பாகப் பயன்கொள்ளப்படவேண்டும். பிற வழிகளில் மூலங்களும், சான்று களும் பெறவியலாப் பல்துறைச் செய்திகள் இலக்கியக் களனில் படர்ந்துள்ளன. இவை தொகுக்கப் பெற்று வரலாற்று நிலையில் ஆய்பெறின் மிகப்பல உண்மைகள் தெளிவுறும். எண்ணிறந்த வண்ணமும், வடிவும், அழகும், அறிவும் காட்டும் இத் தமிழ்க்கோயில் எழுச்சியுற, அடித்தளமான இலக்கியப் பாதுகாப்பு உடனடியாக அமைதல் இன்றியமை யாததாகும். உலகத்தமிழ்க் கல்வி இயக்க நோக்கங்கள் பலவற்றுள் 'தமிழ் இலக்கியப் பாதுகாப்பு' -முதல் நோக்கமாகவும் முதன்மையான நோக்கமாகவும் அமைகின்றது.



# கல்லுக்குள் ஈரம் - ஒரு கண்ணோட்டம்

— கோ. வெ. கீதா.

நாவல் என்பது வெறும் கலைப் படைப்பு மட்டுமன்று. கடந்த காலம், சம காலம், வருங் காலம், லட்சிய காலம் எனப் பல காலங்களைக் காட்ட வல்ல மாயக் கண்ணாடி. ஆங்கிலத்தில் imitating the age, expressing the age என்ற இரு தொடர்கள உண்டு. அவற்றிடையே பொருள் வேறுபாடும் உண்டு. Imitating the age என்பது போலச் செய்தல். Expressing the age என்பது வெளிப் படுத்துவது. மனிதனுக்கு ஆத்மா என்ற ஒன்று உள்ளது போலவே சமுதாயம் என்ற உயிருக்கும் ஓர் ஆத்மா உண்டு. அந்த ஆத்மாவின் துடிப்பை அந்தத் துடிப்பில் பிறக்கும் ஆத்மாவின் ராகங்களைக் கண்டறிபவனே உண்மைக் கலைஞன். அவனே காலத்தின் குரலாகிறான். அவனுடைய எழுத்தே பிரதி பலித்துக் காட்டும் எழுத்தாகிறது. இப்படிப்பட்ட விரல் விட்டு எண்ணக் கூடிய சிலருள் ஒருவர் தான் ர.சு. நல்ல பெருமாள்.

விடுதலைக்குப் பின் எழுதப்பட்ட தமிழ் நாவல்களின் கருத்துப் போக்கை மேலெழுந்த வாரியாக நோக்கும பொழுது தேசிய வீறு (The Spirit of Nationalism) பல நாவல்களில் ஆதார சுருதியாக ஒலிப்பதை உணரலாம்.

இந்திய நாட்டு மக்களின் தேசிய உணர்வும் அதன் வெளிப்பாடான விடுதலைப் போராட்டமும் பல நல்ல நாவல்களை இந்திய மொழிகளில் உருவாக்கிக் கொடுத்துள்ளன. பங்கிம் சந்திரரின் ஆனந்த மடம், தேஉபந்தாஸ் எழுதிய யுத்த கீத், கே. ஏ. அப்பாஸ் எழுதிய இன்குலாப், மஞ்சப்பாவின் பாஞ்சார வல்லியின் தியாகி முதலியன காலத்தால் அழியாத அமர இலக்கியங்கள் ஆகும். தமிழிலும் தேசிய வீறு கமழும் நாவல்கள் பல தோன்றியுள்ளன.

இவ்வகை நாவல்களுக்குச் சான்றாக கே. எஸ். வேங்கடரமணியின் தேச பக்தன் கந்தன் (1932), அகிலனின் பெண் (1944), கல்கியின் சோலை மலை இளவரசி (1947), கு. ராஜவேலு எழுதிய '1942' (1950), அகிலனின் புது வெள்ளம் (1964), வல்லிக் கண்ணனின் வீடும வெளியும், நாச்சியப்பனின் 'அழைக்கிறது அன்னை பூமி' (1966), சிதம்பர சுப்பிரமணியனின் 'மண்ணில் தெரியுது வானம்' (1969). நா. பா. வின் ஆத்மாவின் ராகங்கள், ராஜம் கிருஷ்ணனின் வளைக் கரம் (1969), ர. சு. நல்ல பெருமாளின் கல்லுக்குள் ஈரம் (1969) முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

கல்லுக்குள் ஈரம், கல்கி வெள்ளிவிழா போட்டியில் ரூ 7500 பரிசு பெற்ற நாவல். கல்கிப் பத்திரிகையில் வாரந்தோறும் தொடர் கதையாக வந்து பல்லாயிரக் கணக்கான மக்கள் படித்து மகிழ்ந்தனர். பிறகு புத்தக வடிவிலே அதைப் படிக்கும் பொழுது அடுத்த சுவையான பகுதியைப் படிக்க ஒருவாரம் காத்திருக்கத் தேவையில்லை, ஒரே மூச்சில் படித்து விடலாம் என்று களிக்கும் அளவுக்கு உயர்ந்து நிற்கிறது.

கல்லுக்குள் ஈரம் சுதந்திர வரலாறு பற்றிக் கூறும் வரலாற்று அரசியல் நாவல். அரசியல் நாவலைப் படைப்பவனுக்கு பத்திரிகை தான் செய்தியைத் தருகிறது. ஆனால் பத்திரிகை மக்களுக்கு முன் வெறும் செய்திகளை காட்சிப் பொருளாக மட்டுமே வைக்கிறது. நாவல்களோ மக்களை இழுத்துக் கொண்டு போய் அச் செய்திகள்

உலகத்திலேயே இருந்து வாழுமாறு செய்கிறது. ஒரு குறிப்பிட்ட அரசியல் முக்கியத்துவம் உடைய சம்பவத்தை நாவலில் புகுத்துகிற போது அதனோடு சம்பந்தப் பட்டவர், 'ஆமாம் இது இப்படித்தான் நடந்தது' என்றும் சம்பந்தப்படாதவர் இது இப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்றும் நம்ப வேண்டும். இதுதான் நாவலை சோதித்துப் பார்க்கும் உரைகல்.

இந்நாவல் முழுக்க முழுக்க இந்திய சுதந்திரத்தைப் பற்றி, விடுதலை இயக்கத்தைப் பற்றிக் கூறுவது. அதனூடே ஆசிரியர் கதையின் முக்கிய பாத்திரமான ரங்கமணி, திரிவேணி இருவரையும் இருவகைக் கொள்கையாளராகக் காட்டுகிறார். விடுதலைப் போராட்டத்துடன் இவர்களுடைய கொள்கைப் போராட்டத்தையும் காண்கிறோம்.

ரங்கமணியின் தந்தை சாமிநாதன், சிதம்பரம் பிள்ளை, சிவா, பாரதி இவர்களுடன் சேர்ந்து சுதந்திரப் போராட்டத்தில் போராடியவர். சென்னை நகர வீதியிலே ரங்கமணி 12 வயது சிறுவனாக இருந்த பொழுது அவன் கண்எதிரே அவன் தந்தை வெள்ளைக்காரனின் தடியடிக்குப் பலியாகிறார். ரங்கமணியின் நெஞ்சில் அந்நிகழ்ச்சி பசு மரத்தாணியெனப் பதிகிறது. அவன் பயங்கரவாதியாகிறான். இளமையில் காந்தியைச் சந்தித்தும், அவரிடமிருந்து புனித இயேசுவின் சிலுவையைப் பெற்றும் அவன் வெறி அடங்கவில்லை. ''அஹிம்சையைக் கையாண்டு என்ன பயன்? பாவம் இந்த இயேசு நாதர், வீணாக உயிரை இப்படி விட்டிருக்க வேண்டாம். எதிரிகளை எதிர்த்துத் தாக்கி அழித்திருக்க வேண்டும். அந்தப் பணியில் வீரமரணம் கிடைத்திருந்தாலாவது நன்றாயிருந்திருக்கும். இப்படி ஓர் அப்பாவியைப் போல் உயிரை விட்டதால் தான் இயேசு நாதர்மகான் ஆனாரா! அப்படி எதிரிகளுக்குப் பணிந்து உயிரை விட்டு மகானாவதைவிட அவர்களை எதிர்த்து மாவீரன் என்று போராடுவதே மேல்'' என்று தனக்குள்ளேயே முனகிக் கொண்டான்[1]. இது அவனது உள்ளப்போக்கை நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றது

தன் தந்தையின் உயிருக்குப் பழி வாங்கத் துடிக்கிறான். தீட்சிதர், காந்தியுடன் நெருங்கிய தொடர்புடையவர்; திரிவேணியின் வலதுகை. திரிவேணி காந்தியக் கொள்கையில் ஆழ்ந்த பற்றுக் கொண்டவள். அவள் தந்தை சர்தார் சொக்கலிங்கமோ ரங்கமணியின் குரு. சிவானந்தம் போலீஸ் அதிகாரி. ஆனால் அவன் மனைவி அவனுக்குப் போலீஸ். அவன் மனைவி கமலவாசகி கல்லூரியில் ரங்கமணியை மனமார விரும்பியவள். ரங்கமணியும் கடைசிவரை அவளைத்தான் எண்ணி உருகுகிறான். பட்டுமெத்தையில் படுத்தவளுக்கு ரங்கமணியின் கொள்கை புரியாதது வியப்பில்லை. அவசரததில் சிவானந்தத்தை மணக்கிறாள். நினைவு நிழலாக உறுத்த நிம்மதி இழக்கிறாள். ரங்கமணியின் மீதுள்ள கோபம் காந்திக் குல்லாயின் மீது திரும்புகிறது, விளைவு அவள் கணவன் கொடுமையான போலீஸ் அதிகாரி ஆகிறான்.

திரிவேணியின் இறப்பால், உயிர் தியாகத்தால், ரங்கமணியின் கண் திறக்கிறது. அஹிம்சை தான் மனிதனுக்குத் தேவை. அது அவனுடைய இயற்கைப் பண்பு என்பதை உணர்கிறான். அவன் விருப்பப்படி காந்தியைச் சந்திக்க முயல்கிறான். ஆயுள் தண்டனை பெற்ற அவனுக்கு நாடு விடுதலை பெறவே, சிறையினின்றும் விடுதலை கிடைக்கிறது.

---

1. கல்லுக்குள் ஈரம் - ர. சு. நல்ல பெருமாள், வானதி, சென்னை, 1969, பக்கம் - 65.

தீட்சிதரின் உதவியுடன் காந்தியடிகளைச் சந்திக்க டில்லிக்குச் செல்கிறான். ஆனால் விநாயகராவ் காத்திருக்கவில்லை. அவன் குண்டு மகாத்மாவை பலிவாங்குகிறது, ரங்கமணியைப் போலவே நாமும்கேட்கிறாம்,

"என் கடவுளே! என் கடவுளே!
ஏன் என்னைக் கைவிட்டீர்"

கதை அமைப்பை நோக்கும் போது பழைய உரத்திலே மலர்ந்த மணமுள்ள மலராக அமைந்துள்ளது. விடுதலைக் காலத்திலே நாட்டு மக்களிடையே பரவிக் கிடந்த அச்ச உணர்ச்சி, அதே நேரத்தில் நாட்டு அபிமானம் இரண்டையும் நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார். ஒரு தேசத்தின் வீர வரலாற்றைக்கூறும் புதினம் எனவே கதைப் பின்னல் வரலாற்றோடு இயைந்து நன்கு அமைந்துள்ளது.

கதைக்கு நிலைக் களன்கள்? விடுதலைப் போராட்ட நாவலுக்குக் களம் கூற முடியுமா? எனினும் திருநெல்வேலி, அம்பாசமுத்திரம், சேர்மாதேவி அணை, சென்னை இவை முக்கிய பங்கு பெறுகின்றன. இவற்றுடன் டில்லி, பம்பாய், வார்தாவும் இடம் பெறுகின்றன. ஆசிரியரின் கூறும் திறத்தால் சிந்து பூந்துறையும், குறுக்குத்துறையும், தாமிரபரணியின் ஆற்று மணல்மேடும் நமக்கு நன்கு பழக்கமான இடம் போல் தோன்றுகின்றன.

பாத்திரப் படைப்பைப் பொறுத்த வரை ஆசிரியர் முழுவெற்றி பெற்றுள்ளார் எனில் மிகையில்லை. கதையில் வரும் சிறு சிறு பாத்திரங்கள் கூட நம் நெஞ்சில் நினைவில் தங்குகின்றன என்றால், பாத்திரப் படைப்பின் சிறப்பை என்னென்று கூறுவது. இக் கதையில் மற்றொரு புதுமை என்னவெனில் வாழ்ந்த மாந்தர்களும் பாத்திரங்களாக வந்து நம்முடன் நெருங்கி உரையாடுவது. காந்தி, நேரு, பட்டேல், ராஜாஜி, சிதம்பரம் பிள்ளை, பாரதி, ஏன் ஆங்கிலப்பிரதிநிதி க்ரிப்ஸைக் கூட ஆசிரியர் விட்டுவைக்கவில்லை.

ரங்கமணி லட்சியவாதி; ஆனால் யதார்த்தமும் அறிந்தவன். கற்பனையில் வாழ்பவனல்ல. மண்ணில் வாழும் லட்சியவாதி. எனவே அவனை நாம் அவனுக்குள்ள நிறை குறைகளுடன் சந்திக்கிறோம். தன்னால் தன் தாத்தாவிற்கு ஒரு சுகமும் இல்லையே என அவன் ஏங்கும போதும், கமலவாசகியுடன் அவன் இறுதியாக உரையாடும் போதும், முத்தையாபிள்ளையுடன் பேசும் போதும், சிறையில் வாடும் போதும் அவனை நாம் அறிகிறோம். "எருமை மாடு மாதிரி மந்தமாக வாழ்ந்து கொண்டே இருப்பதைவிட ஈசல் மாதிரி பரபரப்புடன் சாவதில்தான் ரசனை இருக்கிறது."[2] இது தான் ரங்கமணியின் பாதை.

திரிவேணி சதாரண மானிடப் பெண். பெண்மையின் உயர்வை, சிறப்பை, அழகுபட வெளிப்படுத்துகிறாள். பெண்மைக்குள் மறைந்து கிடக்கும வீரத்தை வெளிப் படுத்துகிறாள். தமிழ் நாட்டு ஜான்சி ராணி, ஜோன் ஆப் ஆர்க் அவள். ஆனால் அவள் வீரம் அமைதியானது. அடக்கமானது அவளுக்கு நேர் மாறான கமலவாசகி தன் எண்ணத்தால் தாழ்கிறாள். எனினும் அவள் ஒரு சாதாரணப்பெண். மனித இனத்தின் பலவீனங்களுக்கு உட்பட்டவள். எனவே நம் மன்னிப்பைப் பெறுகிறாள். 'வெங்கு' - அவன் தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ளும் பாணியே நம்மை ஈர்ப்பதாக உள்ளது. அவனை நமக்கு உணர்த்துகிறது

---

2. அதே நூல், பக். 85

'ஹி ! ஹி ! என் முழுப் பெயர் வெங்கடகிருஷ்ணன். வெங்கிட்டு என்று கூப்பிடுவார்கள். வெங்கு என்றால்தான் ஊரில் தெரியும் வீட்டில் பித்துக்குளி என்றும் கூப்பிடுவார்கள்' என்றான் வெங்கு அசட்டுச் சிரிப்புடன் 'பொடி போட்டுத் தும்மல் போடக் கூட உன் உடம்பில் சக்தியில்லையே'[3] என்ற ரங்கமணியிடம்,

'இது வைரம் பாய்ந்த உடம்புசார். பார்க்கத்தான் எலும்பு ஆனால் அத்தனையும் உருக்கு சார் உருக்கு என்கிறான். அவன் கூற்றிலுள்ள உண்மையை, எதையாவது தெரிந்த மாதிரிப் பேசிப் பாராட்டுப் பெற விரும்பும் அவனது எண்ணத்தைக் காலம் கடந்த பின்தான் உணர்கிறோம். அவன் விருமபியவாறு அவன் படம் பத்திரிகையில் வெளிவந்ததுகண்டு துடிக்கும் சிவானந்தத்துடன் நாமும துடிக்கிறோம் வெகுளியான அவன் பேச்சு அவனை ஒரு குழந்தையாகக் காட்டுகிறது. சர்தார் 100 ரூ கொடுக்கும் பொழுது வாங்க மறுத்து விடுகிறான். திரிவேணி கூறுவது போல அவனுக்குப் பொடி வாங்க அரையணா இருந்தால் போதும் அவன் தேவைக்கு மீறிய வாழ்க்கை வாழ அறியாதவன்.

பதிப்புரையில் கூறப்பட்டுள்ளதைப் போல ''நாவல் என்பதைவிட நடந்த நிகழ்ச்சி களை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட உணர்ச்சி மிக்க காவியம்'' என்று துணிந்து சொல்லலாம். ஆசிரியர் உருவாக்கியுள்ள பாத்திரங்கள் கற்பனைப் பாத்திரங்கள் என்று நம்பவே முடியவிலலை. சுதந்திரப் போராட்டக் காலத்தில் நடமாடியவர்களை நேரில் பார்ப்பது போலவே உள்ளது.

தமிழகத்தில தீவிரவாதியாகத் திகழ்ந்த தென்னாட்டுத் திலகர் சிதம்பரனாரின் வீரம் இந்நாவலில் உரிய இடத்தில் வந்து இன்றைய தலைமுறையினர்க்கு, வீரத்தை உணர்த்துகிறது. அன்றைய அரசியல் நிலையை அப்படியே காட்டுகிறார் ஆசிரியர்.

நாவலின் நடை தனித்தமிழ் நடையுமல்ல.கொச்சை மொழியும் இல்லை.அமெரிக்கர் ஆங்கிலேயர்கள உரையாடும் போதும ஆசிரியர் அதைத் தமிழிலேயே தந்துள்ளது குறிப்பிடத்தக்கது. கணககறற உவமைகளின் வாயிலாகக் கருத்துகளை உணர்த்துகிறாா. பழமொழிகளையும் கையாள்கிறார். வாசகன் உணர்ந்து சிந்திக்கும் வண்ணம தெளி வாகவும எளிமையாகவும அமைந்துளளது. நிகழ்ச்சிகளை திருபபுககாட்சி (flash back) முறையிலேயே பெரும்பாலும் கூறுகிறார். எனினும் அதைப் புதினத்தின் சுவை கெடாத முறையில், கதைப போக்கு தடைபடாத வகையில் கூறியிருப்பது பாராட்டிற்குரியது. தகுந்த இடங்களில் பாரதியாரின் பாடல்களைப் பயன் படுத்தியுளளாா. பாரதி நெல்லையப்பப் பிள்ளையிடம் பேசும் பேச்சும், எழுதித் தரும பாடலும நமமை மெய் சிலிர்க்க வைக்கினறன. பாரதியை நேரில காண்பது போல உளளது. கையெடுத்துத் தொழவேண்டும் என்ற உணர்ச்சி ஆசிரியர் காந்தி, பாரதி, சிதம்பரம பிளளை இவர்களைப் பற்றிக் கூறும் பொழுது தோன்றுகிறது. உரையாடலகள் சிறப்பாக அமைந்துள்ளன. நாவல் முழுதும் பயங்கரவாதிககும், அஹிம்சை வாதிக்கும் நிகழும் தர்க்கம் நயத்துடன் அமைந்துளளது.

இதில் வரும் பல கருத்துக்கள் அப்பட்டமான உண்மையாக நம்மை அச்சுறுத்து கின்றன. விடுதலை நாட்டில் வாழும் நாம் அன்று நிகழும் என்று நினைத்துக் கூறிய

---

3. அதே நூல், பக், 156

வற்றை இன்று அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். எனவே திரிவேணி கூறும் உண்மை நம்மை வாயடைக்கச் செய்கின்றது.

'ஆட்சி வெறுமனே கைமாறுவதுதான் சுதந்திரம் என்றால் அது நமக்கு வேண்டாம். சுதந்திர நாட்டில் கொள்கைக்கு உரிமை வேண்டும். நிர்ப்பந்தம் ஒழிய வேண்டும். பயம் மறைய வேண்டும். கொள்கைச் சுதந்திரம் கூடக் கொடுக்க முடியாத உங்கள் கையில ஆட்சி சிக்கினால்' என்று கூறிவிட்டுச் சிரித்தாள் திரிவேணி.[4]

திரிவேணியின் உண்மையான காந்தியப் பற்று அவள் வாயிலாகவே வெளிப் படுகிறது. 'நான் செத்துப் போகிறேன்.......... அத்தனை பேருமே செத்துப் போகிறோம். காந்தியப் பாதை சவக் குழியில் தான் இருக்குமென்றால் நாங்கள் போகத் தயார். உங்களை யார் எங்கள் வழியில் குறுக்கிடச் சொன்னது?.[5]

ஒரு இலக்கியப் படைப்பை நோக்கும் பொழுது ஒரு ஆழ்ந்த கருத்தைத் தேடுகிறது, வாசகர்கள் மனம். கதையிலே ஒரு கருத்து, ஒரு நிறைவு இல்லாவிட்டால் நாவலாயிருந்தாலும், நாடகமாயிருந்தாலும், ஏன் சிறுகதையாக இருந்தாலும் கூட வெறும் சொற்கள் நிறைந்த ஒரு அச்சுக் கோர்வையாகத்தான் அது இருக்கும் இந்த நாவலிலே ஆசிரியர் கூற விரும்பும் கருத்து பல முறை பல பாத்திரங்களால் கூறப்படுகிறது. ''பொய்யாக நூறு வருஷங்கள் வாழ்வதை விட உண்மையாக ஒரு நாள் வாழ்ந்தாலும் போதும்'', என்பது தான் ஆசிரியர் கூறும் கருத்து. ஒரு நிமிடம் வாழ்ந்தாலும் மணம் பரப்பும் மலராக வாழத்தான் ஆசைப் படுகிறார்கள் கல்லுக்குள் ஈரத்தின் மாந்தர்கள்.

கதையின் தலைப்பு சில சமயம் பொருத்தமற்று அமைவதுண்டு. கதையின் கருத்துக்கும் கதையின் தலைப்புக்கும் சம்பந்த மில்லாது இந்நாவல் அமையவில்லை. விடுதலை பற்றிய ஒரு நாவலுக்கு இப்பெயர் ஏற்றதா? என்று நினைக்கலாம். விடுதலை யாருக்கு? மனிதனுக்குத் தானே. கல்லுக்குள் ஈரம் உண்டு. மனிதன் எவ்வளவுதான் முரட்டுச் சுபாவம் உள்ளவன் ஆனாலும் அவன் உள்ளத்தில் கடைசிக் காலத்தில் அன்பின் ஈரம் தான் படிந்திருக்கிறது என்பதை அழகாக எடுத்துரைக்கிறார் ஆசிரியர்.

அன்பின் ஈரம் மட்டுமல்ல குருதியின் ஈரமும் இந் நாவலில் உண்டு. ரங்கமணிக்கு அஹிம்சையை உணர்த்த திரிவேணி ரத்தம் சிந்துகிறாள். நாட்டினருக்கு அஹிம்சையை உணர்த்த அண்ணல் காந்தி ரத்தம் சிந்துவதைப் போல. திரிவேணியின் முடிவு எதிர் பாராதது, அதே நேரத்தில் கதைக்குத் தேவையானதும் கூட. கதை முடிவில் காந்தியின் குருதியில் இயேசு நாதரின் சிலுவை மறைந்து மண்ணோடு மறைந்தது உருக்கமான முடிவு.

கல்லுக்குள் ஈரம், அலையோசை இரண்டும் இந்திய விடுதலைப் போராட்டச் சித்திரிப்பு நாவல்களில் தலையாய இரு படைப்புக்கள். இவையிரண்டையும் ஒப்பிட்டு நோக்குதல் நலம். வரலாறு, கதை இரண்டையும் இவ்வாசிரியர்கள் கலந்து குழைத் திருக்கும் பான்மை நினைந்து வியக்கத் தக்கது. அலை ஓசையில் புனைவியல் பாங்கும், கல்லுக்குள் ஈரத்தில் யதார்த்தப் பாங்கும் காணப்படுகின்றன.

---

4 அதே நூல், பக். 210

5. அதே நூல், பக், 212

அலைஓசையில் இந்திய விடுதலைப் போராட்டத்தின் பெரும்பாலான நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. 1930 - 47 - க்கு இடைப்பட்ட கால அரசியல் நிகழ்ச்சிகளை விளக்கிக் காட்டுவதையே கல்கி நோக்கமாகக் கொண்டுள்ளார். ஆகஸ்டு போராட்டம், இந்து முஸ்லீம் கலவரம், இடைக்கால சர்க்காரின் அமைப்பு, இந்திய தேசிய ராணுவ அமைப்பு, உப்புச் சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை இயக்கம், காந்தி - இர்வின் ஒப்பந்தம், காந்தியடிகளின் உபவாசம், கராச்சி ஹரிபுரா காங்கிரஸ் தீர்மானங்கள், கோயமுத்தூரில் சத்தியாக்கிரகம், சுபாஷ் சந்திர போஸின் வானொலிப் பேச்சு, சிப்பாய்க் கலகம், சோஷலிச மாநாடு, பாகிஸ்தான் பிரிவினை, முஸ்லீம் லீகின் செயல்கள், வெள்ளையனே வெளியேறு என்ற இயக்கம், ஹிரோஷிமா, நாகசாகி குண்டு வீச்சு, ஹைதராபாதில் நடந்த கம்யூனிஸ்ட் கலவரம் முதலான பல நிகழ்ச்சிகள் கதையின் பின்னணியாக அமைந்துள்ளன. இதே போல் கல்லுக்குள் ஈரத்திலும் ஆஷ் துரையின் அட்டகாசம், கலெக்டர் ஆஷ் வாஞ்சிநாதனால் சுடப்படுதல், சுதேசிக் கப்பலைப் பற்றிய செய்தி, சிதம்பரம் பிள்ளை, சிவா, இவர்களின் கைது, மணியாச்சி கலவரம், கல்கத்தா காங்கிரஸ், கிரிப்ஸ் தூது, தண்டியாத்திரை, இராஜாஜியின் வேதாரண்ய உப்பு யாத்திரை, ராஷ் பிகாரி போஸ், சுபாஸ் சந்திரரின் புரட்சித் திட்டங்கள் முதலியன பின்னணியாய் அமைகின்றன இதில் குறிப்பிடத்தக்க செய்தி யாதெனின் கல்கி தந்த செய்திகளை, ர. சு. நல்லபெருமாள், கல்கி தந்ததைவிடக் குறைந்த பக்கங்களுக்குள் (630 பக்கங்கள்) கிட்டத்தட்ட அதன் பாதியளவில் சுவைபடத் தந்துள்ளது தான்.

அலை ஓசையில் வரும் சூரியாவும், தாரிணியும் சமதர்மத்தைக் கட்டியம் கூறி வரவேற்கும் புத்துலக வரவேற்பாளராகத் திகழ்கின்றனர். கல்லுக்குள் ஈரத்தில் வரும் ரங்கமணி திரிவேணி இருவரும் ஒரே நோக்கம் கொண்டவராய் எதிர் எதிரான பாதையில் முரண்பட்டு நிற்கின்றனர். பாத்திரப் படைப்பில் இரு நாவல்களுமே ஒன்றையொன்று விஞ்சி நிற்கின்றன. சூர்யா, ரங்கமணி இருவருமே புரட்சி எண்ணங்கொண்ட இளைஞராக இருந்து காந்தியத்தின் பெருமையை அஹிம்சையின் ஆற்றலை உணருகின்றனர். அலை ஓசையில் எண்ணற்ற கதைமாந்தர் வருகின்றனர். அறிஞர் தெ. பொ. மீ அவர்கள் இவ்வகையில் அலைஓசையை டால்ஸ்டாயின் சண்டையும் சமாதானமும் (War and Peace) என்ற நாவலோடு ஒப்பிடுகிறார். கல்லுக்குள் ஈரத்தில் தேவைக்கதிகமான பாத்திரங்கள் இல்லை.

கல்லுக்குள் ஈரத்தில் வரும் திரிவேணி ஓரிடத்தில் கூறுகிறாள், ''அழகிய முகத்தைப் பற்றி முப்பது பக்கம் எழுதுவதைவிடத் தியாகிகள் சிந்திய இரத்தத்தைப் பற்றி மூன்று வரிகள் எழுதினால போதும. அதுதான் அமர இலக்கியம்'' அதே போலவே பிறிதொரு இடத்தில, ''எனக்கு முன்பு பேசிய சகோதரி கமலவாசகி அவர்கள இலக்கியத்துக்கு ஒரு விளக்கம கொடுத்தார்கள். எந்த எழுத்து மனத்தைக் கவர்கிறதோ அது தான் இலக்கியம் என்று. இலக்கியம் மனத்தைக் கவரும. ஆனால் மனத்தைக் கவர்வதெல்லாம் இலக்கியமாகிவிடாது. மனவளர்ச்சியைத் தூண்டும் எழுத்துத்தான் இலக்கியம். மனக் கிளர்ச்சியைத் தூண்டுவதெல்லாம் போலிகள் தாம். இலக்கியத்திலும் கலப்படம் உண்டு''[6] என்று. ஆசிரியர் ர. சு. நல்லபெருமாள் இத்தகைய நோக்கோடுதான் இதைப் படைத்துள்ளார். தேசத் தந்தை காந்தியடிகளுடன் திரிவேணியைத தொடர்புடைய வளாகக் காட்டி அதன் வாயிலாக அவளை ஒரு லட்சியப் பாத்திரமாக்கியுள்ளார் ஆசிரியர்.

---

6. அதே நூல, பக், 324.

திரிவேணி, தீட்சிதர் முதலியோர் காந்தியடிகள், மகாதேவ தேசாய் போன்றோருடன் மிகவும் நெருக்கமுடையவராகக் காட்டப் படுகின்றனர். நாடறிந்த தலைவர்களை, கதை மாந்தர்களுடன் இணைத்து அதன் வாயிலாகக் கதை நிகழ்ச்சிகளிடையே மெய்ம்மைத் தன்மையைத் தோற்றுவிக்கும் இலக்கிய உத்தியில் ர. சு. ந., மாபெரும் வெற்றி பெற்றுள்ளார். காந்தியடிகளின் மறைவு அலை ஓசை, கல்லுக்குள் ஈரம் இரண்டிலும் இடம் பெறுகிறது. இவ்விரண்டையும நாவல் என்று கூறுவதைவிட இந்திய நாட்டின், 'உயிருள்ள வரலாறு' என்பதே பொருந்தும். ஆசிரியர் கல்கி, ''நான் எழுதிய நூல்களுக்குள்ளே ஏதாவது ஒன்று 50 அல்லது 100 வருடம் நிலைத்து நிற்கத் தகுதியுடையது என்றால், அது அலைஓசை தான்'' என்று குறிப்பிடுகிறார். அலைஓசை, கல்லுக்குள் ஈரம் இரண்டும் நாற்பது, ஐம்பது வருடங்கள் மட்டுமல்ல - இந்திய விடுதலைப் போராட்ட நினைவு மக்கள் உள்ளத்தில் வாழும் வரை நிலைத்து நிற்கும் என்பது உறுதி.

குறை என்று இந்நாவலில் ஒன்று உண்டென்றால் அது சர்தார் சொக்கலிங்கத்தைப் பற்றிய மர்மத்தை முதலில் நமது ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைத்துவிட்டுத் திடீரென்று அதைச் சப்பென்று ஆக்கியதைக் கூறலாம்.



# உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்

தமிழ் மொழி மிகுதியான இலக்கண வளமுடைய மொழி. முந்நூறுக்கு மேற்பட்ட இலக்கிய வகைகள் இருக்கின்றன. அவையனைத்தையும் பாதுகாத்தல் வேண்டும். சான்றாக அந்தாதி என்ற இலக்கிய வகையில் 800 நூல்களுக்கு மேல் உள்ளன. அவற்றைப் பத்து அந்தாதிகளுக்கு ஒரு தொகுதியாக, கால முறைப் படியும், தெளிவான வரலாற்று முன்னுரையுடனும் எண்பது தொகுதிகளாக வெளியிட வேண்டும். இது போன்று எல்லா இலக்கிய வகைகளையும் பல தொகுதிகளாக வெளியிடுதல் மிகத் தேவை. அதனால் தமிழக வரலாறு, பண்பாடு போன்றவை வெளிப்படும். உலகத் தமிழ்க் கல்வி இயக்கத்தின் பல நோக்கங்களுள் இதுவும் ஒன்று.

2. தமிழ் மொழி, இலக்கியம், வரலாறு, பண்பாடு போன்றவை பற்றி நூறுநூறு பக்கங்களில் நூறு நூல்கள் ஆங்கிலத்தில் வெளியிடுதல். இதனால் தமிழ் பற்றியும் தமிழர் பற்றியும் உலகினர் உணர்ந்து கொள்ள முடியும்.

3. உலகத் தமிழ்க் கல்வி இயக்கத்தில் கம்பர், இளங்கோ, திருவள்ளுவர், நாவுக்கரசர், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள், சிவஞான முனிவர் போன்ற பெரியோரின் பெயரால் 52 அறக்கட்டளைகள் நிறுவி வாரம் தோறும் சொற்பொழிவுக்கும் ஏற்பாடு செய்து அச்சொற்பொழிவினை, சொற்பொழிவு நாளன்றே நூலாகவும் வெளியிடுதல் என்ற நோக்கிலும் செயல்படுகிறது. இதனால் தமிழுக்கு ஆண்டு தோறும் 52 நூல்கள் வந்துவிடும் என்பது உறுதி.

அறக்கட்டளைக்கோ, நூல்கள் வெளியீட்டிற்கோ நன்கொடை அனுப்ப விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்**
33, திருமலை நகர் இணைப்பு,
பெருங்குடி
சென்னை 600 096